உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஐந்தாம் திருமுறை



தலைகொள் நஞ்சமு தாக விளையுமே தழலின் நீறுத டாகமது ஆகுமே
கொலைசெய் யானை குனிந்து பணியுமே கூர்அரா விடம் தீர்எனத் தீருமே
கலைகொள் வேத வனப்பதி தன்னுளே கதவு மீண்டு கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியில் கல்லு மிதக்குமே அப்பர் போற்றும் அருந்தமிழ்ப் பாடலே.



பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

தேவாரத் திருப்பதிகங்கள்

# ஐந்தாம் திருமுறை

## (பண்முறை)


பதிப்பாசிரியர்

டாக்டர் இராச. வசந்தகுமார்

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



KARPAGAM UNIVERSITY

பன்னிரு திருமுறை ஆய்வு மையம்

**கற்பகம் பல்கலைக்கழகம்**

ஈச்சநாரி, கோவை-21.

## <u>நூற்குறிப்பு</u>

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **ஐந்தாம் திருமுறை (தேவாரம்)** |
| ஆசிரியர் | : | **திருநாவுக்கரசர்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் (பண் முறை) |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**<br>**கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீட்டு எண் | : | **42** |
| முதற்பதிப்பு | : | **2015** ஆகஸ்ட் |
| பக்கங்கள் | : | 380 |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | கிரவுன் 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>செல் : 98431 74238 |




# ஐந்தாம் திருமுறை - பொருளடக்கம்

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய

தேவாரத் திருப்பதிகங்கள்

# ஐந்தாம் திருமுறை

## வழிபாட்டுக் கருத்தரங்கம்



தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை யறியில் தலைப்படும்
தன்னிற் றன்னை யறிவில னாயிடில்
தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே.

5 – 97 – 29

## பதிப்புரை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார். – திருக்குறள்

**1. உயிரின் நோக்கம் / இலட்சியம்** - வீடுபேறு, முத்தி, மோட்சம்.
(சொர்க்க நரகங்கள் அல்ல)

**2. எடுத்துக்கொண்ட கொள்கைகள்**

அ) எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை.

ஆ) யாதொரு தெய்வங் கொண்டீர்; அத்தெய்வமாகி மாதொரு பாகர் தாம் வருவார்.

இ) பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், மாதொரு பாகர் மலர்த்தாள் மறப்பிலார்.

ஈ) மற்றொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாதிருத்தல்.

**3. வகுத்துக்கொண்ட நெறிகள்**

அ) சிவபூசை – விசேட தீக்கை பெற்றுத் தினமும் சூரிய உதயத்தில் ஆன்மார்த்த படிகலிங்க மூர்த்திக்கு ஆனைந்துத் திருமஞ்சனத்துடன் 1008 போற்றி மலர் வழிபாடு.

ஆ) எழில் ஞானபூசை – திருமுறைகளையும், சாத்திரங்களையும் ஓதுதல், ஓதுவித்தல்

இ) சிவாலயத் திருப்பணிகள் – அன்றாட, வாராந்தர, மாதாந்தர, வருடாந்தர பெருஞ்சாந்தி பெருவிழாக்கள் நடத்த உதவி செய்தல் – நல்விழாப் பொலிவு காணுதல் – காண்பித்தல்.

**திருவாய்மூர் - காட்சி கண்டு பிள்ளையார் காட்ட அரசுகள் பாடியது**

**திருத்தொண்டர் புராணம்**

மாடு நீடு திருப்புகலி மன்னர் அவர்க்கு மால் அயனும்
நேடி இன்னங் காணாதார் நேரே காட்சி கொடுத்து அருள
ஆடல் கண்டு பணிந்து ஏத்தி அரசும் காணக் காட்டுதலும்
பாட அடியார் என்று எடுத்துப் பரமர் தம்மைப் பாடினார் – 1551

**திருநாவுக்கரசர் தேவாரம்**

பாட அடியார் பரவக்கண்டேன் பத்தர் கணங்கண்டேன் மொய்த்த பூதம்
ஆடல் முழவம் அதிரக் கண்டேன்அங்கை அனல்கண்டேன் கங்கை யாளைக்
கோட லரவார் சடையிற் கண்டேன் கொக்கி னிதழ்கண்டேன் கொன்றை கண்டேன்
வாடல் தலையொன்று கையிற் கண்டேன் வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே.

அன்புடையீர் வணக்கம்,

நமது நிறுவனம் நடத்தும் தொழிற்சாலையின் கணக்கர், கடந்த மாதம் பதிப்பாசிரியரிடம் வந்து, இம்மாதத்தோடு பதிப்பாசிரியரின், இயக்குநர் பணிநிறைவாகி விடுவதாகவும், அதற்குண்டான பணிக்கொடை, ஓய்வூதிய நிதி ஆகியவற்றைப் பெறக் கையொப்பமிட வேண்டும் என்றும் சொன்னபோதுதான் வயது நினைவுக்கு வந்தது. வாழ்க்கை எவ்வளவு வேகமாக ஓடிவிட்டது, 1979 ஆம் ஆண்டு பூ.சா.கோ. பொறியியல் கல்லூரியின் பதிப்பாசிரியர் இளங்கலைப் பட்டம் பெற்ற பின்னர் 36 ஆண்டுகள் ஓடியதே தெரியவில்லை. இறைவன் கொடுத்த கால எல்லை மிகச் சிறியதாகத் தோன்றுகிறதோ? 1979 ஆம் ஆண்டு அன்றும், அதற்குச் சற்று முன்பிருந்த காலத்தையும் இன்றைய காலத்தையும் ஒப்பிட்டு மனக்கண்ணிலே நிழற்படம் ஓடியது. இவையெல்லாம் புராணக் கதைகள் அல்ல. நினைப்பதற்குள் நடந்து முடிந்துவிட்டன.

| வ.எண் | 1979 | 2015 |
|---|---|---|
| 1. | தமிழ்நாடு முழுதும் 9 பொறியியல் கல்லூரிகள்தாம் இருந்தன. சுமார் 2000/2200 பொறியாளர்கள் ஒவ்வோர் ஆண்டும் பட்டம் பெற்று வெளிவந்தனர். | இன்று 565 பொறியியல் கல்லூரிகள் உள்ளன. 2,45,000 இளைஞர்கள் படித்து பொறியியல் பட்டம் பெற வாய்ப்புகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பதிப்பாசிரியரின் குழுமக் கல்வி நிறுவனங்களிலிருந்தே வருடந்தோறும் 2000 பொறியியல் பட்டதாரிகள் உருவாகிறார்கள். |
| 2. | வேலை வாய்ப்புக்கள் குறைவாகவே இருந்தன | தகுதியானவர்களுக்கு நல்ல வேலை வாய்ப்புக்கள் உள்ளன. |
| 3. | பட்டதாரிகள் நிறுவனங்களை நோக்கிச் சென்று வேலை வாய்ப்புப் பெற்றார்கள். | தொழில் நிறுவனங்கள் கல்லூரிகளுக்கே வந்து மாணவர்களைத் தேர்வு செய்கிறார்கள் |

| | | |
|---|---|---|
| 4. | ஒரு கிராமத்துக்கே ஒரு தொலைபேசி தான் இருந்தது. பி.பி. எண் (தனி தொலைபேசி எண்) | இன்று ஒவ்வொரு வீட்டிற்கும் பல அலைபேசிகள் உள்ளன. 125 கோடி மக்கள் தொகை கொண்ட நம் தாய்த்திருநாட்டில் 100 கோடி அலைபேசிகள் இருப்பதாகச் செய்தி வந்துள்ளது. இது 250 கோடி ஆகும் நாள் தொலைவில் இல்லை. |
| 5. | அமெரிக்கா போன்ற வெளிநாடுகளுக்குப் பேச வேண்டுமென்றால் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்து அருகில் உள்ள தலைமை தொலைபேசி அலுவலகம் சென்று 3 நிமிடத் துக்கு ரூ.550 கட்டி பல மணிநேரம் காத்திருந்து பேசவேண்டும். | இன்று பைசாக் கணக்கிலும், இலவசமாகவும் இருந்த இடத்திலிருந்தே பேசிக் கொள்கிறோம். |
| 6. | கணினி உபயோகமேயில்லை. வகுப்பறைக்கு கால்குலேட்டர் (கணிப்பான்) என்ற கருவிகளே எடுத்துச் செல்லக்கூடாது. | கணினி இல்லாமல் வாழ்வேயில்லை என்ற நிலை உருவாகிவிட்டது. |
| 7. | இரயில்வே முன்பதிவு செய்யப் போனால் ஒரு நாளே போய்விடும். | ஆன்–லைன் (நேர் இணைப்பு) முறையில் வீடு உட்பட, எங்கிருக்கிறோமோ, அங்கே யிருந்தே முன்பதிவு செய்து கொள்ளலாம். |
| 8. | காசிக்குப் போய்வர பலநாள் ஆனது. | இன்று இரவே திரும்பி வந்து விடுமளவு விமான வசதிகள். |
| 9. | 1967 ஆம் ஆண்டு தாங்கள் ஆட்சிக்கு வந்தால் 1 ரூபாய்க்கு 1 படி அரிசி நிச்சயம். ஆனால் 1 ரூபாய்க்கு 3 படி அரிசி இலட்சியம் என்று சொன்னார்கள். | இன்று மொத்த அரிசியும் இலவசம். |
| 10. | 1 யுனிட் மின்சாரம் 10 பைசாவிலிருந்து 9 பைசாவுக்கு குறைக்கப் போராடிய பல விவசாயிகள் சுட்டுக் கொல்லப்பட்டார்கள். | இன்று விவசாயிக்கு மொத்த மின்சாரமும் இலவசம். |
| 11. | எல்லாப் பணிகளும் கைகளால் செய்யப்பட்டன. | எல்லாப் பணிகளும் மின் மயம், கணினி மயம். தானியங்கி இயந்திரங்கள் இல்லாத இடமேயில்லை. |
| 12. | வங்கிகளில் பணப்பரிமாற்றத்துக்கு நாட்கணக்கில் காத்துக்கிடந்தோம். | கணினிமயத்தால் அந்த விநாடியே பணம் நம் கைக்கு மாறுகிறது. |

| 13. | கல்லூரிக் கட்டிடங்களில் உள்ள இணைப்பில் தொலை/அலைபேசி வசதிகளை விடுதிக்கு விரிவுபடுத்த பல லட்ச ரூபாய்கள் தேவைப்பட்டன. குறிப்பிட்ட இடங்களுக்கு அலைவரிசையை விரிவுபடுத்தல் செய்ய நிறைய பொருள் தேவைப்பட்டது. | தாங்கள் ஆட்சிக்கு வந்தால் டெல்லி மாநகரம் முழுதும் கம்பி இல்லா அலை பரப்பி (Wi-Fi) வசதி செய்து தருவதாக அரசியல்வாதிகள் சொல்கிறார்கள். கோவை மாநகரம் முழுதும் - பின் உலகம் முழுதும் கம்பியில்லா அலைபரப்பி (Wi-Fi) ஆகும் நாட்களும், சிவனெனும் ஓசை உலகம் முழுதும் பரவும் நாட்களும் நெடுந்தொலைவில் இல்லை. |
|---|---|---|
| 14. | திரைப்படங்களைப் பார்க்கக் கொட்டகைகளுக்குச் செல்ல வேண்டும். | அவரவர் இல்லங்களிலேயே ஒவ்வொரு அறையிலும் தொலைக்காட்சிப் பெட்டி, கணினி, அலைபேசிகள். |
| 15. | ஒரு கல்லூரிக்கே 1 கணினி இருக்காது. | இன்று அனைத்து மாணவர்களுக்கும் மடிக் கணினிகள், மின்னஞ்சல் வசதிகள். |
| 16. | தபால் எழுதும் வழக்கம், அஞ்சலக உபயோகம் மிக முக்கியம். | மின்னஞ்சல் வசதியால் அஞ்சலக வேலையே இல்லை என்று சொல்லலாம். |

1979 ஆம் ஆண்டு, இன்னும் 30/40 ஆண்டுகளில் இவ்வளவு மாற்றங்கள் நிகழும் என்று நினைத்துப் பார்த்ததுகூட இல்லை. தொலைநோக்குப் பார்வை இருந்தால்தான் நாமும் நமது தேசமும் முன்னேற முடியும். கடந்த மாதம் ஒரு வெளிநாட்டு நண்பரோடு பேசிக் கொண்டிருந்தபோது அத்தகைய தொலைநோக்குப் பார்வையாளர்கள் வெளிநாட்டில் உள்ளார்களா? அவர்கள் இன்னும் 30/40 ஆண்டுகள் கழித்து நாம் எவ்வெவற்றையெல்லாம் முன்னேற்றம் என்று பார்க்க இருக்கிறோம் என்பதைப் பற்றிச் சொல்லி இருக்கிறார்களா? என்று கேட்டேன். நமது பல்கலைக்கழக மாணவர்களிடம் பேசிக் கொண்டிருந்தபோது, '1979 ஆம் ஆண்டு இப்படியெல்லாம் நடக்குமென்று நாங்கள் எதிர்பார்க்கவில்லை. கண்மூடித்திறப்பதற்குள் எல்லாம் நடந்து முடிந்துவிட்டது. 2050 ஆண்டு என்ன நடக்கும் என்பதை இப்போதே யோசித்துச் செயலாற்றினால்தான் நீங்கள் தொலைநோக்குப் பார்வையாளர் ஆவீர்கள். நோபல் பரிசு பெறுவீர்கள்' என்று சொன்னேன். அந்த வகையில் அந்த வெளிநாட்டு நண்பர் கீழ்க்கண்ட கருத்தைச் சொன்னார். நான் கேட்ட தொலைநோக்குப் பார்வையாளர் (Visionary) ஒருவர் அமெரிக்காவில் உள்ளார். அவர் 35 ஆண்டுகளுக்கு முன்பே ஊடகங்களும், கணினிகளும், அலைபேசிகளும், தொலைத்தொடர்பு வசதிகளும் நாம் எட்டிப்பார்க்க முடியாத நிலைக்குச் சென்று புரட்சி ஏற்படுத்தும் என்று சொன்னார். 2050 ஆண்டில் என்ன புதுமை இருக்கும் என்று கேட்டதற்கு அவர் சொன்ன பதில் 'எல்லாம் மாத்திரைக் குப்பி மயமாகிவிடும்' என்று சொன்னார். அதாவது தமிழ் இலக்கணம் படிக்க வேண்டுமா? அது ஒரு குப்பியாக (கேப்சூலாக)க் கிடைக்கும். வாங்கிச்சாப்பிட்டால் இலக்கணம் புரியும். முதல் திருமுறை ஒரு கேப்சூல், இரண்டாம் திருமுறை ஒரு கேப்சூல். கம்பராமாயணம் ஒரு கேப்சூல். திருக்குறள் ஒரு கேப்சூல் என்று எல்லாமே மாத்திரைக்குப்பி மயமாகிவிடும் என்று சொன்னார். கேட்டு மிக வியப்படைந்து அவரை நான் ஒருமுறை பார்க்கவேண்டுமென்று சொன்னேன். அவர் ஒரு நாளைக்கு ஒருவரை மட்டுமே சந்திப்பார். அவருடன் காலை உணவு அல்லது மதிய உணவு அருந்துவார். அதற்கு கட்டணம் 100000 அமெரிக்க டாலர்கள் ஆகுமென்றார். ஏறத்தாழ ரூ.63 இலட்சம். அதுவும் 2 ஆண்டுகளுக்கு முன்பதிவு முடிந்துவிட்டது என்று சொன்னவுடன் வியந்து போனேன். சபரிமலையில் படிப்பூசைக்குப் பல ஆண்டுகள் முன்பதிவு முடிந்துவிட்டதை நினைவு கூர்ந்தேன்.

ஒரு தொலைநோக்குப் பார்வையாளரைப் பார்ப்பதற்கே இவ்வளவு கடினமாக உள்ளது. பல ஆண்டுகள் ஆகும். இந்த உலகத்திலே உள்ள ஒரு முக்கியமான நபரையே பார்க்கமுடியாத நம்மால் எல்லா உலகங்களையும், படைத்து, காத்து, ஒடுக்கி, மறைத்து அருள் பாலிக்கும் சிவபெருமானை எப்படிப் பார்க்க முடியும்? காட்டு என்று

சொன்னால் எப்படிக் காட்ட முடியும்? 'பல்லூழிக்காலம் பயின்று அரனை அர்ச்சிக்கில் நல்லறிவு சற்றே நகும்' என்ற மூத்தோர் வாக்குச் சரியென்றுபடுகிறது. அர்ச்சனை பாட்டேயாகும். திருமுறைப் பாடல்கள் கண்டிப்பாக நமக்கு சிவபரம் பொருளைக் காட்டும். எனவே, 'சொற்றமிழால் பாடுக' என்ற வாக்குக்கேற்ப அந்த சொற்றமிழ்த் திருமுறைகளால் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துகொண்டு சிவபெருமான் திருவடியை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். அந்த வகையில் இந்த மாதம் ஐந்தாம் திருமுறையை நெட்டுருச் செய்யத் திருவருள் கூட்டிவைத்துள்ளது.

ஐந்தாம் திருமுறையில் 1015 பாடல்களைக் கொண்ட 100 பதிகங்கள் அடங்கியுள்ளன. 88 பதிகங்கள் தலங்களைப் பற்றியவை. 12 பதிகங்கள் பொதுவானவை. அவை

| | |
|---|---|
| தனிக்குறுந்தொகை | 3 |
| காலபாசத் திருக்குறுந்தொகை | 1 |
| மறக்கிற்பனே என்னும் திருக்குறுந்தொகை | 1 |
| தொழற்பாலதே என்னும் திருக்குறுந்தொகை | 1 |
| இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை | 1 |
| மனத்தொகை | 1 |
| உள்ளத்தொகை | 1 |
| சித்தத்தொகை | 1 |
| பாவநாசத் திருக்குறுந்தொகை | 1 |
| ஆதிபுராணத் திருக்குறுந்தொகை | 1 |

எனப் பெயர்களில் வழங்கப்படும்.

குறுந்தொகை என்பது யாப்பிற்குரிய பெயராகும். குறுகிய பாவினமாகிய கலிவிருத்தப்பாவில் இவை அமைந்துள்ளன.

ஐந்தாம் திருமுறையில் முதல் திருப்பதிகமாகத் திகழ்வது "அன்னம்பாலிக்கும் தில்லை" எனத் தொடங்குவதாகும். அன்னம் என்பது சோற்றையும், வீடுபேற்றையும் குறிக்கும். வீடுபேற்றைத் தரவல்ல கூத்தப் பெருமான் எழுந்தருளியுள்ள தலம் தில்லை என்பதை முதற்பதிகமாகக் கூறிப்பின் படிப்படியாக இறங்கி வருகிறார். நினைப்பவர் மனமே கோயில் என்று சொல்லிவிட்டு அண்ணாமலையைத் தொழுதுவலம் வருகிறார். தனிக்குறுந்தொகையுள் 89ஆவது திருப்பதிகத்தை எண்ணலங்காரமாகப் பாடுகிறார்.

சித்தத்தொகை என்னும் 97ஆவது திருப்பதிகம் ஆத்திசூடிபோல தமிழ் எழுத்தின் வரிசையமைப்பைப் பாடிய முப்பது பாடல்களைக் கொண்டது.

எளிய சொற்களால் உயர்நெறிகளை மக்கட்கு உபதேசிக்கும் இத்திருமுறையை எல்லோரும் விரும்பிப் பயிலக் காணலாம். எந்தவிதமான அகராதியின் துணையின்றி அவரவராகவே பொருளுணரும் வண்ணம் பாடிச் சென்றுள்ளதற்குக் கீழ்க்காணும் பாடல்களே உதாரணமாகும்.

ஐய னேஅர னேயென் றரற்றினால்
உய்ய லாம்உல கத்தவர் பேணுவர்

செய்ய பாதம் இரண்டும் நினையவே
வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே. – தி. 5 ப. 60 பா. 7

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக் கோநம னால்முனி வுண்பதே. – தி. 5 ப. 91 பா. 6

நன்று நாள்தொறும் நம்வினை போயறும்
என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே. – தி. 5 ப. 42 பா. 1

ஏதும் ஒன்றும் அறிவிலர் ஆயினும்
ஓதி அஞ்செழுத் தும்உணர் வார்கட்குப்
பேதம் இன்றி அவரவர் உள்ளத்தே
மாதும் தாமும் மகிழ்வர்மாற் பேறரே. – தி. 5 ப. 60 பா. 1

பூவ னூர்ப்புனி தன்திரு நாமந்தான்
நாவில் நூறுநூ றாயிரம் நண்ணினார்
பாவ மாயின பாறிப் பறையவே
தேவர் கோவினும் செல்வர்கள் ஆவரே. – தி. 5 ப. 65 பா. 1

உள்ளம் உள்கி உகந்து சிவனென்று
மெள்ள உள்க வினைகெடும் மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே. – தி. 5 ப. 79 பா. 8

இவ்வாறாக பல்வேறு சிறப்புகள் இருந்தாலும், இத்திருமுறையில் அப்பர் சுவாமிகள் தாம் நேருக்கு நேராகச் சிவபெருமானைப் பார்த்ததாகவும், அதுவும் திருஞானசம்பந்தரோடு சேர்ந்தும் பார்த்தும், இரசித்தும், பாடியதையும் திருவாய்மூர்ப் பதிகங்களில் பதிவுசெய்துள்ள அகச்சான்று நிகழ்வுகள் மனதைத் தொடுகின்றன. கண்ணீர் விட்டு அழச்செய்கின்றன. அடியேனின் கெழுமிய நண்பரும், அடியேனோடு இணைந்து நூற்றுக் கணக்கான பழைய சிவாலயத் திருப்பணிகளில் ஈடுபட்டவரும், திருமுறைகளில் அளவற்ற ஈடுபாடுகள் கொண்டு, படி படி என்று படித்தும், எழுது எழுது என்று எழுதியும், பரப்பு பரப்பு என்று பரப்பிக் கொண்டிருப்பவரும், ஓய்வு பெற்ற மாவட்டப் பதிவாளரும், கும்பாபிடேகப் பத்திரிக்கை ஆக்கம், தயாரிப்பில் முனைவர் பட்டம் பெறத் தகுதியுடையவரும், “தண்ணீருங் காவிரியே – தார்வேந்தன் சோழனே – மண்ணாவதும் சோழமண்டலமே” என்ற தனிப்பாடலால் சிறப்புறக் கூறப்பட்ட சோழநாட்டு அழுந்தை மறையோர்களின் சார்பில் அதனருகே உள்ள கோமலில் இருப்பவருமான அடியார் கா. சேகர் அவர்கள் அடியேனிடம், “வாய்மூர் நிகழ்வுகள் சரியாக மக்களிடம் எடுத்துச் சொல்லப்படவில்லை; இந்த நிகழ்வுகளெல்லாம் ஒரு ஆங்கில நாட்டில் நடந்திருந்தால், அது இமாலய அளவு புகழ் அடைந்திருக்கும்” என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள். அவருடைய எண்ணம் நிறைவேறும் வண்ணம், அந்த நிகழ்வுகளை விரிவாக எழுத ஆரம்பிக்கும்போது ஒத்தக்கால் மண்பம் நிறைநிலா வழிபாட்டு மன்றச் செயலரும், அடியேனோடு இணைந்து நூற்றுக்கணக்கான சிவாலயத் திருப்பணிகள், உழவாரப்

பணிகளில் ஈடுபட்டவரும், 1330 குறட்பாக்கள், 100 அபிராமி அந்தாதிப் பாடல்கள், ஏராளமான திருமுறைப் பாடல்களை மனனமாகக் கொண்டவரும், சிறு நூலக அதிபரும், அருட்கலை ஆசான் முதுமுனைவர் ப.சு. மணியம் அவர்களின் மாணாக்கருமான கு. கோவிந்தராசன் அவர்கள் மறைமலை அடிகளின் திருமகனார் மறை. திருநாவுக்கரசு அவர்கள் எழுதி வெளியிட்டிருந்த பெரியபுராண ஆய்வுரை நூலின் இரண்டாம் பகுதி நூலைக் கொடுத்துதவினார்கள். அந்த நூலில் 166 ஆம் பக்கம் முதல் 179 ஆம் பக்கம் வரை இடம்பெற்றிருந்த திருமறைக்காடு, திருவாய்மூர் நிகழ்வுகளைப் பதிப்புரையில் கீழ்க்கண்டவாறு பதிவு செய்வது பெரும்புண்ணியமென்று கருதுகிறோம்.

திருவீழிமிழலையில் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் பாடிப் பெற்ற படிக்காசு கொண்டு, பஞ்சம் நீங்கும் வரையில் அளவற்ற மாந்தர்க்குப் பெருஞ்சோறளித்தனர். பின்பு மாரி பொழிய, வளம் பெருக, பயிர் விளைந்து பஞ்சம் நீங்கவே, மிழலை அமர்ந்த இறைவனை அன்பாற்பாடி அகமுருகி விடை கொண்டு திருவீழிமிழலையினின்றும் நீங்கித் திருவாஞ்சியம் சேர்ந்து திருக்கோயிலுட் புகுந்து புகழ்ந்து பாடி வணங்கித் திருமறைக்காடு (வேதாரணியம்) என்னுந் திருநகரமடைந்தனர். திருக்கோயிலுட் புகுந்து வலமாக வந்தனர்.

## மறைக் கதவு திறத்தல்

**கோயிலுள் இறைவன் திருமுன் (சந்நிதி) திருவாயிலுக்கருகில் வந்து நின்றனர். அவ்வாயிற் கதவுகள் சாத்தப்பட்டிருந்தன. "ஒரு காலத்தில் வேதங்கள் (வடமொழி இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் வேதங்கள்) இங்குள்ள பெருமானை வழிபட்டுத் திரும்புகையில் இவ்வாயிற் கதவுகளை அடைத்துவிட்டன. அந்நாள் முதல் இந்நாள்காறும் அக்கதவுகளைத் திறக்கத் தக்க ஆற்றல் மிக்க அன்பர்கள் வாராமையினால் வேறு வாயில் அமைத்து அவ்வழியே சென்று அன்பர்கள் மறைக்காடனை வணங்கி வருகின்றனர்" என்று அங்கு நின்ற அன்பர்கள் கூறக் கேட்டனர்.**

**அவ்வளவில், சீர்காழிப் பிள்ளையார், "அப்பரே! நாம் இத்திருவாயிலின் வழியே நேராகச் சென்று, பெருமானை வணங்கல் வேண்டும். ஆகவே, மறைகள் அடைத்துள்ள இத்திருக்கதவங்கள் திறக்கப் பாடுவீர்கள்" என்றனர். அவ்வளவில் அடிகள், பூட்டிய கதவுகள் திறக்குமாறு சிவ பிரானை நோக்கி,**

**"பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ<br>மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ<br>கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்<br>திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே" என்று விண்ணப்பித்தார்.**

**இவ்வாறாக பத்துப் பாடல்கள் பாடினார். கதவுகள் திறக்கவில்லை. இவ்வாறான வேண்டுகோளை இப்பெரும் நாயன்மார்கள் விடுத்தால் ஒரு சில பாடல்களில் வேண்டுகோளைச் சிவபிரான் நிறைவேற்றி விடுதல் வழக்கம். ஆனால், இப்போதோ, பத்துப் பாடல்கள் பாடியுங் கதவுகள் திறக்காதபடியினால், நாவரசர்,**

**"அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்<br>இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே<br>சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ<br>சரக்க விக்கத வந்திறப் பிம்மினே"**

**என்று பாடினார். அவ்வளவில், கதவுகள் தாமாகத் திறந்து கொண்டன. ஆண்ட அரசும், அருட் பிள்ளையாரும் அடைந்த மகிழ்ச்சிக்களவில்லை. உள்ளே சென்று மறைக்காட்டப்பனை என் புருக,**

ஊனுருக, உயிருருகப் பேரன்பால் வணங்கித் தமிழ்ப் பாமாலைகள் சாற்றிப் போற்றினர். பின் திறக்கப்பட்ட திருவாயில் வழியே மீண்டனர்.

திறக்கப்பட்ட கதவுகளை என்றும் அடைக்கவும், திறக்கவும் பாடுமாறு காழிச் செல்வரை வேண்டினார். அவ்வாறே சம்பந்தர் பதிகம் பாடத் தொடங்கிய உடனே முதற்பாட்டிலேயே கதவுகள் தாமாக அடைக்கவும், திறக்கவுஞ் செய்தன. இரு பெருந் தலைவர்களும் இது கண்டு,'இதுவும் நம் பெருமான் அருள்' என்றே பெரிதும் மகிழ்ந்து போற்றினர். அன்று முதல் அந்நேர்முக வாயில் அன்பர்கள் சென்று வணங்கும் வழக்கம் பெறுவதாயிற்று. இவர்கள்தம் இவ்வருங் செயல் கண்டு, அடியார்கள் கொண்ட அளவிலா மகிழ்ச்சி கூறவும் வேண்டுமோ?.

## அப்பர் வருத்தம்

**இரு பெருஞ் சிவநேயச் செல்வர்களுந் தத்தம் திருமடங்களை அடைந்தனர். வாகீசர் பெரிதும் வருந்துகின்றார்."அடியேன் பத்துப் பாடல்கள் பாடியுங் கதவம் திறக்கவில்லையே! பதினொராம் பாடல் பாடிய பின் தானே கதவு திறந்தது. ஆனால், அருட் செல்வர் பாடிய பதிகத்தின் முதற் பாட்டிலேயே அடைக்கவுந் திறக்கவுமாய் நிகழ்ந்ததே; அடியேன் நம்பர் (சிவம்) கருத்தறியாது – அ∴தாவது அடியேன் திறக்கப் பாடுதற்கு அவரிசைவு பெறாது அயர்த்து விட்டேனே! அடியேன் திறக்க அவரருள் இல்லை போலும்!**

**அதனால் பதிகங்கடந்து பதினொராம் பாட்டிற் கிரங்கிக் கதவு திறந்தார் போலும்! என்று "பெரிதும் அஞ்சித் திருமடத்தின் ஒதுக்கமான இடத்தில் கவலை நிறைந்த எண்ணத்துடன் கண் மூடிப் படுத்துக்கொண்டார். மறைக்காடன் நினைவுடன் துயில் கொள்கின்றார்.**

**சிவபிரான், திருநீறு நிறைந்த அழகிய கோலத்துடன் கனவில் அவருக்குக் காட்சியாகி, "வாய்மூரில் இருப்போம் தொடரவா"! என்றார். விழித்தெழுந்த நாவின் மன்னர், "வா! என்று போனார், ஏன்?" "இறைவர் ஆணை" என்று எண்ணியவராய், அப்போதே புறப்பட்டு விரைவாகச் செல்கின்றார். கனவில் கண்ட வடிவுடன் இறைவன் அவன் முன்னே அவர்க்கு அண்மையர்போல் - அணுகியவுடன் அகப்படாமல் எட்டிச் செல்கின்றான். மறைக்காட்டு மாநகர் கடந்துவிட்டது. இப்படிச் சிறிது தொலைவை அப்பர் தொடர்ந்து செல்லும் போதில் அவர்க்கு அருகிலேயே காட்சி கொடுப்பார்போலக் கண்ணுதலார் கோயில் ஒன்றைக் காட்டி அதனுட் புகுந்தார். அடிகள் தாமும் அதனுட் புகுந்தார்.**

**இ∴திங்கனமாக, அடியார்கள் ஞானச் சிறுவருக்கு, அரசுகள் புறப்பட்டு விரைந்து செல்வதை அறிவித்தார்கள். உடனே பிள்ளையாரும் புறப்பட்டு அப்பரைத் தொடர்வாராய் அவர் புகுந்த கோயிலுட் புகுந்து அவர் அருகில் நின்றார்.**

**அப்போது, ஆளுடைய அடிகள், மிக வருந்தி, "அழைத்துக் கொண்டு வந்து அடியேனுக்குக் காட்சி தருவீர் போல மறைந்து விட்டீர்! சிவபெருமானே! உமது எண்ண மறியாது பிழை செய்து திறக்கப் பாடிய அடியேனுக்கு உமது காட்சியை மறைக்கலாம். ஆனால் செந்தமிழாற்பாடி அடைப்பித்தார் இதோ இருக்கின்றாரே! அவருக்கு உமது காட்சியை மறைக்கமுடியாதே!" என்று பாடினார். அவ்வளவில், திருஞான சம்பந்தருக்குச் சிவபெருமான் தன் காட்சியைப் புலப்படுத்தினார்.**

**அதனைக் கண்டு மகிழ்ந்து வணங்கி ஞானப்பிள்ளையார், அரசுங் காணுமாறு அக் காட்சியை அவருக்குக் காட்ட அவருங்கண்டார். எல்லையிலா மகிழ்ச்சி கொண்டார். உடனே, "பாடவடியார் பரவக் கண்டேன்" என்ற திருத்தாண்டகப் பாமாலை கொண்டு பத்துப் பாடல்களை உணர்ச்சிப்பெருக்கு - இன்பப் பெருக்கு மிக, இன்பக் கண்ணீர் திருமேனியெல்லாம் நனைப்பச் சிவபிரானுக்குச் சூட்டினார். அவற்றிலொன்று,**

“பாலின் மொழியாளோர் பாகங் கண்டேன்
பதினெண் கணமும் பயிலக் கண்டேன்
நீல நிறமுண்ட கண்டங் கண்டேன்
நெற்றி நுதல்கண்டேன் பெற்றங் கண்டேன்
காலைக் கதிர்செய் மதியங் கண்டேன்
கரந்தை திருமுடிமேல் தோன்றக் கண்டேன்
மாலைச் சடையும் முடியுங் கண்டேன்
வாய்மூர் அடிகளை நான் கண்ட வாறே”

பாமாலை கொண்டு சிவபிரான் சொல்ல இருபெருஞ் சான்றோர்களும் திருவாய்மூரடைந்து திருக்கோயிலுட் சென்று ஆராக் காதலன்பால் சிவபிரானை இறைஞ்சிப் பாமாலை சாற்றி அந்நகரில் சில காலந் தங்கி வழிபட்டு, மீண்டுந் திருமறைக்காடு சேர்ந்தனர். “கண்டேன் கண்டேன்” என்று எத்தனைபேரால் பாடமுடியும்?.

## திருவாய்மூருக்கு அழைத்தமைக்கு அகச் சான்று

**இனி, மேலே கூறியாங்கு ஆளுடைய அரசுகள், திருமடத்தில் ஒருபால் கண்களை மூடிக்கொண்டு கவலையுடன் படுத்திருந்தபோது இறைவன், கனவின்கண் காட்சி நல்கித் தம்மை அழைத்ததை விளக்கமாக ஒரு பதிகமாக அருளியுள்ளார்கள். அவற்றிற் சில,**

**“எங்கே என்னை இருந்திடத் தேடிக்கொண்டு
அங்கே வந்தடை யாள மருளினார்
தெங்கே தோன்றும் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனா ரதென்கொலோ”** 5-50-1

**“மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி யுன்னி யுறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி
என்னை வாவென்று போனார தென்கொலோ”** 2

**“தஞ்சே கண்டேன் தரிக்கிலா தாரென்றேன்
அஞ்சே லுன்னை யழைக்கவந் தேனென்றார்
உஞ்சே னென்றுகந் தேயெழுந் தோட்டந்தேன்
வஞ்சே வல்லரே வாய்மூ ரடிகளே”** 3

**“கழியக் கண்டிலேன் கண்ணெதி ரேகண்டேன்
ஒழியப் போந்திலே னொக்கவே யோட்டந்தேன்
வழியிற் கண்டிலேன் வாய்மூ ரடிகள்தம்
சுழியிற் பட்டுச் சுழல்கின்ற தென்கொலோ”** 4

**“திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உரைப்புப் பாடி யடைப்பித்தா ருந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே”** 8

இரண்டாம் பாட்டு – ''உன்னி உன்னி உறங்குகின்றேனுக்கு'' என்று அடிகளை குறிப்பிடுவதால் அவர்கள் கண்களை மூடிக்கொண்டு நினைவு நிலையிலிருந்தார்கள் என்பது விளங்கும்.

மூன்றாம் பாட்டு– கண்டேன் - சிறிதே கண்டேன். தரிக்கிலாதார் என்றேன் - (பொறுமையாக) நின்று காட்சி தருகின்றாரில்லை என்றேன். எழுந்து ஓட்டந்தேன் – (படுக்கைவிட்டு) எழுந்து (அவரைப்பற்ற விரைந்து) ஓடினேன். வஞ்சேவல்லரே – (பிடிக்க முடியாமல் எட்டி எட்டிச் செல்வதால் இது) வஞ்சனையோ? (அதைச்செய்வதில்) வல்லவர் (போலும்).

நாலாம் பாட்டு – கழியக் கண்டிலேன் - (மனம் நிறையும் படி) நீண்ட நேரம் கண்டேனில்லை. கண் எதிரே கண்டேன் - (ஆனாலும் யான்) என் கண் எதிரே கண்டதுண்மை. ஒழியப் போந்திலேன் - (அவரைத்) தொடர்ந்து செல்வதை (யான்) கைவிடவில்லை. ஒக்கவே ஓட்டந்தேன் - (அவர் செல்லும் விரைவினுக்கு) ஏற்ப (நான் கூடவே விரைந்து) ஓடினேன். வழியிற் கண்டிலேன் - (இப்படி அவர் விரைந்து செல்வதால் அவரைச் செல்லும்) வழியில் கண்ணாரக் காண முடியவில்லையே.

இப்பாடல்களிற் கண்ட அகச்சான்றுச் செய்திகள் கொண்டு அடிகளின் இவ்வரலாற்றுப் பகுதிகள் தெற்றென விளங்குதல் காண்கின்றோம்.

மற்றும், ''திறக்கப் பாடிய'' என்னும் பாட்டிற்காணும் செய்திகள் அகச் சான்றாகவே அமைத்திருத்தல் கண்கூடு. இப்பாட்டினால்தான் - அகச் சான்றினால்தான், அப்பரும் சம்பந்தரும் சம காலத்தவர் என்ற உண்மை உறுதியாயிற்று, அன்றியும், மேலே கூறியபடியான கதவு திறத்தல், அடைத்தல் பற்றிய செய்திகள் யாவும் அகச் சான்றாக மிளிர்கின்றன. மற்றும், அப்பர் வருத்தம், கனவு நிலை, இறைவன் தோற்றம், அழைப்பு, அடிகள் தொடர்தல், கடவுட் காட்சி முதலிய செய்திகளும் அகச் சான்றாக விளங்குதல் காணலாம்.

இப்பதிகத்தில் காணும் அகச் சான்று நிகழ்ச்சிகளால் கடவுள் அப்பருக்கு எத்துணை அணுக்கராய் இருந்து ஆடல் நிகழ்த்தினான் என்பதும், அதற்குரிய அவர்தம் அளப்பரும் பத்திமையும், தூய்மை வாழ்வும், அளப்பிலாப் பண்பும், தெய்வநிகழ் தன்மைகளும் இனிதறியக் கிடைக்கின்றன. உலகில் ஞானியார் பலரின் வாழ்வில் இவ்வாறான அரிய நிகழ்ச்சிகள், செய்திகள் ஏராளமாகப் பல நாடுகளிலும், மொழிகளிலும் கூறப்பெற்றுள்ளன. அவை நிகழ்ந்துமிருக்கலாம் அல்லது கற்பனையாகவுமிருக்கலாம். ஆனால், அவைகள் நடந்தவைதாம் என்பதற்கான அகச் சான்றுகளில்லையே! ஆனால், **தமிழ் நாட்டார் செய்த நற்றவத்தின் பயனாக நம் நாயன்மார்கள் வரலாற்றின் பற்பலவாம் அரிய நிகழ்ச்சிகளுக்கு அகச்சான்றுகள் கிடைத்துள்ளன. அவற்றைப் போற்றி உலகம் பயன் பெறுமாக!**

## தமிழ் மறையின் தனிச் சிறப்பு

**இனித் திருமறைக்காட்டின் நிகழ்ச்சிகள் பற்றி முறையே ஆய்வுரை செய்வோம். முதலில், வேதங்கள் அங்கே சிவலிங்கப் பெருமானை வழிபட்டுத் திருக் கதவங்களைத் திருக்காப்புச் செய்தது பற்றிப் பார்ப்போம்.**

**முற்கூறியபடி நான்கு வடமொழி மறைகளும் தெய்வ வடிவங்கொண்டு கோயிலுட் புகுந்து நேர்முக வாயில் வழியாகச் சென்று, பெருமானை வழிபட்டன. திரும்புங்கால் வாயிற் கதவுகளை அடைத்துவிட்டுச் சென்றன. அடைத்தமைக் கடையாளமாகத் தமது இலச்சினைகளைக் (முத்திரைகள்) கதவிற் பொறித்துப் பூட்டுமிட்டன. இந்தக் கொள்கை சரியா?. தாம் திரும்பி வராத சூழலில் மற்றவர் எப்படி வழிபடுவர்? என்று வேதங்கள் நினைத்துப் பார்க்க வேண்டாமா? தாம் மட்டும் வழிபட்டால் போதும் என்று வேதம் நினைப்பது சரியா? எல்லாக் கோவில்களும் பூசையின்போது வாயில்கள் மந்திரங்களால்**

திறக்கப்பட்டுப் பூசை முடிந்தவுடன் மந்திரங்கள் சொல்லிப் பூட்டப்படுகின்றன. இன்னும் இது வழக்கிலுள்ளது.

அடைத்துச் சென்றவர்களே மீண்டும் வந்து திறத்தல் வேண்டும் அல்லது அடைத்துச் சென்றவர்கள் போலுஞ் சிறப்புடையவர்களே வந்து திறக்க வேண்டும். அம்முறையில் வடமொழி வேதங்கள் அடைத்த கதவுகள் மீண்டும் அவைகள் வந்து வழிபடாமையால் அடைப்பட்டே இருந்தன.

வடமொழி மறைகட்கு ஒப்பத் தமிழ்மறைகள் சிறப்புடையன. அவற்றைவிடவும் சிறப்புடையன. இவ்வுண்மை உலகத்தார் உணர்ந்துய்யவே, செஞ்சடைப் பெருமான், திருஞானப்பிள்ளையாரும், திருநாவுக்கரசரும் அருந்தமிழ்மறை கொண்டு கதவுகளைத் திறக்கவும், அடைக்கவுஞ் செய்தான். வடமறைகள் தாளிட்டன. தென்மறைகள் திறந்து விட்டன. யாவருஞ் சென்று வழிபட்டுய்ய அருள்புரிந்தன. இவ்வாற்றால் வடமறையைவிடச் செந்தமிழ் மறையே சிறப்புடையது என்பதற்குச் சான்று வேறு வேண்டாம்!.

சாத்துப் பெற்றதற்கான கதைக்கு அகச் சான்றில்லை, புறச் சான்றுண்டு. அப்போதும், அவை அடைத்தமைக்கு அகச் சான்றில்லை, போதிய புறச் சான்றுகளுமில்லை. சேக்கிழார் கூறுகின்றாரே எனில், அவைபற்றி அவர் அக்காலத்தவர் கூறக்கேட்ட செய்திகளே யன்றி நேரிலறிந்தவை அல்ல, எது எப்படியிருந்தாலும் திறக்கப்பட்டமைக்கும் அடைக்கப்பட்டமைக்கும் அகச் சான்றுகளுண்டு. அவற்றிற்குரிய சான்றுகளின் வலிமை மிக்க,

> "திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
> உறைப்புப் பாடி அடைப்பித்தார் உந்நின்றார்
> மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
> பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே"

என்னும் அடிகளின் வாய்மைப் பாட்டே போதிய சான்றாகும்.

### நாயன்மார் உயர்வு

**நான்மறைகளே, தெய்வங்களின் உருக்கொண்டு வடமொழியினால் சிவபிரானை வழிபட்டுக் கதவுகளைப் பூட்டிச் சென்றன. அவை மீண்டும் வந்து திறக்கவில்லை. அவை போன்ற ஆற்றலுடைய தெய்வங்களே வந்து கதவுகளைத்திறத்தல், அடைத்தல் வேண்டும் என்ற முறையை மேலே கூறப்பெற்றமையால் அறிவோம். அவ்வகையில் சிவநெறிப் பெருங்குரவர்களான ஞானச் செல்வரும், சொல்லின் அரசரும், அக்கதவுகளைத் திறக்கவும், அடைக்கவும் பாடினர் என்றால்,"அவ்வடமொழி நான்மறைகளின் அதி தெய்வங்கள் போன்றவர்களே அவ்விருவரும்" என்பதும், அவர்களருளிய தமிழ்த் திருமுறைகளும் வடமறைகள் போன்றவையே என்பதும் நன்கு விளங்குதல் காண்க.**

**ஆதலினால் இக்காலத்தில் தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் தமிழ்மறைகளாகிய தேவார, திருவாசகத் திருமுறைகள் கொண்டே கோயிற் சடங்குகள் அனைத்தையும் செய்யலாம் என்ற உண்மையை வலியுறுத்தியே, 1929, மேத்திங்களில் மறைமலை அடிகள் தலைமையில், ஞானியாரடிகள் முன்னிலையில் கூடிய திருப்பாதிரிப் புலியூர்ச் சைவர் மாநாட்டில் தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன. வைணவ சமயத் தலைவர்களாகிய பன்னிரு ஆழ்வார்கள் அருளிய தமிழ் மறைகளும், சைவத் தமிழ் மறைகள் போன்ற சிறப்புடையன வாதலால், அச்சமயத் திருக்கோயிற் சடங்குகள் யாவும் திவ்வியப்பிரபந்தங் கொண்டே நடைபெறும் இயல்புடையனவேயாம் என்றறிவோமாக.**

**கதவு திறந்தமை, அடைத்தமை பற்றி எழுங் கருத்துக்களுக்கு அமைதி.**

இனி, இத்தலைப்பு பற்றி அன்பர்கள் கூறுங்கருத்துக்கள் பற்றிய ஆய்வுரை காண்போம்.

அப்பரின் முதற்பாட்டு முதல் பத்துப் பாடல்கள் வரை சிவபிரான் அவர் வேண்டியபடி கதவைத் திறக்கவில்லை. பதினோராம் பாட்டில் அடிகள் சற்றே வருத்தமுடன் ‘‘அரக்கனை விரலால் அடர்த்திட்டநீர்’’ என்று பாடவே கதவு திறந்தது. ஆனால், கதவடைக்குமாறு சம்பந்தர் பாடிய முதற்பாட்டிலேயே கதவு அடைக்கலாயிற்று. இதற்குக் காரணம், நாவரசர் பாட்டில் சிவபிரானுக்கு மிகவும் விருப்பம் என்று சிலர் சொல்வர். அதனை ஏற்பதாயின், சம்பந்தர் பாட்டில் அவனுக்கு விருப்பமில்லை, அதனால்தான் முதற்பாட்டிலேயே இறைவன் கதவடைக்கச் செய்தான் என்றல்லவோ கூறநேரும்?.

இவ்விரு கருத்தும் பொருந்தியதல்ல. ஆகவேதான் இந்நிழ்ச்சிக்குப் பிறகு தம் திருமடஞ் சென்ற திருநாவுக்கரசர் மேலே காட்டியவாறு அடிகள் வருந்தியதை,

‘‘அரிதில் திறக்கத் தாம்பாட அடைக்க அவர் பாடியஎளிமை கருதி நம்பர் திருஉள்ளம் அறியா தயர்ந்தேன் எனக்கவன்று பெரிதும் அஞ்சித் திருமடத்தில் ஒருபால் அணைந்து பேழ்கணித்து மருவும் உணர்வில் துயில்கொண்டார் வாய்மை திறம்பா வாகீசர்’’ என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார்.

ஒப்பச் சிறந்த தலைவர் இருவர் ஓரவையில் அமர்ந்துள்ளனர். அப்போது அந்த அவையைத் திறந்து வைக்குமாறு – தொடங்கி வைக்குமாறு அவை கூட்டியோர் இவர்களில் எவரை வேண்டுவதென்று திகைத்துள்ளனர். அந்நிலையில் தலைவரில் ஒருவர் மற்ற தலைவரைப் பார்த்து ‘‘பெரியீர்! தாங்கள் இந்த அவையைத் தொடங்கி வைத்தருள்க’’ எனின், அவரதற்கிசையாது ‘‘தாங்கள் தாம் தொடங்கி வைத்தருளல் வேண்டும்’’ என்பர். இ∴தியல்பு, மரபு.

இம்மரபுக்கேற்பச் சம்பந்தர் வேண்டியபோது, நாவரசர் நடந்து கொள்ளவில்லை. ஓர் இமைப்பளவு நேரம் அரசுகள் திறக்கப்பாடும் ஆற்றல் தமக்குண்டு, என்று எண்ணிப் பாடிவிட்டார். ‘‘அரிய கற்று ஆசற்ற’’ ஆன்றோராகிய அப்பெருமான்பால், அணுவளவே ‘‘தான்’’ என்ற முனைப்பு (ஆணவம், அகங்காரம்) தலைப்பட்டுவிட்டது போலும்! அது தவறு என்று அவர்க்குணர்த்தவே சிவபிரான் பத்துப் பாட்டளவும் திறக்காதிருந்தான். இ∴தடியேன் கருத்தல்ல. அரசுகளின் கருத்தே (அப்பர் கருத்து). இதனை அரசின் கருத்தாகவே சேக்கிழார், ‘‘பிழைத்துச் செவ்வி அறியாதே திறப்பித்தேன்’’ செவ்வி-முறைமை, மரபு ‘‘....... நம்பர் திரு உள்ளம் அறியாதே அயர்த்தேன்’’ நம்பர் - சிவபிரான் அயர்த்தல் - எண்ணாமல் செயற்படுதல் (அயர்த்தேன் என்பது தவறு செய்து விட்டேன், என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளது) என்று கூறியிருத்தல் காண்கின்றோம். மேலும், தாம் அவ்வாறு செய்து விட்டோமே என்று அடிகள்,

‘‘கவன்று – பெரிதும் அஞ்சினார்’’ என்று மேலுஞ் சேக்கிழார் கூறியிருத்தல் காண்கின்றோம்.

‘‘குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே’’

“அத்தாவுன் அடியேனை அன்பா லார்த்தாய்
அருள்நோக்கில் தீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்
எத்தனையும் அரியைநீ எளியை யானாய்
எனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் அத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையும் எம்பரமோ ஐய ஐயோ
எம்பெருமான் திருக்கருணை யிருந்த வாறே”

என்று அடிகள் தம்மை எவ்வளவு தாழ்வாகக் கருதி உருகி உருகிப் பாடியிருக்கின்றார்கள்?

இத்தகு மேன்மையால் தெய்வம் போன்ற தன்னடியாரிடத்து அணுவளவும் குறை கூடாதென்று உலகவர்க் குணர்த்தவே, இறைவன் பத்துப் பாட்டளவும் கதவு திறவாது விட்டான். இதனை ஏறத்தாழ எழுபது ஆண்டுகட்கு முன் வாழ்ந்த சிதம்பரம் ஈசானிய மடத்து இராமலிங்க அடிகளார் என்ற பெரியாரும் நால்வர் நான்மணி மாலை என்ற மிக அற்புதமான விளக்கவுரை நூலிற் குறிப்பிட்டுள்ளார். மறைமலையடிகளார் கருத்து மிதுவே.

“நம்பர் கருத்து அறியாது அயர்த்தேன்” என்று அடிகள் வருந்துவதற்குக் காரணம், சிவபிரான் கருத்தறியாது தாம் கதவைத் திறக்கும் ஆர்வத்தால் இறைவனை “இரக்கம் ஒன்றிலீர்” என்று வற்புறுத்தித் திறக்குமாறு செய்தமை பிழையாம் என்றும் அதற்காகவே, பெரிதும் அஞ்சினார் என்றும் சிவக்கவிமணி அவர்கள் உரை விரித்துள்ளார்கள். இவ்வுரை பொருத்தம் என்றால், நாவரசர் அடைக்கப் பாடுமாறு கேட்டவுடனேயே சம்பந்தர் பாடினாரே, அதுவும் பிழை என்றல்லவோ ஆதல் வேண்டும், அப்படியானால், அவர் அடைக்கப் பாடிய முதற்பாட்டின் போதே கதவடைத்தது ஏனோ? அவர் மட்டும் சிவபெருமான் நம்பர் திருவுள்ளம் அறிந்துதான் பாடினார் என்று சேக்கிழார் கூறவில்லையே!.

ஆனாலிங்கே, அடிகள் “நம்பர் திருவுள்ளம் அறியாதே அயர்த்தேன்” என்பதன் பொருள், யாதெனில், “ஞானப்பிள்ளையார், திறக்கப்பாடும் அப்பரே! என்ற போது, நீரே (சம்பந்தர்) அது செய்தல் வேண்டும் என்று, நீர் (அப்பர்) கூறாமை தவறாம்” என்பதே நம்பர் திருவுள்ளக் கருத்தெனக் கொள்ளலாம்.

அங்ஙனமானால், அப்பர், “சம்பந்தரை அடைக்கப்பாடுவீர்கள்” என்ற உடன், “தாங்களே பாடுவீர்கள்” என்று சம்பந்தர் கூறாமை குறையாகாதோ என்னில் குற்றமாகாது. முன்பே அடிகள் திறக்கப் பாடி விட்டாராதலின் என்க.

## ஆளுடைய பிள்ளையின் தனிச் சிறப்பு

ஞானச்சேயின் தனித் தெய்வத் தன்மை, நாயன்மார்களில் எவர்க்குமே கிடையாது. ஏனையோரெல்லாரும் உலகப் பொது மாந்தர் போலப் பிறந்து உலகியலில் முறைப்படி வளர்ந்து கல்வி, கேள்விகளாலும் இயல்பாயமைந்த முன்னைத் தவத்தாலும் தக்க அகவை (வயது) அடைந்தபின்பே இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றனர். ஆதலால் வினையாலும், உலக இயல்பாலும் அவர்கள்பால் சிவபிரான் ஆட்கொள்வதற்கு முன்பு குறைகள் சிறிதே இருந்திருக்கலாம்.

ஆனால், ஆளுடைய பிள்ளையாரோ மூன்றாண்டுக் குழந்தையாயிருந்த போதே ஆட்கொள்ளப் பெற்றார். இறைவனும் இறைவியும் பாலூட்ட உண்டு, யாவும் ஓதாதுணர்ந்து திருமுறைகள் அருளினார். உலகின் எவ்வகைச் சிறுமைகளும், குறைகளும், அவரிடத்தில்லை, இருக்கவும் முடியாதே! சின்னஞ்சிறு குழந்தையல்லவா?

குறையொன்று மில்லாமே நிறை அருட்சிவம் போன்றே அவர் விளங்கினார். அவர் பேரறிவோ சிவம்; நிறைவாயது. ஆதலினாற்றான், தெய்வச் சேக்கிழார் அருட்செல்வரை,

"யாவருக்குந் தந்தைதா யெனுமிவரிப் படியளித்தார்
ஆவதனா லாளுடைய பிள்ளையா ராயகில
தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகும்
தாவிறனிச் சிவஞான சம்பந்த ராயினார்."

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தாரந்நிலையில்"

என்று அவர் ஒப்பிலாத் தெய்வம் நிகழ் தன்மையை எடுத்துக்காட்டுகின்றார்.

'சிவம் போலும் மாசிலா அருள் நிறைவாகிய ஞானசம்பந்தரே திருக்கதவுகளைத் திறக்கும் பெற்றியர்' என்பது சிவபிரான் திருவுள்ளம் போலும்!. அக்கருத்தறியாதே தாம் திறக்கப்பாடியது பிழையாம் என்று அடிகள் கவலையுற்றுப் பெரிதும் அஞ்சினார் என்று சேக்கிழார் கூறியருளினார் போலும்! என்றுங் கருத இடமிருக்கின்றது.

## காட்டக் கண்டார்

**இதனை வலியுறுத்துவதேபோல், திருவாய்மூரில் சிவபிரான் தமக்குக் காட்சி தராமையால் மிக வருந்திய அடிகள், ஞானச் சேய்க்காகவேனும் தேவரீர் காட்சியளிப்பதை மறைக்க ஒண்ணாதே! என்று பாடியவுடன் சிவக்காட்சி நிகழ்ந்தமையும், அதனை அப்பராற் காணக் கூடவில்லை. ஞானப் பிள்ளையார் கண்டு மகிழ்ந்து "அப்பரே! இதோ காண்பீர்! நம் பெருமான் திருக் காட்சியை" என்று காட்ட, அவ்வளவில் அக்காட்சி நம் சொல்லரசர்க்குங் கிடைத்தது. அது கண்டு அடிகள் அளவிலாமகிழ்வு கொண்டு அக்காட்சியின் மாட்சியைப் பத்துப் பாக்களாற் பாடிப் பெரிதும் இன்புற்றார் என்று சேக்கிழார்பிரான் பாடுகின்றார். கன்றினைக் கண்டவுடன் ஆ, பால் சுரப்பதே போல் கன்றாம் ஞானக் குழந்தையின் பெயரைக் கேட்ட உடனே இறைவன் காட்சி தோன்றியதும், கன்று பாலுண்ண மடி சுரந்து பாலளிக்கும் ஆவினைப்போல், ஞானசம்பந்தருக்குக் காட்டிய காட்சியை அம்மையப்பன் அப்பருக்குங் காட்டினான் என்று நாம் உணரும்படி யல்லவோ நிகழ்ச்சி யமைந்துள்ளது.**

**இவ்வரிய நிகழ்ச்சியால் ஞானச் செல்வரின் பெருமையை – அருமையைச் சிவபிரான் நாவுக்கரசர்க்கு மட்டுமன்றி உலகோர்க்கும் அறிவுறுத்துகின்றான் எனவும் அன்றியும், இதனாலும், ஞானசம்பந்தர் முன், அடிகள் அடக்கமாகவே இருந்திருத்தல் வேண்டும். அவர், "திறக்கப் பாடுவீர்" என்று அடிகள் கூறியிருத்தல் வேண்டும், எனவும் கருத இடமுள்ளமையறியலாம். ஆகவே, இதுகாறும் நிகழ்த்திய ஆய்வுரைகளால், திறக்கப்பாடும் கதவு திருஞானச் செல்வருக்கே அமைதல் வேண்டும், அதனை ஓர்ந்து பாராது பாடியதே "நம்பர் திருவுள்ளம் அறியாதே அயர்த்தேன்" என்பதற்குப் பொருளென்று கோடலே பொருத்தமாம் என்ற உண்மை விளங்குதல் காண்க!.**

## அடிகள் சம்பந்தர் பெருமையை அறிதல்

**மற்றும், அப்பரடிகள் சிதம்பரத்தி லிருக்கையிலேயே, "அம்மையோடப்பர் தோன்றி எண்ணரிய சிவஞானத்து இன்னமுதத்தைப் பாலோடு கலந்தூட்ட உண்டு மெய்ஞ்ஞானம் முழுதுணர்ந்து செந்தமிழ் மறை ஓதுகின்றார் ஞானச் செல்வர்" என்று கேட்ட போதே பேரன்பு கொண்டு அவரைக் காணச்**

சீர்காழிக்குப் புறப்பட்டதும், பிள்ளையாரைக் கண்டதும் தரையில் வீழ்ந்து வணங்கியதும், தம்மை ''அப்பர்'' என்றவரழைத்தபோது, ''மகனே'' என்று கூறாது ''அடியேன்'' என்று கூறிக் கொண்டதும் ஆய செய்திகள் முன்பே சம்பந்தப் பெருமானின் பெருமையை அடிகள் நன்குணர்ந்திருந்தார், என்பதனைக் காட்டுவதாம்.

எனவே, சம்பந்தர் பெருமையறியாது அடிகள் அவர் கூறிய உடனேயே திறக்கப் பாடினார் என்று கொள்ளுதல் தவறாகும், ஞானச் சிறுவரின் ஆணையைப் போற்றும் முறையிலும், திறக்கப்பாடும் ஆற்றல் தமக்குண்டு என்று நம்பிரான் எண்ணிவிட்டதுமே – அ∴தாவது அயர்ச்சியால் அணுவளவு தன் முனைப்புமே (ஆணவம், அகங்காரம்) யாம் என்பது தெளிவாகின்றதன்றோ?.

இந்நிகழ்ச்சிகளால் தம்மை ஒரு பொருட்டாகக் கருதாமல் அடிகள், **திறக்கப் பாடிய என்னினும் ஞானசம்பந்தர் மேம்பட்டவர் என்று கூறி மகிழ்கின்றாரே, இவ்வரிய தெய்வப்பண்பு அடிகட்கன்றி வேறார்க்கும் அமையாதாகும். ஆதலினாற்றாம் சேக்கிழார் பெருமானும், ''நம்பர் திருவுள்ளம் அறியாதே அயர்த்தேன்'' என்று அடிகள் வருந்துமிடத்து அடிகளை ''வாய்மை திறம்பா வாகீசர்'' என்றார்.**

**இறைவன் திருவுள்ளமறியாது கடுகளவு சிறிய செயலாயிருந்தாலும் செய்யக்கூடாது. திருஞானசம்பந்தர் திருவுள்ளச்சம்மதமின்றி எந்தச் செயலையும் செய்யமாட்டார். ''வாது செய்யத் திருவுள்ளமே'' என்று அவர் மதுரையில் வாதுசெய்ய இறைவனிடம் அனுமதி பெற்று நடத்திய நிகழ்வுகளை நினைவுகூர்ந்து நாமும் நடந்து கொள்ள வேண்டும். நாமறிந்த அளவில் நாவரசர் இரண்டு இடங்களில் திருவுள்ளம் அறியாது செயல்பட்டார் என்று தெரிகிறது. ஓரிடம், இராவணனைத் தப்பிக்க வழிசொன்னது. மற்றது, திருமறைக்காட்டில் திருஞானசம்பந்தர் பாடச் சொன்னவுடன் அவரையே பாடச் சொல்லாமல் முந்திக் கொண்டு தாம்பாடியது. ஆனால் பின்னர் அவற்றை உணர்ந்துவிட்டார். அதை அறிந்த நம் சிவபெருமான் அவருக்குத் திருக்காட்சி நல்கி,**

> **மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையின்**
> **கண்ணுதலான் பெருங்கருணைக் கைக் கொள்ளும் எனக்காட்ட**
> **எண்ணம் இலா வல்அரக்கன் எடுத்து முறிந்து இசைபாட**
> **அண்ணல் அவர்க்கு அருள்புரிந்த ஆக்கப்பாடு அருள்செய்தார்**

**என்ற சேக்கிழார் திருவாக்கை நிறைவாக்கினார். எனவே திருவுள்ளம் அறியாது நாம் எதையும் செய்யக்கூடாது. அப்படியே செய்து விட்டாலும் மனம் வருந்தி மறுபடியும் திருவடியைப் போற்றினால் திருவருள் காட்சி நிச்சயம்.**

**திருமறைக்காடு திருக்கதவம் திறப்பித்தல், மூடுதல் நிகழ்வுகளுக்குப் பின் நாவரசர் உறக்க நிலை - கனவிலே காட்சி - காட்சிக்குப் பின் காட்சியைப் பின்பற்றி ஓட்டமாக வாய்மூர் செலல் - காட்சி மறைதலும், தெரிதலுமான நிகழ்வு - காட்சி மறைதல் - கவலை கொளல் - ஞானசம்பந்தர் வரல் - காட்சியைக் காணப் புலம்பல் - தமக்கில்லாவிட்டாலும் பிள்ளையாருக்காகக் காட்டச் சொல்லல் - பதிகம் பாடல் - பிள்ளையாருக்குக் காட்சி - அப்போதும் அரசுகளுக்குத் தெரிவதில்லை - பிள்ளையார் தாம் அனுபவித்த காட்சியை அரசுகளுக்குக் காட்ட வேண்டுதல் - அவரும் அவ்வாறே காட்சி பெறுதல் - பாட அடியார் பரவக் கண்டேன் என்று பதிகம் முழுவதும் 75 முறை கண்டேன் கண்டேன் என்று நேரடியாகக் கண்டு பாடியது என்று இம்மாதிரி நிகழ்வுகளெல்லாம் நடந்த ஞானபூமியில் நாம் பிறந்திருக்கிறோம். வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அப்பகுதிகளுக்கெல்லாம் வாழ்நாளில் ஒரு முறையாவது சென்று அந்த மண் வாசனையை நுகர்ந்து வரவேண்டும். புரியட்ட காயத்துக்கு அது வலுச்சேர்க்கும். ஏனெனின் நமது உயிரின் நிறைவு யாத்திரை, புரியட்ட காயத்துடன்தான்**

நடைபெறுமென்பதைச் சுவாமி எழுதிவிட்டார். அதாவது, உயிர் உடலை விட்டு யாத்திரைப் பத்துப் பாடிக் கிளம்பும்போது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற புலன் ஐந்தோடு மனம், புத்தி, அகங்காரம் என்ற அந்தக் கரணங்கள் மூன்றாகிய எட்டுடன் மட்டுமே செல்லுமாறு சுவாமி, உயிரின் யாத்திரையை வகுத்துள்ளார். சித்தம் பூலோகத்திலேயே கழற்றிவிடப்படும்.

கண்ட காட்சியை "பாட அடியார் பரவக் கண்டேன்" என்ற தாண்டகப் பதிகப் பாடல்களில், ஒரே பதிகத்தில் 75 முறை கண்டேன் கண்டேன் என்று பதிவு செய்தல் அதை நாம் மனனம் செய்து உருவேற்ற வேண்டாமா? நாமே பார்ப்பது போல நினைக்க வேண்டாமா? "வாழ்க அந்தணர் வானவர்" என்ற திருஞானசம்பந்தரின் திருப்பாசுரத்தோடு ஒப்பிட்டு உணர வேண்டும். இரண்டு பதிகங்களும் செயற்கரிய செய்தபோது பாடப்பட்டவை.

"வாய்மூர் அடிகள் வருவாரே" என்ற திருஞானசம்பந்தரும் வாய்மூரில் பதிகம் பாடியுள்ளார். ஒரு அடியார் பார்க்கிறார். மற்ற அடியாருக்கும் காட்டுகின்ற அளவு தவ வலிமை பெற்ற அடியார் அவர். நாமெல்லாம் காட்டும், காணும் நிலைகளுக்கு உயர்வது எப்போது?

"இருபத்தொன்றாம் நூற்றாண்டில் நம் பெரும்பேறு பெற்ற காரணத்தால், நிறைவான சைவப் பெருவாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கிறோம்" என்று பல கணங்களில் நினைப்பது உண்டு. அது உறுதி செயப்படும் வண்ணம் கீழ்க்கண்ட மடலைப் பிரசுரிக்கிறோம். பெருந்தகை மறைமலையடிகளின் திருப்புதல்வர் மறை. திருநாவுக்கரசு எழுதி, 1974ல் பதிப்பித்து வெளியிட்டிருந்த பெரியபுராண ஆய்வுரையின் இரண்டாந்தொகுதியில் பதிப்புரைப் பொருளடக்கப் பகுதியில் வெளியிட்டிருந்த ஒரு மடல் இதுவாகும்.

## நன்கொடையாளர்கட்கு வேண்டுகோள்

"நட்பும் தயையும் கொடையும் பிறவிக்குணம்" - ஔவையார்.

அன்பிற் சிறந்து நல்லறிவின் நலம் கருதும் பெரியீர்! வணக்கம். பெரிய புராண ஆய்வுரையின் இரண்டாந் தொகுதியாக அப்பர் வரலாற்றாய்வுரை என்னும் இந்நூலின் படிகள் ஆயிரம் அச்சிடுவதற்குச் செலவு உருபா. 4250-க்கு மேலும் ஆகின்றது. ஒரு படியின் விலை உருபா 10-00. இந்த 1000 படிகளில் பேரறிஞர்கள், கலைத்தாள்கள், (இந்து, தினமணி, செந்தமிழ்ச்செல்வி, கலைமகள் போன்றவை), மாவட்ட நூலக ஆணைக் குழுக்கள், நன்கொடையாளர்கள், பாராட்டுரை வழங்குவோர் நெருங்கிய நண்பர்கள், உறவினர்கள், இழப்புகள் ஆகியவற்றிற்காக விலையின்றி 200 படிகள் தரப்பட்டு விடும். எஞ்சிய படிகள் 800-ன் விலை 8000/- ஒரு படியின் விலை 10-ல் 25% கழிவு தரப்படும். ஆகவே, அவ்வகையில் 2000 கழிவு போக உரு.6000/- மட்டுமே. இதில் பதிப்பிடும் முயற்சி, அஞ்சல், விளம்பரங்கட்காக உரு 1000 போகும். இறுதியில் நிகர விற்று முதல் வரவு உரு.5000 ஆகும். 800 படிகளும் விற்று முதலாகக் குறைந்தது ஆறு ஆண்டுகளாகும். நாட்டு மக்களின் கால அறிவுநிலையும், நூலக ஆணைக் குழுக்களின் போக்கும் இத்தகைய மெய்யறிவு, மெய் ஒழுக்கங்களை ஊட்டும் நன்னூல்களைப் போதியபடி விரும்பி வாங்குவதில்லை. அதுவும் சமய - ஆன்றோர்களின் நூல்கள் - ஆய்வுரை நூல்கள், இத்திரைப்பட உலக மக்களின் உள்ளத்தைக் கவருமா? இந்த 1974-ஆம் ஆண்டிலேயே இந்நூற் பதிப்புக்கு 4250 ஆகுமானால், 1980-இல் இந்நூலின் இரண்டாம் பதிப்புக்கு 5000 போதுமா? இந்த 5000-ம் நூலாசிரியர்க்கல்ல. அடுத்த பதிப்புக்கு வேண்டி ஒதுக்கி வைக்கப்படும். ஒரு நூலின் பதிப்புக்கு மட்டுமே கொடை பெறப்படுகின்றது. மறுபதிப்புக்குக் கொடை கேட்டல் கூடாது. அதற்குத்தான் விற்று முதல் தொகை இருக்கின்றதே.

எனவே, இதுவரை விளக்கியதிலிருந்து இவ்வாய்வுரை நூற்றொகுதிகளின் வெளியீட்டின் நோக்கம் யார்க்கும் வருவாய் கருதியதல்ல என்பதும், திருத்தொண்டின் நலங்களை மக்கள் உணர்ந்து நன்னெறி போற்றி உய்தலையே குறிக்கோளாகக் கொண்டது என்பதும் தெளிவாகும். மேலும், ஒவ்வொரு தொகுதியின் விற்று முதலையும் மேற்காட்டியபடி அவ்வத் தொகுதியின் மறு பதிப்பின் செலவுக்கே யாக்குதலின், ஒவ்வொரு தொகுதியின் வெளியீட்டிற்கும் தனித்தனியே நன்கொடைகள் தேவைப்படுகின்றது. பதிப்புக்காக ஆயிரக்கணக்கில் தொகை வேண்டியிருப்பதால் 10 அல்லது 20 கொடைகளால் செயல் கைகூடுவது கடுமையாகிவிடும். நடப்பதும் அருமையே.

ஆகவே, கொடையாளர் அன்பு கூர்ந்து குறைந்தது உரு.100 உதவ வேண்டுகின்றேன். ஆயிரங் கொடை வழங்குவோர் திருவுருவப் படம் நூலின் முழுப் பக்கம் ஒன்றிலும், 500 வழங்குவோர் திருவுருவப் படம் அரைப்பக்கத்திலும் வெளியிடப்படும். உரு. 1000 முதல் உரு. 500 வரை உதவுவோர் தங்கள் படங்களையும் உதவ வேண்டுகின்றேன்.

இன்னும் இதுபோலும் பெரியபுராண ஆய்வுரைத் தொகுதிகள் 5 வெளிவருதல் வேண்டும். குறைந்தது அவற்றிற்காக உருபா. 30,000 வேண்டும். சிவநெறி யறிந்து, செந்தமிழ் கற்று நன்னெறியில் ஒழுகி, மாந்தர் இன்ப நலங்கள் யாவும் பெற இந்நற்பணியைப் பரப்பிய புகழும், நற்பேறும் சிறப்பு நன்கொடையாளர்கட்கே உண்டு என்று தெரிவித்துக் கொள்கின்றேன்.

> வான்முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க! மன்னன்
> கோன் முறை அரசு செய்க! குறைவிலாது உயிர்கள் வாழ்க!
> நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி மல்க!
> மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்.

சென்னை
18-04-1974

இன்னணம்
மறை. திருநாவுக்கரசு

இதைப்போலவே சிவக்கவிமணி அவர்களும் 1943ஆம் ஆண்டு வெளியிட்ட பெரியபுராண உரையின் பதிப்புரையில் ஐரோப்பிய போர் முடுகிய நிலையில் கடும் காகிதப் பஞ்சம். படம் எடுத்துப் பதிவாக்கும் சாதனங்கள் இல்லாமை, அச்சுக்கூலி, தாள் விலை ஏறி கணிப்பொறியில் எழுத்துக்களை அச்சிட மிகுந்த செலவு, பொருள் பற்றாக்குறை போன்ற கருத்துக்களைக் கூறி நூல் வெளியீட்டில் இருந்த இடர்ப்பாடுகளை எடுத்தியம்பியிருந்தார்கள்.

தமிழ்த்தாத்தா உ.வே.சா. அவர்களின் நூல் பதிப்பு வெளியீடு அனுபவங்களும் அவ்வாறே இருந்திருக்கின்றன.

ஆயிரம் படிகள் எடுக்க அவர்கள் எவ்வளவு இன்னல்பட்டிருக்கிறார்கள் என்று நினைத்துப் பார்க்கையில் கண்ணீர் வந்தது. இன்று 2015 ஆம் ஆண்டு எவ்வளவு பெரிய நூலாக இருந்தாலும் இலட்சம் பிரதிகள் வெளியிட்டு அனைவரும் இலவசமாகப் படித்துப் பெரு வாழ்வு வாழ வழி வகுத்த திருவருளுக்கு எப்படி நன்றி சொல்வது? என்ன கைம்மாறு கொடுப்பது? என்னையே கொடுத்த பின் கைம்மாறு கொடுப்பதற்கு என்ன இருக்கிறது?

சிவபெருமானை சிக்கெனப் பிடித்துக் கொண்டு திருநாவுக்கரசர் நமக்கருளிய திருமுறைகளை நாளும் ஓதி மற்றவர்களையும் ஓதுவித்தலே நாமெல்லாம் உய்யும் நெறி எனக் கொண்டு ஐந்தாம் திருமுறை வழிபாட்டுக் கருத்தரங்கம் 2015-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 29, 30-ம் தேதிகளில் சனி, ஞாயிறு நாட்களில் பின்கண்ட நிகழ்வுப்படி நடைபெறும்.

| | | | | |
|---|---|---|---|---|
| முதல் திருமுறை | 136 | 1469 | திருஞானசம்பந்தர் | டிசம்பர் 27, 28.2014 |
| இரண்டாவது திருமுறை | 122 | 1331 | திருஞானசம்பந்தர் | பிப்ரவரி 21, 22.2015 |
| மூன்றாம் திருமுறை | 127 | 1369 | திருஞானசம்பந்தர் | ஏப்ரல் 18, 19.2015 |
| நான்காம் திருமுறை | 113 | 1070 | திருநாவுக்கரசர் | ஜீன் 27, 28.2015 |
| ஐந்தாம் திருமுறை | 100 | 1015 | திருநாவுக்கரசர் | ஆகஸ்டு 29, 30.2015 |

இரண்டு மாத இடைவெளியில் சுமார் 1500 பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்து, கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும் திருமதி ப. தமிழரசியைத் தலைவியாகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின் திரு. இரா. மதன்குமார், திருமதி ச. கவிதா, திரு.வே. பூபதிகிருஷ்ணன், திரு. பு. பிரபுராம் ஆகியோருக்கும், கணினி நிபுணர்களான மு. மகேஷ், திரு. சசி ஆகியோருக்கும், ஒருங்கிணைப்புப் பணியில் ஈடுபட்டிருக்கும் திரு. ப. மணிசேகர், திரு. அ. இராமசாமி போன்றோருக்கும் நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும் மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை மறுமை இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் http://www.panniruthirumurai.org/ என்ற இணையதள விலாசத்தில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படிவமெடுத்தும் தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற அன்புடன் வேண்டுகிறோம்.

அன்பன்,

**இராச. வசந்தகுமார்**

நிறுவனர் - வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்

கோவை - 21

: ம் ம்

## ஐந்தாம் திருமுறைக் கருத்தரங்கம்

## 29, 30 ஆகஸ்டு 2015 (சனி, ஞாயிறு)

### நிகழ்ச்சி நிரல்

**நூறு பதிகங்களும் குறுந்தொகை யாப்பில் அமைந்துள்ளன.**

| வ.எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வு பொருள் |
|---|---|---|---|
| 1. | 29.08.2015 சனி<br>காலை 9.00 - 11.00 | முதுமுனைவர்<br>**ந. இரா. சென்னியப்பனார்**<br>அவர்கள் | 1 - 14 திருப்பதிகங்கள் |
| 2. | 29.08.2015 சனி<br>நண்பகல் 11.00-01.00 | பேராசிரியர்<br>**ம.வே. பசுபதி** அவர்கள் | 15 - 28 திருப்பதிகங்கள் |
| 3. | 29.08.2015 சனி<br>பிற்பகல் 02.00-4.00 | பேராசிரியர் **புரிசை**<br>**புரிசை நடராசன்**<br>அவர்கள் | 29 - 42 திருப்பதிகங்கள் |
| 4. | 29.08.2015 சனி<br>மாலை 4.00-07.00 | தேவார இன்னிசை,<br>பக்க வாத்தியங்களுடன்<br>முனைவர்<br>**கோ.ப. நல்லசிவம்**<br>அவர்கள், தஞ்சாவூர் | ஐந்தாம் திருமுறை<br>நாதநாமக்கிரியை /<br>பூர்விகல்யாணி |
| 5. | 30.08.2015 ஞாயிறு<br>காலை 9.00-11.00 | சைவத்திரு<br>**சு. குஞ்சிதபாதம்**<br>அவர்கள் | 43 - 57 திருப்பதிகங்கள் |
| 6. | 30.08.2015 ஞாயிறு<br>நண்பகல் 11.00-01.00 | சைவத்திரு **சிவ. காந்தி**<br>அவர்கள் | 58 - 72 திருப்பதிகங்கள் |
| 7. | 30.08.2015 ஞாயிறு<br>பிற்பகல் 02.00-04.00 | சைவத்திரு.<br>**சொ.சொ.மீ.சுந்தரம்**<br>அவர்கள் | 73 - 87 திருப்பதிகங்கள் |
| 8. | 30.08.2015 ஞாயிறு<br>மாலை 04.00- 06.00 | மகாவித்துவான் மயிலம்<br>**வே.சிவசுப்பிரமணியம்**<br>அவர்கள் | 88 - 100 திருப்பதிகங்கள் |

## ஐந்தாம் திருமுறைக்கு இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்

| வ. எண் | ஆண்டு | நூலின் பெயர் | வெளியீட்டாளர் / பதிப்பகத்தார் / அச்சகம் | ஆசிரியர் | கொடையாளர் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | 1864 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | அப்பாவுப்பிள்ளை நமச்சிவாய முதலியார் | திருவாவடுதுறை ஆதீனப் பிரதிகள், தேசிகர்கள் எழுதிய ஓலைச்சுவடிகள் ஆதாரம் |
| 2. | 1866 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | ஏழு திருமுறைகளாகப் பண்முறையில் வெளியிடப்பட்டது |
| 3. | 1876 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | மறுபதிப்பு |
| 4. | 1881 | தலமுறைத் தேவாரம் | மதுரை இராமசாமிப் பிள்ளை, சென்னை புஷ்பரத செட்டியார் அச்சுக்கூடம் | துறைசை ஆதீன அப்பு ஓதுவார் | பனசை சீர்வளர்சீர் காசிவாசி இராமலிங்க சாமிகள் | மதுரை, துறைசை ஆதீனப் பிரதிகள் ஒப்பு |
| 5. | 1894 | தலமுறைத் தேவாரம் | திருமயிலை செந்தில்வேல் முதலியார் சென்னை விக்டோரியா ஜீபிலி அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் சீர்வளர்சீர் காசிவாசி சாமிநாத சாமிகள் | |
| 6. | 1898 | பண்முறைத் தேவார அடங்கல் | சண்முக முதலியார் சென்னை ஆறுமுகவிலாச அச்சுக்கூடம் | வேங்கட நாயுடு | - | மூன்றாம் முறை மறுபதிப்பு |
| 7. | 1905 | தலமுறைத் தேவாரம் | சென்னை கலாரத் நாகர அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் சீர்வளர்சீர் காசிவாசி சாமிநாதசாமிகள் | |

| 8. | 1906 | பண்முறைத் தேவார அடங்கல் | எஸ்.பி இராஜாராம், ஸன் ஆப் இந்தியா அச்சகம், சென்னை | திருமயிலை வித்வான் சண்முகம் | | மறுபதிப்பு |
|---|---|---|---|---|---|---|
| 9. | 1907 | தேவாரம் | பங்காளம் அப்புபிள்ளை சென்னை நேஷனல் அச்சுக்கூடம் | | | |
| 10. | 1911 | தலமுறை மூவர் தேவாரம் | யாழ்ப்பாண வண்ணநகர்ச் சுவாமிநாத பண்டிதர், சென்னை வித்தியா நுட்பாலன அச்சுக்கூடம் | | | |
| 11. | 1917 | பண்முறை தேவார அடங்கல் | நமச்சிவாய முதலியார் நிரஞ்சன விலாஸ் அச்சகம், சென்னை | | | மறுபதிப்பு |
| 12 | 1917 | தேவார வேதசாரம் | மகாசமாஜம், இலங்கை | சைவ சித்தாந்த செந்தில்நாதய்யர், இலங்கை | மங்கையர்க்கரசி ஏகாம்பர முதலியார் | |
| | 1996 மறுபதிப்பு | | கலா சம்ரக்ஷண சங்கம், தஞ்சாவூர் | | மாதுஸ்ரீ பாலம் அம்மையார் | |
| 13. | 1927 | திருநாவுக்கரசர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| 14. | 1929-31 | திருநாவுக்கரசர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| 15. | 1930 - I<br>1935 - II<br>1941 - III | திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் 4,5,6 திருமுறைகள் | சைவ சித்தாந்த மகாசமாஜம், | | | மூன்று பதிப்புகள் |
| 16. | 1953 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் பதிப்பு | - | - | - |

| 17. | 1961 | திருநாவுக்கரசர் தேவாரம் 5ஆம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் தருமபுரம் | பொழிப்புரை முனைவர் சொ.சிங்காரவேலன் | தருமையாதீனம் 25வது குருமகா சந்நிதானம் | குறிப்புரை - வச்சிரவேல் முதலியார், வி.சா. குருசாமி தேசிகர் |
|---|---|---|---|---|---|---|
| 18. | 1961 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 19. | 1968 | மூவர்தேவாரம் (தலமுறை) | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 20. | 1971 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | இரண்டாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 21. | 1972 | பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு தொகுதிகள்) | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் (காசித் திருமட நிதிய வெளியீடு) | வித்துவான் க. வெள்ளைவாரணர் | | 2412 பக்கங்கள் கொண்ட பெரிய வரலாற்று நூல் |
| 22. | 1979, 82, 92, 96 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | 4,5,6 ஆம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | ஒவ்வொரு பதிப்பிலும் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 23. | 1997 | இரண்டாம் பதிப்பு திருநாவுக்கரசர் ஐந்தாம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் - தருமபுரம் காந்தளகம், சென்னை | பொழிப்புரை முனைவர் சொ. சிங்காரவேலன் | தருமையாதீனம் 26 வது குருமகா சந்நிதானம் | குறிப்புரை - வச்சிரவேல் முதலியார், வி.சா. குருசாமி தேசிகர் |
| 24. | 1998 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் மறுபதிப்பு | | | |
| 25. | 2001 | திருநாவுக்கரசர் தேவாரம் வரலாற்று முறை | சிவகாசி சிவனடியார் அறக்கட்டளை | பதிப்பாசிரியர் கு. சுந்தரமூர்த்தி | | |
| 26. | - | தேவாரம் மூன்று தொகுதிகள் | பிரெஞ்சு நிறுவனம் | கல்விக்கடல் கோபாலய்யர் | | |
| 27. | 2001 | திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் | காசித்திருமடம் திருப்பனந்தாள் | ஏழாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி | 3000 படிகள் - மூலம் மட்டும் |
| 28. | 2003 | திருநாவுக்கரசர் தேவாரம் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | வ.த. இராம சுப்பிரமணியம் | அருட்செல்வர் மகாலிங்கம் | ஐந்தாம் பதிப்பு மூலமும், தெளிவுரையும் 12 திருமுறைகள் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 29. | 2004, 2006 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | 8, 9 ஆம் பதிப்புகள் | பன்னிரு திருமுறை பதிப்புநிதி | ஒவ்வொரு பதிப்பிலும் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 30. | 2007 | திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் | கைலாஷ் அச்சகம் | | | மூலம் மட்டும்-2500 படிகள் 4,5,6 ஆம் திருமுறைகள் தலமுறை |
| 31. | 2007, 2012 மறுபதிப்பு | பன்னிரு திருமுறை | மெய்யப்பனார் மணிவாசகர் அச்சகம் / பதிப்பகம் வெளியீடு | பதிப்பு ஆசிரியர் முனைவர் ச.வே. சுப்பிரமணியம் தமிழூர் | | மூலம் மட்டும் |
| 32. | 2008 | திருநாவுக்கரசர் தேவாரம் (தலமுறை) | திருப்பனந்தாள் காசித்திருமடம் | பத்தாம் பதிப்பு நிதி | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 33. | 2008 | பன்னிரு திருமுறை | தமிழகச் சைவநெறிக் கழகம் | பதிப்பாசிரியர் சரவண பவானந்த தேசிகர் | | |
| 34. | 2008 | பன்னிரு திருமுறை | சதுரா பதிப்பகம் | தொகுப்பாசிரியர் சதுரா. ஜீ.ச. முரளி | | மூலமும், உரையும் ஒன்று முதல் ஆறு திருமுறை வரை |
| 35. | 2008 | மூவர் தேவாரம் | சதுரா பதிப்பகம் | பதிப்பாசிரியர் சதுரா. ஜீ.ச. முரளி | | 7 திருமுறைகள் மூலம் மட்டும் |
| 36. | 2010 | பன்னிரு திருமுறைகள் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | உரைஆசிரியர் வ.த. இராம சுப்பிரமணியம் | அருட் செல்வர் மகாலிங்கம் | மூலமும், உரையும் |
| 37. | 2010 | திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் (தலமுறை) | ஸ்ரீ கைலாஷ் பிரிண்டர்ஸ், சென்னை | | சைவநூல் அறக்கட்டளை | மூலம் மட்டும் |
| 38. | 2011 | மூன்றாம் பதிப்பு திருநாவுக்கரசர் தேவாரம் ஐந்தாம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் கனரா பிரிண்டர்ஸ் சென்னை | பொழிப்புரை முனைவர் சொ. சிங்கார வேலன் | தருமையாதீனம் 26வது குருமகா சந்நிதானம் | குறிப்புரை - வச்சிரவேல் முதலியார் வி.சா. குருசாமி தேசிகர் |
| 39. | 2015 | ஐந்தாம் திருமுறை திருநாவுக்கரசர் தேவாரம் | கற்பகம் பல்கலைக்கழகம் | பன்னிரு திருமுறை ஆய்வு மையம் | கற்பகம் அறக்கட்டளை | மூலமும், உரையும் |

* திருப்பனந்தாள் காசித் திருமடம் பத்துப் பதிப்புகளாக 30,000 படிகளை மூலமாக அடக்க விலையில் வெளியிட்டுப் பெரும்பணி செய்துள்ளார்கள்.

* வர்த்தமானன் பதிப்பகத்தார் சுருக்கமான உரையுடன் மூலத்தை ஏழு பதிப்புகளாகப் பல தொகுதிகளாக 12 திருமுறைகளையும் அருட்செல்வர் மகாலிங்கம் அருட்கொடையுடன் வெளியிட்டுத் திருமுறைகளுக்குச் சிறப்புச் செய்துள்ளார்கள்.

* இதுவரை வெளிவந்துள்ள உரைகளிலேயே மிக விரிவானது, விளக்கமானது 1961, 1997, 2011 ஆண்டுகளில் வெளிவந்த தருமையாதீன உரைதான். குருமகா சந்நிதானம் அவர்கள் வச்சிரவேல் முதலியார், குருசாமி தேசிகர் போன்ற உரையாசிரியர்களைக் கொண்டு வெளியிட்டருளினார்கள். அவற்றின் மறுபதிப்பை காந்தளகம் அச்சகத்தின் மூலம் வெளியிட்டுள்ளார்கள். மகா வித்துவான் தண்டபாணி தேசிகர், சித்தாந்த வித்தகர் முத்து, சு. மாணிக்கவாசக முதலியார், இலக்கண நிறைகடல் பண்டிதர், அ. கந்தசுவாமி பிள்ளை, முதுபெரும்புலவர், வித்வசிரோமணி, சி. அருணை வடிவேல் முதலியார் போன்ற உரையாசிரியர்களின் பணிகள் போற்றத்தக்கவை.

* நமது ஐந்தாம் திருமுறை நூலை வெளியிட மேற்காண் நூல்களின் தொகுப்புகள் மிக உதவியாக இருந்தன. அனைத்து குரு மகா சந்நிதானங்களுக்கும், நூல் வெளியீட்டாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் அப்பதிப்புகளின் கொடையாளர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள்.



# ஐந்தாம் திருமுறை

## தேவாரம் "பாடியவாறு" அட்டவணை

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஐந்தாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| | 574-ஆம் ஆண்டு திருநாவுக்கரசர் அவதாரம் | 18 | | |
| | 599-ஆம் ஆண்டு திருநாவுக்கரசர் சமணம் சார்ந்தது | 37 | | |
| | 619-ஆம் ஆண்டு திருநாவுக்கரசர் சமணத்திலிருந்து சைவரானது | 67 | | |
| 1. | சமணர்களின் நீற்றறையி லிருந்து வெளிவந்தபோது | 98 | மாசில் வீணையும் | 90 |
| 2. | கடலிலிருந்து கரையேறியதும் அங்கு வந்த அடியார்களை நோக்கி | 132 | ஏயிலானை | 91 |
| 3. | அதிகை வீரட்டம் (ஊரில் தங்கி) | 144 | கோணன் மாமதி | 53 |
| 4. | அதிகை வீரட்டம் (பணி செய்யும்போது) | 144 | எட்டுநாண் | 54 |
| 5. | திருவாமாத்தூர் (தமிழ்பாடி) | 148 | மாமாத்தாகிய | 44 |
| 6. | நெல்வாயில் அரத்துறை (வண்டமிழ் புனைந்து) | 154/5 | கடவுளை | 3 |
| 7. | தில்லை (உழவாரப் பணியின்போது) | 171 | அன்னம் பாலிக்கும் | 1 |
| 8. | திருவேட்களம் (திருமுன் வணங்கி) | 172 | நன்று நாடொறும் | 42 |
| 9. | திருக்கழிப்பாலை | 173 | வண்ணமும் வடிவும் | 40 |
| 10. | தில்லை (கழிப்பாலை யிலிருந்து வரும் வழியில்) | 174 | பனைக்கை மும்மத | 2 |
| 11. | திருநாரையூர் (பணிந்து பாடி) | 179 | வீறுதானுடை | 55 |
| 12. | கடம்பூர் (பணிந்து பாடி) | 179 | தளருங் கோளர | 19 |
| 13. | கடம்பூர் (பணிந்து பாடி) | 179 | ஒருவராயிரு | 20 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஐந்தாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 14. | தோணிபுரம் (நாவரசரும், ஞானசம்பந்தரும் சந்தித்தல், 644 ஆம் ஆண்டு) | 187 | மாதியன்று | 45 |
| 15. | குரக்குக்கா | 189 | மரக்கொக்காம் | 75 |
| 16. | திருநின்றியூர் | 189 | கொடுங்கண் | 23 |
| 17. | புள்ளிருக்கு வேளூர் | 189 | வெள்ளெருக்கு | 79 |
| 18. | திருவெண்காடு | 189 | பண்காட்டி | 49 |
| 19. | செம்பொன்பள்ளி | 190 | கானறாத | 36 |
| 20. | மயிலாடுதுறை | 190 | கொள்ளும் காதன்மை | 39 |
| 21. | அன்னியூர் | 190 | பாறலைத்த | 8 |
| 22. | திருமணஞ்சேரி | 190 | பட்டநெற்றி | 87 |
| 23. | திருக்கோடிக்கா | 190 | சங்குலா | 78 |
| 24. | திருவாவடுதுறை | 191 | நிறைக்க வாலியன் | 29 |
| 25. | திருவிடை மருதூர் (பாமாலை பல சாத்தி) | 192 | பாசமொன்றிலா் | 14 |
| 26. | திருவிடை மருதூர் (பாமாலை பல சாத்தி) | 192 | பறையின் | 15 |
| 27. | திருநாகேச்சரம் (தமிழ்மாலை புனைந்து) | 192 | நல்லா் நல்லதோர் | 52 |
| 28. | திருப்பாலைத்துறை | 198 | நீலமாமணி | 51 |
| 29. | வெண்ணி | 198 | முத்தினை | 17 |
| 30. | பூவனூர் | 198 | பூவனூர்ப் புனிதன் | 65 |
| 31. | திருச்சோற்றுத்துறை | 212 | கொல்லை | 33 |
| 32. | திருப்பழனம் (சிலநாள் அங்கு இருந்தபோது) | 212 | அருவனாய் | 35 |
| 33. | திருவலஞ்சுழி (ஊரை விட்டுச் செல்லும்போது) | 215 | ஓதமார்கடலின் | 66 |
| 34. | குடமூக்கு | 215 | பூவணத்தவன் | 22 |
| 35. | திருச்சேறை | 216 | பூரியாவரு | 77 |
| 36. | கடுவாய்க்கரைப்புத்தூர் | 216 | ஒருத்தனை | 62 |
| 37. | திருவாரூர் (காலங்களில் கும்பிட்டுப் பாடியருளியது) | 226 | எப்போதும் | 6 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஐந்தாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 38. | திருவாரூர் (காலங்களில் கும்பிட்டுப் பாடியருளியது) | 226 | கொக்கரை | 7 |
| 39. | கோளிலி | 228 | மைக்கொள் | 56 |
| 40. | கோளிலி | 228 | முன்னமே | 57 |
| 41. | பேரெயில் | 228 | மறையும் | 16 |
| 42. | திருப்புகலூர் (திருமுன்) | 239 | துன்னக் கோவணம் | 46 |
| 43. | திருநள்ளாறு | 240 | உள்ளாறாத | 68 |
| 44. | திருமருகல் | 240 | பெருகலாம் தவம் | 88 |
| 45. | திருக்கடவூர் (திருஞான சம்பந்தருடன் சேர்ந்து தல யாத்திரை) | 247 | மலைக்கொளானை | 38 |
| 46. | திருக்கடவூர் மயானம் | 248 | குழைகொள் காதினர் | 37 |
| 47. | திருமீயச்சூர் இளங்கோயில் | 249 | தோற்றுங் கோயிலும் | 11 |
| 48. | வன்னியூர் | 249 | காடு கொண்டரங்கா | 26 |
| 49. | திருவீழிமிழலை (ஊரில் தங்கியிருந்த போது) | 253/262 | கரைந்து கைதொழு | 12 |
| 50. | திருவீழிமிழலை (ஊரில் தங்கியிருந்த போது) | 253/262 | என்பொனே | 13 |
| 51. | திருவாஞ்சியம் (போற்றிப்பரவுதல்) | 263 | படையும் பூதமும் | 67 |
| 52. | திருமறைக்காடு (திருக்கதவம் திறக்கும் பொருட்டு) | 268 | பண்ணின் நேர்மொழி | 10 |
| 53. | திருமறைக்காடு (உள்சென்று பெருமான் முன்) | 270 | ஓதமாக்கடல் | 9 |
| 54. | திருவாய்மூர் (ஊர் எல்லையில்) | 277 | எங்கே என்னை | 50 |
| 55. | திருநாகைக்காரோணம் | 291 | பாணத்தால் | 83 |
| 56. | திருக்கொண்டீச்சரம் | 291 | கண்டபேச்சினிற் | 70 |
| 57. | திருக்கோழம்பம் | 293 | வேழம்பத்தைவர் | 64 |
| 58. | திருநல்லம் | 293 | கொல்லத்தான் | 43 |
| 59. | பழையாறை வடதளி | 294-300 | தலையெலாம் | 58 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஐந்தாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 60. | இன்னம்பர் | 301 | என்னிலாரும் | 21 |
| 61. | திருவிசயமங்கை | 301 | குசையும் | 71 |
| 62. | திருமங்கலக்குடி | 301 | தங்கலப்பிய | 73 |
| 63. | தென்குரங்காடுதுறை | 301 | இரங்கா | 63 |
| 64. | திருநீலக்குடி | 301 | வைத்தமாடும் | 72 |
| 65. | கருவிலிக் கொட்டிட்டை | 301 | மட்டிட்ட | 69 |
| 66. | அரிசிற்கரைப்புத்தூர் | 301 | முத்தூரும் | 61 |
| 67. | திருக்கானூர் | 301 | திருவின்நாதனும் | 76 |
| 68. | அன்பிலாலந்துறை | 301 | வானஞ்சேர் | 80 |
| 69. | திருவானைக்கா | 302 | கோனைக்காவி | 31 |
| 70. | திருவெறும்பியூர் | 302 | விரும்பியூறு | 74 |
| 71. | திருச்சிராப்பள்ளி | 302 | மட்டுவார் குழலாள் | 85 |
| 72. | திருப்பராய்த்துறை | 302 | கரப்பர் | 30 |
| 73. | கடம்பந்துறை | 303 | முற்றிலா | 18 |
| 74. | வாட்போக்கி | 303 | காலபாசம் | 86 |
| 75. | திருப்பைஞ்ஞீலி | 310 | உடையர் கோவணம் | 41 |
| 76. | திருப்பாண்டிக் கொடுமுடி | 311 | சிட்டனை | 81 |
| 77. | திருவண்ணாமலையைத் தொழுது | 312 | பட்டி ஏறுகந்து | 5 |
| 78. | திருவண்ணாமலையை (திருமுன் கும்பிட்டு) | 313 | வட்டனைம்மதி | 4 |
| 79. | திருக்கச்சிஏகம்பம் (உழவாரப் பணியின் போது) | 325 | பண்டு செய்த | 47 |
| 80. | திருக்கச்சிஏகம்பம் (உழவாரப் பணியின் போது) | 325 | பூமேலானும் | 48 |
| 81. | திருமாற்பேறு | 327 | பொருமாற்றின் | 59 |
| 82. | திருமாற்பேறு | 327 | ஏதுமொன்றும் | 60 |
| 83. | திருவான்மியூர் | 331 | விண்டமாமலர் | 82 |
| 84. | திருவொற்றியூர் (உழவாரப் பணியின்போது) | 337 | ஒற்றியூரும் | 24 |
| 85. | பாசூர் | 340 | முந்திமூவெயில் | 25 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஐந்தாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 86. | திருவையாறு (தங்கியிருந்த போது) | 385 | சிந்தை வாய்தலும் | 27 |
| 87. | திருவையாறு (தங்கியிருந்த போது) | 385 | சிந்தை வண்ணத்த | 28 |
| 88. | திருநெய்த்தானம் | 386 | கொல்லியான் | 34 |
| 89. | திருக்காட்டுப்பள்ளி | 386 | மாட்டுப்பள்ளி | 84 |
| 90. | திருப்பூந்துருத்தி | 388 | கொடிகொள் | 32 |
| 91. | திருப்பூந்துருத்தி (மனக்குறுந்தொகை) | 390 | பொன்னுள் | 96 |
| 92. | திருப்பூந்துருத்தி (சித்தக் குறுந்தொகை) | 390 | சிந்திப்பார் | 97 |
| 93. | திருப்பூந்துருத்தி (உள்ளக் குறுந்தொகை) | 390 | நீறலைத்த | 98 |
| 94. | புகலூர் (தனிக் குறுந்தொகை) | 414 | ஒன்றுவெண் | 89 |
| 95. | புகலூர் (காலபாசக் குறுந்தொகை) | 414 | கண்டுகொள் | 92 |
| 96. | புகலூர் (மறக்கிற்பன் குறுந்தொகை) | 414 | காசனை | 93 |
| 97. | புகலூர் (தொழற்பாலது குறுந்தொகை) | 414 | அண்டத்தானை | 94 |
| 98. | புகலூர் (இலிங்க புராணக் குறுந்தொகை) | 414 | புக்கணைந்து | 95 |
| 99. | புகலூர் (பாவநாச புராணக் குறுந்தொகை) | 414 | பாவமும் | 99 |
| 100. | புகலூர் (ஆதிபுராணக் குறுந்தொகை) | 414 | வேதநாயகன் | 100 |




# அப்பரடிகள் வரலாறு

இடையறாப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவாரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப்பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம். - காஞ்சிப்புராணம்

**ப**ல்லவப் பேரரசைப் பணியச் செய்தவர். நீற்றறையிலிருந்து மாற்றுறையாத தங்கமாக விளங்கியவர். தன்னைக் கொல்ல வந்த யானையை வணங்கிச் செல்ல வைத்தவர். நஞ்சுண்டு அமைந்த நனிநாகரிகர். கல்லில் பூட்டிக் கடலில் போட்டதும் ஐந்தெழுத்து ஓதிக் கரையேறியவர். உண்ணாவிரதமிருந்து ஒரு அரசனையே திகைக்கச் செய்தவர். இவ்வளவும் செய்த பெருமை சைவ சமயாசாரியார் நால்வரில் ஒருவரான திருநாவுக்கரசு சுவாமிகளையே சாரும். அவர் வரலாற்றைக் காண்போம்.

சோழ நாட்டிற்கும் தொண்டை நாட்டிற்கும் இடையேயுள்ள நடு நாட்டிலே இருப்பது திருமுனைப்பாடி நாடு. அந்நாட்டில் திருவாமூரில், சைவ வேளாளர் மரபிலே குறுக்கையர் குடியிலே, புகழனார், மாதினியார் இருவருக்கும் திருமகனாகத் தோன்றினார் அப்பரடிகள். அவருடைய பிள்ளைத் திருநாமம் மருணீக்கியார் என்பது. இவருக்குத் திலகவதியார் என்ற தமக்கையுமுண்டு. அவ்வம்மையாரைக் கலிப்பகையார் என்ற சேனாதிபதிக்குத் திருமணம் செய்விக்க உறுதி செய்தனர். போர் மேற்சென்ற கலிப்பகையார் பூதஉடல் நீத்துப் புகழுடம்பு பெற்றார். அதற்குள் திருவாமூரில் புகழனார் சிவபதம் அடைந்தார். அவருடன் மாதினியாரும் உயிர்விடுத்தார். கலிப்பகையாரைக் கணவனாக எண்ணிய காரணத்தால் திலகவதியார் உயிர் துறக்கத் துணிந்தார். அப்படிச் செய்யின் தம்பியார் தம் உயிரைப்போக்கிக் கொள்வதாகக் கூறினார். தம்பியார் உயிர் வாழ வேண்டும் என்ற பெருங்கருணையால் உயிர் தாங்கித் தவக்கோலம் பூண்டு, அவருக்குத் தாயும் தந்தையுமாக இருந்து அவரைக் கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்தவராக்கினார். மருணீக்கியார் சமண சமய உண்மையை அறிய விரும்பி பாடலிபுத்திரம் சென்று சமண சமயத்தைச் சார்ந்தார். சமண நூல்களைக் கற்று, புத்தர்களை வாதில் வென்று தருமசேனர் என்ற பட்டமும் பெற்றார்.

திலகவதியார் தன் தம்பியார் சமண சமயஞ் சார்ந்ததற்கு வருந்தித் திருவதிகை சென்று திருக்கோயில் திருத்தொண்டு செய்து வருவராயினார். இப்பால் மருணீக்கியாருக்குச் சூலை நோய் கண்டது. சமணர்கள் அதைத் தீர்க்க முடியாமல் கைவிட்டனர். தருமசேனர் பாடலிபுத்திரம் விட்டுத் திருவதிகையடைந்து தமக்கையார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். அவ்வம்மையார் திருநீற்றை அஞ்செழுத்தோதித் தம்பிக்கு அளித்தார். இருவரும் திருக்கோயிலுக்குச் சென்றனர். இறைவன் திருவருளால் செந்தமிழ் மாலை சாத்தும் உணர்வெய்தி "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்று தொடங்கும் பதிகம் பாடினார். சூலைநோய் தவிர்ந்தது. இனிய செந்தமிழ்ப் பதிகம் பாடியதால் "திருநாவுக்கரசு என்று நின்பெயர்நிலை பெறுவதாக" என்று வானொலியொன்று கூறியது.

திருநாவுக்கரசர் சைவ சமயத்திற்குத் திரும்பியதை யறிந்து சமணர்கள் பல்லவ மன்னனிடம் சென்று அவரைத் துன்புறுத்துமாறு வேண்டினார்கள். அரசன் அவரை அழைத்துவருமாறு அமைச்சர் முதலியோரை அனுப்பினான். "நாமார்க்கும் குடியல்லோம்" என்ற பதிகத்தை வாகீசர் பாடினார். சமணர்களின் தூண்டுதலின் பேரில் அரசன் அவரை நீற்றறையிலிடுவித்தான். "மாசில் வீணையும்" என்ற பதிகம் பாடி ஊனம் ஒன்று மில்லாதிருந்தார். பால் சோறாக்கி நஞ்சு கலந்து கொடுத்தனர். அதுவும் அவரை ஒன்றும் செய்யவில்லை. யானையை ஏவிக் கொல்ல முயன்றனர். "சுண்ண வெண் சந்தனச் சாந்தும்" என்ற பதிகம் பாட, யானை அவரை வலம் வந்து வணங்கித் திரும்பியது. கடைசியாக நாவின் மன்னரைக் கல்லில் கட்டிக் கடலில் போட்டனர். "சொற்றுணை வேதியன்" என்ற பதிகம் பாட, அக்கல்லே தெப்பமாக மிதப்பத் திருப்பாதிரிப்புலியூரிற் கரையேறினார். பின் திருத்தூங்கானை மாடக்கோயிலை யடைந்து "பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்" என்ற பதிகத்தில் "மின்னாரும் மூவிலைச் சூலம் என்மேல் பொறி" என்றும், "இடபம் பொறித்தென்னை ஏன்று கொள்" என்றும் வேண்டி சூலக்குறியும் இடபக்குறியும் தோளில் பொறிக்கப் பெற்றார்.

சீகாழியில் உமாதேவியால் சம்பந்தர் ஞானப்பால் ஊட்டப்பெற்ற செய்தி கேட்டு அவரைக் காண அப்பதிக்குச் சென்றார். சம்பந்தரும் அவரை எதிர்கொண்டு அப்பரே என அழைத்தார். பிறகு சில தலங்களை வழிபட்டு விட்டு அப்பர் திருச்சத்திமுற்றம் சேர்ந்தார். "கோவாய் முடுகி" என்ற பதிகத்தில் "பூவார் அடிச்சுவடு என்மேல் பொறித்துவை" என்று விண்ணப்பிக்க, திருநல்லூரில் பெருமான் அடிச்சுவட்டை அவர் முடிமேற் பொறித்தருளப் பெற்றார்.

பின்பு அப்ப மூர்த்திகள் திங்களூர் சென்று அப்பூதியடிகளின் இல்லம் சேர்ந்தார். அப்பூதியார் அரசனாருக்கு அமுது செய்விக்க இயற்பாடு செய்தார். வாழை இலை அரியச் சென்ற அப்பூதியடிகளாரின் மகன் பாம்பு தீண்ட ஊன் உயிர் வேறானான். அதையறிந்த ஆளுடைய அரசர் அப்புதல்வன் உடலைத் திருக்கோயில் இறைவன் முன் கொணரச் செய்து "ஒன்று கொலாம்" என்ற பதிகம் செய்து பாட, மைந்தன் உயிர் பெற்றெழுந்தான். பல தலங்களை வணங்கிய பின் வாக்கின் வேந்தர் திருப்புகலூர் வந்து முருக நாயனார் மடத்தில் சம்பந்தர், சிறுத்தொண்டர், நீலநக்கர் முதலிய அடியார்களுடன் தங்கினார்.

சம்பந்தரும் அப்பரும் திருவீழிமிழலையடைந்தனர். பஞ்சத்தால் அடியார்கள் வருந்தினார்கள். இறைவன் திருவருளால் இருவருக்கும் நாள்தோறும் படிக்காசு கிடைத்தது. அடியவர்க்கு அமுது படைக்கும் பணியும் முட்டின்றி முடிந்தது. பின்னர் இருவரும் திருமறைக்காடு சென்றனர். கோயிற் கதவு நீண்ட காலமாக மூடப்பெற்றிருந்ததை அப்பரடிகள் "பண்ணினேர் மொழியாள்" என்ற பதிகம் பாடக்கதவும் திறந்தது. இருவரும் பெருமானை வழிபட்டனர். திருஞானசம்பந்தர் திருக்கதவம் மூடப்பாடினார். பின்னர் இருவரும் திருவாய்மூரிலே திருவடிக் காட்சிக் காணப் பெற்றனர்.

மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் வேண்டுகோளுக்கிணங்க திருஞானசம்பந்தர் மதுரை சென்றார். அப்பர் சுவாமிகள் பல தலங்களை வணங்கி பழையாறை வடதளிக்கு வந்தார். பெருமானைக் கண்டால் அல்லது உணவு அருந்துவதில்லை என்ற உண்ணாவிரதம் இருந்தார். இறைவன் சோழ மன்னன் கனவில் இந்நிலையை உணர்த்த அவனும் சமணர் மறைத்திருந்ததை யகற்றி நாவரசர் சிவலிங்க மூர்த்தியை வழிபடுமாறு வழியையமைத்தான். திருநாவுக்கரசர்

திருப்பைஞ்ஞீலிக்குச் செல்லும்போது பசியாலும் நீர் வேட்கையாலும் வருந்தினார். சிவனார் சைவ வேதியர் கோலத்தில் வந்து பொதிச்சோறும் நீரும் கொடுத்து மறைந்தார்.

பின்னர் பல தலங்களை வணங்கி, தாண்டக வேந்தர் திருக்காளத்தியைச் சார்ந்தார். திருக்கயிலையை காணும் பேரவா மேலிட்டது. புறப்பட்டார். பல நாடுகளைக் கடந்தார். கை கால்கள் தேய்ந்தன. மார்பினால் புரண்டு புரண்டு சென்றார். சிறிது தூரம் சென்றபின் அதுவும் இயலாமல் அசைவற்றுக் கிடந்தார். கயிலை நாதன் ஒரு முனிவர் வடிவில் தோன்றி திருக்கயிலை, மக்கள் காணும் தகையதன்று, திரும்பிச் செல்லும் என்று சொல்ல, அப்பர் பெருமான், "ஆளுநாயகன் கயிலையிருக்கை கண்டல்லால், மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்" என்று கூற, இறைவன் 'திருநாவுக்கரசனே எழுந்திரு!' என்று கூற, உடல் உறுப்புகள் மீளப்பெற்று, நல்ல தெம்போடு எழுந்தார். கயிலை மூர்த்தி அப்பருக்கு ஒரு குளத்தைக் காட்டி அதில் மூழ்கி, திருவையாற்றிலே கயிலைக் காட்சி காணுமாறு காட்டினார். அப்பரும் அவ்வாறே செய்ய, திருவையாற்றில் ஒரு திருக்குளத்திலிருந்து கரையேறினர். அவர் கண்ட எல்லாம் சிவமும் சத்தியுமாகக் காட்சியளித்தன. திருக்கோயில் திருக்கயிலாயமாகவே திகழ்ந்தது. பல பதிகங்களைப் பாடித் துதித்தார்.

சில தலங்களை வணங்கி, திருப்பூந்துருத்தி சென்று ஒரு திருமடம் அமைத்து அங்கு உறைந்திருந்தார். பாண்டி நாடு சென்ற சம்பந்தர் அப்பரைப் பார்க்க எழுந்தருளி வந்து கொண்டிருந்தார். திருநாவுக்கரசரும் எவருக்கும் தெரியாத வகையில் எதிர் சென்று சம்பந்தர் எழுந்தருளி வரும் பல்லக்கைச் சுமந்து நடந்தார். ஆளுடைய பிள்ளையார் "அப்பர் எங்குற்றார்" என்று வினவ, தாண்டகச் சதுரரும் "உம்மடியேன் உம்மடிகள் தாங்கி வரும் பெரும் வாழ்வு வந்தெய்தப் பெற்று இங்குற்றேன்" என்றார். காழிப்பிள்ளையார் பதைபதைத்துக் கீழிறங்க, இருவரும் ஒருவரையொருவர் வணங்கி, அளவளாவி இன்புற்றனர்.

பாண்டி நாட்டுச் செய்திகளை யறிந்த அப்பர் பெருமானும் அந்நாட்டுக்குச் சென்று சில பதிகளை வணங்கி விட்டு, திருப்புகலூர் வந்து சேர்ந்தார். திருக்கோயிலில் உழவாரத் தொண்டு செய்தார். கல்லோடும் புல்லோடும், பொன்னும் மணியும் கலந்து வந்ததை ஒன்றாகக் கருதிப் பொய்கையில் வாரி எறிந்தார். தேவலோக மாதர் அவர் முன் தோன்றி அவரை மயக்க முயன்றனர். அவருடைய வாய் இறைவனைப் பாடியது. மனம் கலங்காது நின்றது. கை உழவாரத் தொண்டு செய்தது. அம்மாதரும் ஒன்றும் செய்ய முடியாமல் போயினர். சில காலம் சென்ற பின், அவர் மாதொருபாகனார் மலரடியடையத் திருவுளச் சம்மதம் பெற்றார்.

"எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ"
என்ற நிறைவுத் திருத்தாண்டகத் தையருளி
நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அரசு ஐக்கியமானார்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடி வாழ்க.

# ஐந்தாம் திருமுறை

## அற்புதத் திருப்பதிகங்கள்

| எண் | அற்புதத் திருப்பதிகம் | பெரியபுராணப் பாடல் தொடர் எண் | அப்பர் தேவாரத்தில் பதிகத் தொடர் எண் |
|---|---|---|---|
| 1. | திருமறைக்காட்டில் மறைக்கதவம் திறக்கப்பாடியது | 1163–1173 | 123 |
| 2. | இறைவன் திருவாய்மூருக்கு வருக என அழைத்த போது பாடியது | 1569–1578 | 163 |
| 3. | திருப்பழையாறை வடதளியில் அமண் தூரறுத்துப் பாடியருளியது | 1652–1661 | 171 |
| 4. | கடலில் கல்லே மிதப்பாய் கரையேறியதற்கு அகச்சான்று | 1796 | 185 |
| 5. | நீற்றறையை இறைவன் திருவடி நிழலாய் கண்டு பாடியது | 1954–1963 | 203 |

## சிறப்புத் திருப்பதிகங்கள்

| எண் | அற்புதத் திருப்பதிகம் | பெரியபுராணப் பாடல் தொடர் எண் | அப்பர் தேவாரத்தில் பதிகத் தொடர் எண் |
|---|---|---|---|
| 6. | தனித்திருக்குறுந்தொகை | 1944 – 1972 | 202–204 |
| 7. | காலபாசத் திருக்குறுந்தொகை | 1973 – 1983 | 205 |
| 8. | மறக்கிற்பனே என்னும் திருக்குறுந்தொகை | 1984 – 1993 | 206 |
| 9. | தொழற்பாலதே என்றும் திருக்குறுந்தொகை | 1994 – 2004 | 207 |
| 10. | இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை | 2005 – 2015 | 208 |
| 11. | மனத்தொகைத் திருக்குறுந்தொகை | 2016 – 2025 | 209 |
| 12. | சித்தத் தொகைத் திருக்குறுந்தொகை | 2026 – 2055 | 210 |
| 13. | உள்ளத் திருக்குறுந்தொகை | 2056 – 2065 | 211 |
| 14. | பாவநாசத் திருக்குறுந்தொகை | 2066 – 2075 | 212 |
| 15. | ஆதிபுராணத் திருக்குறுந்தொகை | 2076 – 2085 | 213 |

## சிறப்புக் குறிப்புடைய திருப்பதிகங்கள்

| எண் | சிறப்புக் குறிப்பு | அப்பர் தேவாரத்தில் பதிகத் தொடர் எண் |
|---|---|---|
| 1. | அகப்பொருட் பதிகம் | 142, 153, 158 |
| 2. | அட்ட புட்பம் | 167 |
| 3. | அண்ணாமலையைத் கைதொழலால் வரும் பயன் | 118 |
| 4. | உபதேசம் | 162, 173, 182, 195, 197 |
| 5. | உயிர், மெய், ஆய்த எழுத்தமைப்பு | 210 |
| 6. | ஒன்று முதல் பத்து வரை எண்ணமைப்பு | 202 |
| 7. | காணலுற்றார் அங்கு இருவரே | 208 |
| 8. | காலதூதருக்கு எச்சரிக்கை | 205 |
| 9. | காலன் வருமுன் கடவுளைப் போற்றுக | 199 |
| 10. | திரிபுரம் எரித்தலைப் பாடல் தோறும் கூறுவது | 117 |
| 11. | பயனிலாதன இவை எனல் | 212 |
| 12. | மறக்கிற்பனே | 206 |
| 13. | மறந்துய்வனோ | 115 |
| 14. | வினைதீர்க்கும் பதிகம் | 196 |
| 15. | வேண்டுகோள் பதிகம் | 126 |

# குறுந்தொகையும் அப்பர் பெருமானும்

**தமிழர்களின் உயர்ந்த காதல் மெய்ப்பாடுகளுக்கு எடுத்தோதப்படும் உயர்ந்த பாடல் வரிகளில் ஒன்றான "செம்புலப் பெயல்நீர் போல அன்புடை நெஞ்சந்தாங்கலந்தனவே" என்ற பாடலடிகளும், நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறித் தருமிக்குப் பொற்கிழி வாங்கிக் கொடுத்த சோமசுந்தரக் கடவுள் இயற்றிய,"கொங்குதேர் வாழ்க்கை" பாடலும் இடம்பெற்றிருப்பது கடைச்சங்க கால இலக்கியமான குறுந்தொகைக்குச் சிறப்பாகும். நானூறு குறுந்தொகை பாடல்களைப் பாடிய 205 ஆசிரியர்களில் ஒருவர் நமது சோமசுந்தரக்கடவுள். (தானொரு தமிழ்ப்புலவன் என்று பதினொன்றாம் திருமுறையில் மதிமலிபுரிசை மாடக்கூடல் என்ற மற்றொரு பாடல் மூலமும் பெருமை கொள்கிறார்). இம்மாதிரியான ஏராளமான சிறப்புப் பாடல்களைப் பெற்ற அகப்பொருள் யாப்பான குறுந்தொகையைத் தேர்ந்தெடுத்து அப்பரடிகள் ஆண்டானாகிய இறைவனைத் தலைவனாகவும், அவனது பேரருள் இன்பத்தை விரும்பிநிற்கும் ஆருயிராகியத் தம்மை தலைவியாகவும் கருதிய நிலையில் உயிர்க்காதலியாகத் தோத்திரப்பாமாலைகளைச் சமர்ப்பித்துள்ளார். 205 புலவர்கள் நானூறுபாடல்கள் பாடிய தேசத்தில் இந்த ஒரே வஞ்சனைப் பெண் குறுந்தொகை யாப்பில் மட்டும் 100 பதிகங்களில் 1015 பாடல்களைப்பாடி நம்மையெல்லாம் வியக்கவைத்துள்ளார். பக்தி இலக்கியத்தில் உள்நுழையும்போது உடலுக்குத்தான் ஆண், பெண் வேறுபாடு, உயிருக்கு இல்லை என்ற கருத்தை வாங்கிக் கொண்டு "உயிர்களாகிய நாமெல்லாம் பெண்கள் (பசுக்கள்) சுவாமி ஒருவரே தான் ஆண் (பதி)" என்ற உணர்வோடு அகப்பொருள் துறையை அணுகினால் பசுபதியாகிய பெருமானால், அளவிலா ஆனந்தம் பெறலாம் என்ற உணர்வோடு குறுந்தொகைக்குள் செல்வோம்.**

## குறுந்தொகை

**மின் காட்டும் கொடிமருங்குல் உமையாட்கு என்றும்**
**விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக் கையோன்காண்**
**நன் பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி**
**நல் கனகக்கிழி தருமிக்கு அருளினோன்காண்**
**பொன் காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற**
**புனக் காந்தள் கை காட்டக் கண்டு வண்டு**
**தென் காட்டும் செழும் புறவின் திருப்புத்தூரில்**
**திருத்தளியான்காண் அவன் என் சிந்தையானே**

**- திருநாவுக்கரசர்**

**கடைச்சங்க காலத்து நூல்களில் இப்பொழுது கிடைக்கும் இலக்கியங்கள் பாட்டு, தொகை, கீழ்க்கணக்கென மூன்று வகைப்படும்.**

| பாட்டு | திருமுருகாற்றுப்படை முதல் மலைபடுகடாம் இறுதியாக உள்ள பத்துப்பாட்டு நூல்கள் |
|---|---|
| தொகை | பல செய்யுட்களைத் தொகுத்து அமைத்தனவாகிய நற்றிணை முதல் புறநானூறு ஈறாக உள்ள எட்டு நூல்கள் |
| கீழ்க்கணக்கு | நாலடியார் முதல் கைந்நிலை இறுதியாகவுள்ள பதினெட்டு நூல்கள் |

இவற்றுள் தமிழின் பொருள் வகைகளாகிய அகத்தையும், புறத்தையும் பற்றிய இலக்கணங்களுக்கு ஏனையவற்றிலும் மிகச்சிறந்த இலக்கியங்களாக விளங்குவன எட்டுத்தொகை நூல்களேயாம். அவை:

| | | |
|---|---|---|
| 1. | நற்றிணை | அகப்பொருள் |
| 2. | குறுந்தொகை | அகப்பொருள் |
| 3. | ஐங்குறுநூறு | ஐந்திணைகளைப் பற்றி ஒவ்வொரு திணைக்கும் 100 பாடல் |
| 4. | பதிற்றுப்பத்து | புறப்பொருள் |
| 5. | பரிபாடல் | யாப்பு (அகமும், புறமும்) |
| 6. | கலித்தொகை | யாப்பு (அகப்பொருள்) |
| 7. | அகநானூறு | அகப்பொருள் |
| 8. | புறநானூறு | புறப்பொருள் |

குறுந்தொகை

குறுந்தொகை நாலடிச் சிற்றெல்லையையும் எட்டடிப் பேரெல்லையையும் உடைய அகவற்பாச் செய்யுட்களை கொண்டனவாகும். குறும்பாடல்களைக் கொண்ட தொகை அல்லது தொகுப்பு என்று பொருள்படும். இவை குறைந்த எழுத்துக்களையும் பெற்று அமைந்துள்ள பாடல்களாகும். குறுந்தொகை என்னும் தொகைநூல் அகப்பொருள் பற்றிய ஆசிரியப்பாக்கள் 401-ஐயும் கடவுள் வாழ்த்துச் செய்யுள் ஒன்றையும் உடையது.

இத்தொகை முடித்தான் பூரிக்கோ
இத்தொகை பாடிய கவிகள் இருநூற்றைவர்
இத்தொகை நாலடிச் சிற்றெல்லையாகவும் எட்டடிப் பேரெல்லை
யாகவும் தொகுக்கப்பட்டது – சுவடி

எட்டுத்தொகை நூல்களின் பெயர்களைத் தொகுத்துக் கூறும் வெண்பாவாகிய

நற்றிணை நல்லகுறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை

என்பதில் இந்நூல் ''நல்ல குறுந்தொகை'' என்று பாராட்டப் பெறுகின்றது.

குறுந்தொகைக்குப் பழைய உரை

நல்லறிவுடைய தொல்பேராசான்
கல்வியுங் காட்சியுங் காசினியறியப்
பொருள் தெரிகுறுந்தொகை இருபதுபாட்டின்
இது பொருள் என்று அவன் எழுதாதொழிய
இது பொருள் என்றதற்கு ஏற்ப உணர்த்தும்

என்பது நச்சினார்க்கினியர் உரைச்சிறப்புப் பாயிரச் செய்யுளொன்றின் பகுதியாகும். இதன்கண் பேராசிரியர் தம்முடைய கல்வித்திறனும் அறிவு வன்மையும் உலகினர் அறியும்படி குறுந்தொகைக்குப் பொருள் எழுதினாரென்றும் இருபது செய்யுட்களுக்கு மட்டும் எழுதவில்லை என்பதும் அவ்விருபது செய்யுட்கட்கும் நச்சினார்க்கினியர் உரையிட்டனர் என்பதும் கூறப்படுகின்றன.

இங்ஙனம் மிகச்சிறந்த இரண்டு உரையாசிரியர்களாலும் எழுதப்பட்ட பழைய உரை இப்பொழுது கிடைக்கவில்லை. இது நமக்குப் பேரிழப்பாகும். இக்குறையை நிவர்த்தி செய்யும் வண்ணம் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரவர்கள் தமது 82-ஆவது அகவையில் பதவுரை, விசேடவுரை, ஒப்புமைப்பகுதி முதலியவற்றுடன் 1937-ஆம் ஆண்டு குறுந்தொகைப் பதிப்பை வெளியிட்டார்கள். இரண்டாம் பதிப்பு 1947-ஆம் ஆண்டிலும், மூன்றாம் பதிப்பு 1953-ஆம் ஆண்டிலும், நான்காம் பதிப்பு 1962-ஆம் ஆண்டிலும், ஐந்தாம் பதிப்பு 2000-ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளன.

குறுந்தொகைப் பாடல்களின் சொல்வளமும், நடைச்செறிவும், கற்பனைமரபும், இலக்கிய நெறிகளும், இப்பாடல்கள் தோன்ற வேண்டுமேல் அவை தோன்றியமொழி அதற்குமுன் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வளர்ந்து செழித்துச் செறிவுற்றிருக்க வேண்டும் என எண்ண வைக்கின்றது. எத்துணை நடைச்செறிவு, சொல்வளம், சொல்தரும் பொருள்வளம், நிழற்பொருள் வேறுபாடுகள், தொனிப்பொருள் தரும் நுண் மாண்புள்ள இலக்கியக் கலைத் திறன்கள், தோண்டத் தோண்ட வரும் சுரங்கம் போல, மீண்டும் மீண்டும் மேலும் மேலும் தோன்றும் புதுமைகள் இவையாவும் கணக்கில் அடங்கா.

குறுந்தொகைப் பாடல்கள் உலகத்தரமுடையவை. உலகிலுள்ள எவ்வளவு சிறந்த காதற் பாடல்களுடனும் ஒப்பிடக்கூடியவை. அவ்வாறு ஒப்பிடும்போது தம் தனித் தன்மையில் உயர்ந்து நிற்பவை.

யாயும் ஞாயும் யார் ஆகியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே - குறுந்தொகை 40.

தலைவன் தலைவியை நோக்கிக் கூறியவை இவை. செம்மண் நிலத்தில் பெய்த நீர், உடனே அம்மண்ணின் நிறமும், சுவையும் பெற்று இரண்டறக் கலந்து விடுவது போல, முன்பின் தெரியாத நெஞ்சங்கள் அன்பாற் கலந்தன என்னும் இது காதல் அன்பின் உச்சத்தைக் காட்டுகிறது.

இலண்டன் மாநகரில் பூமிக்கடியில் ஓடும் சுரங்கத்தொடர் வண்டியில், உலகிற்சிறந்த குறும்பாடல்களை அவ்வம் மொழிகளிலும், ஆங்கில மொழிபெயர்ப்புடனும் அழகாக அச்சடித்து வைக்கும்பழக்கம் பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளதாம். இப்பாடல்கள் பிறகு "மண்ணுக்கு அடியில் மலரும் பாக்கள்" என நூல்களாகவும் அச்சிடப்படுகின்றனவாம். அண்மையில் மேலே காட்டிய குறுந்தொகைப்பாடல் பூமிக்கு அடியில் ஓடும் இரயிலில் பொறித்து வைக்கப்பட்டுள்ளது. தமிழ்த்தாத்தா உ.வே.சா. அவர்களுக்கு முன்பே குறுந்தொகையை 1915-இல் பதிப்பித்துத் திருக்கண்ணபுரம் திருமாளிகை சௌரிப்பெருமாள் அரங்கன் வெளியிட்ட நூலொன்று இலண்டன் ஆங்கில நூலகத்தில் காலிகோ கட்டுடன் நல்ல நிலையில் உள்ளதாம். அதிலிருந்து இப்பாடலைத் தேர்ந்தெடுத்து, சங்க இலக்கிய ஆங்கில மொழியாக்கத்தில் தன்னிகரற்ற பேரறிஞர் ஏ.கே. இராமானுசன் மொழி

பெயர்ப்புடன் இணைத்து, அந்தத் தொடர் வண்டியில் அமைக்கப்பட்டிருப்பதை அவ்வாறே படமெடுத்து இந்து ஆங்கில நாளேடு 01.07.2001 அன்று வெளியிட்டுச் சிறப்புச் செய்திருந்ததை நினைவு கூர்வோமாக.

குறுந்தொகை இயற்றிய 205 புலவர் பெருமக்களில் இறையனாரும் ஒருவர். மதுரையில் எழுந்தருளிய சோம சுந்தரக்கடவுளே இறையனார் என்ற பெயரில் வழங்கப் பெறுகின்றார். மானுடப்புலவர் என்று நினைக்க வேண்டாம். தலைவியின் கூந்தல் இயற்கை மணம் உடையது என்பதைத் தலைவன் வண்டை வினாவுதல் வாயிலாகப் புலப்படுத்தி நலம் பாராட்டியது. இச்செய்யுளை "ஆலவாய் இறைவர் தருமி என்னும் பிரமசாரிக்குப் பொற்கிழி வாங்கிக் கொடுத்த சிந்தாசமுத்தி யகவல்'' என்று தமிழ் நாவலர் சரிதை கூறும். இது பாண்டியனால் சங்க மண்டபத்தின் முன் கட்டப்பட்ட பொற்கிழியைத் தருமி என்னும் பிரமசாரி ஒருவன் பெறும் பொருட்டு சோமசுந்தரக் கடவுள் இயற்றி அவனுக்கு அளித்த தென்று கூறப்படும்.

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோநீ யறியும் பூவே.

## பதவுரை

| | |
|---|---|
| கொங்குதேர் வாழ்க்கை | பூந்தாதை ஆராய்ந்து உண்ணுகின்ற வாழ்க்கையினையும் |
| அகம் சிறை தும்பி | உன்னிடத்தே சிறையையும் உடைய வண்டே |
| காமம் செப்பாது | என் நிலத்து வண்டாதலின் யான் விரும்பியதையே கூறாமல் |
| கண்டது மொழிமோ | நீ கண் கூடாக அறிந்ததையே சொல்வாயாக |
| நீ அறியும் பூ | நீ அறியும் மலர்களுள் |
| பயிலியது கெழீ இயநட்பின் | எழுமையும் என்னோடு பயிலுதல் பொருந்திய நட்பையும் |
| மயில் இயல் | மயில் போன்ற மென்மையையும் |
| செறிஎயிறு | நெருங்கிய பற்களையுமுடைய |
| அரிவை கூந்தலின் | இப்பெண்ணின் கூந்தலைப் போல |
| நறியவும் | நறுமணமுடைய பூக்களும் |
| உளவோ | உள்ளனவோ? |

முடிவு

தும்பி எனப்படும் வண்டே! நீ அறியும் பூக்களுள் பெண்ணின் கூந்தலைப் போல நறுமணமுடைய பூக்களும் உள்ளனவோ? மொழிவாயாக.

### கருத்து

தலைவியின் கூந்தல் இயற்கை மணம் உடையது.

இவ்வாறாகச் சிறந்த பாடல்கள் பல குறுந்தொகையில் உள்ளன. இவ்வளவு சிறப்பு வாய்ந்த குறுந்தொகையைப் பாடி பசுத்தன்மை வாய்ந்த பெண் உயிரினங்களாகிய நாமெல்லாம், பதியாகிய ஆணை அடைய வேண்டுமென்ற அவாவில் நாவுக்கரசு சுவாமிகள் நூறு பதிகங்களைக் குறுந்தொகையில் பாடி நமக்கு அருளிச் செய்துள்ளார்.

### திருக்குறுந்தொகை

மேற்கண்ட குறுந்தொகை என்னும் யாப்பமைந்த திருப்பதிகங்கள் நூறு கொண்டது, ஐந்தாம் திருமுறையாகும். "குறுந்தொகை" என்பது, யாப்பிற்குரிய பெயராகும். குறைந்த எழுத்துக்களைப் பெற்று அமைகின்ற தன்மையால் இப்பெயர் பெற்றது எனலாம். இந்த யாப்பிலான செய்யுள்கள் அடிஅளவிலும் குறைந்த எண்ணிக்கை உடையனவாக, நாற்சீர் நாலடியாக அமைந்துள்ளன.

### திருக்குறுந்தொகை – யாப்பமைதி

"ஒருமா கூவிளம் கூவிளம் கூவிளம்" என்பது, திருக்குறுந்தொகை யாப்பிற்குரிய கட்டளை யடியாகும். "குறுந்தொகைக்கு ஓர் கட்டளையா விரித்துரைத்தார்" என்பது திருமுறை கண்ட புராணம்.

குறுந்தொகை யாப்புச்செய்யுளின் முதல்சீர் தேமாவாக அமையின், ஒற்று நீக்கியவாறு அவ் அடியின் எழுத்துக்களது எண்ணிக்கை, பதினொன்றாகும், புளிமாவாயின், பன்னிரண்டாகவும் அமையும். ஓரடிக்குள் அமைந்த மூன்று தளைகளுள், முதலாவது, நேரொன்றாசிரியத் தளை; இரண்டும், மூன்றும் வெண்டளைகள். மேற்குறித்தவாறு அமைகின்ற எழுத்து எண்ணிக்கையும், தளையமைதியும் வேறுபடாது அமைவதற்கு ஏற்பச் சீர்கள் வேறுபட்டு அமையும்.

பத்து எழுத்து முதலாக, பதினான்கு எழுத்து அளவும் அளவடியாகிய நாற்சீரடியுள், பதினொன்றும் பன்னிரண்டுமாகக் குறைந்த எழுத்துக்களைப் பெற்று வருவன இக் குறுந்தொகைப் பாடல்கள்.

"அளவடி நான்கின கலிவிருத்தம்மே" (யாப்பருங்கலம், செய்யுளியல் - சூத்திரம்:89)

என்றமைந்த யாப்பிலக்கண விதியின்படி, இத்திருக்குறுந்தொகையானது, கலிவிருத்தம் என்ற பாவினத்துள் அடங்குவதாகக் கருத இடமுண்டு.

### திருக்குறுந்தொகை – யாப்பும் பொருளமைதியும்

அப்பர் பெருமான், தமது தலயாத்திரை, திருத்தலங்களில் உழவாரப் பணி மேற்கொள்கின்ற சூழல், இறைவனை நோக்கிய முன்னிலைப் பரவல், இறை புகழை, உலகோர்க்கு அறிவுறுத்தல் என்னும் பொருண்மைகளைப் பாட, இக் குறுந்தொகை யாப்பினைக் கையாண்டுள்ளமையினைப் பெரியபுராணமும் பரவும். திருமந்திரம் (பத்தாம் திருமுறை) மூவாயிரம் பாடல்களும் இதே யாப்பில் பாடப்பட்டுள்ளன

### திருக்குறுந்தொகை - இராகம்

திருக்குறுந்தொகையினைப் பழம்பாடலானது, "பூர்வி கல்யாணி" என்னும் இராகமாகக் குறித்தாலும், வழக்கத்தில், "நாதநாமக் கிரியை" என்றே உள்ளது.

**குறிப்பிட்ட பாடல் நேரிசையா, விருத்தமா, குறுந்தொகையா என்று எப்படித் தெரிந்து கொள்வது?**

<u>திருநேரிசை</u>

கோடிமா தவங்கள் செய்து குன்றினார் தம்மையெல்லாம்
வீடவே சக்க ரத்தா லெறிந்துபின் னன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயி றிருவிரா மேச்சு ரத்தை
நாடி வாழ் நெஞ் மேநீ நன்னெறி யாகு மன்றே. - 4.61.9

அ) **ஆறுசீரடி**

ஆ) நான்காம் திருமுறையில் 22-76 முடியவுள்ள பதிகங்கள் விளம், மா, மா, விளம், மா, மா என்று அறுசீர் அடியாப்பாகவரும்.

இ) கூவிளம் புளிமா தேமா கூவிளம் புளிமா தேமா எனவரும் கட்டளை அடியை உடைய செய்யுள்.

ஈ) ஆறு சீர்களால் இயன்ற இக்கட்டளை அடியில் முதற்சீரும் நான்காம் சீரும் ஓரோவழிக் கருவிளம் ஆதலும், இரண்டாம் சீரும், ஐந்தாம் சீரும் ஓரோவழித் தேமா ஆதலும் உண்டு.

உ) மூன்றாம் சீரும், ஆறாம் சீரும் எப்பொழுதும் தேமாவாக நிற்பன.

<u>திருவிருத்தம்</u>

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே னுனதருளால்
திருவாய்ப் பொலிய சிவாய நமவென்று நீ றணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரரனே. - 4.94.6

அ) **ஐந்து சீரடி**

ஆ) நான்காம் திருமுறையில் 80 முதல் 113 வரையுள்ள பதிகங்கள் கட்டளைக் கலித்துறை யாப்பாகிய திருவிருத்தப்பதிகங்கள்.

இ) "அடியடிதோறும் ஐஞ்சீராகி, முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாது, கடையொரு சீரும் விளங்காயாகி, நேர்பதினாறு, நிரை பதினேழு என்று ஓதினர் கலித்துறை ஓரடிக்கு எழுத்தே" என்னும் இலக்கணப்படி அமைந்த பகுதியாகும்.

<u>திருக்குறுந்தொகை</u>

அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே. - 5.1.1

அ) **நான்கு சீரடி**

ஆ) ஐந்தாம் திருமுறையில் 100 பதிகங்களும் குறுந்தொகையாக அமைந்துள்ளன.

இ) குறுந்தொகை - யாப்பமைப்பால் பெற்ற பெயர். குறைந்த எழுத்துக்களைப் பெற்று அமைதலின் இப்பெயர் பெற்றது. முதல் சீர் தேமா அல்லது புளிமா என்றமையும். தேமா என்று தொடங்கும் அடி ஒற்று நீக்கி 11 எழுத்துக்கள் கொண்டிருக்கும். புளிமா என்று தொடங்கும் அடி ஒற்று நீக்கி 12 எழுத்துக்கள் கொண்டிருக்கும். குறுகிய எண்ணிக்கையுள்ள எழுத்துக்களைக் கொண்ட அடிகளையும் குறைந்த அடிகளையும் கொண்ட பாடல்களையும் கொண்ட நூலாகிய குறுந்தொகை பாடுவதற்கு எளியது.

கருவிளம், கூவிளம் என்பவற்றுள் ஒன்று நான்காம் சீராகவும், இடையிரு சீர்கள் பெரும்பாலும் விளச்சீர்களாகவும் சிறுபான்மை மாச்சீர்களாகவும் அமையவரும் செய்யுள் வகை. சிலப்பதிகார வேட்டுவ வரியில் இவ்வமைப்புடைய பாடல்கள் உள்ளன. கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே இந்த யாப்பு பெருகி இருந்துள்ளது. இதைத் தற்போது கலிவிருத்தம் என்கிறோம்.

## இலக்கணக் குறிப்பு :

யாப்பு – பலவகைக் சொற்களால் பொருளுக்கு இடமாகக் கற்று வல்ல புலவர்களால் அணி பெறப்பாடப்படுவது யாப்பு.

யாப்பு, செய்யுள், கவி, பாட்டு, பா, தூக்கு என்பன ஒரே பொருளைத் தரும் பல சொற்கள்.

யாப்பிலக்கண உறுப்புகள் : 1. எழுத்து, 2. அசை, 3. சீர், 4. தளை, 5. அடி, 6. தொடை. சீர் – சொல், வார்த்தை. அசை– எழுத்தினால் ஆக்கப்பட்டுச் சீர்க்கு உறுப்பாய் வருவது, அது நேரசை, நிரையசை என இருவகைப்படும்.

### நேரசை :

குறில் தனித்து வரினும், நெடில் தனித்து வரினும், குறில் ஒற்றடுத்து வரினும், நெடில் ஒற்றடுத்து வரினும் அது நேரசை எனப்படும்.

(எ–டு) : க – தனிக்குறில், கா – தனி நெடில், கல் – குறிலொற்று, கால் – நெடிலொற்று

### நிரையசை :

குறில் இணைந்து வரினும், குறில் நெடில் இணைந்து வரினும், குறில் ஒற்றடுத்து வரினும், குறில், நெடில் இணைந்து ஒற்றடுத்து வரினும் நிரையசை எனப்படும்.

(எ–டு) : அணி – குறிலிணை கலா – குறில்நெடில்

அணில் – குறிலிணை ஒற்று கலாம் – குறில் நெடில் ஒற்று

### சீராவது :

அசைகளின் சேர்க்கை, ஓரசைச்சீர், ஈரசைச் சீர் என்று நான்கு வகைப்படும்.

ஓரசைச்சீர் : நேரசையாவது, நிரையசையாவது தனித்து நின்று சீராய் வந்தால் ஓரசைச் சீர், அதற்குரிய வாய்பாடுகள் நாள், மலர் என்பன.

அசை வாய்பாடு – நேர் – நாள்; நிரை – மலர்

### ஈரசைச்சீர்கள் – 4 :

அசை வாய்பாடு

1. நேர் நேர் – தேமா
2. நிரை நேர் – புளிமா
3. நிரை நிரை – கருவிளம்
4. நேர்நிரை – கூவிளம்

**அகர வரிசையில், பாடல் பெற்ற 276 திருத்தலங்களின் மூர்த்தி-தல-தீர்த்த விவர அட்டவணை- பகுதி 1**

| வ. எண் | தேவாரத் தலப்பெயர் | தற்போதைய பெயர் | நாடு | சுவாமி பெயர் | தேவி பெயர் |
|---|---|---|---|---|---|
| 1. | அகத்தியான்பள்ளி | அகத்தியாம்பள்ளி | சோழ | அகத்தீசுவரர் | பாகம்பிரியாள் |
| 2. | அச்சிறுப்பாக்கம் | அச்சரபாக்கம் | தொ | பார்க்கபுரேசர் | சுந்தரநாயகி |
| 3. | அஞ்சைக்களம் | திருவஞ்சைக்களம் | மலை | அஞ்சைக்களத்தப்பர் | உமையம்மை |
| 4. | அண்ணாமலை | திருவண்ணாமலை | நடு | அருணாசலேசுரர் | உண்ணாமுலை |
| 5. | அதிகை வீரட்டம் | பண்ருட்டி | நடு | வீரட்டேசுரர் | அதிகைநாயகி |
| 6. | அம்பர்பெருந் திருக்கோயில் | அம்பர் | சோழ | பிரமபுரிநாதர் | பூங்குழனாயகி |
| 7. | அம்பர்மாகாளம் | கோயில் திருமாகாளம் | சோழ | காளகண்டேசர் | பட்சயாம்பிகை |
| 8. | அரசிலி | ஒழிந்தியாபட்டு | தொ | அரசிலிநாதர் | பெரியநாயகி |
| 9. | அரதைப்பெரும்பாழி | அரித்துவார மங்கலம் | சோழ | பாதாளநாதர் | அலங்காரநாயகி |
| 10. | அரிசிற்கரைப்புத்தூர் | அழகாபுத்தூர் | சோழ | படிக்காசுவைத்தபரமர் | அழகம்மை |
| 11. | அவளிவணல்லூர் | அவளிவணல்லூர் | சோழ | சாட்சிநாதர் | சௌந்தரவல்லி |
| 12. | அவிநாசி | அவிநாசி | கொ | அவிநாசியப்பர் | பெருங்கருணை நாயகி |
| 13. | அழுந்தூர் | தேரழுந்தூர் | சோழ | வேதபுரிநாதர் | சௌந்தரநாயகி |
| 14. | அறையணிநல்லூர் | அறகண்டநல்லூர் | நடு | அறையணிநாதர் | அருணாயகி |
| 15. | அனேகதங்காவதம் | கௌரிகுண்டம் | வட | அனேகதங்காவதநாதர் | மனோன்மணி |
| 16. | அன்பிலாலந்துறை | அன்பில்-கீழ் | சோழ | சத்தியவாகீசர் | சௌந்தரநாயகி |
| 17. | அன்னியூர் | பொன்னூர் | சோழ | ஆபற்சகாயர் | பெரியநாயகி |
| 18. | ஆக்கூர் தான்தோன்றிமாடம் | ஆக்கூர் | சோழ | சுயம்புநாதர் | கடகநேத்திரி |
| 19. | ஆடானை | திருவாடானை | பா | ஆதிரத்நேசர் | அன்பாயிரவல்லி |
| 20. | ஆப்பனூர் | செல்லூர் (மதுரை) | பா | ஆப்பனூர்நாதர் | அம்பிகையம்மை |
| 21. | ஆப்பாடி | திருவாய்பாடி | சோழ | பாலுகந்தநாதர் | பெரியநாயகி |
| 22. | ஆமாத்தூர் | திருவாமாத்தூர் | நடு | அழகுநாதர் | அழகியநாயகி |
| 23. | ஆரூர் | திருவாரூர் | சோழ | வன்மீகநாதர் | அல்லியங்கோதை |
| 24. | ஆரூர் அரநெறி | திருவாரூர் | சோழ | அகிலேசுவரர் | அகிலேசுவரி |
| 25. | ஆரூர்ப்பரவையுண் மண்டளி | திருவாரூர் | சோழ | மண்டலேசுரர் | பஞ்சின்மெல்லடியாள் |

**தொடரும் இரண்டாவது பகுதியில் தீர்த்தம், தலமரம், பிற தகவல்கள் சேர்க்கப்பட்டுள்ளன**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 26. | ஆலங்காடு | திருவாலங்காடு | தொ | ஊர்த்ததாண்டவர் | வண்டார்குழலி |
| 27. | ஆலம்பொழில் | திருவாலம்பொழில் | சோழ | ஆத்மநாதர் | ஞானாம்பிகை |
| 28. | ஆலவாய் | மதுரை | பா | சொக்கலிங்கமூர்த்தி | மீனாட்சியம்மை |
| 29. | ஆவடுதுறை | திருவாவடுதுறை | சோழ | செம்பொற்றியாகர் | ஒப்பிலாமுலையாள் |
| 30. | ஆவூர் பசுபதீச்சரம் | ஆவூர் | சோழ | பசுபதீசர் | மங்களநாயகி |
| 31. | ஆனைக்கா | திருவானைக்காவல் | சோழ | ஜம்புகேசுவரர் | அகிலாண்டநாயகி |
| 32. | இடும்பாவனம் | இடும்பாவனம் | சோழ | சற்குணநாதர் | மங்களநாயகி |
| 33. | இடைச்சுரம் | திருஇடைச்சுரம் | தொ | இடைச்சுரநாதர் | இமயமடக்கொடி |
| 34. | இடைமருதூர் | திருவிடைமருதூர் | சோழ | மருதப்பர் | நன்முலைநாயகி |
| 35. | இடையாறு | இடையாறு | நடு | இடையாற்றுநாதர் | சிற்றிடைநாயகி |
| 36. | இந்திரநீலபருப்பதம் | நீலகண்டபர்வதம் | வட | நீலாசலநாதர் | நீலாம்பிகை |
| 37. | இராமனதீச்சுரம் | திருக்கண்ணபுரம் | சோழ | இராமநாதர் | சரிவார்குழலி |
| 38. | இராமேச்சுரம் | இராமேஸ்வரம் | பா | இராமநாதர் | பருவதவர்த்தனி |
| 39. | இரும்பூளை | ஆலங்குடி | சோழ | காசியாரணியர் | உமையம்மை |
| 40. | இரும்பைமாகாளம் | இரும்பை | தொ | மாகாளநாதர் | குயின்மொழிநாயகி |
| 41. | இலம்பையங் கோட்டூர் | இலம்பையங் கோட்டூர் | தொ | சந்திரசேகரர் | கோடேந்து முலையாள் |
| 42. | இன்னம்பர் | இன்னம்பூர் | சோழ | எழுத்தறிநாதர் | பூங்கொம்புநாயகி |
| 43. | ஈங்கோய்மலை | திருஈங்கோய்மலை | சோழ | மரகதாசலர் | மரகதாம்பிகை |
| 44. | உசாத்தானம் | கோயிலூர் | சோழ | மந்திரபுரிநாதர் | பெரியநாயகி |
| 45. | ஊரல் | தக்கோலம் | தொ | உமாபதீசர் | கிரிராஜகன்னிகை |
| 46. | எதிர்கொள்பாடி | மேலைத் திருமணஞ்சேரி | சோழ | அயிராவதநாதர் | மலர்க்குழனாயகி |
| 47. | எருக்கத்தம்புலியூர் | இராஜேந்திரபட்டினம் | நடு | நீலகண்டேசுரர் | நீலமலர்க்கண்ணி |
| 48. | எறும்பியூர் | திருவெறும்பூர் | சோழ | எறும்பீசர் | நறுங்குழனாயகி |
| 49. | ஏடகம் | திருவேடகம் | பா | ஏடகநாதர் | உமாதேவி |
| 50. | ஐயாறு | திருவையாறு | சோழ | செம்பொற்சோதி | அறம்வளர்த்தநாயகி |
| 51. | ஒற்றியூர் | திருஒற்றியூர் | தொ | ஆனந்தத்தியாகர் | வடிவுடைநாயகி |
| 52. | ஓணகாந்தன்தளி | பஞ்சுப்பேட்டை | தொ | ஓணகாந்தீசுவரர் | காமாட்சியம்மை(பொது) |
| 53. | ஓத்தூர் | செய்யாறு | தொ | வேதநாயகர் | இளமுலைநாயகி |
| 54. | ஓமாம்புலியூர் | ஓமாம்புலியூர் | சோழ | துயரந்தீர்த்தநாதர் | பூங்கொடிநாயகி |
| 55. | கச்சி அநேகதங் காவதம் | காஞ்சி – புத்தேரிதெரு | தொ | காவதநாதர் | காமாட்சியம்மை(பொது) |

| 56. | கச்சி ஏகம்பம் | பெரிய – காஞ்சிபுரம் | தொ | ஏகாம்பரநாதர் | காமாட்சியம்மை(பொது) |
|---|---|---|---|---|---|
| 57. | கச்சி நெறிக் காரைகாடு | திருக்காலிமேடு | தொ | காரைத்திருநாதர் | காமாட்சியம்மை(பொது) |
| 58. | கச்சி மேற்றளி | பிள்ளையார் பாளையம் | தொ | மேற்றளிநாயகர் | காமாட்சியம்மை(பொது) |
| 59. | கச்சூர் ஆலக்கோயில் | திருக்கச்சூர் | தொ | விருந்திட்டவரதர் | அஞ்சனாட்சியம்மை |
| 60. | கஞ்சனூர் | கஞ்சனூர் | சோழ | அக்கினீசுவரர் | கற்பகநாயகி |
| 61. | கடம்பந்துறை | குளித்தலை | சோழ | கடம்பவனநாதர் | முற்றிலா முலையம்மை |
| 62. | கடம்பூர் | மேலைக்கடம்பூர் | சோழ | அமிர்தகடேசர் | சோதிமின்னம்மை |
| 63. | கடவூர் வீரட்டம் | திருக்கடையூர் | சோழ | அமிர்தகடேசர் | அபிராமியம்மை |
| 64. | கடவூர்மயானம் | திருமெய்ஞ்ஞானம் | சோழ | பிரமபுரியீசர் | மலர்க்குழல் மின்னம்மை |
| 65. | கடிக்குளம் | கற்பகநாதர்குளம் | சோழ | கற்பகநாதர் | சௌந்தரநாயகி |
| 66. | கடுவாய்க்கரைப் புத்தூர் | ஆண்டார்கோயில் | சோழ | சுவர்ணபுரிநாதர் | சுவர்ணபுரிநாயகி |
| 67. | கடைமுடி | கீழையூர் | சோழ | கடைமுடிநாதர் | அபிராமி |
| 68. | கண்டியூர் வீரட்டம் | திருக்கண்டியூர் | சோழ | வீரட்டேசர் | மங்களநாயகி |
| 69. | கண்ணார்கோயில் | குறுமாணக்குடி | சோழ | கண்ணாயிரநாதர் | முருகுவளர்கோதை |
| 70. | கயிலாயம் | திருநொடித்தான் மலை | வட | பரமசிவன் | பார்வதிதேவி |
| 71. | கரவீரம் | கரையபுரம் | சோழ | கரவீரநாதர் | பிரத்தியட்ச மின்னம்மை |
| 72. | கருகாவூர் | திருக்கருகாவூர் | சோழ | முல்லைவனநாதர் | கரும்பனையாள் |
| 73. | கருக்குடி | மருதாந்தநல்லூர் | சோழ | சற்குணநாதர் | சர்வாலங்கிருத மின்னம்மை |
| 74. | கருப்பறியலூர் | தலைஞாயிறு | சோழ | குற்றம்பொறுத்தநாதர் | கோல்வளைநாயகி |
| 75. | கருவிலிக் கொட்டிட்டை | கருவேலி | சோழ | சற்குணநாதர் | சர்வாங்கநாயகி |
| 76. | கருவூர் - ஆநிலை | கரூர் | கொ | பசுபதிநாதர் | கிருபாநாயகி |
| 77. | கலயநல்லூர் | சாக்கோட்டை | சோழ | அமிர்தகலாநாதர் | அமிர்தவல்லி |
| 78. | கலிக்காமூர் | அன்னப்பன்பேட்டை | சோழ | சுந்தரேசர் | அழகம்மை |
| 79. | கழிப்பாலை | திருக்கழிப்பாலை | சோழ | பால்வண்ணநாதர் | வேதநாயகி |
| 80. | கழுக்குன்றம் | திருக்கழுக்குன்றம் | தொ | வேதகிரீசுவரர் | பெண்ணினல்லாள் |
| 81. | களர் | திருக்களர் | சோ | களர்முளைநாதர் | இளங்கொம்பன்னாள் |

| 82. | கள்ளில் | திருக்கள்ளில் | தொ | சிவானந்தர் | ஆனந்தவல்லி |
|---|---|---|---|---|---|
| 83. | கற்குடி | உய்யக் கொண்டான்மலை | சோழ | கற்பகநாதர் | மைவிழியம்மை |
| 84. | கன்றாப்பூர் | கோயில் கண்ணாப்பூர் | சோழ | நடுதறியப்பர் | உமையம்மை |
| 85. | காட்டுப்பள்ளி – கீழை | கீழைதிருக் காட்டுப்பள்ளி | சோழ | ஆரணியசுந்தரர் | அகிலாண்டநாயகி |
| 86. | காட்டுப்பள்ளி – மேலை | திருக்காட்டுப்பள்ளி | சோழ | தீயாடிநாதர் | வார்கொண்ட முலையாள் |
| 87. | காவிரிபூம்பட்டினம் | பூம்புகார் | சோழ | பல்லவனநாதர் | சௌந்தரநாயகி |
| 88. | காழி | சீர்காழி | சோழ | பிரமபுரியீசர் | திருநிலைநாயகி |
| 89. | காளத்தி | திருக்காளத்தி | தொ | காளத்திநாதர் | ஞானப்பூங்கோதை |
| 90. | காறாயில் | திருக்கரவாசல் | சோழ | கண்ணாயிரநாதர் | கைலாசநாயகி |
| 91. | கானப்பேர் | காளையார்கோயில் | பா | காளையப்பர் | சொர்ணவல்லி |
| 92. | கானாட்டுமுள்ளூர் | கானாட்டம் புலியூர் | சோழ | பதஞ்சலிநாதர் | கானார்குழலி |
| 93. | கானூர் | திருக்கானூர் | சோழ | செம்மேனிநாதர் | சிவயோகநாயகி |
| 94. | கீழ்வேளூர் | கீழ்வேளூர் | சோழ | அட்சயலிங்கமூர்த்தி | வனமுலைநாயகி |
| 95. | குடந்தைக் காரோணம் | கும்பகோணம் | சோழ | சோமநாதர் | தேனார்மொழியாள் |
| 96. | குடந்தைக் கீழ்க்கோட்டம் | கும்பகோணம் | சோழ | மடந்தைபாகர் | பெரியநாயகி |
| 97. | குடமுக்கு | கும்பகோணம் | சோழ | கும்பேசர் | மங்களநாயகி |
| 98. | குடவாயில் | குடவாசல் | சோழ | கோணேசுவரர் | பெரியநாயகி |
| 99. | குரக்குக்கா | திருக்குரக்காவல் | சோழ | குந்தளநாதர் | குந்தளநாயகி |
| 100. | குரங்கணில் முட்டம் | குரங்கணில்முட்டம் | தொ | வாலீசுரர் | இறையார் வளையம்மை |
| 101. | குரங்காடுதுறை – வட | ஆடுதுறைபெருமாள் கோயில் | சோழ | குலைவணங்குநாதர் | அழகுசடைமுடியாள் |
| 102. | குரங்காடுதுறை – தென் | ஆடுதுறை | சோழ | ஆபற்சகாயர் | பவளக்கொடியாள் |
| 103. | குருகாவூர் | திருக்கடாவூர் | சோழ | வெள்ளடைநாதர் | காவியங்கண்ணி |
| 104. | குறுக்கை | குறுக்கை | சோழ | வீரட்டேசர் | ஞானாம்பிகை |
| 105. | குற்றாலம் | குற்றாலம் | பா | குறும்பலாநாதர் | குழல்வாய்மொழி |
| 106. | கூடலையாற்றூர் | கூடலையாத்தூர் | நடு | நெறிகாட்டுநாயகர் | புரிகுழலாள் |
| 107. | கேதாரம் | கேதாரம் | வட | கேதாரநாதர் | கௌரியம்மை |

| 108. | கேதீச்சுரம் | திருக்கேதீஸ்வரம் | ஈழ | கேதீச்சுவரர் | கௌரியம்பிகை |
|---|---|---|---|---|---|
| 109. | கைச்சினம் | கச்சனம் | சோழ | கைச்சினநாதர் | வெள்வளைநாயகி |
| 110. | கொடிமாடச் செங்குன்றூர் | திருச்செங்கோடு | கொ | அர்த்தநாரீசுரர் | தேவி சுவாமியோடு ஐக்கியம் |
| 111. | கொடுங்குன்றம் | பிரான்மலை | பா | கொடுங்குன்றீசர் | குயிலமுதநாயகி |
| 112. | கொட்டையூர் | கொட்டையூர் | சோழ | கோடீசுரர் | பந்தாடுநாயகி |
| 113. | கொண்டீச்சுரம் | திருக் கொண்டீஸ்வரம் | சோழ | பசுபதியார் | சாந்தநாயகி |
| 114. | கொள்ளம்பூதூர் | திருக்களம்பூர் | சோழ | வில்வவனநாதர் | சௌந்தரநாயகி |
| 115. | கொள்ளிக்காடு | திருக்கொள்ளிக்காடு | சோழ | அக்கினீசுரர் | பஞ்சின்மெல்லடியாள் |
| 116. | கோகர்ணம் | கோகர்ணம் | துளுவ | மகாபலேசுரர் | கோகர்ணநாயகி |
| 117. | கோடி | கோடியக்கரை | சோழ | அமிர்தகடநாதர் | மையார்தடங்கண்ணி |
| 118. | கோடிகா | திருக்கோடிகாவல் | சோழ | கோடீசுரர் | வடிவம்மை |
| 119. | கோட்டாறு | கொட்டாரம் | சோழ | ஐராவதநாதர் | வண்டமர்பூங்குழலி |
| 120. | கோட்டூர் | கோட்டூர் | சோழ | கொழுந்துநாதர் | மதுரவசனி |
| 121. | கோணமலை | திருக்கோணமலை | ஈழ | கோணேசுரர் | மாதுமையாள் |
| 122. | கோயில் | சிதம்பரம் | சோழ | திருமூலநாயகர் | உமையம்மை |
| 123. | கோலக்கா | திருத்தாளமுடையார் கோயில் | சோழ | சப்தபுரிநாதர் | ஓசைகொடுத்தநாயகி |
| 124. | கோவலூர் | திருக்கோவலூர் | நடு | வீரட்டநாதர் | சிவானந்தவல்லி |
| 125. | கோழம்பம் | திருக்கோழம்பம் | சோழ | கோகிலேசர் | சௌந்தரநாயகி |
| 126. | கோளிலி | திருக்குவளை | சோழ | கோளிலிநாதர் | வண்டமர்பூங்குழலி |
| 127. | சக்கரப்பள்ளி | ஐயம்பேட்டை | சோழ | ஆலந்துறையார் | அல்லியங்கோதை |
| 128. | சத்திமுற்றம் | சத்திமுற்றம் | சோழ | சிவக்கொழுந்துநாதர் | பெரியநாயகி |
| 129. | சாத்தமங்கை | சீயாத்தமங்கை | சோழ | அயவந்திநாதர் | மலர்க்கண்ணம்மை |
| 130. | சாய்க்காடு | சாயாவனம் | சோழ | சாயாவனேசர் | குயிலினு நன்மொழியாள் |
| 131. | சிக்கல் | சிக்கல் | சோழ | நவநீதநாதர் | வேனெடுங்கண்ணி |
| 132. | சிராப்பள்ளி | திருச்சிராப்பள்ளி | சோழ | தாயுமானவர் | மட்டுவார்குழலி |
| 133. | சிவபுரம் | சிவபுரம் | சோழ | பிரமபுரிநாதர் | பெரியநாயகி |
| 134. | சிறுகுடி | சிறுகுடி | சோழ | மங்களநாதர் | மங்களநாயகி |
| 135. | சிற்றேமம் | சிற்றாய்மூர் | சோழ | பொன்வைத்தநாதர் | அகிலாண்டேசுவரி |
| 136. | சுழியல் | திருச்சுழி | சோழ | திருமேனிநாதர் | துணைமாலைநாயகி |
| 137. | செங்காட்டங்குடி | திருச் செங்காட்டங்குடி | சோழ | கணபதியீசர் | திருக்குழன்மாது |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 138. | செம்பொன்பள்ளி | செம்பொனார்கோயில் | சோழ | சுவர்ணபுரிநாதர் | சுகந்தவனநாயகி |
| 139. | சேய்ஞலூர் | சேங்கனூர் | சோழ | சத்தகிரியீசர் | சகிதேவி |
| 140. | சேறை | திருச்சேறை | சோழ | செந்நெறியப்பர் | ஞானவல்லி |
| 141. | சோபுரம் | திருச்சோபுரம் | நடு | சோபுரநாதர் | சோபுரநாயகி |
| 142. | சோற்றுத்துறை | திருச்சோற்றுத்துறை | சோழ | தொலையாச்செல்வர் | ஒப்பிலாவம்மை |
| 143. | தண்டலைநீணெறி | தண்டலைச்சேரி | சோழ | நீணெறிநாதர் | ஞானாம்பிகை |
| 144. | தருமபுரம் | தருமபுரம் | சோழ | யாழ்மூரிநாதர் | மதுரமின்னம்மை |
| 145. | தலைச்சங்காடு | தலைச்சங்காடு | சோழ | சங்கருணாதர் | சௌந்தரநாயகி |
| 146. | தலையாலங்காடு | தலையாலங்காடு | சோழ | ஆடவல்லவரதர் | திருமடந்தை |
| 147. | திருந்துதேவன்குடி | நண்டாங்கோயில் | சோழ | கர்க்கடகேசர் | அருமருந்தம்மை |
| 148. | திலதைப்பதி | செதலபதி | சோழ | முத்தநாதர் | பொற்கொடிநாயகி |
| 149. | தினைநகர் | திருத்தினைநகர் | நடு | சிவக்கொழுந்தீசர் | இளங்கொம்பன்னாள் |
| 150. | துருத்தி | குத்தாலம் | சோழ | உத்தரவேதீசுவரர் | மிருதுமுகிழாம்பிகை |
| 151. | துறையூர் | திருத்துறையூர் | நடு | துறையூர்நாதர் | பூங்கோதைநாயகி |
| 152. | தெங்கூர் | திருத்தெங்கூர் | சோழ | வெள்ளிமலைநாதர் | பெரியநாயகி |
| 153. | தெளிச்சேரி | கோயில்பத்து | சோழ | பார்வதியீசர் | சத்தியம்மை |
| 154. | தென்குடித்திட்டை | திட்டை | சோழ | பசுபதிநாதர் | உலகநாயகி |
| 155. | தேவூர் | தேவூர் | சோழ | தேவகுருநாதர் | மதுரபாஷிணி |
| 156. | நணா | பவானி | கொ | சங்கமுகநாதர் | வேதமங்கை |
| 157. | நல்லம் | கோனேரிராஜபுரம் | சோழ | உமாமகேசர் | மங்களநாயகி |
| 158. | நல்லூர் | திருநல்லூர் | சோழ | பெரியாண்டவர் | பருவதசுந்தரி |
| 159. | நல்லூராப்பெருமணம் | ஆச்சாள்புரம் | சோழ | சிவலோகத்தியா கேசர் | உமையம்மை |
| 160. | நள்ளாறு | திருநள்ளாறு | சோழ | தர்ப்பாரணியநாதர் | போகமார்த்த பூண்முலையாள் |
| 161. | நறையூர்ச் சித்தீச்சரம் | திருநறையூர் | சோழ | சித்தநாதர் | அழகம்மை |
| 162. | நனிபள்ளி | புஞ்சை | சோழ | நற்றுணையப்பர் | பருவதராஜபுத்திரி |
| 163. | நன்னிலத்துப் பெருங்கோயில் | நன்னிலம் | சோழ | பிரகேசுவரர் | பிரகேசுவரி |
| 164. | நாகேச்சுரம் | திருநாகேஸ்வரம் | சோழ | சம்பகாரணியர் | குன்றாமுலைநாயகி |
| 165. | நாகைக்காரோணம் | நாகப்பட்டினம் | சோழ | காயாரோகணேசர் | நீலாயதாட்சி |
| 166. | நாட்டியத்தான்குடி | நாட்டியத்தான்குடி | சோழ | இரத்நகிரிநாதர் | மலர்மங்கைநாயகி |

| 167. | நாரையூர் | திருநாரையூர் | சோழ | சௌந்தரேசர் | திரிபுரசுந்தரி |
|---|---|---|---|---|---|
| 168. | நாலூர்மயானம் | நாலூர் | சோழ | பலாசவனநாதர் | பெரியநாயகி |
| 169. | நாவலூர் | திருநாவலூர் | நடு | நாவலேசுரர் | சுந்தராம்பிகை |
| 170. | நின்றியூர் | திருநின்றியூர் | சோழ | மகாலட்சுமிநாதர் | உலகநாயகி |
| 171. | நீடூர் | நீடூர் | சோழ | சோமநாதர் | வேயுறுதோளி |
| 172. | நீலக்குடி | திருநீலக்குடி | சோழ | நீலக்குடியீசர் | அழகம்மை |
| 173. | நெடுங்களம் | திருநெடுங்களம் | சோழ | நித்தியசுந்தரர் | ஒப்பிலாநாயகி |
| 174. | நெய்த்தானம் | தில்லைத்தானம் | சோழ | நெய்யாடியப்பர் | வாலாம்பிகை |
| 175. | நெல்லிக்கா | திருநெல்லிக்காவல் | சோழ | நெல்லிவனநாதர் | மங்களநாயகி |
| 176. | நெல்வாயில் | சிவபுரி | சோழ | உச்சிநாதர் | கனகாம்பிகை |
| 177. | நெல்வாயில் அரத்துறை | திருவட்டத்துறை | நடு | அரத்துறைநாதர் | ஆனந்தநாயகி |
| 178. | நெல்வெண்ணை | நெய்வெணை | நடு | வெண்ணெய்யப்பர் | நீலமலர்க்கண்ணி |
| 179. | நெல்வேலி | திருநெல்வேலி | பா | வேணுவனநாதர் | காந்திமதியம்மை |
| 180. | பட்டீச்சுரம் | பட்டீச்சுரம் | சோழ | பட்டீசுவரர் | பல்வளைநாயகி |
| 181. | பந்தணைநல்லூர் | பந்தநல்லூர் | சோழ | பசுபதிநாதர் | காம்பன்னதோளி |
| 182. | பயற்றூர் | திருப்பயத்தாங்குடி | சோழ | பயற்றூர்நாதர் | காவியங்கண்ணி |
| 183. | பரங்குன்றம் | திருப்பரங்குன்றம் | பா | பரங்கிரிநாதர் | ஆவுடையம்மை |
| 184. | பராய்த்துறை | திருப்பராய்த்துறை | சோழ | பராய்த்துறைநாதர் | பொன்மயிலம்மை |
| 185. | பரிதிநியமம் | பருத்தியப்பர்கோயில் | சோழ | பரிதியப்பர் | மங்களநாயகி |
| 186. | பருப்பதம் | ஸ்ரீசைலம் | வட | பருப்பதநாதர் | பருப்பதநாயகி |
| 187. | பழனம் | திருப்பழனம் | சோழ | ஆபற்சகாயர் | பெரியநாயகி |
| 188. | பழுவூர் | கீழப்பழுவூர் | சோழ | வடமூலநாதர் | அருந்தவநாயகி |
| 189. | பழையாறைவடதளி | பழையாறை | சோழ | தர்மபுரீசுவரர் | விமலநாயகி |
| 190. | பள்ளியின் முக்கூடல் | திருப்பள்ளியின் முக்கூடல் | சோழ | முக்கோணநாதர் | மைமேவுங்கண்ணி |
| 191. | பறியலூர் வீரட்டம் | பரசலூர் | சோழ | வீரட்டநாதர் | இளங் கொம்பனையாள் |
| 192. | பனங்காட்டூர் | திருப்பனங்காடு | தொ | பனங்காட்டுநாதர் | அமிர்தவல்லி |
| 193. | பனந்தாள் | திருப்பனந்தாள் | சோழ | சடையப்பர் | பெரியநாயகி |
| 194. | பனையூர் | திருப்பனையூர் | சோழ | சௌந்தரநாதர் | பெரியநாயகி |
| 195. | பாசூர் | திருப்பாசூர் | தொ | பாசூர்நாதர் | பசுபதிநாயகி |
| 196. | பாச்சிலாச்சிராமம் | திருவாசி | சோழ | மாற்றறிவரதர் | வாலசுந்தரி |

# திருமுறைத் தலங்களின் தெய்வீக மரங்கள்

சிவபெருமான் நஞ்சைத் தான் உண்டு, அமுதத்தைத் தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் வழங்கினார். அதுபோல மரம் நமக்குத் தேவையான அமிர்தமாகிய ஆக்ஸிஜனை (சுவாசக்காற்றை) வெளியிட்டு, நமக்குத் தேவையற்ற நஞ்சாக விளங்கும் கார்பன்–டை–ஆக்ஸைடை உட்கொள்கிறது. ஆதலால் காற்று மாசுபடுதல் தவிர்க்கப்படுவதுடன் ஓசோன் வான் வெளிப்படலத்தில் ஏற்படும் மாற்றமும் நிகழாமல் பாதுகாக்கப்படுகிறது. எனவேதான் நமது பண்டைத் தமிழர்கள் மரத்தை சிவனாகவே நினைந்து வழிபட்டதுடன் அதை சீரிய முறையில் வளர்க்கவும், பாதுகாக்கவும் செய்தார்கள். கரியமில வாயுவான நஞ்சை எடுத்துக்கொண்டு இன்சுவைக் கனிகளைத் தருவதாலும், சுகமான நிழலைத் தருவதாலும், வேர், பட்டை, இலை, காய், தண்டு போன்ற அதன் எல்லாப் பாகங்களும் சில மருத்துவக் குணங்களைக் கொண்டு நோய் நீக்கும் தன்மை கொண்டிருப்பதாலும், காலம் முடிந்தபின்னும் விறகாகப் பயன்படுவதாலும் அதை வணங்குவதில் தவறு என்ன இருக்கிறது ? "நம்மிடமிருந்து எதையும் எதிர்பார்க்காமலிருக்கும் அதன் வள்ளன்மைக்கு, வணங்குவதைத் தவிர கைம்மாறு என்ன செய்ய முடியும் ?" என்பதை உணர்ந்ததால் தமிழர்கள் மரவழிபாட்டிற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்து வாழ்ந்துள்ளார்கள். உயிர் எடுக்கும் எழுவகைப் பிறப்புகளில் தாவர வகைப் பிறப்பும் ஒன்று என்பதை மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசக முதல் பதிகமான சிவபுராணத்தில்,

"புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன்" என்று பாடி மகிழ்கிறார்.

இவற்றையெல்லாம் பல்லாண்டு காலம் நோக்கிய தமிழர்கள் மரத்தையே தெய்வமாகவும், மரத்தின் கீழேயே தெய்வத்தை வைத்தும் வழிபட ஆரம்பித்தார்கள். பின்னர் காடழித்து நாடாக்கிய காலத்தில் எந்தெந்த மரத்தின் கீழ் தெய்வத் திருவுருவம் வைத்து வழிபடப்பட்டு வந்தனவோ அந்தந்த இடங்களில் கோயில்கள் கட்டப்பட்டன. அப்போது அந்த மரமும் பாதுகாக்கப்பட்டு அதுவே தல மரமாயிற்று. விருட்சம் என்று சொன்னால் அது தாவரம் என்பது பொருளாகும்.

மூர்த்திதலம் தீர்த்தம்
முறையால் தொடங்கினர்க்கு ஓர்
வார்த்தை சொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே – தாயுமான சுவாமிகள் – பராபரக் கண்ணி **156**

**ஒரு சிவத்தலத்தை** எடுத்துக் கொண்டால் அது சிவபெருமான் திருவிளையாடல்கள், அற்புதங்கள், நிகழ்ந்த தலமாகவும் அல்லது காட்சி கொடுத்த தலமாகவும் இருக்கலாம். பெரு முனிவர்கள், சிவகணங்கள், தேவர்கள் வழிபட்டிருக்கலாம். கண்கண்ட தெய்வமாக மண்ணுக்கே மகிமையுடையதாய் இருக்கலாம். மானுடர்கள் மட்டுமின்றி பறவைகளும், விலங்கினங்களும் வழிபட்டுச் சிறப்புப் பெற்றிருக்கலாம். கோழியே பட்டத்து யானையின் மத்தகத்தில் ஏறிக் கொத்திய உறையூர், பாம்பு தன் வாலையும், வாயையும்

வட்டமிட்டுத் தொட்டுக்காட்டிய ஆலவாய், கழுகு வட்டமடித்து இடத்தை அடையாளம் காட்டிய சிதம்பரம் என்றெல்லாம் தலச்சிறப்புகளை உணர்த்தும் நிகழ்வுகளை நினைவுகூரலாம்.

இதைப்போலவே மூர்த்திச் சிறப்புகளாக சுயம்பு லிங்கங்களான எந்தவித வேலைப்பாடுகளின்றியும், தான் தோன்றீசுவர மூர்த்தங்கள் உள்ளன. குறுகியும், நிமிர்ந்தும் ஆட்கொள்ளும் சிவலிங்கங்கள், சதுர, வட்டவடிவுடைய ஆவுடைகள், பிரம்மாண்டமான சிவலிங்கங்கள் என்பவை இவற்றுக்குச் சான்றாகும்.

தீர்த்தம் என்னும்போது கிணறு, குளம், பொய்கை, நதி, கடல் போன்ற நீர் நிலைகள் திருக்கோயில்களுக்குத் தீர்த்தங்களாய் அமைந்துள்ளன. இராமேச்சுரத்தின் தீர்த்தச் சிறப்பை நாமெல்லாம் அறிவோம். கோயிலுக்குள் 22 கிணறுகளுடன் கடலே தீர்த்தமாகவும் ஊரே தீர்த்தமாகவும இருப்பதை அறிவோம்.

இராமேச்சுவரம், திருமறைக்காடு, கோடிக்கா ஆகிய தலங்களில் கடல் தீர்த்தமாக உள்ளது. காவிரி, வைகை, தாமிரபரணி, தென்பெண்ணை, கெடிலம், பாலாறு போன்ற நதிக்கரைகளில் அமைந்துள்ள கோயில்களுக்கு மேற்படி நதிகள் தீர்த்தமாக அமைந்துள்ளன. நதிகள், கடல் இல்லாத இடங்களில் கிணறு, குளங்கள் போன்றவற்றை ஏற்படுத்தித் தீர்த்தமாகத் தமிழர்கள் அமைத்துக் கொண்டார்கள். நீரின்றி அமையாது உலகு என்பதைக் கருத்திற்கொண்டு ஒவ்வொரு கோயிலுக்கும் நீர்நிலையைக் கண்டிப்பாக உருவாக்கினார்கள். அந்தப் பகுதியின் நிலத்தடி நீர் சேமிப்பு நிலையங்களாக அவை விளங்கின. தலமரங்களுடன் கூடிய நந்தவனங்கள், நீர்நிலைகள் இல்லாத கோயில்களை பார்க்கவே முடியாது. இன்றைய சுற்றுச்சூழல் ஆர்வலர்கள் செய்யும் பணியை நமது பண்டைத் தமிழர்கள் சிறப்பாகவே செய்துள்ளார்கள்.

அவர்களின் வாழ்வு, கோயில்களைத் தழுவிய வாழ்க்கையாக அமைந்து இருந்தது. கோயில்கள் வழிபாட்டுத் தலங்களாக மட்டுமின்றி கலை, மருத்துவம், இலக்கியம், சுற்றுச்சூழல் பேணுமிடங்களான சமுதாய மையங்களாகவும் விளங்கி வந்துள்ளன. கோயிலில் உள்ள தெய்வத்தை வணங்குவதுபோல் ஆங்கமைந்த தீர்த்தங்களையும், தல விருட்சங்களையும் வணங்கினார்கள்.

விருட்சம் என்றால் தாவரம் என்று பொருள். தாவரம் என்னும்போது அந்தச்சொல் தாவர இனவகை அனைத்தையும் குறிக்கும். புல், செடி, கொடி, மரம் என்று அவை பலவகைப்படும்.

1. புல்வகைத் தலத் தாவரங்கள் (Grasses)

   கோரைப்புல் – திருச்சாய்க்காடு

   தர்ப்பைப்புல் – திருநள்ளாறு

   விழல் – திருவிளநகர்

2. செடிவகைத் தலத் தாவரங்கள் (Herbs)

   துளசி – திருவிற்குடி

   அலரி – திருக்கரவீரம்

   வெள்ளெருக்கு – திருஎருக்கத்தம்புலியூர்

   வீழிச்செடி – திருவீழிமிழலை

3. கொடிவகைத் தலத் தாவரங்கள் (Vines)

முல்லைக்கொடி – திருக்கருகாவூர், தென், வட திருமுல்லை வாயில்கள்
மல்லிகை – சிக்கல்

4. ஓராண்டு வாழும் தலத் தாவரம் (Annuals)

வாழை – பைஞ்ஞீலி, குடவாயில், பழனம், மருகல், தருமபுரம், கழுக்குன்றம், தேவூர்

5. சில ஆண்டுகள் வாழும் தலமரங்கள்

தில்லைவனம் – தில்லை (சிதம்பரம்)
குருந்தம் – தண்டலை நீள்நெறி, திருப்பெருந்துறை
சரக்கொன்றை – பந்தணைநல்லூர்
மந்தாரை – திலதைப்பதி
நந்தியாவர்த்தம் – கோயில் வெண்ணி
நெல்லி – நெல்வாயில், நெல்லிக்கா
நாரத்தை – பேரெயில்
எலுமிச்சை – மாகறல், அன்னியூர்
உத்தாலமரம் – துருத்தி
கொன்றை – ஆப்பனூர், சாத்தமங்கை
வில்வம் – திருவையாறு உள்ளிட்ட 73 தலங்கள்
சிலந்திமரம் – திருப்பயத்தங்குடி
இலந்தை – கீவளூர்
ஆத்தி – சிற்றேமம்

6. பல ஆண்டுகள் வாழும் தலமரங்கள்

பனை – பனந்தாள், பனையூர், ஒத்தூர்
அரசு – ஆவடுதுறை, ஆவூர், நல்லம்
வன்னி – முதுகுன்றம், பாம்புரம், கொடுமுடி, வடுகூர்
மா – கச்சிஏகம்பம், மயிலாடுதுறை, நல்லூர்ப்பெருமணம்
புன்னை – நாரையூர், புகலூர், மயிலாப்பூர்
வாகை – வாழ்கொளிப்புத்தூர்
சந்தனம் – வாஞ்சியம், அழுந்தூர்
மாவிலங்கம் – சேறை
ஆலமரம் – வெண்காடு, ஆலம்பொழில்
தென்னை – தெங்கூர்

| | | |
|---|---|---|
| கடம்பமரம் | – | குளித்தலை, கடம்பூர், மதுரை |
| இலுப்பை | – | பழமண்ணிப்படிக்கரை, திருச்செங்கோடு |
| மருதம் | – | திருவிடைமருதூர் |
| மகிழம் | – | நீடுர், ஒற்றியூர், அண்ணாமலை |
| புங்கமரம் | – | புன்கூர் |
| விளா | – | நின்றியூர் |
| வேம்பு | – | புள்ளிருக்குவேளூர் |
| பாதிரி | – | பாதிரிப்புலியூர் |
| நாவல் | – | ஆனைக்கா |
| பராய் | – | திருப்பராய்த்துறை |
| வெள்வேல் | – | திருவேற்காடு |
| கடுக்காய் | – | குறுக்கை |
| சண்பகம் | – | சிவபுரம், நாகேச்சரம், திட்டை |
| மூங்கில் | – | நெல்வேலி, பாசூர், வேட்களம் |

| வ. எண் | தலத்தாவரத்தின் பெயர் | தாவரவியல் பெயர் / தாவரக் குடும்பம் | தலங்களின் பெயர் |
|---|---|---|---|
| 1. | அரசு | Ficus veligiosa/moraceae | ஆவூர் பசுபதீச்சரம், நல்லம், ஆவடுதுறை (படர் அரசு), சுழியல், அரசிலி, பரிதிநியமம் |
| 2. | அரளி (அலரி) | Nerium Odorum/apocyanaceae | கரவீரம் |
| 3. | ஆத்தி | Bauhinia tomentosa/ Caesalpiniaceae | செங்காட்டங்குடி, துருத்தி (உத்தால மரம்), ஆப்பாடி, சிற்றேமம் |
| 4. | ஆமணக்கு | Ricinus communis / euphorbiaceae | கொட்டையூர் |
| 5. | ஆலமரம் | Ficus Bengalensis / moraceae | தில்லை, பழுவூர், அன்பில் ஆலந்துறை, திருவெண்காடு, ஆலம்பொழில், நெல்வாயில் அரத்துறை, கச்சூர், கூடலையாற்றூர் |
| 6. | இலந்தை | Zizyphus jujuba / Ramnaceae | ஓமாம்புலியூர், கீழ்வேளூர், நணா (பவானி), குரங்கணில் முட்டம் |
| 7. | இலுப்பை | Madhuca Longifolia / sapotaceae | பழமண்ணிப் படிக்கரை, கொடிமாடச் செங்குன்றூர் (திருச்செங்கோடு) |
| 8. | உத்தாலமரம் | Cordia myxa / Boraginace | குத்தாலம் (திருத்துருத்தி) |
| 9. | உறங்காப்புளி | Tamarindus Indica / Caesal piniaceae | கொடுங்குன்றம் (பிரான்மலை) |

| 10. | எலுமிச்சை | Citrus aurantifolia / Rutaceae | மாகறல், அன்னியூர் |
|---|---|---|---|
| 11. | கடம்பமரம் (அ) கடம்பு | Anthocephalus Cadamba/ Rubiaceae | கடம்பூர், கடம்பந்துறை, ஆலவாய், குளித்தலை |
| 12. | கடுக்காய் | Terminalia chebula / Combretaceae | குறுக்கை (கொற்கை) |
| 13. | கருங்காலி | Diospynos ebenum/ ebenaceae | அம்பர்மாகாளம் |
| 14. | கிளுவை | Commiphona Caudata/ Burseraceae | கடைமுடி (கீழையூர்) |
| 15. | குரா | Webra corymbosa/ Rubiacase | கோடி (கோடியக்கரை) |
| 16. | குருந்தம் | Atalantia missionis/ Rutaceae | தண்டலை (நீணெறி) |
| 17. | கோங்கு | Hopea Parviflora/ Dipterocarpaceae | கைச்சினம் (கச்சணம்) |
| 18. | சண்பகம் | Michaelia Champaka/ Magnoliaceae | சிவபுரம், இராமனதீச்சுரம், பெண்ணாடம், திட்டை, வைகல் மாடக்கோயில், நாகேச்சுரம் |
| 19. | சந்தனம் | Santallum album / Santalaceae | வாஞ்சியம், அழுந்தூர் |
| 20. | சரக்கொன்றை, கொன்றை | Cassia Fistula / Caesalpiniaceae | கண்ணார் கோயில் (குருமாணக்குடி), பந்தணைநல்லூர், திருப்பத்தூர், அச்சிறுபாக்கம், அதிகை, அஞ்சைக்களம், சாத்தமங்கை, கோலக்கா, மாணிகுழி, தினைநகர், துறையூர், சோபுரம் |
| 21. | சிலந்திமரம் | Ochna Squarrosa / Ochnaceae | பயற்றூர் |
| 22. | சிறுபூளை | Aerva Lanata / Amaranthaceae | இரும்பூளை (ஆலங்குடி) |
| 23. | தருப்பை | Desmostachya bipinnata/ Poaceae | நள்ளாறு |
| 24. | தாழை (கண்டல்) | Rhizhophora Mucronata/ Rhizo Phoraceae | மயேந்திரப்பள்ளி |
| 25. | துளசி | Ocimum Sanctum / Labiatae | விற்குடி |
| 26. | தில்லை | Exoecaria agallocha/ Euphorbiaceae | கோயில் (அ) சிதம்பரம் |

| 27. | தென்னை | Cocos nucifera/ palmae | வடகுரங்காடுதுறை, தெங்கூர் |
|---|---|---|---|
| 28. | தேற்றாமரம் | Strychnos Potatorum / Loganiaceae | கோளிலி |
| 29. | நந்தியாவர்த்தம் | Tabemae-montana divaricata/ Apocynaleae | கோயில், வெண்ணி |
| 30. | நாரத்தை | Citrus medica / rutaceae | பேரெயில் (ஓகைப்பேரையூர்) |
| 31. | நாவல் | Syzigium Cumini / Myrtaceae | நாவலூர், ஆனைக்கா, (வெண்நாவல்) |
| 32. | நெல்லி | Emblica Officinals / Euphorbiaceae | நெல்லிக்கா, நெல்வாயில் (சிவபுரி), பழையாறை வடதளி |
| 33. | பலா | Atrocarpus integrifolia/ Moraceae | இன்னம்பர், பூவனூர், காராயில், ஆலங்காடு, வாய்மூர், பூவணம், பறியலூர், கடிக்குளம், குற்றாலம் (குறும்பலா) |
| 34. | பலாசமரம் (அ) புரசு | Buta frondosa / Fabaceae | கஞ்சனூர், தலைச்சங்காடு |
| 35. | பராய்மரம் | Streblus asper lour / Urticaeae | பராய்த்துறை |
| 36. | பனை | Borassus flabellifer / Palmae | பனந்தாள் |
| 37. | பன்னீர்மரம் | Guettarda Speciolsa/ Rubiaceae | சோற்றுத்துறை, மழபாடி, வலம்புரம் (மேலப் பெரும்பள்ளம்), பனையூர், திருவன்பார்த்தான் பனங்காட்டூர், ஓத்தூர் (செய்யாறு), புறவார்ப்பனங்காட்டூர், கன்றாப்பூர் (கல்பனை) |
| 38. | பவளமல்லி (அ) பாரிஜாதம் | Nyctanthus arbortristis/ Oleacease | நறையூர், களர், சீர்காழி, கோட்டாறு |
| 39. | பாதிரி | Stereospermum Suavelons / Bignoniaceae | பாதிரிப்புலியூர், ஆரூர், வலிதாயம் (பாடி), அவளிவநல்லூர், அவினாசி |
| 40. | பிஞ்சிலம் | Jasminum Grandiflorum / Oleaceae | கடையூர் |
| 41. | புங்கன் | Pongamia Glabra / Fabaceae | புன்கூர் |
| 42. | புன்னாகம் (அ) புன்னை | Calophyllum Inophyllam/ Gutiferae | நாரையூர், புகலூர், புறம்பயம், வலிவலம், அம்பர்பெருந்திருக்கோயில், புனவாயில், மயிலாப்பூர் |
| 43. | பைஞ்சாய்க் கோரை (கோரை) | Cyperous rotaundus / Cyperaceae | சாய்க்காடு |
| 44. | மகிழம் | Mimosops elangi/ Sapotaceae | நீடூர், அண்ணாமலை, காளத்தி, ஒற்றியூர், புனவாயில் |

| 45. | மந்தாரை (அ) மந்தாரம் | Bauhinia veriegate / Caesalpiniacease | திலதைப்பதி |
|---|---|---|---|
| 46. | மல்லிகை | Jasminum sambac | சிக்கல், இலம்பையங்காட்டூர், பல்லவனீச்சரம் |
| 47. | மா | Mangifera Indica/ Anacardiaceae | நல்லூரப் பெருமணம் (ஆச்சாள்புரம்), நாகைக்காரோணம், மாந்துறை, மயிலாடுதுறை, பாதாளஈச்சரம் (பாமணி), உசாத்தானம், கச்சிஏகம்பம் (காஞ்சிபுரம்) |
| 48. | முல்லை | Jasminum auriculatum / Obeaceae | தென்முல்லைவாயில், கருப்பறியலூர், கருகாவூர், வடமுல்லைவாயில் |
| 49. | மாவிலங்கம் | Crataeva religiosa/ Capparidaceae | நாட்டியத்தான்குடி, சேறை |
| 50. | மூங்கில் | Dendrocalamus srictus/ Poaceae | வேட்களம், பாசூர், வெண்ணெய்நல்லூர், நெல்வேலி |
| 51. | மருதம் (அ) மருது | Terminalia arjuna / Combretaceae | இடைமருதூர், பருப்பதம் (ஸ்ரீசைலம்) |
| 52. | வன்னி | Prosopis Cinaraia / Minosaceae | பாச்சிலாச்சிராமம், காட்டுப்பள்ளி, மறைக்காடு, அகத்தியான்பள்ளி, செம்பொன்பள்ளி (செம்பனார் கோயில்), தெளிச்சேரி, பாம்புரம், வன்னியூர், பேணு பெருந்துறை, கலயநல்லூர், பெருவேளூர், அரதைப் பெரும்பாழி, (ஹரித்துவார மங்கலம்), பட்டீச்சுரம், கொள்ளிக்காடு, கொடுமுடி, முதுகுன்றம் (விருத்தாசலம்), வடுகூர், ஆமாத்தூர், முண்டீச்சுரம், வான்மியூர், குடமூக்கு, சாட்டியக்குடி, கோட்டூர், ஆண்டார்கோயில் (கடுவாய்க்கரைப் புத்தூர்) |
| 53. | வாகை | Albizzia lebbeck / | வாழ்கொளிப்புத்தூர் |
| 54. | வாழை | Musa paradisiacea / Musaceae | பழனம், மருகல், குடவாயில், தருமபுரம், பைஞ்ஞீலி, தேவூர், கழுக்குன்றம் |
| 55. | வில்வம் | Aegle Marmelos / Rutaceae | கழிப்பாலை, வைகாவூர், ஐயாறு, பாற்றுறை, கற்குடி, முக்கீச்சுரம் (உறையூர்), எறும்பூர், பூந்துருத்தி, கண்டியூர், வேதிகுடி, தென்குடித்திட்டை, வலஞ்சுழி, நீலக்குடி, கடவூர், அரிசிற்கரைப்புத்தூர், பறியலூர், மீயச்சூர், சிறுகுடி, நன்னிலத்துப் பெருங்கோயில் (நன்னிலம்), கொண்டீச்சுரம், |

| | | | |
|---|---|---|---|
| | | | கொள்ளம்புதூர், இடும்பாவனம், நல்லூர், ஏடகம், ஆடானை, வல்லம், மாற்பேறு, திருவக்கரை, கோவலூர், நெடுங்களம், சத்திமுற்றம் |
| 56. | விழல் | Andropogon Squarrosus / Poaceae | விளநகர் |
| 57. | விளா | Feronia elephantum / Rutaceae | நின்றியூர் |
| 58. | வீழிச்செடி | Cadaba Indica/ Capparidaceae | வீழிமிழலை |
| 59. | வெள்ளெருக்கு | Calotropis Procera / Asclepiadacease | கானாட்டுமுள்ளூர், எருக்கத்தம்புலியூர், மங்கலக்குடி |
| 60. | வெள்வேல் | Acacia Lucophloea/ Minosaceae | வேற்காடு |
| 61. | வேம்பு | Azadirachta indica / Meliaceae | புள்ளிருக்குவேளூர் (வைத்தீசுவரன் கோயில்) |

அதிக எண்ணிக்கையில் தலங்களைப் பெற்றுள்ள மரங்கள்

| | | |
|---|---|---|
| வில்வம் | – | 73 தலங்கள் |
| வன்னி | – | 30 தலங்கள் |
| கொன்றை | – | 18 தலங்கள் |

தலமரங்களின் தொகுப்புக்கு மிகுந்த உதவியாயிருந்தது சிதம்பரம் திரு.கு. சேதுசுப்ரமணியன் அவர்களின் நூலாகும். அன்னாருக்கு நன்றிகள்.

# நோய்க்கு மருந்தாகும் மரங்கள்

| வ.எண் | நோய்கள் | மருந்தாகும் மரங்கள் |
|---|---|---|
| 1. | சுவாசக் கோளாறுகள் | |
| | இருமல் | வில்வம், துளசி, நெல்லி |
| | கபம், சளி | துளசி, வில்வம், நெல்லி, வெள்ளெருக்கு |
| | கபம்<br>தொண்டைக்கமறல்<br>தொண்டைப்புண்<br>ஆஸ்துமா | துளசி, நெல்லி<br>மா<br>நாவல், புளி, கடம்பு<br>கடுக்காய் |
| 2. | தலைவலி | குருந்து, கடம்பு, மகிழம், வில்வம், கடுக்காய், செண்பகம் |
| 3. | வாய்ப்புண் | தென்னை, நாவல், ஆல், கடுக்காய், நெல்லி |
| 4. | இருதய பலகீனம் | மருதம் |
| 5. | சிறுநீரக நோய்கள்<br>சிறுநீரகக் கல் கரைய | மாவிலங்கம், தேற்றா, கருங்காலி, சிறுபூளை |
| 6. | நீரிழிவு | நாவல், அத்தி |
| 7. | மலச்சிக்கல் | கடுக்காய், வில்வம், கொன்றை |
| 8. | வயிற்றுக்கடுப்பு | வில்வம், மா, இலந்தை, எருக்கு |
| 9. | வயிற்றுவலி | குருந்தம், பனை, செண்பகம் |
| 10. | வாந்தி | மந்தாரை |
| 11. | கல்லீரல் நோய்கள் | வேம்பு, வில்வம், கொன்றை, மருதம், ஆமணக்கு |
| 12. | குடற்புழுக்கள் | புரசு, கோரை, விழுதி |
| 13. | செரியாமை | குருந்து |
| 14. | பசியின்மை | கடுக்காய், நாரத்தை, கோரை, குருந்தம், வில்வம், ஆத்தி |
| 15. | வயிற்றுப்போக்கு | வில்வம், பனை, மா, ஆத்தி, கோங்கு, எலுமிச்சை |
| 16. | தோல்நோய்கள் | எருக்கு, அரளி, வேம்பு, புங்கன் |
| 17. | சருமப்பாதுகாப்பு | புன்னை, கோரை |
| 18. | கண்நோய்கள் | நந்தியாவட்டம் |
| 19. | மாலைக்கண் | வாகை |
| 20. | கண்வீக்கம் | புன்னை |

| 21. | ஆண் மலட்டுத்தன்மை | அரசு |
|---|---|---|
| 22. | தாது பலகீனம் | வில்வம், கோரை, கடம்பு, வெள்வேல் |
| 23. | மாதவிடாய் தாமதம் | மாவிலங்கம் |
| 24. | கருப்பை பலகீனம் | மகிழம் |
| 25. | வாதம் | மாவிலங்கம், புன்னை |
| 26. | அம்மை | வேம்பு |
| 27. | பித்தம் | எலுமிச்சை, வெள்வேல் |
| 28. | மண்ணீரல் வீக்கம் | நாவல், எலுமிச்சை, மருதம் |



# மாமுனிவர்களைப் பற்றிய சிற்றாராய்ச்சி




உ
சிவமயம்

இந்தப் பட்டியலில் யாரை வணங்கிக் கொண்டிருக்கிறீர்கள்? சிவம் எங்கே? இராமன் எங்கே? கண்டு கொள்ளுங்கள். சிவபரத்துவத்தை உணர்ந்து கொள்ளுங்கள். எல்லா நதிகளும் சிவ முகிலிலிருந்து வருவதை அல்லது சிவக்கடலில் ஒடுங்குவதைக் காணுங்கள். மற்ற எல்லோரையும் வணங்கிச் சிவனைச் சாருவதற்குப் பல யுகங்கள் ஆகும்.

அவருக்கே நேர்வழி உண்டு. அந்த வழியாம் நமது திருமுறைப் பாராயணத்துடன் கூடிய சிவபூசை வழியில் பிரயாணித்தால் திருவடி நிச்சயம்.

இந்த வரைபடத்தின் இடதுபுற மேற் கோடியில் "அ" என்று அத்திரி மாமுனிவர் மகன் சந்திரன் குறியிடப்பட்டுள்ளார். மகன் என்றால் அது சாதாரண கருவறைப் பயணமல்ல, அடுத்தப் பக்கக் கட்டுரை அதை விளக்குகிறது. இதைப் போன்ற செயற்கரிய செய்த பல வரலாற்றுப் புருடர்களை இப்பட்டியல் தன்னகத்தே கொண்டுள்ளது. எதிர் வருங்காலங்களில் ஏனைய திருமுறை நூல்களில் ஆங்காங்கே அவற்றை வெளியிடத் திருவருள் கூட்டட்டும்.

திருச்சிற்றம்பலம்

## சிவபூசையாம் தவ வலிமையால் அத்திரி மாமுனியும், அனுசூயாவும் சந்திரனைப் படைத்தது உட்பட நிகழ்த்திய அற்புதங்கள்.

### கடலுக்கடியில் பல்லாண்டுகள் தவம் செய்யும் அத்திரி



உலகம் தோன்றிய காலத்திலேயே அவதரித்த முனிவர்களில் அத்திரியும் ஒருவர். படைப்புக் கடவுளான பிரம்மதேவரின் மானசபுத்திரர் இவர். இவருடைய மனைவி அனுசூயா. பதிவிரதையான அனுசூயாவால் அத்திரி முனிவருக்கும், அத்திரி முனிவரால் அனுசூயாவுக்கும் பெருமை. தவசக்தியில் இருவருமே சளைத்தவர்கள் அல்லர். வேத புராண இதிகாசங்கள் எல்லாவற்றிலும் இத்தம்பதிகள் உயர்வாகப் பேசப்பட்டுள்ளனர். இராமாயணத்தில் கூட இராமனும், சீதையும், அத்திரி முனிவரின் ஆஸ்ரமத்தில் ஒருநாள் தங்கினர். அப்போது ராம சீதா தம்பதிகளிடம் அத்திரி முனிவர் தன் மனைவி அனுசூயாவை காட்டி, ராமா! அனுசூயா கோபம் என்பதையே அறியாதவள். அசூயை என்னும் சொல்லுக்கு மனதில் சிறிதும் விருப்பம் இல்லாதவள் எனப்பொருள். இவள் மண்ணுயிர்கள் எல்லாம் போற்றி வணங்கும் பெருமை கொண்டவள். குணவதி, தர்மவதி, பதிவிரதா தர்மத்தில் தலைசிறந்தவள். தர்மமும் புண்ணியமும் நிறைந்த அனுசூயாவிடம் ஆசிபெறுவீர்களாக! என்று சொன்னார். ஒரு சந்தர்ப்பத்தில் நாட்டில் மழையே பெய்யவில்லை. தொடர்ந்து பத்து ஆண்டுகளாக வறட்சி நிலவியது. எங்கும் தண்ணீர்ப்பஞ்சம். வாயில்லா ஜீவன்களுக்கு பசும்புல் கூட கிடைக்கவில்லை. இந்தக்காட்சியைக் கண்ட அனுசூயாவிற்கு உள்ளம் உருகியது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக தான் செய்த தவசக்தியால் கங்கையை வரவழைத்தாள். எல்லா குளங்களையும் நிறைத்தாள். தண்ணீர் பெற்று, பயிர்கள் செழித்து வளர்ந்தன. எங்கும் பசுமை உண்டானதைக் கண்டு மகிழ்ந்தாள். ஒருமுறை அனுசூயாவின் தோழியைச் சந்தர்ப்ப வசத்தால் சபித்தார் ஒரு முனிவர். பொழுது விடிந்தால் நீ விதவையாவாய் என்பதே அந்த சாபம். என்ன செய்ய முடியும்? அபலையாய் ஓடி வந்து அனுசூயாவிடம் நின்றாள் அவள். விஷயத்தைச் சொன்னாள். சாபவிமோசனம் என்பது யார் சாபமிட்டார்களோ அவர்களே தரவேண்டியது என்பதை அறியாதவர்கள் யார்? இருந்தாலும், நட்புக்கு கை கொடுக்க முன்வந்த அனுசூயா தன் தோழியிடம், விடிந்தால் தானே நீ விதவையாவாய்! விடியலே இல்லாமல் செய்து விடுகிறேன் என்று ஆறுதல் சொன்னாள்.

ஒரு நாள் இருநாள் அல்ல. பத்து நாட்கள் விடியாமல் நாள்கள் இரவாகவே கழிந்தன. உலகமே திகைத்தது. தேவர்கள் கூடினர். அனுசூயாவிடம் வேண்டிக் கொண்டனர். மீண்டும் பகல்வேளை வரவேண்டுமானால் என் தோழி சுமங்கலியாக வாழ வேண்டும் என்று நிபந்தனையிட்டாள் அனுசுயா. தேவர்களும் அவ்வாறே வாக்களித்தனர். நினைத்ததைச் சாதித்துத் தன் தோழியைக் காப்பாற்றினாள். இத்தகைய மகா உத்தமி அனுசூயாவின் கணவர் அத்திரி முனிவர் என்ன சாமான்யமானவரா? அவரும் புகழிலும், தவத்திலும் யாருக்கும் இணையில்லாதவர். உலகிற்கே ஒளிதரும் சூரியனுக்கே வாழ்வு தந்த வள்ளல் அத்திரிமுனிவர். ஒருமுறை அசுரர்களில் ஒருவனான ஸ்வர்னபானு தன்னைக் காட்டிக் கொடுத்த சூரியதேவன் மீது கோபம் கொண்டான். இவனே கிரகங்களில் நிழல் கிரகங்களான ராகுகேதுவாக மாறினான். தன் பகைகையத் தீர்த்துக் கொள்ள எண்ணியவன் சூரியனைக் கிரகணமாகப் பிடித்தான். ராகுவின் பாதிப்புக்கு உள்ளாகி ஒளியை இழந்து நின்ற சூரியனுக்கு மீண்டும் ஒளி கொடுத்துக் காப்பாற்றியவர் அத்திரி முனிவர்.

சூரியன் காலையில் கிழக்கில் உதிக்கிறான். மாலையில் மறைந்து விடுகிறான். உலகமே சூரியனின் வருகைக்காகக் காத்துக் கிடக்கிறது. இரவு நேரத்தில் வெளிச்சம் இல்லாமல் சிரமப்படுவதை எண்ணி வருந்தினார் அத்திரி. அதற்கு ஒரு முடிவு கட்ட எண்ணினார். ஆழமான சமுத்திரத்தின் அடிப்புறத்தில் போய் அமர்ந்தார். தவத்தில் ஆழ்ந்தார். மனுஷ வருஷங்கள் அல்ல. பல தேவ வருஷங்கள் தவத்தைத் தொடர்ந்தார். **தவக்கனல் அதிகரித்து. அவருடைய கண்களில் அபார ஜோதி தோன்றியது. கடல் நீரையும் கிழித்துக் கொண்டு அந்த ஜோதி பூமியையும் விட்டு வேகமாக கிளம்பிச் சென்றது. பூமியை விட்டு நெடுந்தூரம் சென்ற ஜோதியைக் கண்ட படைப்புக் கடவுள் பிரம்மா, அதை அப்படியே நிலை நிறுத்தும்படி திசைகளுக்குக் கட்டளையிட்டார். பிரம்மாவே நேரில் வந்து, அந்த ஜோதியைத் தன் தேரில் ஏற்றிக்கொண்டு 21 முறை பூமியை வலம் வந்தார். பிரம்மா செய்த ஏற்பாட்டினை இன்றளவும் அந்த ஜோதி செய்து கொண்டிருக்கிறது. அந்த ஜோதியினைத் தான் இரவில் நிலாவாக வான மண்டலத்தில் காண்கிறோம். இரவிலும் பூமிக்கு ஒளி தரும் சந்திரனைத் தந்த பெருமை அத்திரி முனிவருடையதே.**

**யாகம் ஒன்றிற்கு அத்திரி சதுரஹம் என்று பெயர். முதன்முதலில் இந்த யாகத்தைச் செய்தவர் இவர் என்பதால் அவர் பெயராலேயே அழைக்கப்பட்டு வருகிறது. மனதில் எண்ணிய எண்ணங்களுக்குச் செயல்வடிவம் தரும் மகத்தான யாகம் இது. இந்த யாகத்தை செய்பவர்கள் வேண்டிய பலனைப் பெற்று வாழ்வர் என்று வேதம் சொல்கிறது. ஆயுர்வேத சாஸ்திரம், ஜோதிட சாஸ்திரத்திலும் இவரின் பங்களிப்பு சிறப்பானதாகும். பிரம்மதேவரின் நகங்களில் இருந்து தோன்றிய விகநஸ மகரிஷி அத்திரியின் மாணவர். இந்த உலகம் தோன்றிய போதே அவதரித்த இவர். தன் தவ வலிமையால் பல்லாயிரம் புத்திரர்களை பெற்றெடுத்தார். அவர்கள் தங்களை ஆத்ரேய கோத்திரம் என்று வழங்குகின்றனர். மழை பெய்ய மறுக்கும் இந்த சமயத்தில், மக்களுக்காக அன்று மழையை வரவழைத்த அத்திரி அனுசூயா தம்பதிகளை நினைவில் இருத்தி பிரார்த்திப்போம்.**

## மெய்ஞ்ஞானமும் – விஞ்ஞானமும் :

தடத்த அல்லது பௌதிகப் பொருள்களை ஆராய்வது விஞ்ஞானம் (உடலாராய்ச்சி) நுண்ணிய அல்லது சூட்சும பொருள்களை ஆராய்வது மெய்ஞ்ஞானம் (உயிராராய்ச்சி)

அத்திரி மாமுனி கடலுக்கு அடியில் அமர்ந்து பல்லூழிக் காலம் பயின்று அரனை அர்ச்சித்ததால் நல்லறிவு சற்றே நகப்பெற்று சந்திரனை, பிறைநிலாவாக நமக்கு அளித்துள்ளார். கடல் எவ்வளவு ஆழமானது? எவ்வளவு பெரியது என்று ஆராய வலைதளத்தக்குள் சென்று ஆராய்ந்தபோது கீழ்க்கண்ட விபரங்கள் கிடைத்தன.

| | | |
|---|---|---|
| கடலின் சராசரி ஆழம் | : | 3800 மீட்டர்கள் (12667 அடிகள்) |
| கடலின் மிகுந்தபட்ச ஆழம் | : | 10900 மீட்டர்கள் (36333 அடிகள்) |

சிவபெருமான் படைத்த 84 இலட்சம் பிறப்பு வகைகளில் (யோனி பேதங்களில்)
கடலுக்குள் வாழ்வன 12 இலட்சம் (தாவரங்கள், மீன்கள் உட்பட கடல் விலங்குகள்)

நம்மை விழுங்கும் கொடூரமான திமிங்கலங்கள், சுறாமீன்கள் என்று இவற்றின் மத்தியில் அவர் தவம் செய்துள்ளார். சிவபரம்பொருளை நெருங்க நெருங்க பகையும் உறவாகும் என்பதற்கு இவையெல்லாம் சான்றுகள். கயிலை மலைக்கு நாவுக்கரசர் நடைபாதை யாத்திரை செய்தபோது கொடிய விலங்குகள் அவரைக் கண்டு விலகிச் சென்றன. பாம்பின் பட ஒளிகள் தான் அவருக்கு இருளில் ஒளியாகத் திகழ்ந்து பாதை காட்டி உதவியுள்ளன என்ற நிகழ்வுகளை தெய்வச் சேக்கிழார் பெரிய புராணத்தில் பதிவு செய்துள்ளார்.

மானுடர்களாகிய நம்மவர்களும் விஞ்ஞானத்தில் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்துள்ளார்கள். ஆகாய விமானம், நீர்மூழ்கிக் கப்பல்கள், கணிணி, அலைபேசிகள், வலைதளம் இவையெல்லாம் விஞ்ஞான வளர்ச்சியைக் பறை சாற்றுகின்றன. ஆனால் குறிப்பிட்ட எல்லையை இன்னும் கடக்க முடியவில்லை. உதாரணமாக கடந்த ஆண்டு எம்.ஹெச். 370 என்று பெயரிடப்பட்டிருந்த மலேசியா நாட்டைச்சேர்ந்த விமானம் 175 பயணிகளுடன் காணாமல் போய் கடலில் விழுந்து விட்டதாக முடிவுசெய்து பல மாதங்களாகத் தேடியும் கண்டு பிடிக்க முடியாமல் முயற்சியைக் கைவிட்டு விட்டார்கள். பத்தாயிரம் அடிக்குக் கீழ் சகதியில் போய் மாட்டிக்கொண்டால் பல லட்சம் கி. மீட்டர் பரப்பில் எப்படித் தேடுவது? பனிக்காலங்களில் பல லட்சம் கி. மீட்டரும் உறைந்து பனியாகிவிடும். தேடும் கப்பலும், மாலுமிகளும் பனிக்கட்டிகளுள் உறைந்து போய் உயிரும் போய்விடும் என்றால் யார் போய்த் தேடுவார்கள்? என்றாவது ஒருநாள் சில பாகங்கள் மிதக்கக் காணலாம். தேடுதல் என்பது மிக முக்கியமானது. எதைத் தேடுவது? யார் உதவுவார் என்பதை மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தில் "ஒருத்தனே உன்னை ஓலமிட்டலறி உலகெல்லாம் தேடியும் காணேன்" என்று பதிவு செய்கிறார்.

கடலுக்கு அடியில் வாழும் ஒரு பொருளையே நம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவ்வளவு கடினமான இடத்தில் அத்திரி பல்லாயிரம் ஆண்டுகள் தவம் செய்துள்ளார். இரண்டையும் ஒப்பிட்டு ஆய்ந்துணர்ந்து நாமும் அத்தவநெறிக்குத் திருமுறைப் பாராயணங்கள் மூலம் நம்மை உயர்த்திக்கொள்வோமாக!

# தோன்றாத் துணை

**தி**ருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் பெருவாழ்வு வந்ததெனத் திருநாவுக்கரசு சுவாமிகள் சைவம் சார்ந்ததைச் சகிக்க முடியாத சமணர்கள் அவரை நீற்றறையில் (சுண்ணாம்புக் காளவாய்) இடுதல், நஞ்சுகொடுத்தல், கொலையானையை ஏவுதல், கல்லோடு கட்டிக் கடலில் மூழ்கடித்தல் என்ற நான்கு கொடும் முயற்சிகளைச் செய்து மாய்க்க முயன்றனர். திருநீலகண்டப் பெருமானின் அடியாராகவும், யானை உரிபோர்த்த மூர்த்தியின் சீடனாகவும், முப்புரமெரித்தவரின் தொண்டனாகவும் மாறிவிட்ட காரணத்தால் அந்தக் கொடிய செயல்கள் அவரை ஒன்றும் செய்யவில்லை. இவையனைத்தும் திருப்பாதிரிப் புலியூரில் (இன்றைய கடலூர்) நடந்தேறின. திருஞானசம்பந்தர் மதுரையில் அனல்புனல் வாதங்கள் நிறைவேறியபின் திருநீற்று நெறியையும், சைவத்தையும் நிலைநாட்டி விட்டு ஆலவாய் அண்ணல் திருமுன் சென்று நன்றியின் உச்சக்கட்டமாக வீடலாலவாய்த் திருப்பதிகம் பாடி மகிழ்ந்தது போல திருநாவுக்கரசு சுவாமிகள் கடலிலிருந்து கரையேறவிட்ட குப்பத்தில் கரையேறியபின் திருப்பாதிரிப்புலியூர் சிவாலயம் சென்று பாடிய, சைவ உலகம் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்த தோன்றாத் துணைப்பதிகமான "ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாய்" என்ற பதிகத்துக்கு மறை. திருநாவுக்கரசர் எழுதிய கட்டுரையைப் பிரசுரிப்பதில் பெருமகிழ்வு கொள்கிறோம்.

திருநாவுக்கரசு பெருமான் கரையேறியபோது நடந்த சிறப்புகளை இப்போது நோக்குவோம். பெருமான் கரை சேரக் கண்ட மெய்த்தவத்தரும், மக்கள் யாவரும் பேரார்வத்துடன், ஆரவாரத்துடன், பெருமகிழ்ச்சியுடன் அடிகளை வரவேற்றனர். அவர்கள் உடன் வர, நம் பெருமான் நேரே திருப்பாதிரிப் புலியூர்ச் சிவபிரான் திருக்கோயிலூட் சென்று உளமுருக – ஊனுருக, உயிருருக, ஆராப் பேரன்புடன் விழி மாரி பொழிய – உடல் சிலிர்க்க, நாக்குழற, சென்னியஞ்சலி கூப்பி நின்று பாடுகின்றார். ஒரு பாட்டல்ல, பத்துப் பாடல்கள் பாடுகின்றார். அவற்றில் பொதிந்துள்ள அருமை, பெருமைகளை இங்கு ஒருவாறு காண்போம்.

**முதற்பாட்டு**
**(இறைவன் தோன்றாத் துணையாயிருந்தார்)**

சமணர்கள் தனக்கு செய்த நாற் பெருங் கொடுமைகளிலிருந்து நான் மீண்டேனே, அஃது, அடியேனுடைய முயற்சியால் ஆகக் கூடியதா? எவராற்றான் இக்கொடுமைகளிலிருந்து தப்ப முடியும்? அடியேற்கு அவன் உதவிகளைப் பெறத் தகுதி சிறிதும் இல்லையே. வேற்றுச் சமயத்திலிருந்து அவரை இகழ்ந்தவனாயிற்றே நான்!. இப்படிப்பட்ட கயவனுக்கா அவன் அருளுகின்றான். என்னே! அவனருளின் பெருமை! என்றெல்லாம் எண்ணிக் கொண்டே அவர் திருமுன்புற்ற பெருமானுக்கு மேலும் அவன் தமக்குப் புரிந்த அருளுதவிகள் பல தோன்றப் பாடுகின்றார். அதில் முதற் பாட்டு,

'ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் தோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே'

என்பதாம். "சமணர்கள் நீற்றறையிலிட்ட போதும், நஞ்சூட்டிய போதும், கொலை யானையை ஏவிய போதும், கடலில் வீசிய போதும் மட்டுமா எனக்கு நீ துணை புரிந்தாய்? இல்லையே, உனக்காட்பட்ட பிறகு மட்டுமா இவ்வுதவிகளைச் செய்தாய்? இல்லையே, என் தாயின் உள்ளத்தில் அவளை அறியாமலே என்பால் அவட்குப் பரிவு மிகச் செய்து பால் தந்து இரவு பகலாக என்னைக் காத்து வளர்க்கச் செய்தாய். தந்தையின் உளத்திலிருந்து கொண்டு, பேரன்புடன் என்னைக் கல்வி கேள்விகள் தந்திடுமாறு அவருக்குப் பேரன்பு தந்தாய். உடன் பிறந்தாராயிருக்கும் திலகவதியம்மையார் திருவுள்ளத்திலிருந்து, அவருள்ளத்தே எளியேன்பால் பேரருள் கொள்ளுமாறு செய்தாய். அவரைத் தவத்திலீடுபடுத்தி எனக்காக வேண்டச் செய்தாய்! இவ்வருளிப் பாடுகளையெல்லாம் எளியேனுக்கு முன் – என் கண்கள் காண உன் திருவுருவத்தோடு தோன்றி நின்றா செய்தாய்! இல்லையே! அடியேன் கண்ணால் மட்டுமல்ல, கருத்தினாலுங் காணாத படியன்றோ தோன்றாமல் நின்று அருள் புரிந்தாய், துணையாயிருந்தாய்!".

இவைதாமா? அவன், அவள், அது என்னும் முப்பகுப்புடையதாக உலகைப் படைத்தவனாய் எளியேன் வழிபடற்கு இசைந்து என்னுள்ளத்தே வீற்றிருக்கின்றாய்! நீயோ தேவர்களால் (உயர்ந்தோர்) அன்பு செய்யப்படுபவன்! (எளியேனுடைய அன்பையும் ஏற்றுக்கொண்டாய் என்றதன் குறிப்பிது) திருப்பாதிரிப்புலியூரில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானே, இங்ஙனம் நீ எனக்கு மட்டுமா தோன்றாத் துணையாயிருக்கின்றாய்? அல்ல, உன்னடியார் யாவர்க்குமே இப்படித் தோன்றாத் துணையாயிருந்தருள் புரிகின்றாய், என்னே, நின் அருளின் அருமை! பெருமை".

என்று தமக்கு அவன் புரிந்த பேரருளையெல்லாம் எண்ணி, எண்ணி உருகுகின்றார்; நன்றி நவில்கின்றார்; பாராட்டுகின்றார்; புகழ்கின்றார்; இறைஞ்சுகின்றார்.

இப்பாட்டினால், உயர்ந்தோர்பாற் காணப்படும் அரிய பண்புகளில் தலையாய நன்றி மறவாமை என்ற அருமைப் பண்பு நம் நாயனார்பால் மிக்குள்ளமை தெளியப்படும். சிவபிரான் அருளை மட்டுமே இவர் போற்றியிருக்கலாம். ஆனால், தம் பெற்றோர், திருத்தமக்கையார் முதலியோரையும் நன்றி மறவாது நினைக்கின்ற தன்மை உலகவராற் கடைபிடிக்க வேண்டிய நல்லறமாகும்.

துறவுக்குப் பெருமையுண்டு. ஆனால் துறவு நன்றி மறத்தலாம் துறவாக அமைதல் அறமன்று. அழகுமன்று. உலகப் பொருட்களைச் "சடம்" (அறிவில்லாதது) என்றிகழ்வதும் அத்தகையதே. உயர்திணை மட்டுமின்றி நிலம், நீர், தீ, காற்று, வான், மரஞ்செடி கொடிகள் அனைத்தும் மக்கள் வாழ்விற்குப் பெருந்துணை புரிவன! அவைகளையும், மெய்யுணர் மேலோர் போற்றுதல் வேண்டுமென்பதும் நம்மடிகள் "மூன்றாய் உலகம் படைத்துகந்தான்" என்று சிறப்பித்துள்ளமையால் அறியலாம். மேலும் அவற்றையெல்லாம் ஆக்கி நமக்கு அவன் தோன்றாத் துணையாயிருந்து

உதவி வருவதனைப் பெருமான் நமக்குங்காட்டி நம்மையும் அவன் அருளைப் போற்றி உய்யுமாறு அறிவுறுத்து (உபதேசம்) கின்றான்.

இறைவன் பெருமையை, 'இமையவர்க் கன்பன்' என்று குறித்தார். அத்தன்மையனாயினும் அவன் அடியவர் உள்ளத்தில் வீற்றிருக்கின்ற எளிமையையும் எடுத்துக்காட்டுகின்றார். அருட் சான்றோர்கள் பாடல்கள் இறைவனைப் போற்றுவதாயினும், அவற்றினுள், அவர்கள் தம் வரலாற்றுக் குறிப்புகளும், மண்பதை உய்யும் நல்வழிகள் பற்றி அவர்கள் காணுங் கனவுகளுக்குரிய அருளுரைகளும் பிறவும் அவர்களை அறியாமலே இடம்பெற்று விடுவதுண்டு. அவ்வாறமைவது மாந்தர் செய்த பெரும்பேறேயாம்.

உலகத்துயிர்கள், வாழ்வதற்கான – இயங்குவதற்கான நுண் பொருட்கள் யாவும் ஞாயிற்றின் கதிர்களிலும், ஐம்பெரும்பொருட்களிலும் (மண், நீர், தீ, காற்று, வான்) அடங்கியுள்ளன. இவற்றை நம் கண்ணால் காண முடியாது. அவை அவ்வளவு நுண்மையாயமைந்துள்ள படியினாற்றான், எப்பொருளிலும் எளிதிற் புகுந்து பயன் தருகின்றன. அந்த நுண் பொருள்களிலும் நுண்ணியனாய் இறைவன் அமைந்து அவையேயாயிருந்து நமக்கெல்லாம் வாழ்வளிக்கின்றான். இவ்வாறே இறைவன் நம் உடல், உள்ளங்களில் அமைந்து நின்று நமக்காவன புரிகின்றான். ஆவன நன்மையாகவுமிருக்கலாம் தீமையாகவுமிருக்கலாம். இவை பற்றிய விளக்கம் இதற்கு மேல் இங்கு வேண்டா.

நாயனாருக்கு இறுதியாக நிகழ்ந்த கொடுஞ் செயலினின்றும் சிவபிரான் அவரைக் கரை சேர்த்தான். எங்ஙனம்? கடல் நீரின் அலைகளுக்குள்ளிருந்து கல்லின் சுமையைப் போக்கி எளிய தெப்பம்போலாக்கி, களிற்றுப் பிணிகள் தாமே அறச் செய்தான். இவற்றைப் பெருமான் தம் கண்களாற் காணவில்லை. கயிறு அறுந்தமை, கல் மிதந்தமை, அலை கரை சேர்த்தமையாலறிந்தார். ஆகவே தான், தோன்றாத் துணையாயிருந்தனன் என்று தன்மாட்டு அவன் நிகழ்த்திய அருளை – அருஞ்செயலை எடுத்துப் போற்றிப் புகழ்கின்றார். இதுவும் சமணர், பெருமானைக் கடலில் வீழ்த்தியதற்கான குறிப்பான அகச் சான்றாம் எனக் கொள்ளல் வேண்டும்.

அக்காலத்தில் திருப்பாதிரிப்புலியூர், மகேந்திரனின் தலைநகர்களில் ஒன்றாயிருந்தது போலும்! அன்றியும் அங்கே தான் அடிகள் சமணத் துறவியாக இருந்த சமண் பாழி (மடம்)யுமிருந்தது. நால்வகை ஒறுப்பும் (சமணர் தந்த தண்டனைகள்) அங்கு தான் நடந்தன. கரையேறியதும் அந்நகரில்தான்.

ஆகவேதான், அடிகள் அப்பாதிரிப் புலியூர் கோயிலுட் சென்று வழிபடலானார். நாலாவது கொடுமை நடந்த உடனே அவர் பாடும் இப்பதிகப் பாடல்கள் உணர்ச்சிப் பெருக்குடன் உருக்க மிக்கதாக விளங்குகின்றன. ஆம்! அப்போதுதான் அடிகள் அவன் தனக்குச் செய்த பேரருளுதவிகளைப் பெற்று உருகும் நிலையுற்றது. இனி, அவற்றிலுள்ள எல்லாப் பாடல்கட்கும் விளக்கங் காண இந்நூலிடந்தராது. ஆகவே, பத்துப் பாட்டுக்களில் மேலும் ஐந்து பாடல்களில் அமைந்துள்ள அரும்பொருட்களை நாமறிந்த அளவு ஒரு சிறிது பார்ப்போம்.

"வைத்த பொருணமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கினல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ வறிவிலாப் பேதைநெஞ்சே"

வைத்த பொருள் – வைப்பகத்திற் போட்டு வைத்த செல்வம். இங்கே, அச்செல்வம் போலுதவுபவன் சிவன் என்ற கருத்தில் அவனை வைத்த பொருள் என்று பெருமான் பாடுகின்றார். சித்தம் ஒருக்கி – மனதை ஒருமைப்படுத்தி, அத்தன் – தலைவன் (சிவபெருமான்) திருப்பாதிரிப் புலியூர்ப் பதிகத்தில் இஃது ஐந்தாம் பாட்டு.

"முயற்சி திருவினையாக்கும்" அல்லவா? சிவபெருமான் அருளைப் பெறவும் பத்திமை, பூசனை, பாடுதல், தேனிப்பு (தியானம்), இறைஞ்சுதல் (உடலாலும்) முதலியவை இன்றியமையாதனவாகும். இவற்றிற்கு உண்மை, நேர்மை, அன்பு, அருள், இரக்கம், கல்வி, கேள்வி முதலிய பண்புகளும், பயிற்சிகளும் அடிப்படையாகும் என்று கூறல் மிகை. இத்தகு முயற்சிகளாலன்றி எவரும் இறைவனருளைப் பெற வியலாது. இம்முயற்சிகளில் ஈடுபடும் அளவிற்கு இறைவனருள் மாந்தர்க்குக் கிடைக்கும். இவற்றை மேற்கொண்டு – நூற்றுக்கு நூறு மேற்கொண்டு வெற்றி வீரராய் நம் நாயனார் விளங்கினார். சிந்தையில் சிவன் உருவை நிறுத்திக் கொண்டார். "சிவாய நம" என இடையறாது போற்றிக் கொண்டிருக்கின்றார். ஆதலினாற்றான் தமக்கு அவர் தோன்றாத் துணையாயிருந்தார் – இருக்கின்றார் என்ற உண்மையைப் பெருமான் உணர்ந்திருந்தார்.

உலகவர் நினைப்பாரல்லவா? என் ஐயா! நால்வகைக் கொடுமைகளிலிருந்தும் அப்பருக்கு மட்டும் ஏன் சிவன் அருள்புரிந்தார்? என்று. அவர்களும் இவ்வாறு தம்மைப்போல் ஒருமையுடன் சிவபிரானை – திருவைந்தெழுத்தைப் போற்றினால், நலம் பெறுதல் திண்ணம் என்று உலகவர்க்கு அறிவித்து அவர்களை உய்யக் கொள்ள நாயனார், தம் நெஞ்சுக்கு அறிவுரை கூறுவது போல், "சித்தம் ஒருக்கிச் சிவாயநம என்று இருக்கின் அல்லால், அத்தன் அருள் பெறலாமோ அறிவிலாப் பேதை நெஞ்சே'' என்று கூறுவாராயினார். இவ்வாறு தாம் அறிவுறுத்துகின்றபடி உலகவர் முயன்றால் அவர்களும் அருளைப் பெறலாம் என்பதற்குத் தாமே சான்று எனக் கூறுவார் போல், தம் நெஞ்சினைக் கேட்பார் போல, "சித்தம் ஒருக்கி சிவாய நம என்றிருந்தேன். அதனாலவன், அருள் பெற்றுய்ந்தேன்" என்று தெரிவிக்கின்றார். இச்செய்தியிலும் நால்வகை கொடுமையிலிருந்து தாம் மீண்டமை பற்றிய அகச்சான்றுங் குறிப்புக் காணப்படுதல் காண்க.

வைப்புச் செல்வம், இடையூறு நேர்ந்த காலத்து, அது நீக்க உதவுகின்றது போல, மெய்யடியார்கட்கு ஊறு நேருங்கால் உற்ற விடத்துதவுந் தன்மையது திருவைந்தெழுத்தாம். இவ்வுண்மை இப்பாடலில் அமைந்துள்ளமையை ஓர்ந்துணர்ந்து உலகர் கடைப்பிடித்துய்வாராக.

திருவைந்தெழுத்தை ஓதினாலன்றி உய்வில்லை, என்பதறிந்துள்ள அடிகள் அதனை இங்குச் சொல்லவேண்டிய காரணம் யாது? ஒரு நொடி நேரம் பெருமான் தம் ஒருமைப்பட்ட பத்திமையால் வெற்றி கிட்டியது போல நினைத்தார் போலும், "அறிவிலாப் பேதை மனமே" அப்படியா நினைக்கின்றாய்? அஃதறியாமை, வெற்றிக்காரணம் "திருவைந்தெழுத்தே" ஆம் என்று தமக்குத் தாமே அமைதி கூறிக் கொள்கின்றார். இல்லை "அவ்வாறுலகவர் கருதின் அது தவறு" என்றுணர்த்தவே இவ்வாறு நயம்படக் கூறினார், என்று கருதுதலே பொருத்தமாம்.

இதில் திருவைந் தெழுத்தை ஓதும் முறையும் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளது. சித்தம் ஒருக்கி இருத்தல் வேண்டும். அஃதாவது எண்ணங்களைப் பன்முகமாக ஓடவிடாமல் சிவன் உருவில் நிறுத்தித் திருமந்திரத்தை (அஞ்செழுத்து) உருவேற்றல் வேண்டும். அவ்வாறிருத்தல் அரிதாகலான். 'இருக்கின் அல்லால்' என்று குறித்தார். "இருக்கினல்லால் அத்தன் அருள் பெறலாமே" என்று எதிர்மறையில் வற்புறுத்திக் கூறியுள்ளார். சிறந்த உறுதிகளை இவ்வாறு கூறி உடன்பாட்டை (சித்தம் ஒருக்கியிருந்தால் அத்தன் அருள் பெறல் ஒருதலை) என்பது ஒப்புமாறு வற்புறுத்திக் கூறுவது ஆன்றோர் கைக்கொண்ட சொல்லுந் திறமாகும். அத்திறம் இங்கே இயல்பாய் அமைந்துள்ளது நம் நல்வினைப் பேறே.

இப்பாட்டில், "மனத்தடைந்து" என்பதற்கு, "நம்பிக்கை கொண்டு" என்று பொருள் கொள்ளல் வேண்டும். உலகப் பொருட்கள் யாவும் அழியுந் தன்மையன. சில காலமே இன்பந்தருவன; துன்பமுந் தரும். ஆயின், மாந்தர்க்கு என்றும் அழியாப் பேரின்பத்தைத் தருபவர், என்றும் உள்ளவராம், சிவபெருமான் ஒருவரே யாவர். உயிர்கள் நிலைத்த பேரின்பத்தை அடைய வேண்டின், அவனை யடைதல் வேண்டும். அதற்குத் துணையாய், அவனே அமைத்துத் தந்தது திருவைந்தெழுத்தாம். அதனை ஓதினாலன்றி உய்வில்லை. சிவபிரானே முழுமுதற் பொருள், அவன் பெயரை, "நாதன் நாமம் நமச்சிவாயவே" என்றார் ஞான சம்பந்தர் உள்ளிட்ட நாயன்மார் அனைவரும்.

மேலே நாம் கூறியபடி சொல்லும், பொருளும் வேறு பிரிக்க முடியாதபடி ஒன்றாம். ஆகவே திருவைந்தெழுத்தே சிவம் எனக் கொண்டு அதனையே ஓதி அவனையே அடைகின்றனர் மேலோர். அவனும், அவனருளும் வேறல்ல. அவனைப் பெற அஃதாவது அவனருளைப் பெறத் திருவைந்தெழுத்தை ஒதியே யாதல் வேண்டும் என்னும் பேருண்மை இத்திருப்பாட்டில் விளங்குகின்றமையைத் தெளிந்து கடைபிடிப்போமாக!

**சிவகதி வேண்டல்**

> "கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
> உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே னுனதருளால்
> திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
> தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரரனே"

கருவாய்க் கிடந்து – மாந்தனாக இருந்து
உருவாய்த் தெரிந்து – அறிவு தெரிந்தது முதல்

மாந்தர் தம் இன்ப வாழ்விற்குப் பெரிதும் விரும்புங் குறிக்கோள் (இலட்சியம்) பெரும்பாலும் பொருளீட்டலாம். வாழ்க்கைக்கு அதுதானே அடிப்படை. அதற்கடுத்தபடியாக நுகர்பொருட்கள் மக்களுக்கேயன்றிப் பகுத்தறிவில்லா விலங்குகளின், உயிர்களின் குறிக்கோளும் இதுவே. ஆதலால் மக்கள் இக் குறிக்கோளுடையராய் இருப்பதில் சிறப்பேதுமில்லை. சற்றே அறிவு பெற்ற இவர்களிற் சிலர் அறிவு, ஆற்றல், பல்வகைக் கலைகள் இவற்றில் ஆர்வங் கொள்கின்றார்கள். இவர்களிற் சிலர், நாட்டுப்பற்று, மொழிப்பற்றுடையவர்களாய் உள்ளனர். மற்றும் மிகச் சிலர், பொது மக்கள் தொண்டில் ஊக்கங்கொள்கின்றனர். ஆனால் கடவுளையடைதலே குறிக்கோளாகக் கொண்டு அதற்கென வாழ்க்கையைப் பயன்படுத்துவோர் மிக மிக அரியர். பொதுமக்கள் யாவரும் பெரும்பாலும் கடவுள் நம்பிக்கையும், பற்றுமுடையவரே எனினும் இத்துறையில் ஏதோ தம்மறிவுக் கெட்டியவாறு சிலபோது இறைவனை வணங்குவர். ஏதோ அறங்களுஞ் செய்வர். ஆனால் கடவுளையடைதற்கான கலைகளிலும், முயற்சிகளிலும் ஈடுபடார். செந்நெறி பற்றி ஒழுகார். கண்டதைச் செய்து, கொண்டதை உண்டு, மாண்டு போகின்றனர். மீண்டும் பிறந்திறந் துழல்கின்றனர்.

"ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாந டஞ்செய் வரதர்பொற் றாள்தொழ"

என்ற பாட்டில், சேக்கிழார், "உடம்பெடுத்ததன் பயன் – அஃதாவது **மாந்தனாய்ப் பிறந்ததன் பயன் சிவன் கழல் சேர்தலே"** என்கின்றார். திருவள்ளுவர் பெருமானும்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார்"

என்று **மாந்தர் சிவன் சேவடி சேர்தற்குப் பிறவி பெற்றார்** என்ற கருத்தை வெளியிட்டார். ஆத்திகச் சமயச் சான்றோர்கள் அனைவருக்கும் இக்கருத்து உடன்பாடே. அவற்றிற்கு ஏராளமான மேற்கோள்களுண்டு. அவற்றைக் காட்டல் வேண்டாம் விரிவஞ்சி. அஃதிருக்கட்டும்.

கடவுளையடைய வேண்டுமென்ற குறிக்கோளிருந்தால் மட்டும் போதுமா? பொருள் திரட்ட வேண்டுமென்ற பேரார்வம் இருந்தாற் போதுமா? முயன்றாற்றானே – முயற்சியின் அளவுக்குத் தானே பயன்கள் விளையும்? ஆதலால் குறிக்கோளையடைய இடையறா முயற்சி வேண்டும். அதற்காக எவற்றிலும் பற்றில்லாது – எத்தகைய தன்னல இழப்பினையும் மகிழ்வோடு ஏற்க வேண்டும். துன்பங்களையும் பொருட்படுத்தாது, உயிரே போயினுங் குறிக்கோளில் உறுதியாய் நிற்றல் வேண்டும்.

உலகப் பொருளில் பெருங் குறிக்கோளுடையவர்கள் அதனையடைய உடல், பொருள், ஆவி அனைத்தையுந் துறக்க முற்படுவது யாவரும் அறிவர். நெப்போலியன் மாமன்னனாம் முயற்சியால், உயிர் துறக்கவில்லையா ? நாட்டுப்பற்று மிக்கவர்கள் அதற்காக உயிர் துறக்க வில்லையா ? அதுபோலவே, இறைவனை அடையும் குறிக்கோளுடையவர்களும் அவனுக்காக உடல், பொருள், உயிர்களைத் துறக்க முற்படுவர்.

இங்கே, நம் நாவரசர் சிவபிரானையடையுங் குறிக்கோளையடையத் தானே, சமணர்களோடு கூடாது நால்வகைக் கொடுமைகட்கும் உட்பட்டார் ? அடிகள் சிவபெருமானிடம் அன்பைத் துறக்க விரும்பினால் இக்கொடுமைகட்கு ஆளாயிரார். நீற்றறை முதலிய கொடுமைகளால் தம்முயிர் போவதைப்பற்றி அவர்க்குச் சிறிதுங் கவலையில்லை. அவன்பாலுள்ள பத்திமைக்காக எவ்வகை இடர்களையும் மகிழ்வுடன் ஏற்றார். இத்தகையார்க்குத்தானே இறைவன் அருள்புரிவான் ! குறிக்கோளுக்கேற்றவாறு நம்பிரான் சரியை, கிரியை, யோக, ஞான வழிகளில் ஊன்றி நின்றார். எப்போதும் 'சிவாய நம' என்றவன்றனை ஓதிக்கொண்டும் உணர்ந்து கொண்டு மிருந்தார். கொடுமைகட்குட்பட்டிருக்கும் போதும் திருநாமத்தையே ஓதிக்கொண்டு தானே இருந்தார் ?

**சிவபெருமான் திருவருளைப் பெறுதற்கு அவனையடைய வேண்டுமென்ற குறிக்கோளும் அதற்குரிய நெறியாகிய திருவைந்தெழுத்தோதலும், திருநீறணிதலும் இன்றியமையாதனவாம்.** அது சிவநெறியின் கொள்கை. ஒரு சமய நெறியில் நிற்பார் அதன் கோட்பாட்டினை அடைதற்கான வழிமுறைகளிலும் அன்புடன் உறுதியாய் நின்று கடைப்பிடித்தல் வேண்டும். சமய நெறிகட்கு மட்டுமல்ல, அரசியல், படையியல், பல்வகைக் கலையியல், இவை யாவற்றிற்கும் இவ்விதி பொருந்தும். விதிமுறைகளைக் கடைபிடிக்காத ஒருவரை எவரும் ஏற்கார், எந் நிலையமும் ஏற்கா.

இவ்வெல்லாம் நாம் உணர்ந்துய்தல் வேண்டும். அதற்கு நம் குருமார்கள் காட்டிய வழியில் நிற்றல் வேண்டும். இப்பாட்டுள் நம்பிரான் சிவபிரானை நோக்கி "பெருமானே ! என் வாழ்வின் குறிக்கோள் உன் கழலே நினைதலாம் (அடைதலாம்). அங்ஙனம் நின்னையடைதற்கான நெறிமுறைப்படி உன்திருநாமத்தை (திருவைந்தெழுத்து) ஓதினேன். என் வாய் நிறைய 'சிவாய நம' என்று சொல்லித் திருநீறணிந்தேன். ஆகவே 'நீ எனக்குச் சிவகதி தரல் வேண்டும்' என்கின்றார்.

இப்பாட்டிலுள்ள நயங்களில் ஒரு சிலவற்றைப் பார்ப்போம். வேலை செய்தால் கூலி கொடுத்தே தீரவேண்டும். உலகை ஒரு குடைக்கீழ் ஆளுங்கொடுங்கோலனாயினும் எளிய ஊழியனுக்குக் கூலி தர மறுக்க முடியாதல்லவா ? வேலை செய்தவன் கூலி கேட்கும் உரிமையுடையவன். கூலியை அஞ்சாது கேட்பான். தலைவன் தான் விரும்பினாலும் விரும்பாவிடினும் ஊழியனுக்குரியதைக் கொடுத்தே ஆகவேண்டும். இவ்வுண்மையை உட்கொண்டே அப்பரடிகள்,

"திருவாய் பொலியச் சிவாய நம என்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீ"

என்று பெருமானிடம் அஞ்சாது உரிமை கேட்பார் போல நயம்படக் கேட்டார். பெருமான் 'திருவாய் பொலிய' தன் வாயைத் 'திருவாய்' என்றும் 'பொலிய' (அழகினால் விளங்க) என்றும் தற்புகழ்ச்சிபடக் கூறினார் என்று கருதல் தவறாகும்.

சிவபெருமான் திருநாமத்தை ஓதிய சிறப்புப் பற்றி அவற்றை அங்ஙனங் கூறி மகிழ்ந்தார் என்று கருதலே உண்மைப் பொருளும் நயமுமாகும். உண்மை உடையார் தாம் உறுதியாகப் பேசும் ஆற்றல் பெறுவர். அதுபோல, திருநாமம் ஓதல், திருநீறணிதல் முதலியவற்றைத் தாம் உண்மைப் பேரன்போடு கடைப்பிடித்தொழுகிய ஆற்றலினாற்றான், "நீ சிவகதி தருவாய்" என்று ஆணையிடுவது போல நயம்படக் கேட்டார். ஆனால், உண்மையில் ''தருவாய்'' என்றது தரவேண்டும் என்று வேண்டலே – இறைஞ்சலேயாகும்.

"உன் கழலே நினையுங் கருத்துடையேன்" என்றதில், நம்மடிகட்கு வேறொரு பற்றுமில்லை என்பது விளங்குமாறு அமைந்துள்ள "கழலே நினையும்" என்பதிலுள்ள "ஏ" என்ற தேற்றேகாரம் வலியுறுத்தி நிற்றல் காண்க. இதனை அவர்தம்,

"கருவுற்ற நாள்முத லாகவுன் பாதமே காண்பதற்கு
உருகிற்றெ னுள்ளமும் நானுங் கிடந்தலந் தெய்த்தொழிந்தேன்
திருவொற்றியூரா திருவால வாயா திருவாரூரா
ஒருபற்றி லாமையுங் கண்டிரங் காய்கச்சி ஏகம்பனே"

கருவுற்ற நாள் முதலாக – நான் அறிவு பெற்ற நாளிலிருந்து இப்பாட்டும் உறுதிப்படுத்துமே!

## பெருமான் கேட்ட பெருவரம்

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற் கங்கை செஞ்சடைமேல்வைத்த தீவண்ணனே"

என்பதாம். அடிகள், நால்வகைக் கொடுமைகளினின்றும், ஏதொரு கைம்மாறுங் கருதாது அண்மையில் தம்மைக் காத்தருளிய சிவபெருமானின் பேரருளை எண்ணி எண்ணி உருகுகின்றார்.

பலகாலம் சமண சமயத்திலிருந்து தன்னைப் பழித்த எனக்கா வயிற்றுவலியையும் போக்கி, இப்பெரு வாழ்வையளிப்பது ? இத்தகைய பேரருளாளனுக்கு அடியேன் யாது கைம்மாறு செய்ய

வல்லேன் ? இத்தகையவனை யான் ஒருபோதும் மறவாது அவனிடம் அன்பு செய்தல் வேண்டும். இப்பிறவியில் மறவேன். ஆனால், மறுபிறவியில் மனிதனாகப் பிறந்தால் மறவாது அன்பு செய்தலுங்கூடும். ஆனால், மறுபிறவி மானுடர் ஒழிந்த ஏனைப் பிறவிகளில் ஒன்றாகி விட்டால் அவனை அன்போடு நினைக்க இடமிராதே! என்று அஞ்சுகின்றார். அப்பிறவிகளில் மிக மிகத் தாழ்ந்த – எளிய உயிராகப் பிறப்பினும் (அஃதாவது புழுவாய்) எனக்குக் கவலையில்லை. அப்புழுப் பிறப்பிலும் திருப்பாதிரிப் புலியூரா! புண்ணியனே! செழுநீர்ப் புனல் கங்கை செஞ்சடை மேல் வைத்த தீவண்ணனே! "உன்னடி என் மனத்தே வழுவாதிருக்க வரந் தரவேண்டும்" என்று வரம் வேண்டுகின்றார். அவனை மறவாதிருக்க வேண்டுமென்ற நாயனாரின் இப்பெருங்கவலை,

> "துறக்கப் படாத வுடலைத் துறந்துவெந் தூதுவரோ
> டிறப்ப னிறந்ததா லிருவிசும் பேறுவ னேறிவந்து
> பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
> மறப்பன்கொ லோவென்றென் னுள்ளங் கிடந்து மறுகிடுமே"

என்ற பாட்டானும் அறியக் கிடக்கின்றது.

இவ்வரம் வேண்டிய அடிகள், அவன் அதனைத் தருவான் என்ற தம் உறுதியான நம்பிக்கையை,

> "..................... இவ் வையகத்தே
> தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்
> ............................ தீவண்ணனே"

என்ற தொடராற் குறித்தார். நம்பிக்கையுடையார்தான் இறைவனிடம் வேண்டல் வேண்டும் என்ற குறிப்பு இதிலடங்கியிருத்தலை அறிந்து பின்பற்றுவோமாக.

இப்பாட்டில், சிவபெருமான் அருளைக் கூட அடிகள் கேட்கவில்லை. அவனை மறவாதிருக்கும் வரத்தை மட்டுமே கேட்கின்றார். மெய்யடிகளார் இறைவனிடம் மெய்யன்பு செய்தல் ஒன்றைத் தவிர, அஃதாவது அவனை மறவாதிருத்தலைத் தவிர வேறொன்றையும் வேண்டார். இதிலிருந்து உலகவர், மறக்க வேண்டிய உலகியற் பொருட்களை மறக்க வேண்டுமென்பதும், இறைவன் சேவடிகளையே மறவாதிருத்தல் வேண்டுமென்பதும் அறிந்து கொள்ளல் வேண்டும்.

உலகர், இறைவனை மறவாதிருத்தற்கே ஆன்றோர்கள் திருக்கோயிலை எடுப்பித்தும், திருவுருவங்களை அமைத்தும், பெருவிழாக்களை ஏற்படுத்தியும், திருநீறு, திருவைந்தெழுத்து முதலியவற்றைத் தெரிவித்தும், வழிபாடுகளை உண்டுபண்ணியும், சாத்திர, தோத்திரங்களை வகுத்தும், திருத்தொண்டுகள் செய்துகாட்டியும், நல்வழிகளை நாட்டினார். இறுதியில் வந்த வடலூர் வள்ளலாரும் மறவாமையாம் பெரியதொரு கருத்தை "உனை மறவாதிருக்க வேண்டும்" என்று வற்புறுத்தியருளினார்.

**பாதுகாப்பிடம்**

இனி ஒன்பதாம் பாட்டாவது,

> "மண்பாத லம்புக்கு மால்கடன் மூடிமற் றேழுலகும்
> விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல்நெஞ்சே!
> திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பா திரிப்புலியூர்க்
> கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே"

என்பதாம். இருசுடர் – ஞாயிறு, திங்கள். இப்பாட்டுள், அப்பர் பிரான் தன் நெஞ்சிற்குத் தேற்றங் கூறுகின்றார். எப்போதோ பேரூழிக் காலத்தே நிகழும் உலக அழிவுகளை எடுத்துக் கூறி அப்படி அவை எல்லாம் அழிந்தொழியினும், "ஏ மனமே, நீ உன்னுயிர்க்கு அழிவு வருமோ என்றஞ்சல் வேண்டாம், இவ்வுலகமெல்லாம் அழிந்தாலும் நீ அழியாமல் பாதுகாப்பாக இருத்தற்கு, சிவபிரான் திருவடியாம் பாதுகாப்பிடம் ஒன்றுண்டு காண்" என்கின்றார். ஆம், தம்மைச் சமணர் அழிக்க முற்பட்டபோது, அவன் சேவடி அஃதாவது அவனருளல்லவோ தம்மைக் காத்தது என்ற உண்மையை நடைமுறையிற் கண்டாராதலின், என்க, தமக்கு மட்டுமல்ல, நம்மனோர்க்கும் அவன் புகலிடந் தருவான் என்பதை எடுத்துக்காட்டுகின்றார். தன் நெஞ்சிற்குக் கூறுங் குறிப்பினால். அழிவின் அச்சந்தரும் திறங்களை மிக மிக அழகாகக் கேட்போர் கலக்கமடையும் வகையில்,

> "மண்பாத லம்புக்கு மால்கடல் மூடிமற்று ஏழுலகும்
> விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும்"

என்கின்றார். இப்பாடல்கள் தெய்வத் திருமுறைகளாயினும் கற்பனை வளங்களிலும் விஞ்சி நிற்கின்றமை மகிழ்ச்சியளிப்பதாகும். அப்பர் பெருமான் உள்ளிட்ட நம் சமயத் தலைவர்கள் பத்திமையிலும், இறைவன் அருளை பெற்றதிலும் இணையற்றவர்கள். அதேபோல், புலமையிலும், கற்பனையிலும், முத்தமிழிலும், இணையில்லாப் பாக்களை அருளியுள்ள திறம் பெருவியப்பிற்கும், களிப்பிற்கும் உரித்தாகும்.

**மற்றுமோர் வரம் வேண்டல்**

> "திருந்தா வமணர் தந் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
> தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன் வரையெடுத்த
> பொருந்தா வரக்க னுடனெரித் தாய்பா திரிப்புலியூர்
> இருந்தா யடியே னினிப்பிற வாமல்வந் தேன்றுகொள்ளே"

என்பது பத்தாம் பாட்டு.

இப்பாட்டில், அடிகள் தாம், சமணர் தம் தீய சமயத்தில் அகப்பட்டுக் கொண்டமையும், பின் அச்சமய நெறிகளின் கருத்துக்களின் பொருந்தாமை கண்டு திகைத்தமையும், பிறகு பேரின்ப

நிலை தந்து அருளும் சிவபிரான் திருவடிக்கே அடைக்கலமாக அடைந்தமையும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளமை, அவர் தம் வரலாற்று அகச்சான்றாக விளங்குதல் காணலாம்.

சமண சமயத்தில் "தயாமூல தர்மம்", 'அகிம்சை' என்னும் இரக்கமே அடிப்படை அறம். கொல்லாமை ஆகிய நல்லறங்கள் குறிக்கோளாக இருக்க – அங்ஙனமாய சமயத்தை, ஒருபோது அதில் திளைத்திருந்த அடிகள் அதனைத் 'தீ நெறி' (தீமை தரும் சமயம்) என்று குறை கூறியது ஏற்புடைத்தா ? என்ற கேள்வி இங்கெழுதலியல்பே. எவ்வளவு நல்லொழுக்கமுடைய சமயமாயினும் கடவுளிருப்பை ஏற்காத – ஏற்று அன்பு செய்யாத சமயம் தீமையே தரும். சமண சமயம் இவ்விரண்டையும் ஏற்கவில்லை. ஒழுக்கங்களை மேற்கொண்டு ஒழுகுவார்க்கு இன்பமும், தீமை செய்வார்க்குத் துன்பமும் தரும். ஒரு முதல்வன் (கடவுள்) இல்லையெனின் மக்கள் எத்தகைய பழி பாவங்களைச் செய்யவும் அஞ்சாரன்றோ ? மேலும், நற்செயல்கட்குப் பரிசாம் பேரின்பந் தரும் இறைவன் இல்லை எனின், நல்லவற்றைச் செய்யத் தூண்டுகோல் எது ? அது போலவே, தீமை செய்தால் தண்டிப்பான் இல்லையெனில், கொடுமைகள் செய்ய அஞ்சுவார் யார் ? ஆதலாற்றான், சமணத்தை அடிகள் 'தீ நெறி' என்றார். மற்றும் பல காரணங்களுண்டு. விரிவஞ்சி அவற்றை விடுத்தோம். சமணர் கடவுளில்லை என்ற கருத்து உடையவர்கள். ஆதலினாலன்றோ தம்மைக் கொடுமைகட்கு உட்படுத்தினார் என்றடிகள் தம் வாழ்க்கை வழியாகவும் நன்கறிந்து கொண்டுதான் அதனை, 'தீநெறி' என்று குறித்தார் என்று கொள்வோமாக ! மேலும், தாம் இவ்வளவு கொடுமைகளிலிருந்தும் தப்பியதற்குக் கடவுளருளே காரணம் என்றுணர்த்தியதும், தம் தவறுகளிலிருந்து திருந்தாத அவர்களை அடிகள், "திருந்தா அமணர்" என்று குறித்ததும் பொருத்தந் தானே ! இனிப் பெருமான் வேண்டிய மற்றோர் வரம் யாதெனப் பார்ப்போம்.

### பிறவாமை வேண்டல்

பிறவி எடுத்தலே எல்லாத் துன்பங்கட்கும் காரணம் என்பது நம் இந்து சமயத்துப் பிரிவுகள் அனைவற்றின் கருத்துமாகும். சமண, புத்த மதங்களும் இக்கருத்தை வலியுறுத்துவனவே. ஆகவே, பாரத நாட்டு சமயங்களின் சான்றோர்கள் அனைவரும் பிறவி வேண்டாம் என்று வேண்டியவர்களே என்பதற்குப் பின்வரும் அவர் தம் அருளுரைகள் சான்றாகும்.

> "வேண்டேன் பிறப்பு" என்பது திருவாசகம்
>
> "கேட்டேன் கேட்பதெல்லாம் பிறவாமை கேட்டெழுந்தேன்"
>
> – சுந்தரர் தேவாரம்
>
> "பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே" – ஆழ்வார்
>
> "பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்" – மணிமேகலை – புத்த மதம்

திருவள்ளுவர் பெருமானும்,

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை"

காரைக்காலம்மையாரை இறைவன், "அம்மே, என்னிடம் நீ வேண்டுவது யாது? என்று கேட்க அம்மையார், "இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்றார் பிறவாமை வேண்டும்" என்கின்றார்.

ஆகவே, நம் அப்பர் பெருமானும் இப்பாட்டில், "திருப்பாதிரிப்புலியூரில் வீற்றிருந்தருளும் சிவபிரானே! அடியேனை இனிப் பிறவாமல் காப்பாய்" என்று வேண்டிக் கொள்கின்றார். இவ் வேண்டுகோள் நமக்கும் பொருந்துவதுதான். மாணவர்கள் பள்ளிக்குச் செல்வது, பள்ளியிலேயே இருப்பதற்கல்ல. பயிற்சியை முடித்துப் பள்ளியினின்றும் வெளியேறுவதற்கே, அதுவரை அஃதோர் கொடுஞ்சிறையே.

அதுபோல் இப்பிறப்பும் மெய்யுணர்வு பெறும் வரையில் தேவைதான். அம் மெய்யுணர்வைப் பெறுவதற்குள் எவ்வளவு துன்பங்கள்! ஒரு பிறவியிலேயே மெய்யுணர்வும், வீடு பேற்றிற்குரிய தகுதியும் மாந்தர்க்கு அமைவதில்லையே! மாணவர் ஒரு வகுப்புத் தேர்வில் தோல்வியுற்றால் மீண்டும் அதே வகுப்பில் படித்தல் வேண்டும். அதுபோல், ஒரு பிறப்பில் வீடுபேறாம் தேர்வில் தேர்ச்சி பெறாவிடின் மீண்டும், மீண்டும் பிறவிதான். அலைமேல் அலை தொடர்வது போல், மாந்தர் தாம் செய்யும் நல்வினை, தீவினைகளால் அவற்றிற்குரிய இன்ப துன்பங்களை நுகரப் பிறவி எடுத்தே யாக வேண்டும்.

"வினைப்பிறவி என்கின்ற வேதனையில் அகப்பட்டுத்
தனைச்சிறிதும் நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை
எனைப்பெரிதும் ஆட்கொண்டென் பிறப்பறுத்த இணையிலியை
அனைத்துலகுந் தொழுந்தில்லை அம்பலத்தே கண்டேனே"

என்று, மணிவாசகர் பிறவியின் காரணத்தையும், அதனால் வரும் பெருந்துன்பத்தையும், அதனைச் சிறிதும் உணராது தாம் படும்பாட்டையும், தளர்ந்து வீழ்ந்து கிடந்ததனையும் எடுத்துக் கூறிப்பின், அம்பலவர் போந்து தம்மையாட்கொண்டு, துன்பத்திற்குக் காரணமான தம் பிறப்பை அறுத்துவிட்ட அருளையும் இப்பாட்டில் எடுத்தோதியுள்ளார்.

பிறவித் துன்பத்திற் கஞ்சிப் பட்டினத்தாரும் சிவபிரானை,

"மாதா உடல் சலித்தாள் வல்வினையேன் கால் சலித்தேன்,
வேதாவுங் கைசலித்து விட்டானே – நாதா!
இருப்பையூர் வாழ்சிவனே இன்னுமோர் அன்னை
கருப்பையூர் வாராமற் கா"

என்று வேண்டியுள்ளார். கருப்பை ஊர் – கருப்பையாம் ஊர் (அஃதாவது பிறப்பு) கா. காப்பாற்று.

ஆகவே தான், நம் பெருமானும் திருப்பாதிரிப்புலியூர்ச் சிவபிரானிடம் பிறவா வரம் வேண்டினார் என்றறிவோமாக. ஆம்! வள்ளுவர் கூறுமாறு.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு"

பேதைமை – அறியாமை "பிறவி நன்றெனக் கருதல் அறியாமையாகும்" என்றாங்கு நம்மடிகள், பிறப்பென்னும் பேதைமை கடந்தவர் சிறப்பென்னும் செம்பொருளாம் சிவத்தைக் கண்டவர். அவனருளைப் பெற்றவர் ஆதலால், பெருமான் இவ்வாறு வேண்டல் மிகைதான். எனினும் நாம் உய்யத் தாம் வேண்டுகின்றார் போலும்!

நம்மடிகளின் வாழ்க்கை வரலாற்றிற் காணப்படும் செய்திகளிலும் மிக மிக உயர்ந்தவை அவர் தம் பாடல்களாம். அவை பெருமானின் திருவுள்ளத்தின் தனிப்பெருஞ் சிறப்புகளை எல்லாம் படம்பிடித்துக் காட்டுவனவாம். ஏனைய சமயங்களின் தலைவர்கள் கூறியன யாவும் அவர்கள் அருளியவை என்று அவர்தம் அடியார்கள் கூறியவையே யாம். அவையெல்லாம் புறச் சான்றுகளே. ஆனால், நம் சிவ நெறியின் தலைவர்கள் அருளிய பாடல்கள் அகச் சான்றாகக் கிடைத்துள்ளமை உலகின் பேறேயாகும்.

அப்பர் பெருமான் நாம் மேற் சொல்லியபடி, கல் மிதவையினின்றும் இழிந்து மெய்யடியார்களுடன் திருப்பாதிரிப் புலியூர்ச்சிவபிரான் கோயிலையடைகின்றார். அவன் திருமுன்பு நின்று இத்திருப்பதிகத்தைப் பாடுகின்றார். நாம் இவற்றை எல்லாம் அகக் கண்களாற் காண்கிறோம். பெருமான் பாடல்களை இன்றும் நாம் காதால் கேட்கின்றோம். கருத்தாலறிகின்றோம். உணர்ச்சிப் பெருக்கால் கண்ணீர் பொழிகின்றோம். சிவன் சேவடியில் நம்முள்ளம் அன்பினால் ஒன்றுபடுகின்றது. அல்லது அப்பர் தேவாரப் பாடல்களை இசையுடன் ஓதுவார்கள் பாடக் கேட்கும்போதும் இக்காட்சிகள் நம்மை இன்புறுத்தி நம் உயிரைத் தூய்மையாக்குகின்றன. அஞ்சாமை, உறுதிப்பாடு, குலையா நம்பிக்கை, பேரன்பு, உருக்கம், நன்றியுணர்வு, மெய்யுணர்வு வேண்டல், பணிவு, பண்பாடு, உள்ளத்துள்ளதை உள்ளவாறே உரைக்கும் சொற்றிறம், சொன்முறை, சொல்லழகு, வரலாற்றுண்மைகள், இறைவன் பேரருள், ஆட்கொள்ளுந் திறம், தமிழினினிமை இவையெல்லாம் அமைந்து, கலையுலகின் தலைப்பாக்களாக விளங்கும் இத் திருப்பாதிரிப் புலியூர்ப் பதிகத்திலமைந்த இவ்வாறு பாடல்களையாவது அன்பர்கள் நாடோறும் சிவபூசையில், உணர்வொன்ற – பொருளுணர்ந்து ஓதி உய்வாராக.

## 1. கோயில்

## மாகேசுவரப் பூசைப் பாடல்

ப.தொ.எண் : 114 (நாவரசர் தேவாரம்) பதிக எண் : 1

1071. அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே. 1

பேரின்பவீடு நல்கும் தில்லைத் திருச்சிற்றம்பலம் பொன்னுலக வாழ்வையும் தரும். இத்தகைய திருச்சிற்றம்பலத்தை, மேலும் இந்நிலவுலகில் என் அன்பு பெருகும் வகையில் கண்டு, பரமுத்திப் பேரின்ப நிலையை எளிதின் எய்துதற்கு இந்த நல்ல மனிதப் பிறவியை இன்னும் கொடுக்குமோ முதல்வன் ?

உடலுக்கு அன்னம் உணவு
உயிருக்கு அன்னம் வீடுபேறு

அடியார்களோடு அமுது செய்யும்போது, அடியார் திருக்கூட்டத்தினர் அமர்ந்தவுடன் இப்பாடலைக் குழுவினராகப் பாடி மகிழ்ந்து – அமுதிட்டவர் குடும்பத்தை வாழ்த்திப் பின் அமுதுண்ணும் வழக்கத்தைக் கொண்டுள்ளனர். சிவபூசையில் இறைவனுக்கு அமுது படைக்கும் போதும் இதே பாடலைப் பாடி அமுது படைக்கிறார்கள். உடலின் செயல்பாட்டிற்குத் தேவையான சக்தி அன்னத்தின் மூலம் கிடைக்கிறது. ஆனால் அன்னம் என்பது உணவை மட்டும் குறிக்காமல் வீட்டின்பத்தையும் குறிக்கும். உயிர்பெற வேண்டிய வீட்டு இன்பத்தையும் அதே சொல்லால் குறிக்கிறார்கள். "அன்னம்" – பலபொருள் ஒரு சொல்லாகிறது. கடவுளை அன்னம் (அமுதம்) என்னும் சொல்லால் குறித்தலுமுண்டு. தான் இறவாது நின்று பிறர் இறப்பை நீக்குதலால் "பிழைத்த தன் தாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக் குழைத்ததோர் அமுதம் ஈந்தார்" என்னும் திருப்பாடலில் அமுதம் என்ற சொல் வீடுபேற்றைக் குறிப்பதை நாம் அறிவோம். "பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்" என்னும் திருவாசகத்தில் "சோறு" என்பது பேரின்பத்தைக் குறிக்கும். "தம்மையே புகழ்ந்து இச்சை" என்று தொடங்கும் திருப்புகலூர்ப் பதிகத்தில் சுந்தரர், "இம்மையே தரும் சோறும் கூறையும்" என்று பாடுகிறார். இங்கு "சோறு" என்பது நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, 84 லட்சம் பிறப்பு வேறுபாடு (யோனிபேதம்)களைக் கொண்ட உயிரின் உடற்சத்திக்கான உணவாகிறது. அன்னத்தின் பெருமையை என்னவென்று இயம்புவது ? ஐந்தாவது திருமுறையின் முதல் பதிகத்தில் முதல்பாட்டில், முதல் அடியில், முதல் சொல்லாக இடம் பெற்றிருக்கிறது.

பாலிக்கும் – கொடுக்கும்

சிற்றம்பலம் – சிறுமை + அம்பலம் (நுண்மை + அம்பலம்)

### மானுடப்பிறவி எப்போது வேண்டும் ?

மானுடப்பிறவி எடுத்த நாமெல்லோரும் விரும்புவது இன்பமே. இம்மை இன்பங்களைப் பல பிறவிகளில் அனுபவித்தாலும் நிறைவாக விரும்புவது வீடுபேற்றையே. அப்படிப்பட்ட வீடுபேற்றிற்காக எல்லோரும் பிறவாமையை வேண்டுதலாயிருக்க நாவுக்கரசர் மட்டும் திருக்கூத்தைக் காணும் பிறவியையே வேண்டினார். அக்காட்சியைக் காணும் வாய்ப்பைத் திருவருள் நல்கினால் அப்போதே முத்தி கிடைக்கும் என்பதினால் அதை வேண்டினார். எனவே திருவடிக்காட்சி காணமட்டும் பிறப்பு வேண்டும். இல்லையெனில் பிறவி வேண்டாமென்ற கொள்கையே உகந்தது. காட்சி கிடைத்தால் வீடுபேறு நிச்சயம். ஆனால் வீடுபேறு அடைந்தவர்க்கெல்லாம் காட்சி கிடைத்திருக்கும் என்று சொல்ல முடியாது.

1072. அரும்பற் றப்பட ஆய்மலர் கொண்டுநீர்
சுரும்பற் றப்படத் தூவித் தொழுமினோ
கரும்பற் றச்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பெரும்பற் றப்புலி யூரெம் பிரானையே. 2

அரும்புகள் நீக்கமுற ஆராய்ந்த போதுகளைக் கொண்டு வண்டுகள் நீக்கமுறத்தூவி, கரும்பாகிய வில்லை ஏந்திய கருவேளை எரித்தவனாகிய பெரும்பற்றப்புலியூர் எம்பிரானை நீர் தொழுமின்.

பூவினங்களுள் எல்லாவற்றின் அரும்புகளும் வழிபாட்டிற்காக என்பதில்லை. தாமரை முதலிய சிலவற்றின் அரும்பு ஆகும். போது – அரும்பு, சுரும்பு – வண்டினங்களில் ஒன்று, சிலை – வில், அன்பினால் தூவ வேண்டும்.

## புலிக்கால் முனிவர்

புலியூர் – புலிக்கால் முனிவர் பெயரால் உண்டான ஊர்.

அரும்பு, மலர் என்று பாடிய பாட்டில் நாமெல்லாம் பூசையின் முக்கியத்துவத்தை உணர வேண்டுமென்பதற்காக புலியூரை இணைக்கிறார். வியாக்கிரபாதர் சிறந்த சிவபூசகர். நமக்கெல்லாம் வழிகாட்டி. அதிகாலையில் சூரிய உதயத்துக்கு வெகு முன்னரே காலைக்கடன்களை முடித்துத் தாமே பூக்களைப் பறித்துப் பூசை செய்த பேரான்மா. அந்தக் காலை இருளில் மரங்களில் ஏறி மலர்ப்பறிப்பதற்காக புலியைப் போன்ற கால், கை, கண், விரல்களையும், நகங்களையும் வேண்டிப் பெற்றவர். பலகாலம் பூசை செய்து தில்லையில் திருக்கூத்துத் தரிசனத்தைப் பதஞ்சலி முனிவருடன் தைமாதம் வியாழக்கிழமை பூசநட்சத்திரத்தன்று காணப்பெற்ற பெரிய புண்ணியவான் புலிக்கால் முனிவராவார். இப்படி குறிப்பிட்ட நேரத்தில் ஆடலுடன் கூடிய நேர்காணல் (அப்பாயிண்ட்மெண்ட்) கிடைக்க எப்படிப்பட்ட தவம் வேண்டுமென சற்றே நினைத்துப் பார்ப்போமாக. ஆழமாக நினைத்தால் ஆனந்தக் கண்ணீர் வரும். இவருடைய மகன் உபமன்யு முனிவர் பாலகனாக இருந்த போது, பால் வேண்டி அழ, சுவாமி பாற்கடலையே கொடுத்தார் என்று அரிய செய்தியைச் சேந்தனார்,

"பாலுக்குப்பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்" என்று திருப்பல்லாண்டில் பாடுகிறார்.

திருஞானசம்பந்தருக்கு அம்மையைக் கொடுக்கச் சொன்னார். உபமன்யுவுக்கு சுவாமியே கொடுத்தார். கிருஷ்ணனுக்கு தீக்கை கொடுத்தவர் இவரே. ஆரூரர் வெள்ளை யானையில் அமர்ந்து மாலோடயனும்,தேவர்களும் சூழத் திருக்கயிலை மலைக்கு வருங்கால் பேரொளியாகக் கண்டு தரிசித்து, "நம்தமர் ஊரன் என்றான் நொடித்தான் மலை உத்தமனே" என்ற பாட்டில் இடம் பெற்றவர்.

பெரும்பற்றப்புலியூர் – புலிக்கால் முனிவர்க்குப் பேரின்பத்தில் பெரும்பற்றை விளைத்ததாலும் அவர் வீடுபேற்றிற் பெரும் பற்றுடையவராயிருந்ததாலும், வணங்கும் எல்லா உயிர்க்கும் சிவனடி நிழலில் பெரும் பற்று விளைத்தலாலும் அப்பெயர் பெற்றது.

| | |
|---|---|
| பெரும்பற்றப்புலியூரில் புலிக்கால் முனிவர் செய்த | பூசை |
| கம்பையாற்றங்கரையில் உமை செய்த | பூசை |
| மண்ணியாற்றங்கரையில் சண்டேசுவரர் செய்த | பூசை |
| திருவஞ்சைக்களத்தில் சேரமான் பெருமாள் செய்த | பூசை |
| திருக்காளத்தியில் கண்ணப்பன் செய்த | பூசை |

இவையெல்லாம் நமது சைவநூல்கள் வியந்து போற்றும், தம்மை மறந்து, தம் நாமம் கெட்டு, உச்சகட்டமாகச் செய்யப்பட்ட உயர்ந்த பூசைகள். இப்பூசைகளின் நுட்பங்களை எழுதிக்காட்ட முடியாது. சொல்லித் தெரிவிக்க முடியாது. அவரவராகவே செய்து அனுபவித்து உணரவேண்டும். உணர்ந்து அனுபவிக்க வேண்டும். இவற்றில் ஒன்றைப் பின்பற்றினாலும் முத்தி நிச்சயம்.

**1073.** அரிச்சுற் றவினை யாலடர்ப் புண்டுநீர்
எரிச்சுற் றக்கிடந் தாரென் றயலவர்
சிரிச்சுற் றுப்பல பேசப்ப டாமுனம்
திருச்சிற் றம்பலஞ் சென்றடைந் துய்ம்மினே. 3

அரித்தல் மிக்க இருவினையால் தாக்குண்டு எரிசூழ (இடுகாட்டில்) கிடந்தார் என்று அயலோர் சிரிப்புற்றுப் பலபல பேசுதலை அடையுமுன்னரே நீவிர்போய்த் திருச்சிற்றம்பலத்தை அடைந்து உய்ம்மின்.

**1074.** அல்ல லென்செயும் அருவினை யென்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தா னென்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே. 4

5–1–4 துவந்துவம் – இரட்டை. நல்வினை, தீவினை.
அறம் – மறம், இன்பம் – துன்பம் என்பன போன்ற இரட்டைகள்
துவந்துவம் – வடமொழி; தமிழில் – தொந்தம்
எல்லையில்லதோர் அடிமை – பரமுத்தியிலும் ஆன்மா முதல்வனுக்கு அடிமை, மீளா அடிமை.

எதிர்வினையும் தீர்தற்கரிய நுகர்வினையும் மேலைவல்வினையாகிய துவந்துவங்களும் எனக்கு என்ன துன்பம் செய்யவல்லன? தில்லைமாநகரிலே திருக்கூத்தாடியருளும் திருச்சிற்றம்பலவனார்க்கு அளவில்லாததொர் அடிமைபூண்ட எனக்கு அவ்வினைகள் ஒரு துன்பமும் செய்யவல்லன அல்ல.

**1075.** ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெலாம்
நான்நி லாவி யிருப்பனென் னாதனைத்
தேன்நி லாவிய சிற்றம் பலவனார்
வான்நி லாவி யிருக்கவும் வைப்பரே. 5

ஊனில் ஆவி என்றும், ஊன் நிலாவி என்றும்
இரு வகையாகப் பிரித்துரைக்கலாம்.

உடம்பில் உயிர் உயிர்த்துக் கொண்டிருக்கும் காலமெல்லாம் நான் என்னை ஆளாக உடைய திருச்சிற்றம்பலவனாரை விளக்கமுறப் பெற்றிருப்பேன். இன்பத்தேன் விளங்கிய அத்திருச்சிற்றம்பலவனார் அடியேனைப் பேரின்பவீட்டில் நிலைபெற்றிருக்கவும் வைப்பர்.

**1076.** சிட்டர் வானவர் சென்று வரங்கொளும்
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலத்துறை
சிட்டன் சேவடி கைதொழச் செல்லுமச்
சிட்டர் பாலணு கான்செறு காலனே. 6

சிட்டர் 1 – அறிவர், ஞானியர்
சிட்டர் 2 – தில்லை வாழந்தணர்
சிட்டன் – தில்லைக்கூத்தன்
சிட்டர் 3 – மெய்ஞ்ஞானியர்

ஞானிகளும் தேவர்களும் போய், வேண்டும் வரங்களைப் பெற்றுக்கொள்ளும் சிறப்புடையது தில்லைச் சிற்றம்பலம். சிட்டர்களாகிய அந்தணர்கள் வாழ்வதற்கு இடமாவது அது. அத்தில்லைச் சிற்றம்பலத்தில் திருக்கூத்தாடி யருளும் ஞான மூர்த்தியின் திருவடிகளைக் கைகூப்பித் தொழப்போகும் அச்சிட்டர்களாய மெய்ஞ்ஞானியரையே, ஏனையோரைச் செறுதற்கு வல்ல காலன் அணுக மாட்டான்.

| | |
|---|---|
| 1077. ஒருத்த னார்உல கங்கட் கொருசுடர்<br>திருத்த னார்தில்லைச் சிற்றம் பலவனார்<br>விருத்த னாரிளை யார்விட முண்டவெம்<br>அருத்த னாரடி யாரை யறிவரே. 7 | தனிமுதற்பொருள் உலகங்களுக்கெல்லாம் ஒரே விளக்காய் உள்ளவர்; செம்மையார்; தில்லைச் சிற்றம்பலத்தில் திருக்கூத்தாடுபவர்; முதியார்; இளையார்; நஞ்சுண்ட எம்செல்வர்; அடியாரை அறிவார். |
| 1078. விண்நி றைந்ததோர் வெவ்வழ லின்னுரு<br>எண்நி றைந்த இருவர்க் கறிவொணாக்<br>கண்நி றைந்த கடிபொழி லம்பலத்<br>துள்நி றைந்துநின் றாடு **மொருவனே.** 8<br><br>ஒருவன் – முழு முதல்வன் என்னுங்கருத்துடையது. "ஒருவன் என்னும் ஒருவன் காண்க" திருவாசகம். ''ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ'' – திருத்தாண்டகம். | யான் என்னும் செருக்கு மிகுந்த அயனும் மாலும் காண்டற்கு அரிதாய், ஆகாயத்தை யளாவியெழுந்த சோதிப்பிழம்பு ஒப்பற்ற பெருந்தலைவனாய், தேனிறைந்த மணம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த தில்லையம்பலத்துள் திருச்சிற்றம்பல வடிவாய் நிறைந்து பஞ்சகிருத்திய நடனத்தைச் செய்யும். தொழக்கல்லாதவர்களாகிய அயன்மாலுக்கு அரிய முதல்வன் அன்பால் வழிபட்ட வியாக்கிரபாதர், பதஞ்சலியார் என்னும் முனிவர்களுக்கு வெளிப்பட்டுத் தோன்றித் தன்னியல்பை உணர்த்திப் பேரின்பம் அருளினன் என்றபடி. |
| 1079. வில்லை வட்டப் படவாங்கி யவுணர்தம்<br>வல்லைவட் டம்மதில் மூன்றுடன் மாய்த்தவன்<br>தில்லைவட் டந்திசை கைதொழு வார்வினை<br>ஒல்லைவட் டங்கடந் தோடுத லுண்மையே. 9 | மேருவாகிய வில்லை வளைத்துத் திரிபுரத்தசுரர்களுடைய மும்மதில்களை அழித்தவன் எழுந்தருளிய தில்லை நகரின் திசையை நோக்கிக் கைகூப்புவார் செய்த வினைகள் விரைந்து அவர்களை விட்டு ஓடும். இஃது உண்மை. |
| 1080. நாடி நாரணன் நான்முக னென்றிவர்<br>தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ<br>மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்<br>தாடி பாதமென் நெஞ்சு ளிருக்கவே. 10 | திருமாலும் பிரமனும் முதல்வனைக் காண்போம் எனத் தம்முள் எண்ணி முறையே நிலத்தை யகழ்ந்து தேடியும் வானிற் பறந்து திரிந்தும் காணவல்லாரல்லர்; மாடமாளிகைகள் சூழ்ந்த திருத்தில்லையில் திருவம்பலத்தில் நின்று ஆடுகின்ற பெருமானது திருவடிகள் அன்பால் நினையும் என் நெஞ்சத்து விளங்கி இருக்கும். |

1081. மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம் பலவன் **திருமலை**
அதிர ஆர்த்தெடுத் தான்முடி பத்திற
மிதிகொள் சேவடி சென்றடைந் தும்ம்மினே. 11

இனிய மொழிபேசும் பார்வதி அம்மையை இடப்பாகத்தே வைத்தவன்; இளைப்பின்றி உலகெலாம் படைத்துக் காத்து அழிக்கவல்ல சதுரப்பாடுடையவன்; திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ளவன். இப்பெருமான் எழுந்தருளியுள்ள திருமலை எனப்படும் திருக்கயிலாய மலையை அசையும்படி, செருக்கினால் ஆரவாரம் செய்து எடுத்த இராவணனுடைய பத்து முடிகளும் வருந்தும்படி மெள்ள ஊன்றும் செம்மையான திருவடியைச் சென்று கை தொழுது உய்க.

---

கோயில் என்றால் சிதம்பரம்
திருமலை என்றால் கயிலை

## உ. கோயில்



"தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ" – "இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க." "நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன்" என்பன மிக முக்கியமான அடிகளாகும். அவன் வந்து குடியேறும் கோயிலாக மனத்தை உயர்த்திக் கொள்வது என்பது முயன்றால் முடிகின்ற காரியம் தான். உயர்ந்த சிந்தனைகளுடன் மனதைத் தூய்மைப்படுத்திக் கொள்வது முதல் கடமை. எண்வகை அகத்து மலர்களால் (அன்பு, அறிவு, அருள், கொல்லாமை, பொறாமைப்படாமை, பொறியடக்கல், தவம், வாய்மை) பூசனை செய்தால் மனக்கோயிலாவது நிச்சயம். அதற்காகக் கோயிலுக்குச் செல்லாமலும் இருக்கக்கூடாது. வாயிலார், பூசலார் நாயன்மார்கள் செய்த அகவழிபாடுகளை நினைவு கூர்வோமாக. "மலர்மிசை ஏகினான்" என்ற திருக்குறள் பகுதிக்குப் பரிமேலழகர் உரைத்த விளக்கத்தையும் படித்து மகிழ்வோமாக.

**ப.தொ.எண் : 115** **பதிக எண் : 2**

1082. பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ. 1

பனைபோன்ற கையையும், மும்மதங்களையும் உடைய யானைத்தோலை உரித்துப் போர்த்தவன்; தன்னை நினைப்பவர் மனத்தைக் கோயிலாகக் கொண்டவன்; வேடம் அனைத்துமாம் அம்பலக்கூத்தன். இத்தகைய சிற்றம்பலக் கூத்தனைத் தினையளவுப் பொழுதும் மறந்து வாழ்வேனோ!

---

தினை – சிறுமைக்குக் காட்டுவதோர் அளவை

1083. தீர்த்த னைச்சிவ னைச்சிவ லோகனை
மூர்த்தி யைமுத லாய ஒருவ னைப்
பார்த்த னுக்கருள் செய்தசிற் றம்பலக்
கூத்த னைக்கொடி யேன்மறந் துய்வனோ. 2

அநாதியே பாசங்களின் நீங்கி நின்று தன்னை அடைந்தார்க்கு அவற்றை நீக்கியருளும் தூயனை, பேரின்ப வடிவினனை, சிவலோக நாயகனை, ஞான உருவினனை, உலகத் தோற்றத்தின் முன் அதற்கு மூலமாய் முன்னின்ற ஒருவனை, அருச்சுனனுக்கு வேடனாய்த் தோன்றியும், பாசுபதமீந்தும் அருள்செய்த சிற்றம்பலத்துக் கூத்தப்பிரானைக் கொடியேனாகிய யான் மறந்து வாழ்வேனோ? மறவேன்.

**1084.** கட்டும் பாம்புங் கபாலங்கை மான்மறி
இட்ட மாயிடு காட்டெரி யாடுவான்
சிட்டர் வாழ்தில்லை யம்பலக் கூத்தனை
எட்ட னைப்பொழு தும்மறந் துய்வனோ. 3

தன்னைச் சுற்றிக் கட்டிக்கொண்டிருக்கும் பாம்பையும், கையின்கண் பிரமகபாலத்தையும் மான்கன்றையும் உடையவனும், சர்வசங்கார நிலையில் விரும்பி எரிவீசி ஆடுவோனும் ஆய சிட்டர்கள் வாழும் தில்லைச் சிற்றம்பலத்துக் கூத்தனை எள்ளளவுப் பொழுதேனும் மறந்து வாழ்வேனோ?

**1085.** மாணி பால்கறந் தாட்டி வழிபட
நீணு லகெலாம் ஆளக் கொடுத்தவென்
ஆணியைச் செம்பொ னம்பலத் துள்நின்ற
தாணு வைத்தமி யேன்மறந் துய்வனோ. 4

ஆணிப்பொன் அண்ணாமலை கைதொழ என்று இதே திருமுறையில் 1118 ஆம் பாடலில் பாடுகிறார்.

ஆணி – பொன்னின் மாற்று அறிதற்கு வைத்திருக்கும் மாற்றுயர்ந்த பொன். தனக்குவமையில்லாதான் என்னும் கருத்தில் இறைவனுக்குப் பெயராயிற்று. தாணு – நிலைபெற்றவன்.

பிரமசாரியாகிய சண்டேசர் பசுக்களின் பாலைக் கறந்து அபிடேகித்து வழிபட, நீண்ட உலகம் பலவற்றையும் ஆளும் அதிகாரத்தைக் கொடுத்தவன்; பொன் உரையாணி போன்றவன்; செம்பொன்னம்பலத்துள் நின்று ஆடும் செம்பொருள். அவனைத் தனியனாய நான் மறவேன்.

**1086.** பித்த னைப்பெருங் காடரங் காவுடை
முத்த னைமுளை வெண்மதி சூடியைச்
சித்தனைச் செம்பொ னம்பலத் துள்நின்ற
அத்த னையடி யேன்மறந் துய்வனோ. 5

பித்தன் – பேரன்புடையவன். அன்பையே பித்தாகவுடையவன். "பித்தா பிறைசூடி" – சுந்தரர்

"அத்தனை அடியேன் மறந்துய்வனோ" – அப்பர்.

"நான் மறக்கினும் சொல்லு நா நமச்சிவாயவே" – சுந்தரர்

பித்தன் என்ற பெயருடையவனை, இடுகாட்டையே ஆடுமிடமாகக் கொண்ட, இயல்பாகவே பாசங்களின் நீங்கியோனை, இளம்பிறை சூடியவனை, எல்லாம் வல்லவனை, செம்பொற் சபையிலே நின்று ஆடும் தலைவனை அடியேன் மறவேன்.

**1087.** நீதி யைநிறை வைமறை நான்குடன்
ஓதி யையொரு வர்க்கும் அறிவொணாச்
சோதி யைச்சுடர்ச் செம்பொனி னம்பலத்
தாதி யையடி யேன்மறந் துய்வனோ. 6

"மாலறியா நீதியே" மாணிக்கவாசகர்

நீதியாகவும், நிறைவாகவும், மறைகள் நான்கையும் தந்து பிரமனாதியர்க்கு உபதேசித்தவனாகவும், ஒருவர்க்கும் அறிய வொண்ணாத சோதியாகவும், ஒளி வீசும் செம்பொன்னம்பலத்து ஆதியாகவும் உள்ள பெருமானை அடியேன் மறந்து உய்தலும் கூடுமோ?

| | |
|---|---|
| 1088. மைகொள் கண்டனெண் தோளன்முக் கண்ணினன்<br>பைகொள் பாம்பரை யார்த்த பரமனார்<br>செய்ய மாதுறை சிற்றம்ப லத்தெங்கள்<br>ஐய னையடி யேன்மறந் துய்வனோ. 7 | திருநீலகண்டனும், எட்டுத்தோளனும், முக்கண்ணினனும், படம் கொண்ட பாம்பை அரையிற் கட்டிய பரமனும், திருமகள் உறையும் சிற்றம்பலத்தின்கண் எங்கள் ஐயனுமாகிய பெருமானை அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ. |
| 1089. முழுதும் வானுல கத்துள தேவர்கள்<br>தொழுதும் போற்றியுந் தூயசெம் பொன்னினால்<br>எழுதி மேய்ந்தசிற் றம்பலக் கூத்தனை<br>இழுதை யேன்மறந் தெங்ஙன முய்வனோ. 8<br><br>தேவர்கள் முழுதும் எழுதி மேய்ந்த என்று கொள்ளலாம். தூய செம்பொன்னினால் சோழ வேந்தர்களுக்கு முன்பே தேவர்களால் பொன் வேயப்பட்டது. அதன் பெருமையை என்னவென்று சொல்வது.<br>பதிகமகுடம் – மறந்துய்வனோ ? | விண்ணிலுள்ள தேவர் வந்து பரவிப் போற்றித் தூய செம்பொன்னினால் முழுதும் எழுதி மேய்ந்த சிற்றம்பலத்துக் கூத்தப் பெருமானை இழிவுடைய யான் மறந்து எங்ஙனம் உய்வன் ? |
| 1090. காரு லாமலர்க் கொன்றையந் தாரனை<br>வாரு லாமுலை மங்கைம ணாளனைத்<br>தேரு லாவிய தில்லையுட் கூத்தனை<br>ஆர்கி லாஅமு தைமறந் துய்வனோ. 9<br><br>"கண்ணி கார் நறுங்கொன்றை" – புறநானூறு.<br>1484 ஆம் பாடலுடன் ஒப்பிடவும் | கார்காலத்துப் பூக்கும் கொன்றை மாலையனை, கச்சணிந்த தனங்களை உடைய உமை கேள்வனை, தேர் உலாவும் தில்லையுள் கூத்தப் பெருமானை, உண்ணத்தெவிட்டாத அமுது போல்வானை, அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ. |
| 1091. ஓங்கு மால்வரை யேந்தலுற் றான்சிரம்<br>வீங்கி விம்முற வூன்றிய தாளினான்<br>தேங்கு நீர்வயல் சூழ்தில்லைக் கூத்தனைப்<br>பாங்கி லாத்தொண்ட னேன்மறந் துய்வனோ. 10 | உயர்ந்த திருக்கயிலாயத் திருமலையை எடுக்கலுற்ற இராவணன் சிரங்கள் பருத்து விம்முதல் அடைய ஊன்றிய திருவடி உடையவனும் நீர்வளம் சான்ற தில்லையுட் கூத்தனும் ஆகிய பெருமானை நல்ல சார்பில்லாத தொண்டனேன் மறந்து உய்தலுங் கூடுமோ ? |

## 3. திருநெல்வாயில் அரத்துறை

சிவபரம்பொருளை எதனோடெல்லாம் ஒப்பிடலாம் என்ற நீண்டதொரு பட்டியலை நாவரசர் இப்பதிகத்தின் பல பாடல்கள் மூலம் அருளியுள்ளார். கண்டீர் நாந்தொழுவதே என்பது பதிக மகுடமாகும்.

ப.தொ.எண் : 116 பதிக எண் : 3

1092. கடவு ளைக்கட லுள்ளெழு நஞ்சுண்ட
உடலு ளானை யொப் பாரியி லாதவெம்
அடலு ளானை யரத்துறை மேவிய
சுடரு ளானைக் கண் டீர்நாந் தொழுவதே. 1

நாம் தொழுவது, கடவுளும், பாற்கடலுள் எழுந்த நஞ்சு உண்டு தரித்த, அருட்டிரு மேனியுடையவனும், ஒப்புமை சொல்லத் தக்கார் இல்லாத ஆற்றல் உள்ளவனும், அரத்துறைத் தலத்தை விரும்பிய ஒளியானவனும் ஆகிய பெருமானையே.

நாம் தொழுவது சிவபெருமானையே. வணக்கத்தை நாம் ஏனையோர்க்குச் செய்யும்போதும், ஏனையோர் தமக்குச் செய்யும் போதும், அது சிவபிரானுக்கு ஆகும் எனப் புத்தி பண்ணுபவர்தான், உண்மையான அடியார் ஆக முடியும். இத்திருப்பதிகம் முதல்வன் வணக்கத்திற்குரியனென்னும் முதன்மைக் கருத்தைப் பொற்சரடு போல் பாடல் தோறும் ஊடுருவப் பெற்று பல்வேறு அரிய இனிய உவமைகளால் அவன்தன் குறைவிலா மங்கலக் குணங்களை, கோவை செய்து ஞானத்தால் தொழுவார்க்குத் தரப்பட்ட மணி மாலையாகத் திகழ்தல் அறியத்தக்கது.

தன்னொப்பார் இல்லாத் தலைவனை நாம் உணர்ந்து போற்ற வேண்டி சில உவமைகளைக் கூறிச் செல்கிறார்.

1093. கரும்பொப் பானைக் கரும்பினிற் கட்டியை
விரும்பொப் பானைவிண் ணோரும் அறிகிலா
அரும்பொப் பானை யரத்துறை மேவிய
சுரும்பொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 2

நாம் தொழுவது, கரும்பும், கரும்பினிற் கட்டியும் ஒப்பானும், விரும்பிய பொருளை ஒப்பானும், தேவரும் அறியா அரும்பு ஒப்பானவனும், அரத்துறைத் தலத்தை விரும்பிய வண்டு போல்வானும் ஆகிய பெருமானையே.

கரும்பொப்பான் – சாதகர்க்குக் கரும்பில் உள்ள சாற்றைப் போல அவர்தம் சாதனங்களில் மறைந்து நின்று அருள்தல்.

கரும்பினிற்கட்டி – மெய்யன்பர்களாகிய சீவன் முத்தர்களுக்கு வெளிப்பட்டு நின்றே அருளுதல்

அரும்பொப்பான் – யான் என்ற கல்விச் செருக்காகிய அகங்காரமும் எனது என்று செல்வச் செருக்காகிய மமகாரத்தையும் நீக்கி சிவதன்ம, யோக, ஞானங்களில் திளைப்பவர் உள்ளத்தில் அரும்பாய் முளைத்துத் தோன்றி விரிவான்.

விரும்பொப்பான் – தாம் விரும்பிய எல்லாப் பொருளினும் மேலானவன்.

சுரும்பொப்பான் – வண்டு போல்வான்

1094. ஏறொப் பானையெல் லாவுயிர்க் கும்மிறை
வேறொப் பானை**விண் ணோரும் அறிகிலா**
ஆறொப் பானை யரத்துறை மேவிய
ஊறொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 3

நாம் தொழுவது, ஏறு ஒப்பானும், எல்லா உயிர்க்கும் இறைவனாகச் சிறந்து நிற்பானும், தேவரும் அறியாநெறி ஒப்பானும், அரத்துறைத் தலத்தை மேவிய உறுபொருளாவானுமாகிய பெருமானையே.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1095.** பரப்பொப் பானைப் பகலிருள் நன்னிலா<br>இரப்பொப் பானை யிளமதி சூடிய<br>அரப்பொப் பானை யரத்துறை மேவிய<br>சுரப்பொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 4<br><br>சிவபெருமான் ஒப்பற்றவர். சொல்லும் பொருளும் கடந்தவர். ஆயினும் கருதும் பொருள்களிலும், காணும் பொருள்களிலும் ஒன்றாக வைத்துக் கண்டு தொழுதலின்றி வேறு வழியில்லை. | நாம் தொழுவது, திருவரத்துறையை விரும்பி எழுந்தருளியவனும் பிறை சூடியவனுமாகிய பகல் ஒளியின் பரப்பையும், இருளில் நன்மை புரியும் வளர்மதியின் வளர்ச்சியினையும், குறும்பையும் அன்பு காரணமாக உண்டாகும் பாலின் சுரத்தலையும் ஒக்கும் முதல்வனையே. பிறரை அன்று. |
| **1096.** நெய்யொப் பானைநெய் யிற்சுடர் போல்வதோர்<br>மெய்யொப் பானை**விண் ணோரு மறிகிலார்**<br>ஐயொப் பானை யரத்துறை மேவிய<br>கையொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 5 | நாம் தொழுவது, நெய்யும், நெய்யிற் சுடர்போல் விளங்கும் மெய்யும், பெருவியப்பும் போல்வானும், தேவரும் அறியாதவனும் அரத்துறையென்னுந் தலத்தை விரும்பிய ஒழுக்கமாவானுமாகிய பெருமானையே. |
| **1097.** நெதியொப் பானை நெதியிற் கிழவனை<br>விதியொப் பானை**விண் ணோரு மறிகிலார்**<br>அதியொப் பானை யரத்துறை மேவிய<br>கதியொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 6 | நாம் தொழுவது, நியதி ஆவானும், நியதியின் தலைவனும், விதியாவானும், தேவர்களாலும் அறிய முடியாதவனும், விச்சுவாதிகளும் ஆகிய அரத்துறையென்னுந் தலத்தை மேவி உயிர்களுக்குக் கதியாயிருப்பானையே. |
| **1098.** புனலொப் பானைப் பொருந்தலர் தம்மையே<br>மினலொப் பானை**விண் ணோரு மறிகிலார்**<br>அனலொப் பானை யரத்துறை மேவிய<br>கனலொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 7 | நாம் தொழுவது, புனலும், பொருந்தாதார்க்கு மின்னலும், அனலும் போல்வானும், தேவர்களாலும் அறிய முடியாதவனும் அரத்துறைத் தலத்துக் கனல் போன்றவனுமாகிய பெருமானையே. |
| **1099.** பொன்னொப் பானைப்பொன் னிற்சுடர் போல்வதோர்<br>மின்னொப் பானை**விண் ணோரு மறிகிலார்**<br>அன்னொப் பானை யரத்துறை மேவிய<br>தன்னொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 8 | நாம் தொழுவது, பொன்னும், பொன்னின் சுடர் போன்ற மின்னலும், அன்னையும் ஒப்பானும், தேவர்களாலும் அறிய முடியாதவனும், அரத்துறைத் தலத்து எழுந்தருளியிருந்து தனக்குத் தானே ஒப்பானவனுமாகிய பெருமானையே. |
| **1100.** காழி யானைக் கனவிடை யூருமெய்<br>வாழி யானைவல் லோருமென் றின்னவர்<br>ஆழி யான்பிர மற்கும ரத்துறை<br>ஊழி யானைக்கண் டீர்நாந் தொழுவதே. 9 | நாம் தொழுவது, காழித்தலத்துக் கடவுளும், பெருமையை உடைய விடையூரும் நித்தத் திருமேனி உள்ளவரும், பிறரால் வல்லவர் என்று கூறப்படுவோராகிய திருமால், பிரமனுக்கும், ஒடுங்கும் தானமாக உள்ளவருமாகிய திருஅரத்துறை அடிகளையே. |

1101. கலையொப் பானைக் கற்றார்க்கோ ரமுதினை
மலையொப் பானை மணிமுடி யூன்றிய
அலையொப் பானை யரத்துறை மேவிய
நிலையொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே.10

திருஞானசம்பந்த நாயனாருக்கு இறைவன் முத்துச் சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் முதலியவற்றை அருளிய தலம். நிவாநதியின் வடகரையில் உள்ளது.

நாம் தொழுவது, கலையும், கற்றார்க்கு அமுதும், மலையும் போல்வானும், மலையெடுக்கலுற்ற இராவணனை மணிமுடியின்கண் ஊன்றி அலைக்க லுற்றானும், அரத்துறை மேவி நிலை பெற்றிருப்பானுமாகிய பெருமானையே.

## 4. திருஅண்ணாமலை

இப்பதிகத்தின் அனைத்துப் பாடல்களின் இரண்டாமடியில் அண்ணாமலையனைப் பற்றியும், மூன்றாம் அடியில் திரிபுர தகனத்தையும், நிறைவு அடியில் மறவாமையையும் முறையே பாடி மகிழ்கிறார்.

ப.தொ.எண் : 117 பதிக எண் : 4

1102. வட்ட னைம்மதி சூடியை வானவர்
சிட்ட னைத்திரு வண்ணா மலையனை
இட்ட னையிகழ்ந் தார்புர மூன்றையும்
அட்ட னையடி யேன்மறந் துய்வனோ. 1

வட்டு – சிறு உடை. சிட்டன் – பெரியோன் எனத் தொழப்படுபவன். ஞானி –உயர்ச்சி உடையோன். வட்டன் – அன்பு வட்டத்துள் விளங்குபவன் என்றும் கொள்ளலாம். இட்டம் – விருப்பம்.

அளவான ஆடை அணிந்தானும், மதிசூடியும், வானவர்க்கு உயர்ந்தானும், திருவண்ணாமலை வடிவினனும், உயிர்களுக்கு சிவத்துவத்தை வழங்க விருப்பம் உடையானும், **இகழ்ந்தார் புரங்கள் மூன்றினையும் அட்டானும்** ஆகிய பெருமானை அடியேன் மறந்து உய்தலும் கூடுமோ ?

1103. வான னைம்மதி சூடிய மைந்தனைத்
தேன னைத்திரு வண்ணா மலையனை
ஏன னையிகழ்ந் தார்புர மூன்றெய்த
ஆன னையடி யேன்மறந் துய்வனோ. 2

புரம் – கோட்டை. வானில் பறக்கும் / திரியும் ஆற்றல் பெற்ற கோட்டை. இக்காலத்துப் போர் விமானங்கள் பலவற்றையும் தாங்கிப் பறக்கும், பெரும் விமானந்தாங்கி போன்றது. திரியும்புரம் – திரிபுரம். திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள்.

வானத்துள்ளவனும், பிறைசூடிய பேராற்றல் உடையவனும், தேனென இனிப்பவனும், திருவண்ணாமலைத் தலத்துக்கு உடையவனும், பன்றிக்கொம்பை அணிந்தவனும், **இகழ்ந்தார் புரங்கள் மூன்றினையும் எய்த** விடையேறுடையவனும் ஆகிய பெருமானை அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ ?

1104. மத்த னைம்மத யானையு ரித்தவெஞ்
சித்த னைத்திரு வண்ணா மலையனை
முத்த னைம்முனிந் தார்புர மூன்றெய்த
அத்த னையடி யேன்மறந் துய்வனோ. 3

ஊமத்தமலர் அணிந்தவனும், யானைத் தோலை உரித்துப் போர்த்து எம் சித்தத்துறைபவனும், திருஅண்ணாமலைத் தலத்துக்குடையவனும், முத்தனும், **முனிந்தார் புரங்கள் மூன்றையும் எரியுண்ணச் செய்த** அத்தனுமாகிய பெருமானை அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ?

தொழுவார்க்கே அருளுபவன் சிவன் என்ற உண்மையை விளக்குவது திருவண்ணாமலைத் தல வரலாறு ஆகும்.

1105. காற்ற னைக்கலக் கும்வினை போயறத்
தேற்ற னைத்திரு வண்ணா மலையனைக்
கூற்ற னைக்கொடி யார்புர மூன்றெய்த
ஆற்ற னையடி யேன்மறந் துய்வனோ. 4

காற்றாகியுள்ளவனும், கலக்குகின்ற வினைகள் விட்டு நீங்கத் தோற்றம்புரிபவனும், திருவண்ணாமலைத் தலத்துக்குடையவனும், உலகினை நன்றுந் தீதுமாய்க் கூறுசெய்து வகுத்தவனும், **கொடியவர் புரங்கள் மூன்றையும் எய்த** வீரநெறி உடையவனுமாகிய பெருமானை அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ?

சிவ வழிபாடே ஒருவருக்குப் பகையை வெல்லும் வலிமையைத் தருவது. அதனை இகழின் தம் வலி இழப்பர் என்னும் உண்மையை உணர்த்துவது திரிபுரதகனம்.

1106. மின்ன னைவினை தீர்த்தெனை ஆட்கொண்ட
தென்ன னைத்திரு வண்ணா மலையனை
என்ன னையிகழ்ந் தார்புர மூன்றெய்த
அன்ன னையடி யேன்மறந் துய்வனோ. 5

மின் ஒளியுருவாயவனும், வினைகளைப் போக்கி என்னை ஆட்கொண்ட அழகியவனும், திருவண்ணாமலைத் தலத்துக்குடையவனும், என்னை உடையவனும், **இகழ்ந்தவர் புரங்கள் மூன்றையும் எய்த** அத்தன்மையனும் ஆகிய பெருமானை அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ?

1107. மன்ற னைம்மதி யாதவன் வேள்விமேல்
சென்ற னைத்திரு வண்ணா மலையனை
வென்ற னைவெகுண் டார்புர மூன்றையுங்
கொன்ற னைக்கொடி யேன்மறந் துய்வனோ. 6

ஐந்துவகை மன்றங்களில் (சபைகளில்) எழுந்தருளியிருப்பவனும், மதியாத தக்கன் வேள்வியின்மேல் உருத்துச் சென்றவனும், திருவண்ணாமலைத் தலத்துக்கு உடையவனும், புலனைந்தும் வென்ற வெற்றி உடையவனும், **சினந்தார் புரங்கள் மூன்றையும் கொன்றவனும்** ஆகிய பெருமானைக் கொடியவனாகிய அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ?

இப்பதிகம் – அண்ணாமலையனைத் தொழுது அருளியது.
அடுத்த பதிகம் – அண்ணாமலையைத் தொழுது அருளியது.

1108. வீர னைவிட முண்டனை விண்ணவர்
தீர னைத்திரு வண்ணா மலையனை
ஊர னையுண ரார்புர மூன்றெய்த
ஆர னையடி யேன்மறந் துய்வனோ. 7

ஆர் – அத்தி; "நாறும் பூவும் நம்பற்காம்; நாறாப் பூவும் நம்பற்காம்" என்ப ஆகலின் அடியார்க்கு எளிதில் கிடைக்கும் ஊமத்தை, அத்தி ஆகியவற்றையும் அன்போடு கொடுப்போர்க்கு அருளுகிறான்.

வீரச்செயல்களைப் புரிந்தவனும், விடம் உண்டவனும், விண்ணவர்க்கு அச்சம் நீக்குபவனும், திருவண்ணாமலை வடிவினனும், மருத நிலத்தை இடங்கொண்டவனும், **உணராதவர் புரங்கள் மூன்றையும் எய்தவனும்,** ஆத்திமாலை சூடியவனுமாகிய பெருமானை அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ?

1109. கருவி னைக்கடல் வாய்விட முண்டவெம்
திருவி னைத்திரு வண்ணா மலையனை
உருவி னையுண ரார்புர மூன்றெய்த
அருவி னையடி யேன்மறந் துய்வனோ. 8

அருவம், அருவுருவம், உருவம் என்னும் நிலைகளைக் கடந்த முதல்வன் உயிர்கள் தன்னை உணர்ந்து உய்யக் கருதி அத்திருமேனிகளை மேற்கொண்டான். ஆதலின் உருவினை, அருவினை என்று அருளிச் செய்தார்.

கருவாயிருந்து காப்பவனும், கடலெழு நஞ்சு உண்ட எம்திருவாகியவனும், திருவண்ணா மலை வடிவினனும், உருவத் திருமேனி உடையவனும், **உணராதவர் புரங்கள் மூன்றையும் எய்தவனும்,** அருவத்திருமேனி உடையவனுமாகிய பெருமானை அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ?

| உரு | மகேச்சுவரத் திருவுருவங்கள் |
|---|---|
| அரு | யோகியர் பிரணவம், பிரசாதம் முதலிய மந்திரங்களின் துணையால் அகத்தே காணும் ஒளியுரு கண்ணுக்கும், கருவிகளுக்கும் புலப்படாதது. |
| அருவுரு | ஐம்பெருமனுக்களாலும், திருவைந்தெழுத்தாலும், அமையும் பூரண உருவமற்ற மந்திரத் திருமேனி – சிவலிங்கம். |

1110. அருத்த னையர வைந்தலை நாகத்தைத்
திருத்த னைத்திரு வண்ணா மலையனைக்
கருத்த னைக்கடி யார்புர மூன்றெய்த
அருத்த னையடி யேன்மறந் துய்வனோ. 9

"நற்றவா உனை நான் மறக்கினுஞ் சொல்லும் நா நமச்சிவாயவே" என்ற சுந்தரர் வாக்கையும், "மறக்கும் மனத்தினை மாற்றி" என்ற திருஞானசம்பந்தர் வாக்கையும் நினைவு கூர்வோமாக.

பொருள் வடிவாயுள்ளவனும், ஐந்தலையுடைய நாகத்தைத் திருந்த அணிந்தவனும், திருவண்ணாமலை வடிவினனும், தலைவனானவனும், **தீக்குணங்களைக் கடியாதார் புரங்கள் மூன்றையும் எய்தவனும்,** உயிர்களுக்கு வினைப்பயனைப் பிறழாது நுகர்விப்போனும் ஆகிய பெருமானை அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ?

1111. அரக்க னையல றவ்விர லூன்றிய
திருத்த னைத்திரு வண்ணா மலையனை
இரக்க மாயென் உடலுறு நோய்களைத்
துரக்க னைத்தொண்ட னேன்மறந் துய்வனோ.10

அண்ணாமலை – அணுக முடியாத (பிரம்ம விட்டுணுக்களால்) மலை. ஐம்பூதங்களுள் நெருப்புத் தலம். நான்கு திரு மதில்களுக்கும் நான்கு கோபுரங்கள் உள்ள தலம். நினைக்க முத்தி தருவது.

இராவணன் அலறுமாறு அழகிய திருவிரலை ஊன்றிய திருத்தமானவனும், திருவண்ணாமலை வடிவினனும், இரக்கம் கொண்டு **என் உடலில் உற்ற நோய்களைத் துரத்திய அருளாளனுமாகிய பெருமானைத் தொண்டுபுரியும் அடியேன் மறந்து உய்தலுங் கூடுமோ?**

## 5. திருஅண்ணாமலை

**(அண்ணாமலையை நினைந்து தொழ உண்டாம் பயன்கூறும் பதிகம்)**

**ப.தொ.எண் : 118** **பதிக எண் : 5**

1112. பட்டி ஏறுகந் தேறிப் பலவி(ல்)லம்
இட்ட மாக இரந்துண் டுழிதரும்
அட்ட மூர்த்தியண் ணாமலை கைதொழக்
கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே. 1

வல்லாள மகாராசாவுக்கு அவர் அன்பின் பொருட்டு இறைவர் மகனாக வந்து அருள்செய்த திருவிழா இன்றும் நடைபெறுகிறது.

அலைந்து திரியும் அடங்காத ஏற்றினை அடக்கி விடையாக் கொண்டு உகந்து ஏறிப் பல மனைகள் தோறும் விருப்பத்தோடு சென்று இரந்து உண்டு அலைந்து சுழலும், அட்டமூர்த்தியின் திருவுருவாகிய திருஅண்ணாமலையைக் கைகளால் தொழ வினைகள் கெட்டு ஒழியும் ; என்றும் கேடு இல்லை; காண்பீராக.

1113. பெற்ற மேறுவர் பெய்பலிக் கென்றவர்
சுற்ற மாமிகு **தொல்புக ழாளொடும்**
அற்றந் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே. 2

“அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை எல்லாம்” சித்தியார் சுபக்கம் 69

மனைகளிலிடும் பலிக்கெனப் பெற்றம் ஏறும் பெருமான், தனக்குச் சுற்றமாமெனும் உமையம்மையோடும் வருவார், துயர்தீர்க்கும் திருவண்ணாமலையைக் கைதொழுவார். நல்ல தவத்தோடு ஞானநெறியில் பிறழாது இருக்கப் பெறுவர். உமையாளொடும் உடனாகிய ஒருவன்.

1114. பல்லி லோடுகை யேந்திப் பலவி (ல்) லம்
ஒல்லை சென்றுணங் கல்கவர் வாரவர்
அல்லல் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நல்ல வாயின நம்மை யடையுமே. 3

குருநமச்சிவாயர். குகை நமச்சிவாயர் முதலிய சான்றோர் இங்கு பேறு பெற்றனர்.

பல்லில்லாத மண்டையோட்டைக் கையில் ஏந்திப் பல மனைகளுக்கும் விரைந்து சென்று பெண்டிர் இடும் உலர்ந்த சோற்றை அவர்தம் உள்ளங்களோடு கவர்வாராகிய சிவபிரானுடைய அடியார் அல்லல்களைத் தீர்க்கும் திருவண்ணாமலையைக் கைகளாற்றொழ, நல்லவாயின யாவும் நம்மைத் தாமே வந்தடையும்.

| | |
|---|---|
| **1115.** பாடிச் சென்று பலிக்கென்று நின்றவர்<br>ஓடிப் போயினர் செய்வதொன் றென்கொலோ<br>**ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ**<br>**ஓடிப் போகும்நம் மேலை வினைகளே.** 4<br><br>ஆடிப்பாடி அண்ணாமலை கைதொழ மேலை வினைகளும், உள்ள வினைகளும் ஓடிப் போகும் என்ற கருத்தைப் பல பாடல்களில் ஆணித்தரமாகச் சொல்லுகிறார். | பாடிச்சென்று பலிக்கென்று நின்ற பெருமான் ஓடிப் போய்விட்டனராதலால் செய்வது இனி என்னை? ஆடியும் பாடியும் திருவண்ணா மலையைக் கைளாற்றொழ நம் மேலை (பழைய) வினைகள் ஓடிப்போகும். (ஓடிப் போயினர் செய்வதொன்றென் கொலோ' எனப் பேசநின்ற பெருமானது திருவண்ணாமலை – என இசையெச்சம் கொண்டு முடிக்க) |
| **1116.** தேடிச் சென்று திருந்தடி யேத்துமின்<br>நாடி வந்தவர் நம்மையு மாட்கொள்வர்<br>**ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ**<br>**ஓடிப் போம்நம துள்ள வினைகளே.** 5 | தேடிச் சென்று அப்பெருமான் திருவடிகளை ஏத்துவீராக. அங்ஙனம் தேடிச் செல்லும் நம்மை அவரும் நாடிவந்து ஆட்கொள்வர்; ஆடியும் பாடியும் திருவண்ணாமலையைக் கை தொழுதால் நமது நிகழ்வினைகள் ஓடிப்போகும். |
| **1117.** கட்டி யொக்குங் கரும்பி னிடைத்துணி<br>வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனார்<br>அட்ட மூர்த்தியண் ணாமலை மேவிய<br>நட்ட மாடியை நண்ணநன் காகுமே. 6 | கரும்பினிடைக் கட்டி ஒக்குமாறு துணித்தும் வெட்டியும் வீணை வகைகளோடு பாடும் விகிர்தனாகிய அட்டமூர்த்தியும், திருவண்ணாமலை மேவிய நட்டமாடும் பெருமானுமாகிய இறைவனை நண்ணினால் நன்றே ஆகும். |
| **1118.** கோணிக் கொண்டையர் வேடமுன் கொண்டவர்<br>பாணி நட்டங்க ளாடும் பரமனார்<br>ஆணிப் பொன்னனண் ணாமலை கைதொழப்<br>பேணி நின்ற பெருவினை போகுமே. 7<br><br>"ஆணியைச் செம்பொன் அம்பலத்துள் நின்ற" என்று இதே திருமுறையில் 1085வது பாடலிலும் குறிப்பிடுகிறார். | சேர்த்துக் கட்டிய கொண்டையரும், வேடம் முன் கொண்டவரும், தாளத்திற்கேற்ப நட்டங்கள் ஆடுபவரும் ஆணிப் பொன் போன்றவரும் ஆகிய பரமனார் திருவண்ணாமலையைக் கைகளால் தொழுதால் நம்மிடம் வருதற்குப் பேணி நின்ற பெரு வினைகள் போகும். ஆணிப்பொன் – மாற்றுரைத்துப் பார்ப்பதற்கு மாதிரியாக வைத்திருக்கும் சுத்தமான பொன். |
| **1119.** கண்டந் தான்கறுத் தான்கால னாருயிர்<br>பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்<br>அண்டத் தோங்குமண் ணாமலை கைதொழ<br>விண்டு போகுநம் மேலை வினைகளே. 8 | திருநீலகண்டரும், கூற்றுவன் உயிரைப் பண்டு கால் கொண்டு பாய்ந்த பரமனாரும் ஆகிய பெருமானுக்குரிய அண்டமுற ஓங்கி நிமிர்ந்த திருவண்ணாமலையைக் கைகளாற் றொழுதால் நம் மேலை (பழைய) வினைகள் நம்மை விட்டு நீங்கும். |

| | |
|---|---|
| 1120. முந்திச் சென்றுமுப் போதும் வணங்குமின்<br>அந்தி வாயொளி யான்றனண் ணாமலை<br>சிந்தி யாவெழு வார்வினை தீர்த்திடும்<br>கந்த மாமலர் சூடுங் கருத்தனே. 9<br><br>இப்பதிகத்தின் பாடல்களைப் பின்பற்றி இன்று மாதாந்திர நிறைநிலாவன்று இலட்சக்கணக்கான மக்கள் உலகம் முழுவதும் இருந்து வந்து மலைவலம் வருவது சைவ மறுமலர்ச்சியை உறுதி செய்கிறது. | முந்துறச்சென்று, மாலைச் செவ்வானன்ன மேனி உடையானுடைய திருவண்ணாமலையை மூன்று பொழுதும் வணங்குவீர்களாக; அத் திருவண்ணாமலையைச் சிந்தித்தபடி துயிலெழுவார் வினைகளை, நறுமணமுடைய மலர்களைச் சூடும் தலைவனாகிய பெருமான் தீர்ப்பான். |
| 1121. மறையி னானொடு மாலவன் காண்கிலா<br>நிறையு நீர்மையுள் நின்றருள் செய்தவன்<br>உறையும் மாண்பினண் ணாமலை கைதொழப்<br>பறையும் நாஞ்செய்த பாவங்க ளானவே. 10 | பிரமனும் திருமாலும் காண்கிலாதவனும், எங்கும் நிறைகின்ற தன்மையுள் நின்று அருள் செய்தவனுமாகிய பெருமான் உறையும் மாண்பினை உடைய **திருவண்ணாமலையைக் கைகளாற் றொழுதால் நாம் செய்த பாவங்கள் எல்லாம் கெடும்.** |

## 6. திருஆரூர்

திருவாரூர் சிவலோக ராஜதானியாகும். திருவாரூர் எல்லையை அடைந்துவிட்டாலே, சிவலோகம் வந்தது போன்ற உணர்வு வரவேண்டும். திருவாரூர்ப் பதிகத்துக்கு (படிக்கும் போது) வந்துவிட்டாலே சொந்த ஊர் வந்த உணர்வு வரவேண்டும். கோயில் எல்லையில் புகுந்துவிட்டால் சொந்த வீட்டிற்கு வந்த உணர்வு வரவேண்டும். அவர்தான் சைவர். அவர்தான் அடியார்.

மனுநீதிச் சோழன் ஆண்ட ஊருக்கு வந்துள்ளீர்கள்.

ஆழித்தேர் வித்தகனின் திருவடிகள் பட்ட இடங்களில் நீங்கள் நிற்கிறீர்கள்.

எட்டுத் திசைகளும், சூரியனும் தோன்றுவதற்கு முன்னே தோன்றிய கோயிலின் முன்னே நிற்கிறீர்கள்.

முசுகுந்தன் கொணர்ந்த இந்திரலோகத்து தியாகேசரைக் காணப் போகிறீர்கள்.

கோயிலும் ஐந்து வேலி; குளமும் ஐந்து வேலி; செங்கழு நீர் ஓடையும் ஐந்து வேலி; பிரம்மாண்டமான குளத்தையும் பார்க்கிறீர்கள்.

உருத்திர பல்கணத்தினர், மாவிரதிகள், முனிவர்கள், காபாலிகள் என்று எவ்வளவோ அடியார்கள் எவ்வளவோ காலம் பாடி ஆடித் தொழுத வீதிகளில் நடக்கிறீர்கள். பழைய அடியார்களைக் காணும் பேறு பெறுகிறீர்கள்.

ஏனைய தலங்கள் போலன்றி வீதிவிடங்கருக்கும், திருமூலட்டானருக்கும் தனித்தனிப் பதிகங்கள் உள்ளமை திருவாரூரின் தனிபெருஞ் சிறப்புகளுள் ஒன்று. உதாரணமாக, 'மூலட்டனீரே' என்று நிறைவுறும் பாடல்களைக் கொண்ட பதிகம், சுவாமிகள் மூலட்டானரைப் பாடினார் என்று கொள்ளலாம். 'முத்துவிதானம்' போன்ற பதிகங்கள், தியாகேசராகிய வீதிவிடங்கரைப் போற்றும் பதிகமாகக் கொள்ளவேண்டும். 'ஆரூரே' என்று முடியும் பதிகங்களை ஆழ்ந்து நோக்கினால்தான், அது மூலவருக்கா அல்லது உற்சவருக்கா என்று விளங்கும். எடுத்துக்காட்டாக, இத்திருமுறையில் 1139 ஆவது பாடலில் "பவனிவீதி விடங்கனைக் கண்டு" என்றதனால் இப்பதிகம் தியாகேசரைப் பற்றியது என்று எடுத்துக் கொள்ளலாம். பதிகத்தின் மற்ற பாடல்கள் வேறுபட்டால் இரண்டையும் பாடுகிறார் என்று கொள்ளலாம்.

ப.தொ.எண் : 119 பதிக எண் : 6

| | |
|---|---|
| **1122.** எப்போ தும்மிறை யும்மற வாதுநீர்<br>முப்போ தும்பிர மன்தொழ நின்றவன்<br>செப்போ தும்பொனின் மேனிச் சிவனவன்<br>அப்போ தைக்கஞ்ச லென்னுமா ரூரனே. 1 | மூன்று பொழுதினும் பிரமன் தொழ நின்றவனும், புகழ்ந்து போற்றத்தக்க செம்பொன்னின் வண்ணமேனி உடையவனும், உயிர் உடம்பை விட்டு நீங்கும் அப்போதைக்கு 'அஞ்சல்' என்று அபயங் கொடுப்பவனுமாகிய ஆரூரனாம் சிவபெருமானை எப்போதும் சிறுபொழுதும் நீர் மறவாது இருக்க. (சே – போதும் எனப் பிரித்து, 'விடையின்மீது இவர்ந்து வரும்' எனினும் அமையும்). |
| **1123.** சடையின் மேலுமொர் தையலை வைத்தவர்<br>அடைகி லாஅர வைஅரை யார்த்தவர்<br>படையின் நேர்தடங் கண்ணுமை பாகமா<br>அடைவர் போலிடு காடரா ரூரரே. 2 | மருங்கில் மட்டுமின்றிச் சடையின்மேலும் ஒரு தையலை வைத்தவரும், அரவை அரையிற் கட்டியவரும், இடுகாடரும் ஆரூரரும் ஆகியவர் வேற்படையொத்த பெரிய கண்ணை உடைய உமையொரு பாகமாகத் தோன்றி அருள் புரிவர். |
| **1124.** விண்ட வெண்டலை யேகல னாகவே<br>கொண்ட கம்பலி தேருங் குழகனார்<br>துண்ட வெண்பிறை வைத்த இறையவர்<br>அண்ட வாணர்க் கருளுமா ரூரரே. 3 | வெண்தலையே இரக்கும் கலனாகக் கொண்டு வீடுகள்தோறும் பலிதேரும் இளமை யுடையவரும், துண்டாகிய வெள்ளிய பிறை முடிவைத்த இறையவரும், தேவர்களுக்கு அருளும் திருவாரூர்ப் பெருமானேயாவர். |
| **1125.** விடையு மேறுவர் வெண்தலை யிற்பலி<br>கடைகள் தோறுந் திரியுமெங் கண்ணுதல்<br>உடையுஞ் சீரை யுறைவது காட்டிடை<br>அடைவர் போலரங் காகவா ரூரரே. 4<br><br>சீரை – கிழிந்த ஆடை, மரவுரி | திருவாரூர்ப் பெருமான், விடையும் ஏறுவர்; வெண் தலையிற் பலி பெருவதற்கு இல்லங்களின் முன்புறந்தோறும் திரியும் கண்ணுதலார்; உடையாகச் சீரையைக் கொண்டவர். உறைவதற்குச் சுடுகாட்டையே அரங்கமாக அடைவர். |
| **1126.** துளைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்<br>வளைக்கை யாளையொர் பாக மகிழ்வெய்தித்<br>திளைக்குந் திங்கட் சடையில் திசைமுழு<br>தளக்குஞ் சிந்தையர் போலுமா ரூரரே. 5 | திருவாரூர்ப் பெருமான், துளையுள்ள துதிக்கை உடைய யானையின் உரித்த தோலைப் போர்த்தவர்; வளையணிந்த கையாளாகிய உமையம்மையை ஒரு பாகமாக மகிழ்ந்தெய்தியவர்; அவர் தமது பிறை பொருந்திய சடையினால், எட்டுத் திசைகளையும் அளந்தறியும் சிந்தை உடையவர் போலும்; உலகமே உருவமாக (விச்சுவரூபியா) நின்றாடுவார் என்பது கருத்து. |

| | | | |
|---|---|---|---|
| 1127. | பண்ணி னின்மொழி யாளையொர் பாகமா<br>விண்ணி னார்விளங் கும்மதி சூடியே<br>சுண்ண நீறுமெய்ப் பூசிச் சுடலையின்<br>அண்ணி யாடுவர் போலுமா ரூரரே. | 6 | பண்ணையொத்த இனிய மொழியாளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு விசும்பில் விளங்கும் பிறையினைச் சூடி, திருநீற்றுப் பொடியி னைத் திருமேனியிற் பூசிச் சுடலையில் திருவாரூர்ப் பெருமான் ஆடுவர். |
| 1128. | மட்டு வார்குழ லாளொடு மால்விடை<br>இட்ட மாவுகந் தேறு மிறைவனார்<br>கட்டு வாங்கங் கனன்மழு மான்தனோ<br>டட்ட மாம்புய மாகுமா ரூரரே. | 7 | தேனொழுகும் புதுமலரணிந்த குழலாளாகிய உமையம்மையொடு பெரிய (திருமாலாகிய) விடையினை விருப்பத்தினோடு உகந்து ஏறும் இறைவனார், கட்டுவாங்கம் என்னும் ஆயுதம், சுடர்ந்தெரியும் கனல், மழு, மான் எனுமிவற்றைக் கொண்ட எட்டுத் தோளராகிய திருவாரூர்ப் பெருமானே ஆவர். |
| 1129. | தேய்ந்த திங்கள் கமழ்சடை யன்கனல்<br>ஏந்தி யெல்லியு ளாடு மிறைவனார்<br>காய்ந்து காமனை நோக்கின கண்ணினார்<br>ஆய்ந்த நான்மறை யோதுமா ரூரரே. | 8 | பிறைத் திங்கள் விளங்கும் சடையினரும், கனலைக் கரத்தேந்தி நள்ளிருளில் நட்டம் ஆடும் இறைவரும், காமனைச் சினந்து நோக்கிய கண்ணினரும், ஆராய்ந்த நான்மறைகளால் ஓதப்பெறும் திருவாரூர்ப் பெருமானேயாவர். |
| 1130. | உண்டு நஞ்சுகண் டத்து ளடக்கியங்<br>கிண்டை செஞ்சடை வைத்த இயல்பினான்<br>கொண்ட கோவண ஆடையன் கூெரி<br>அண்டவாண ரடையுமா ரூரரே. | 9 | நஞ்சினை உண்டு கண்டத்துள் அடக்கியவரும், இண்டை மாலையைத் தம் செஞ்சடையுள் வைத்த இயல்பினரும், கோவணத்தை ஆடையாகக் கொண்டவரும், மிகுந்த எரியைக் கரத்தில் உடையவரும், தேவர்கள் அடைந்து வழிபடும் திருவாரூர்ப் பெருமானேயாவர். |
| 1131. | மாலு நான்முக னும்மறி கிற்கிலார்<br>கால னாய அவனைக் கடந்திட்டுச்<br>சூல மான்மழு வேந்திய கையினார்<br>ஆல முண்டழ காயவா ரூரரே. | 10 | திருமாலும் நான்முகனும் அறிய இயலாதவரும், காலனைக் கடந்திட்டுச் சூலமும், மாலும், மழுவும் ஏந்திய கையினரும், ஆலம் உண்டதனால் அழகுபெற்று விளங்கிய கண்டத்தையுடையவரும் திருவாரூர்ப் பெருமானேயாவர். |

## 7. திருஆரூர்

ப.தொ.எண் : 120 பதிக எண் : 7

1132. கொக்க ரைகுழல் வீணை கொடுகொட்டி
பக்க மேபகு வாயன பூதங்கள்
ஒக்க ஆட லுகந்துடன் கூத்தராய்
அக்கி னோடர வார்ப்பரா ரூரரே. 1

கொக்கரை, குழல், வீணை, கொடுகொட்டி ஆகிய இசைக்கருவிகளைக் கொண்டு இசைத்து மருங்கிலே நின்று, பிளந்த வாயை உடைய பல பூதங்கள் உடன் ஆட, ஆடுங்கூத்தராய், அக்கு மணிகளையும் அரவையும் பூண்பவர் திருவாரூர்ப் பெருமானாவர்.

---

1133. எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே
பந்தம் வீடவை யாய பராபரன்
**அந்த மில்புக ழாரூ ரரனெறி**
சிந்தை யுள்ளுஞ் சிரத்துளுந் தங்கவே. 2

ஆரூர் அரநெறி என்பது ஆரூர்த் திருக்கோயில்களில் பூங்கோயில், அரநெறி, பரவையுண் மண்டளி என்பவற்றுள் ஒன்று. சிந்தை – உள்மனம். நிலையான நினைப்பு உண்டாக்கும் அடிமனம்.

"என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே" என்று வலஞ்சுழியில் சம்பந்தர் பாடுகிறார்.

நெஞ்சமே! பந்தமும், வீடுமாயிருக்கும் தேவ தேவனாகிய திருவாரூர்ப் பெருமானுக்குரிய முடிவற்ற புகழ் வாய்ந்த திருவாரூர் அரநெறி சிந்தையினும், சிரத்தினும் தங்குதற்கு எவ்வளவு பெருந்தவம் நீ செய்தனை? (திருவாரூர், அரநெறியை உள்ளத்திற் கொண்டு மறவாது உணர்தலும் தலையால் தொழலும் நற்றவத்தார்க்கு அன்றி எய்தொணாது என்றபடி).

---

1134. வண்டு லாமலர் கொண்டு வளர்சடைக்
கிண்டை **மாலை புனைந்து மிராப்பகல்**
**தொண்ட ராகித் தொடர்ந்து விடாதவர்க்**
கண்ட மாளவும் வைப்பரா ரூரரே. 3

இண்டை மாலை – மலரையும், இலை, தழைகளையும் கொண்டு மாறி மாறி தொடுக்கப்பட்டு சுவாமியின் திருமுடியில் அணிவிக்கப்படும் மாலை. புனைதல் – இராப் பகல் தொண்டராதல் – தொடர்ந்து விடாமல் செய்தல் – அண்ட மாள்வதற்கு எளிய வழிகள்.

வண்டு எச்சிற்படா மலர்களைக் கொண்டு வளரும் சடைக்கு இண்டை மாலைகள் புனைந்தும், இரவும் பகலும் தொண்டுகள் புரிந்தும் தொடர்ந்து விடாது வழிபடுவார்க்கு அண்டங்களை ஆளவும் கொடுக்கும் பெருமான் திருவாரூரர் ஆவர். ஆளவும் என்னும் எச்ச உம்மையால் சிவஞானமாகிய முக்கியப் பயனைத் தருவதோடு எனக் கொள்க.

1135. துன்பெ லாமற நீங்கிச் சுபத்தராய்
என்பெ லாம்நெக் கிராப்பக லேத்திநின்
றின்ப ராய்நினைந் தென்று மிடையறா
அன்ப ராமவர்க் கன்பரா ரூரரே. 4

இறைவன் அன்பருக்கன்பர். சுபம் – நலம். துன்பெலாம் அற நீங்கி – இன்பங்களினின்று நீங்கியது போலத் துன்பங்களினின்றும் முற்றிலும் விடுதலை பெற்று துன்பங்களைத் தமக்கு தொடர்பில்லாதனவாகக் கருதும் மன இயல்பு. இடையறா அன்பு – தைலதாரை போன்று இடையறவில்லாத அன்பு.

துன்பங்கள் முற்றும் நீங்கி நலம் சான்றவராய் எலும்பெல்லாம் நெகிழ்ந்து இரவும் பகலும் வழிபட்டு நின்று இன்பமுடையோராய் நினைந்து என்றும் இடையறாத அன்பர்க்கு அன்பராய் இருப்பர் திருவாரூர்ப் பெருமான். (இவ்வியல்புடையார்க்கே முதல்வனும், அன்பனாய், அவரைத் தம் தமர்க்குள் வைக்கும் என்றபடி).

1136. முருட்டு மெத்தையில் முன்கிடத் தாமுனம்
அரட்டர் ஐவரை ஆசறுத் திட்டுநீர்
முரட்ட டித்தவத் தக்கன்றன் வேள்வியை
அரட்ட டக்கித னாரூ ரடைமினே. 5

முருட்டு மெத்தை – சுடுகாட்டு விறகு

ஈமக்கிடையில் கிடத்துவதற்கு முன்பு, அடங்காத ஐந்து புலன்களைக் குற்றமறக் களைந்து முரண்பாடு கொண்ட அத்தக்கன் வேள்வியாகிய குறும்பை அடக்கியவனாகிய சிவபெருமான் உறையும் திருவாரூரை நீர் அடைந்து வழிபடுவீராக.

1137. எம்மை யாரிலை யானுமு ளேனலேன்
எம்மை யாரு மிதுசெய வல்லரே
அம்மை யாரெனக் கென்றென் றரற்றினேற்
கம்மை யாரைத்தந் தாராரூ ரையரே. 6

இப்பாடலின் முதல் அடியில் எம் ஐயர் என்பது நீண்டு நின்றது. ஐயர் – தாய் தந்தையர் என்ற முதுகுரவர்.

இரண்டாமடியில் எம்மையார் என்றதில் என் அம்மை, எம்மை என ஆகி ஆர் பெற்றது.

இங்கு தமக்கையராகிய திலவகதியாரைக் குறிக்கும்.

அம்மை யார்? – தாய் போல்வார் யார்?

ஈற்றடி அம்மை – வீடு என்ற பொருள்படும். பெரிய புராணத்தில் திலகவதியார் உயிர் தாங்கும் செய்தி கூறும் பகுதிக்கு அகச் சான்றாகும்.

எம்மைக் காத்தற்குரிய இருமுதுகுரவரும் இலர்; யானும் (இளம் பருவத்தினன் ஆகலின்) தனித்து வாழும் மன உறுதி உள்ளேன் அல்லேன்; எனது அன்னையை ஒத்த உடன்பிறந்தாரும் (திலகவதியாரும்) இதனைச் செய்ய (எனக்குத் துணையாய் நின்றருள) வல்லரே! (ஆயினும் அவர் இதுபோது உயிர்விடத் துணிதலின்) தாயாய் உடனிருந்து உபகரிக்க வல்லார் ஆர்? என்று இங்ஙனம் பன்முறை வாய்விட்டு அரற்றிய எளியேனுக்குத் திருவாரூரில் எழுந்தருளியுள்ள பெருமானே (ஐயரே) வீட்டு நெறிக்கு உரிய என் உடன் தோன்றினாரை (உயிர்தாங்கச் செய்து) எனக்கு இருமுதுகுரவரும், ஆசானும், கேளும், உறவுமாக வைத்தருளினார்.

இப்பாட்டு நாவுக்கரசர், முதல்வன் தமது தமக்கையாரை உம்பருலகணைய உறும்நிலை விலக்கி, உயிர்தாங்கி மனைத்தவம் புரிந்திருக்க வைத்தது, தாம் பின்னர் மெய்யுணர்வு பெற்றுத் திருத் தொண்டின் நெறி பேணி உய்தற்பொருட்டே என நினைந்து பாடியது.

| | |
|---|---|
| **1138.** தண்ட வாளியைத் தக்கன்றன் வேள்வியைச்<br>செண்ட தாடிய தேவர கண்டனைக்<br>கண்டு கண்டிவள் காதலித் தன்பதாய்க்<br>கொண்டி யாயின வாறென்றன் கோதையே. 7<br><br>7, 8 ஆவது பாடல்கள் தாய் கூற்றாக அமைந்த அகத்துறைப் பாடல்கள் | என்றன் மகளாகிய இவள், தண்டத்தைக் (ஒறுப்பு முறை) கையாள்பவனும், தக்கன் செய் பெருவேள்வியைச் செண்டு ஏந்தி ஆடுதல்போல் எளிதாகத் தகர்த்த தேவர்கள் முதல்வனும் ஆகிய ஆரூர் வீதிவிடங்கனை (அவன் உலாப் போதரும் போது) பன்முறை கண்டு அவனைக் காதலித்து அன்பே வடிவாய் நம் வயப்பட்டு ஒழுகாத கொண்டி (பட்டி) ஆயினவாறு என்னே! |
| **1139.** இவள்ந மைப்பல பேசத் தொடங்கினாள்<br>அவண மன்றெனி லாரூ ரரனெனும்<br>**பவனி வீதி விடங்கனைக் கண்டிவள்**<br>தவனி யாயின வாறென்றன் தையலே. 8<br><br>7, 8 ஆவது திருப்பாடல்கள் முதல்வனைக் கண்டு உணரும் ஆன்மாக்கள் அவனால் வசீகரிக்கப்பெற்று உலகியல் தழுவாது அருள்வயப்பட்டு சீவன் முத்தராம் தன்மையை அகப்பொருள் மேல் வைத்துக் குறிப்பன. ''பவனி வீதி விடங்கனைக் கண்டு'' என்றதனால் இப்பதிகமும் முத்துவிதானப் பதிகம்போல தியாகேசரைப் போற்றிய பதிகமோ என்ற ஐயம் எழுகிறது. | இவள் நம்பால் ஒரு நெறிப்படாத பல பேச்சுக்களைப் பேசத் தொடங்கிவிட்டாள். இவள் உள்ள அவ்விடத்தேம் அல்லேம் எனின் (அதாவது, இவள் தனித்துள்ளபோது) ஆரூர் அரன் என மொழிவாள். என்றன் தையலாகிய இவள் உலாப்போந்த வீதிவிடங்கப் பெருமானைக் கண்டமையால் காம நோயுடையாள் ஆனவாறு இது! |
| **1140.** நீரைச் செஞ்சடை வைத்த நிமலனார்<br>காரொத் தமிடற் றர்கனல் வாயரா<br>ஆரத் தருறை யும்மணி யாரூரைத்<br>**தூரத் தேதொழு வார்வினை தூளியே.** 9<br><br>ஆரூரை நினைக்க முத்தி | கங்கைச் சடையரும், திருநீலகண்டரும், அரவாகிய ஆரம் உடையவருமாகிய பெருமான் உறையும் அணி ஆரூர்த் தலத்தைத் தூரத்தே கண்டு தொழுவார் வினைகள் பொடிபட்டு அழியும். |
| **1141.** **உள்ள மேயொ ருறுதி யுரைப்பன்நான்**<br>வெள்ளந் தாங்கு விரிசடை வேதியன்<br>அள்ளல் நீர்வய லாரூ ரமர்ந்தவெம்<br>வள்ளல் சேவடி வாழ்த்தி வணங்கிடே. 10<br><br>அள்ளல் – சேறு | உள்ளமே! நான் ஓர் உறுதி உரைப்பன்; கேள்; கங்கை வெள்ளத்தைத் தாங்கும் விரித்த சடை உடைய வேதியனும் சேறு, நீர் பொருந்திய வயல்களை உடைய ஆரூர் அமர்ந்த எம் வள்ளலுமாகிய பெருமான் சேவடிகளை வாழ்த்து; வணங்கு. |
| **1142.** விண்ட மாமலர் மேலுறை வானொடும்<br>கொண்டல் வண்ணனுங் கூடி யறிகிலா<br>அண்ட வாணன்த னாரூ ரடிதொழப்<br>பண்டை வல்வினை நில்லா பறையுமே. 11 | விரிந்த மலர் மேலுறை பிரமனும், மேக வண்ணனாகிய திருமாலும் கூடி அறியகில்லாத திருவாரூர் அண்டவாணனது திருவடிகளைத் தொழப் பழைய வல்வினைகள் நில்லாமற் கெடும். |

| | | |
|---|---|---|
| 1143. | மையு லாவிய கண்டத்த னண்டத்தன்<br>கையு லாவிய சூலத்தன் கண்ணுதல்<br>ஐய னாரூ ரடிதொழு வார்க்கெலாம்<br>உய்ய லாம்அல்லல் ஒன்றிலை காண்மினே. 12 | கரிய கண்டம் உடையானும், அண்டத்தி லுள்ளானும், கையிற் சூலம் உடையானும், நெற்றிக்கண்ணனும் ஆகிய திருவாரூர்த் தலத்தின்கண் ஐயன் அடிதொழும் எல்லாரும் உய்தி பெறலாம்; துன்பம் ஒன்றும் அவர்க்கில்லை; காண்பீராக. |

## 8. திருஅன்னியூர்

ப.தொ.எண் : 121 பதிக எண் : 8

| | | |
|---|---|---|
| 1144. | பாற லைத்த படுவெண் தலையினன்<br>நீற லைத்தசெம் மேனியன் நேரிழை<br>கூற லைத்தமெய் கோளர வாட்டிய<br>ஆற லைத்த சடையன்னி யூரனே. 1 | பருந்துகள் அலைக்கும் வெள்ளிய மண்டை ஓட்டைக் கையிற் கொண்டவனும், திருநீறு பூசிய சிவந்த மேனியனும், உமையம்மை ஒரு கூறுகொண்ட மெய்யனும், அரவு ஆட்டி ஆறலைக்குஞ் சடையனும் அன்னியூர்த்தலத்து இறைவனே. |
| 1145. | பண்டொத் தமொழி யாளையொர் பாகமாய்<br>இண்டைச் செஞ்சடை யன்னிருள் சேர்ந்ததோர்<br>கண்டத் தன்கரி யின்னுரி போர்த்தவன்<br>அண்டத் தப்புறத் தானன்னி யூரனே. 2 | பண் பொருந்திய இனியமொழியுடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவனும், இண்டையணிந்த சடையனும், இருளார் கண்டனும், யானைத்தோல் உரித்துப் போர்த்தவனும், அண்டங்களுக்கு அப்புறத்தில் உள்ளவனும் அன்னியூர்த் தலத்து இறைவனே. |
| 1146. | பரவி நாளும் பணிந்தவர் தம்வினை<br>துரவை யாகத் துடைப்பவர் தம்மிடம்<br>குரவம் நாறுங் குழலுமை கூறராய்<br>அரவ மாட்டுவர் போலன்னி யூரரே. 3 | நாள்தோறும் வாழ்த்தி வணங்குவோரது வல்வினைகளை இல்லையாக நீக்குபவரும், தம்மிடப் பாகத்தில் குரவு நறுமணம் வீசும் குழல் உமையைக் கூறாகவுடையவரும், அரவம் ஆட்டுபவரும் அன்னியூர்த்தலத்து இறைவரே. |
| 1147. | வேத கீதர்விண் ணோர்க்கு முயர்ந்தவர்<br>சோதி வெண்பிறை துன்று சடைக்கணி<br>நாதர் நீதியி னாலடி யார்தமக்<br>காதி யாகிநின் றாரன்னி யூரரே. 4 | வேதங்களை இசையோடு ஓதுவோரும், விண்ணோர்க்கும் உயர்ந்தவரும், ஒளி வெண்பிறை பொருந்திய சடையுடைய தலைவரும், நீதியினால் தம் அடியார்களுக் கெல்லாம் ஆதியாகி நின்றவரும் அன்னியூர்த் தலத்து இறைவரே. |

| | |
|---|---|
| 1148. எம்பி ரானிமை யோர்கள் தமக்கெலாம்<br>இன்ப ராகி யிருந்தவெம் மீசனார்<br>துன்ப வல்வினை போகத் தொழுமவர்க்<br>கன்ப ராகிநின் றாரன்னி யூரரே. 5 | தேவர்களுக்கெல்லாம் இன்பம் செய்வோராகிய எம் ஈசனாரும், எம் தலைவரும், துன்பஞ் செய்யும் வல்வினை போதற்காகத் தொழும் அன்பர்களுக்கு அன்பராகி நின்றவரும் அன்னி யூர்த்தலத்து இறைவரே. |
| 1149. வெந்த நீறுமெய் பூசுநன் மேனியர்<br>கந்த மாமலர் சூடுங் கருத்தினர்<br>சிந்தை யார்சிவ னார்செய்ய தீவண்ணர்<br>அந்த ணாளர்கண் டீரன்னி யூரரே. 6<br><br>வெந்த நீறு – "தமது அந்தமில் ஒளி அல்லா ஒளியெல்லாம் வந்து வெந்து அறவெந்த நீறு – மற்று அப்பொடி". அந்தணாளர் – உயிர்களின் நன்மையின் பொருட்டு அறமுரைத்து, அதன் வடிவாகவும், பயனாகவும் நிற்றலின் அந்தணாளர் எனப்பட்டார். சிவனார் – மங்களத்தைச் செய்பவர். | வெந்த திருநீறு மெய்யின்கண் பூசிய நலம் வாய்ந்தவரும், நறுமலர் சூடும் கருத்தினராகிய அன்பர் சிந்தைகளில் நிறைந்த சிவனாரும், சிவந்த தீயின் வண்ணம் உடையவரும், அழகிய தண்ணளி உடையவரும் அன்னியூர்த் தலத்து இறைவரே; காண்பீராக. நன்மேனி – அநாதி முத்த சித்து உரு. நறுமலர் சூட்டி வழிபடுவோம் என்னும் கருத்தினர் தம் அடிமனத்திற் பொருந்தி நின்று மங்கலக் குணங்களையும் பேரின்பத்தையும் தோற்றுவிப்பவன். |
| 1150. ஊனை யார்தலை யிற்பலி கொண்டுழல்<br>வானை வானவர் தாங்கள் வணங்கவே<br>தேனை யார்குழ லாளையொர் பாகமா<br>ஆனை யீருரி யாரன்னி யூரரே. 7 | தசை பொருந்தியிருந்த வெண்டலையிற் பலிகொண்டு திரியும் பெருமான் வானவர் வணங்குமாறு, உமாதேவியாரை ஒரு பாகமாகக் கொண்டு ஆனைத்தோல் போர்த்தவர் அன்னி யூர்த்தலத்து இறைவரே. |
| 1151. காலை போய்ப்பலி தேர்வர்கண் ணார்நெற்றி<br>மேலை வானவர் வந்து விரும்பிய<br>சோலை சூழ்புறங் காடரங் காகவே<br>ஆலின் கீழறத் தாரன்னி யூரரே. 8<br><br>புறங்காடு – ஊர்ப்புறத்தே அமைந்த இடுகாடு. பலரையும் புறங்காணும் காடு. | நெற்றிக்கண் உடையவரும், காலையே போய்ப் பலி ஏற்பவரும், வானவர்களும் விரும்புகின்ற சோலை சூழ் புறங்காட்டினை அரங்காகக் கொண்டவரும், ஆலின்கீழ் அறத்தை நான்கு முனிவர்களுக்கு உரைத்தவரும் அன்னியூர்த் தலத்து இறைவரே. |
| 1152. எரிகொள் மேனிய ரென்பணிந் தின்பராய்த்<br>திரியு மூவெயில் தீயெழச் செற்றவர்<br>கரிய மாலொடு நான்முகன் காண்பதற்<br>கரிய ராகிநின் றாரன்னி யூரரே. 9 | தீவண்ண மேனியரும், எலும்பணிந்து இன்புறுவாரும், திரிந்துவந்து தொல்லைகள் புரிந்த மூவெயில்களைத் தீயெழச் சினந்தவரும், மாலும் நான்முகனும் காண்பதற்கு அரியவரும் அன்னியூர்த்தலத்து இறைவரே. |

1153. வஞ்ச ரக்கன் கரமுஞ் சிரத்தொடும்
**அஞ்சு மஞ்சுமோ ராறுநான் கும்**மிறப்
பஞ்சின் மெல்விர லாலடர்த் தாயிழை
அஞ்ச லஞ்சலென் றாரன்னி யூரரே. 10

அஞ்சு அஞ்சு மோ ராறுநான்கு – 5 + 5 + 6 + 4 = 20
ஆயிழை – ஆராய்ந்து கொண்ட அணிகலன்கள் அணிந்தவள்.

வஞ்சனை பொருந்திய இராவணனின் இருபது கைகளும் தலைகளொடு இறும்படியாக பஞ்சின் மெல்விரலால் அடர்த்தபோது மீண்டும் அருள நினைத்து உமையம்மை அஞ்ச, 'ஆயிழையே! அஞ்சல்! அஞ்சல்!' என்று அருளியவர் அன்னியூர்த் தலத்து இறைவரே

## 9. திருமறைக்காடு

ப.தொ.எண் : 122 பதிக எண் : 9

1154. ஓத மால்கடல் பாவி யுலகெலாம்
மாத ரார்வலங் கொண்மறைக் காடரைக்
காதல் செய்து கருதப் படுமவர்
பாத மேத்தப் பறையும்நம் பாவமே. 1

மால்கடல் – பெரிய கடல்; ஓதம் –வெள்ளப்பெருக்கு; பெருகியும், குறைந்தும் வரும் இயல்பு கடலுக்குரியது. பெருக்கத்தை ஓதம் என்பர்.

அலைகளை உடைய பெருங்கடல் பரவிய சிறப்பினதும் உலகெலாம் உள்ள நற்குணம் வாய்ந்த பெண்கள் வலங்கொள்ளும் மாண்பினதுமாகிய மறைக்காட்டில் உறையும் பெருமானை விரும்பி, எல்லோராலும் தியானிக்கப்படும் அவர் திருவடிகளை வாழ்த்த நம் பாவங்கள் கெடும்.

1155. பூக்குந் தாழை புறணி யருகெலாம்
ஆக்கந் தானுடை மாமறைக் காடரோ
ஆர்க்குங் காண்பரி யீரடி யார்தம்மை
நோக்கிக் காண்பது நும்பணி செய்யிலே. 2

ஊர்க்குப் புறத்தே உள்ள நீரிலெல்லாம் தாழை பூப்பதும், ஆக்கம் பெருகியதுமாகிய மறைக் காட்டுறையும் பெருமானே! யார்க்கும் காண்டற்கரியீர்! உம் பணி செய்யிலன்றோ அடியார்களைத் தேவரீர் திருவருள் செய்தற்குத் திருவருள் நோக்கம் புரிந்தருள்வது! **(பணிந்து பணிசெய்வார்க்கன்றி முதல்வன் அருள் கைகூடாது என்பது கருத்து)**

1156. புன்னை ஞாழல் புறணி யருகெலாம்
மன்னி னார்வலங் கொள்மறைக் காடரோ
அன்ன மெல்நடை யாளையொர் பாகமாச்
சின்ன வேட முகப்பது செல்வமே. 3

ஞாழல் – குங்கும மரம். கோங்கு மரம். புலிநகக் கொன்றை.

ஊர்க்குப் புறத்தே உள்ள நீரின் அருகெல்லாம் புன்னையும் ஞாழலும் பொருந்தியதும், மன்னுதலுற்ற நல்லடியார் வலங்கொள்வது மாகிய மறைக்காட்டுறையும் பெருமானே! அன்ன மென்னடையுடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டு நீர் உகப்பதாகிய செல்வம் சின்னமாகிய உமது வேடமே.

**1157.** அட்ட மாமலர் சூடி யடும்பொடு
வட்டப் புன்சடை மாமறைக் காடரோ
நட்ட மாடியும் நான்மறை பாடியும்
இட்ட மாக விருக்கு மிடமிதே. 4

எட்டுவகை மலர்களை அரும்பு மலரோடு சூடிய வட்டவடிவாகிய புன்சடை உடைய மறைக் காட்டுறையும் பெருமானே! நட்டம் ஆடியும், நான்கு வேதங்கள் பாடியும் விருப்பமாகத் தேவரீர் எழுந்தருளியிருக்கும் இடம் இத்தலமோ?

---

"இடமிதே" என்ற குறிப்புகளால், இப்பதிகமானது, கதவம் திறந்தபின், திருமுன்பு பாடப்பட்டதென்று கருதப்படுகிறது.

| | |
|---|---|
| **மலர்பூசைக்குரிய எண் வகை மலர்கள்** | புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியா வர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை. |
| ஞானப்பூசைக்குரிய எண் மலர்கள் | அன்பு, அறிவு, அருள், பொறை, தவம், வாய்மை, கொல்லாமை, பொறியடக்கல். |

**1158.** நெய்த லாம்பல் நிறைவயல் சூழ்தரும்
மெய்யி னார்வலங் கொண்மறைக் காடரோ
தையல் பாகங்கொண் டீர்கவர் புன்சடைப்
பைதல் வெண்பிறை பாம்புடன் வைப்பதே. 5

நெய்தலும் ஆம்பலும் நிறைந்துள்ள வயல்கள் சூழ்ந்துள்ளதும், மெய்யன்பினார் வலம் கொள்வதும் ஆகிய மறைக்காட்டுறையும் பெருமானே! பெண்ணொருபாகம் கொண்ட தேவரீர், கவர்த்த புன்சடையில் வருத்தமுற்ற பிறையை அதனை விழுங்கக் காத்திருக்கும் பாம்புடன் ஒருங்கு வைத்தருளியது என்னையோ? (நலிவாரும் மெலிவாரும் உணர்வொன்றா நயத்தலினால் முதல்வனைச் சாரும்போது நலிவும் மெலிவும் இல்லையாகும் என்பது கருத்து).

---

பைதல் – துன்பம். இளையது

**1159.** துஞ்சும் போதுந் துயிலின்றி யேத்துவார்
வஞ்சின் றிவலங் கொண்மறைக் காடரோ
பஞ்சின் மெல்லடிப் பாவை பலிகொணர்ந்
தஞ்சி நிற்பது மைந்தலை நாகமே. 6

உறங்கும்போதும் உறங்காது, உள் உணர்வோர் வஞ்சனையின்றி வலஞ்செய்யும் மறைக் காட்டுறையும் பெருமானே! பஞ்சனைய மெல்லடி உடைய இப்பாவை பலி கொணர்ந்து தேவரீர் பாத்திரத்தில் இடாது அஞ்சி நிற்பதற்குக் காரணம் தேவரீர் அணிந்துள்ள ஐந்தலை நாகமே, அதனை ஏன் அணிந்தீர்!

---

**5, 6, 7, 8** திருப்பாட்டுக்கள் அகப்பொருட் சுவைபட அமைந்தன.

**1160.** திருவி னார்செல்வ மல்கு விழாவணி
மருவி னார்வலங் கொண்மறைக் காடரோ
உருவி னாளுமை மங்கையொர் பாகமாய்
மருவி னாய்கங்கை யைச்சென்னி தன்னிலே. 7

அருள் திருவுடையாரின் செல்வம் நிறைந்து விளங்கித் தோன்றும் விழாக்களால் அழகு பெற்றதும், நெஞ்சு நும்பால் மருவினார் வலம் செய்வதும் ஆகிய மறைக்காட்டுறையும் பெருமானே! நல்ல அழகிய உருவமுடைய திருவருளாகிய சிற்சத்தியாகிய மங்கையை ஒரு பாகமாக மருவியதோடு, கங்கையைச் சடையிற் சூடியுள்ளது என்னையோ?

---

**1161.** சங்கு வந்தலைக் குந்தடங் கானல்வாய்
வங்க மார்வலங் கொண்மறைக் காடரோ
கங்கை செஞ்சடை வைப்பது மன்றியே
அங்கை யில்லன லேந்த லழகிதே. 8

வங்கம் – கப்பல்.
தடங்கானல் – பெரிய கடற்கரைச் சோலை

x x x x x x x x x x x x x 9

சங்குகளை அலைகள் கரையிலே கொண்டு வந்து உலவவிடும் கடற்கரைச் சோலையிடத்துக் கப்பல்கள் வந்து வலங்கொள்வன போன்று வரிசை கொள்ளும் மறைக்காட்டுறையும் பெருமானே! தேவரீர் கங்கையைச் செஞ்சடையில் வைப்பதும் அன்றி அகங்கையில் அனலையும் ஏந்தல் அழகியதேயோ?

---

**1162.** குறைக்காட் டான்விட்டட தேர்குத்த மாமலை
இறைக்காட் டியெடுத் தான்தலை யீரைந்தும்
மறைக்காட் டான்இறை யூன்றலும் வாய்விட்டான்
இறைக்காட் டாயெம் பிரானுனை யேத்தவே. 10

குறைக்காட்டான் – குறைக்கு ஆள் தான் எனப் பிரித்து, குற்றங்களுக்கு ஆளாயிருப்பவன் இராவணன் என்றும் கொள்ளலாம்.

இறை – இறப்பு.
இறைவனை ஏத்துவோர்க்கு இறப்பொடு பிறப்பில்லை.

தன்பாலுள்ள குறையைக் காட்டதவனாகிய இராவணன் ஏறிவந்த தேர் வழிச் செல்லுதலைத் தடுத்த திருக்கயிலாய மலையைச் சிறுபோது தன் வலிகாட்டி எடுக்கலுற, அவன் பத்துத் தலைகளும், அழுந்த மறைக்காட்டுப் பெருமானே! நீ சிறிது திருவிரல் ஊன்றுதலும், வாய்விட்டரற்றினன். எம்பெருமானே! நீ அடியேன் உனை ஏத்துதலால் எனக்கு இறப்பைக் காட்ட மாட்டாய்; இறவாத இன்ப அன்பே காட்டுவாய் என்றபடி.

## 10. திருமறைக்காடு

(கண்களால் உமது திருக்காட்சியைக் காணத் திருக்கதவைத் திறந்தருள்வீராக என வேண்டியது இத்திருப்பதிகம்)

ப.தொ.எண் : 123

பதிக எண் : 10

1163. பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. 1

பங்கரோ! ஓகாரம் விளிவேற்றுமை உருபு. கண்ணால் கண்டு விளிக்க இயலாத நிலையில், சேய்மை விளியாக ஓகாரத்தால் விளித்தார். பதிகம் முழுவதும் இவ்வாறே பாடுகிறார்.

பண்ணையொத்த மொழியாளாகிய உமை அம்மையை ஒருபங்கிற் கொண்டவரே! மண்ணுலகத்தவர் வலம் புரியும் மறைக்காட்டுறையும் பெருமானே! அடியேன் என் கண்களால் உம்மைக் காணுமாறு, வேதங்களால் அடைக்கப் பெற்ற இக்கதவினைத் திண்ணமாகத் திறந்து அருள் செய்வீராக.

1164. ஈண்டு செஞ்சடை யாகத்து ளீசரோ
மூண்ட கார்முகி லின்முறிக் கண்டரோ
ஆண்டு கொண்டநீ ரேயருள் செய்திடும்
நீண்ட மாக்கத வின்வலி நீக்குமே. 2

ஆகத்தில் ஈண்டிய செஞ்சடை கொண்ட இறைவரே! தொகுதியாய கருமுகிலின் நிறத்தையும் தளிரின் ஒளியையும் உடைய மணிகண்டரே. அடியேனை ஆண்டுகொண்ட நீரே அருள் செய்வீராக; நீண்ட இப்பெருங் கதவின் வலியினை நீக்குவீராக.

1165. அட்ட மூர்த்திய தாகிய அப்பரோ
துட்டர் வான்புரஞ் சுட்ட சுவண்டரோ
பட்டங் கட்டிய சென்னிப் பரமரோ
சட்ட விக்கத வந்திறப் பிம்மினே. 3

அட்டமூர்த்தி – ஐம்பூதம், சூரியன், சந்திரன், உயிர் ஆகிய எண்வகை வடிவு. சுவண்டு – அடையாளம்

அட்டமூர்த்தியாகிய எந்தையே! தீயவர் புரங்களைச் சுட்ட உயர்ந்த வெண்ணீறணிந்த தேவரே! பட்டமாகக் கட்டிய சடைமுடியுள்ள பரமரே! செவ்வையாக இக்கதவினைத் திறப்பித் தருள்வீராக.

1166. அரிய நான்மறை யோதிய நாவரோ
பெரிய வான்புரஞ் சுட்ட சுவண்டரோ
விரிகொள் கோவண ஆடைவிருத்தரோ
பெரிய வான்கத வம்பிரி விக்கவே. 4

அருமை உடைய நான்மறை அருளிய நாவுடையவரே! பெரிய புரம் எரியுண்ணுமாறு சுட்ட உயர்ந்த தேவரே! மறைகளால் ஆன விரிந்த கோவண ஆடை கொண்ட மிகப்பழையவரே! பெரிய இக்கதவினைப் பிரித்தருள்வீராக.

| | | | |
|---|---|---|---|
| 1167. | மலையில் நீடிருக் கும்மறைக் காடரோ<br>கலைகள் வந்திறைஞ் சுங்கழ லேத்தரோ<br>விலையில் மாமணி வண்ண வுருவரோ<br>தொலைவி லாக்கத வந்துணை நீக்குமே. | 5 | திருமலையைப் போல் அழியாதிருக்கும் மறைக்காட்டுறையும் பெருமானே! கலைகள் வந்திறைஞ்சிக் கழல் ஏத்தப்படுபவரே! விலைமதிப்பற்ற செம்மணிவண்ணத் திருமேனியரே! தொலைவில்லாத இக்கதவுகளைத் திறந்தருள்வீராக. |
| 1168. | பூக்குந் தாழை புறணி யருகெலாம்<br>ஆக்குந் தண்பொழில் சூழ்மறைக் காடரோ<br>ஆர்க்குங் காண்பரி யீரடி கேளுமை<br>நோக்கிக் காணக் கதவைத் திறவுமே. | 6 | ஊர்ப்புறத்து நீரின் மருங்கெலாம் தாழை பூப்பதும், தண்பொழில் சூழ்வதுமாகிய மறைக் காட்டுறையும் பெருமானே! யார்க்குங் காண்டல் அரியீர்! அடிகளே! உமைநோக்கிக் காணும் பொருட்டு இக்கதவைத் திறந்தருள்வீராக! |
| 1169. | வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தரோ<br>அந்த மில்லி யணிமறைக் காடரோ<br>எந்தை நீயடி யார்வந் திறைஞ்சிட<br>இந்த மாக்கத வம்பிணி நீக்குமே. | 7 | வெந்த திருநீற்றுப் பொடியைப் பூசும் மேலானவரே! முடிவில்லாதவரே! மறைக் காட்டுறையும் பெருமானே! எம் தந்தையே! அடியார்கள் நேர்வாயிலில் வந்து இறைஞ்சிடும் பொருட்டு இப்பெருங்கதவம் பிணிக்கப் பட்டிருத்தலை நீக்கித் திறந்தருள்வீராக. |
| 1170. | ஆறு சூடும் அணிமறைக் காடரோ<br>கூறு மாதுமைக் கீந்த குழகரோ<br>ஏற தேறிய எம்பெரு மானிந்த<br>மாறி லாக்கத வம்வலி நீக்குமே. | 8 | கங்கையாற்றைச் சடையிற் சூடும் மறைக் காட்டுறையும் பெருமானே! ஒரு கூற்றை உமைக்கு ஈந்த இளையவரே! விடையேறிய எம் பெருமானே! இந்த மாறுபாடில்லாத கதவின் வலியினை நீக்கித் திறந்தருள்வீராக. |
| 1171. | சுண்ண வெண்பொடிப் பூசுஞ் சுவண்டரோ<br>பண்ணி யேறுகந் தேறும் பரமரோ<br>அண்ண லாதி யணிமறைக் காடரோ<br>திண்ண மாக்கத வந்திறப் பிம்மினே. | 9 | வெண்பொடிச் சுண்ணம் பூசும் உயர்ந்த தேவரே! அழகுசெய்து ஏற்றின்கண் ஏறி உயர்ந்து தோன்றும் பரமரே! அண்ணலே! ஆதியே! அணிமறைக் காட்டுறையும் பெருமானே! திண்ணமாக இக்கதவினைத் திறப்பித் தருள்வீராக. |
| 1172. | விண்ணு ளார்விரும் பியெதிர் கொள்ளவே<br>மண்ணு ளார்வணங் கும்மறைக் காடரோ<br>கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்<br>திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. | 10 | விண்ணுலகத்தவர் விரும்பி எதிர்கொண்டு இன்புறுமாறு மண்ணுலகத்தவர் சென்று வணங்கியெழும் மறைக்காட்டுறையும் பெருமானே! கண்ணினால் உமைக் காணுவதற்காகக் கதவினைத் திண்ணமாகத் திறந்து அருள் செய்வீராக. |

1173. அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே. 11

பெருகும் புன்னைகள் சூழ்ந்த மறைக் காட்டுறையும் பெருமானே! இராவணனை விரலால் அடர்த்திட்ட நீர் எளியேன் பால் இரக்கம் கொஞ்சமும் இல்லாதவராயுள்ளீர்! எம்பெருமானீரே! விரைந்து, இக்கதவினைத் திறப்பித்தருள்வீராக.

வண்டுகள் பாடுவதற்குப் பரிசாகப் புன்னைகள் கூட தேன் சுரந்து கொடுக்கின்றன.

ஆனால், தான் இவ்வளவு பாடியும், சுவாமி வரம் கொடாமல் இருப்பது, அவரது இரக்கமற்ற தன்மையா? என்று நிறைவுப்பாடலில் வினவக் கதவு திறந்தது. திறந்தருள் செய்ம்மினே (1) வலி நீக்குமே (2) திறவுமே (6) என்று 10 பாடல்களிலும், தன்வினைச் சொற்களாகக் கூறி, 11 ஆவது பாடலில் திறப்பிம்மினே என பிறவினை முடிபால் கூறுகிறார். நீரே செய்தருளாவிடினும் உம் எண்ணிறந்த கணங்களுள் ஒருவரால் இதனைச் செய்து வைப்பீர் என்பது கருத்தாகும்.

## 11. திருமீயச்சூர்

பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை ஒவ்வொரு சிவாலயமும் திருப்பணி செய்யப்பட்டுக் குடமுழுக்கு அல்லது கும்பாபிடேகம் செய்யப்பட வேண்டுமென்று ஆகமங்கள் சொல்வதாக வடமொழியினர் சொல்கின்றார்கள். ஆனால் தமிழ்த் திருமுறைகளிலோ, சாத்திரநூல்களிலோ இதற்கு ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை. கோயிலின் கட்டிட நிலையைப் பொறுத்து அக்கோயிலின் திருப்பணியை முடிக்கச் சில மாதங்கள் முதல் பல ஆண்டுகள் வரை ஆகலாம். அவ்வாறு திருப்பணிகள் செய்ய வேண்டுமானால் சிற்பிகள், கொத்தனார்கள், தச்சர்கள் போன்றோர் கருவறைக்குள் நுழைந்தும், விமானங்கள், கோபுரங்கள் மேலே ஏறியும் பழுது பார்ப்புப் பணிகளைப் பார்க்கவேண்டும். அதற்கேதுவாகத் திருவருள் நிலையங்களாக விளங்கும் அக்கோயில்களில் உள்ள இறைச்சக்தித் தன்மையைக் கலச நீர்களின் மூலமாக அத்திக்கட்டைகள், கண்ணாடி போன்றவற்றுக்குச் சில கிரியைகள் செய்து மாற்றுவார்கள். விமான / கோபுர சக்திகளை மாற்றுவதை விமான, கோபுரப் பாலாலயமென்றும், திருவுருக்களின் சக்திகளை மாற்றுவதைத் திருவுருவப் பாலாலயமென்றும் இயம்புவர். பாலாலயச் சக்திபெற்ற மேற்காண் மூர்த்தங்களைக் கொண்டு சென்று தற்காலிகமாகப் பூசை செய்வதற்காக வைக்கப்படும் கோயில்கள்தான் இளங்கோயில்கள் அல்லது பாலாலயம் என்று சொல்லப்படுகின்றன. கோயில் முழுதும் சிதிலமடைந்து விட்டால் மூர்த்தங்களையே சத்தி மாற்றத்துக்குப் பின் பெயர்த்தெடுத்தும் பாலாலயத்தில் வைப்பார்கள். மூலம், பிரதிபிம்பம் எது வேண்டுமானாலும் வைக்கலாம். இருபத்தொன்றாம் நூற்றாண்டில் தற்போது பாலாலயம் அல்லது இளங்கோயில் என்றால் அது ஒரு தற்காலிக அமைப்பாக 16 அடி நீளம் / அகலம் அல்லது 10 அடி நீள / அகலம் உள்ள கொட்டகையைக் கோயிலின் வடகிழக்கு மூலையில் அமைத்து பாலாலய மூர்த்தங்களை அதற்குள் தாபித்துப் பூசை செய்து வருகிறார்கள். சிவன், சத்தி, பரிவாரம், விமானம், கோபுரம், கண்ணாடி பிம்பங்கள் அனைத்தும் அதனுள்ளே இருக்கும். திருப்பணிகள் முடிந்தபின் குடமுழுக்கு சமயத்தில் அனைத்து மூர்த்தங்களும் யாகசாலைகள் வழி, கலசங்கள் மூலம் மூலாலயம் சென்று விடுவர். அவ்வாறு குடமுழுக்கு முடிந்தவுடன் பாலாலயத்தைக் கலைத்தும் விடுவார்கள். எனவே பாலாலயம் என்பது ஒரு தற்காலிக அமைப்பாகும்.

ஆனால் திருமீயச்சூர் இளங்கோயில் ஒரு நிரந்தரமான அமைப்பாக இன்றும் உள்ளது. எனவே நாயன்மார்கள் இருந்த காலத்தில் வழங்கப்பட்ட இளங்கோயிலுக்கும் இன்றைய பாலாலயக் கோயில்களுக்கும் ஏதோ வேறுபாடு உள்ளது. நாவரசர் பாடிய இளங்கோயில் எது என்று அடியார்கள் ஆய்வு செய்ய வேண்டும்.

நாவரசர் வேறு எந்தப் பதிகத்திலும், கோயில் வழிபாட்டிலும் இளங்கோயிலைப் பற்றிப் பாடவில்லை. மற்ற மூவரும் அதைப்பற்றி எந்தப் பாடலிலும் சொல்லவில்லை. நால்வரும் எந்த இடத்திலும் கும்பாபிடேகம், குடமுழுக்கு இவற்றைப் பாடவில்லை. அவற்றைப் பற்றிய அடையாளங்கள் சிறிது இருந்திருந்தாலும் அவர்கள் பாடியிருப்பார்களே ? அதனால் அவர்கள் காலத்தில் குடமுழுக்கு, கும்பாபிடேகம் போன்றவை நடக்கவில்லையா ?இவையெல்லாம் 10 / 12 நூற்றாண்டுகளுக்குப் பின் வந்தவையா ? இவற்றிற்கெல்லாம் அடியார்களாகிய நாம் விடை காணவேண்டும்.

**ப.தொ.எண் : 124** **பதிக எண் : 11**

| | | |
|---|---|---|
| 1174. தோற்றுங் கோயிலுந் தோன்றிய கோயிலும்<br>வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்<br>கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையரற்<br>கேற்றங் கோயில்கண் டீரிளங் கோயிலே.<br><br>"இளங்கோயிலே" என்பது பதிக மகுடம். | 1 | இந்நாள்வரை தோன்றிய கோயில்களும், இனித் தோன்றும் கோயில்களும், வேற்றுக் கோயில்களும் பலவுளவேனும், கூற்றுவனைத் தடிந்த குளிர்ந்த புன்சடை உடைய அரனுக்கு மீயச்சூர் இளங்கோயிலே ஏற்றம் உடைய கோயிலாகும்; காண்பீராக. |
| 1175. வந்த னையடைக் கும்மடித் தொண்டர்கள்<br>பந்த னைசெய்து பாவிக்க நின்றவன்<br>சிந்த னைதிருத் துந்திரு மீயச்சூர்<br>எந்த மையுடை யாரிளங் கோயிலே. | 2 | திருவடிக்கு வழிபாடு செய்தலையே உள்ளத் தடைக்கும் தொண்டர்கள் தம் நெஞ்சைக் கட்டுப்படுத்திப் பாவிக்க நின்றவனும், எம்மை அடிமையாக உடையானும் விளங்கியருளும் திருமீயச்சூர் இளங்கோயில் வழிபடுவார் சிந்தனையைத் திருத்தவல்லது ஆகும். |
| 1176. பஞ்ச மந்திரம் ஓதும் பரமனார்<br>அஞ்ச ஆனை யுரித்தன லாடுவார்<br>நெஞ்சம் வாழி நினைந்திரு மீயச்சூர்<br>எந்த மையுடை யாரிளங் கோயிலே. | 3 | நெஞ்சமே! திருவைந்தெழுத்தாகிய மந்திரம் ஓதும் பரமனும், ஆனை அஞ்சுமாறு உரித்தவனும், அனல் ஆடுவானும், திருமீயச்சூர் இளங்கோயிலில் எம்மை உடையானுமாகிய பெருமானையே நினைந்திரு; அந்நினைப்பால் வாழ்வாய். |
| 1177. நாறு மல்லிகை கூவிளஞ் செண்பகம்<br>வேறு வேறு விரித்த சடையிடை<br>ஆறு கொண்டுகந் தான்திரு மீயச்சூர்<br>ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே. | 4 | மணம் வீசும் மல்லிகை, கூவிளம், செண்பகம் முதலிய மலர்களை வேறுவேறாக விரித்த சடையிடை ஆற்றோடு கொண்டுகந்தான் திருமீயச்சூரின் இளங்கோயிலில் விடைமேற் கொண்டு உகந்த பெருமானே! (அடியார் சாத்தும் மல்லிகை முதலியவற்றை முடியில் ஏற்று மகிழ்ந்து அருள்புரிவன் என்பது கருத்து) |

| | |
|---|---|
| 1178. வெவ்வ வண்ணத்து நாகம் வெருவவே<br>கவ்வ வண்ணக் கனல்விரித் தாடுவர்<br>செவ்வ வண்ணந் திகழ்திரு மீயச்சூர்<br>எவ்வ வண்ணம் பிரானிளங் கோயிலே. 5<br><br>பாம்பு, பிறை போன்ற பகைப்பொருள்களை ஒருங்குடன் கொண்டு அவ்வவை தத்தம் எல்லை கடவாதபடி காக்கும் இயல்பு அவர் இயல்பு. | வெம்மையான வண்ணத்தையுடைய நாகம் அஞ்சும்படியாக எப்பொருளையும் கவ்விக் கொள்ளும் வண்ணத்தையுடைய கனல் விரித்தாடுவார், திருமீயச்சூர் இளங்கோயில் செவ்வண்ணந்திகழ் மேனியுள்ள பிரானது வண்ணங்கள் எப்படிப்பட்டவை! |
| 1179. பொன்னங் கொன்றையும் பூவணி மாலையும்<br>பின்னுஞ் செஞ்சடை மேற்பிறை சூடிற்று<br>மின்னு மேகலை யாளொடு மீயச்சூர்<br>இன்ன நாள்அக லாரிளங் கோயிலே. 6 | திருமீயச்சூர் இளங்கோயிலில் ஒளிவிடும் மேகலை அணிந்த உமையம்மையோடு எல்லா நாளினும் அகலாது உள்ள பெருமான் பின்னிக்கொண்டுள்ள சடைமேல் பிறையுடன் சூடியது, பொன்போன்ற கொன்றைக் கண்ணியும் பிற பூக்களால் அலங்கரித்துத் தொடுக்கப்பட்ட அழகிய மாலையும் ஆகும். |
| 1180. படைகொள் பூதத்தன் பைங்கொன்றைத் தாரினன்<br>சடைகொள் வெள்ளத்தன் சாந்தவெண் நீற்றினன்<br>விடைகொ ளூர்தியி னான்திரு மீயச்சூர்<br>இடைகொண் டேத்தநின் றாரிளங் கோயிலே. 7 | பூதங்களைப் படையாகக் கொண்டவனும், புதிய கொன்றை மாலையனும், சடையில் வெள்ளம் உடையவனும், சாந்த வெண்ணீற்றனும், விடையூர்தியானும், திருமீயச்சூர் இளங் கோயிலின்கண் ஏற்ற சமயம் தெரிந்து ஏத்துமாறு நின்றவனும் இறைவனேயாவன். |
| 1181. ஆறு கொண்ட சடையினர் தாமுமோர்<br>வேறு கொண்டதொர் வேடத்த ராகிலும்<br>**கூறு கொண்டுகந் தாளொடு மீயச்சூர்**<br>**ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே.** 8<br><br>அவள் கூறு கொண்டு உகந்தாள்.<br>இவர் ஏறு கொண்டு உகந்தார். | சடையினில் ஓர் ஆறு கொண்ட இயல்பினரும், வேறு வேறு கொண்ட வேடத்தராமியல்பினரும், கூறு கொண்டுகந்த அம்மையொடும் திருமீயச்சூர் இளங்கோயிலின்கண் ஏறுகொண்டு உகந்தாரேயாவர். |
| 1182. வேதத் தானென்பர் வேள்வியு ளானென்பர்<br>பூதத்தா னென்பர் புண்ணியன் தன்னையே<br>கீதத் தான்கிள ருந்திரு மீயச்சூர்<br>ஏதந் தீர்க்கநின் றாரிளங் கோயிலே. 9 | புண்ணியனாகிய இறைவனை வேதத்தான் என்றும் வேள்வியுளான் என்றும், பூதத்தான் என்றும் கூறுவர். கீதம் கிளரும் திருமீயச்சூரில், இளங்கோயிலின்கண் அடியவர் ஏதந்தீர்க்க நின்ற இறைவரேயாவர். |

| | |
|---|---|
| **1183.** கடுக்கண் டன்கயி லாய மலைதனை<br>எடுக்க லுற்ற இராவணன் ஈடற<br>விடுக்க ணின்றி வெகுண்டவன் மீயச்சூர்<br>இடுக்கண் தீர்க்கநின் றாரிளங் கோயிலே. 10 | விடமுண்டகண்டனும், கயிலாய மலையினை எடுக்கலுற்ற இராவணன் ஈடற விடுதற்கேற்ற இடமில்லையாம்படி வெகுண்டவனும் மீயச்சூரில் இளங்கோயிலின்கண் இடுக்கண் தீர்க்க நின்ற இறைவனேயாவன். |

## 12. திருவீழிமிழலை

ப.தொ.எண் : 125 பதிக எண் : 12

| | |
|---|---|
| **1184.** கரைந்து கைதொழு வாரையுங் காதலன்<br>வரைந்து **வைதெழு வாரையும் வாடலன்**<br>நிரந்த பாரிடத் தோடவர் நித்தலும்<br>விரைந்து போவது வீழி மிழலைக்கே. 1<br><br>கடவுள் இல்லை என்பாரும் தன் மக்களே யாதலின் தான் அவரை வாட்டாது தாமே நாளடைவில் உணர வைப்பன். விரைந்து போவது – அன்பர் வழிபடும்போது நேர்பட நின்று வழிபாட்டை ஏற்றுக்கொள்ளுதல். | மனங்கரைந்து உருகிக் கைதொழுவாரையும் காதலித்து அருள்வன்; தன்னை விலக்கி இகழாநின்று எழும் புறச்சமயத்தாரையும் வாடச்செய்யான். இத்தகைய அவன் வரிசையாகிய பூதகணங்களோடு நித்தலும் விரைந்து போவது வீழிமிழலைத் தலத்திற்கே. (வேண்டுதல் வேண்டாமையிலானாகிய முதல்வன், அந்தணர் வழிபடுதலால் அவர்க்கு அருள்புரிய விரைந்து தோன்றுவான் என்றபடி) |
| **1185.** **ஏற்று வெல்கொடி** யீசன்ற னாதிரை<br>நாற்றஞ் சூடுவர் நன்னறுந் திங்களார்<br>நீற்றுச் சந்தன வெள்ளை விரவலார்<br>வேற்றுக் கோலங்கொள் வீழி மிழலையே. 2 | பிற கொடிகளை வென்று மேம்பட்ட ஆனேற்றுக் கொடியையுடைய ஈசன் தனக்குரிய ஆதிரை நாளில், தான் வேறு வேறு கோலங் கொண்டு காட்சியளித்தற்கு இடமாகிய திருவீழி மிழலையில் தாம் சந்தனம் எனக்கொண்டு பூசிவந்த வெள்ளை நீற்றைக் கொள்ளாது மணமுள்ள பொருள்களைச் சூடிக்கொள்வர்; மிக நல்ல மதியைச் சூடுவோராகவும் உளர். சந்தன வெள்ளை நீற்றை விரவல் உடையராய் (அணிந்து) நாற்றம் சூடுவர் (நறுமலர் அணிவர்) என்றுரைப்பினும் அமையும். |
| **1186.** புனைபொற் சூலத்தன் போர்விடை யூர்தியான்<br>வினைவெல் நாகத்தன் வெண்மழு வாளினான்<br>நினைய நின்றவ னீசனை யேயெனா<br>வினையி லார்தொழும் வீழி மிழலையே. 3 | சூலம் உடையவனும், விடை ஊர்தியனும், வினைகளை வென்றவனும், நாகத்தைப் பூண்டவனும், வெண் மழுவாள் உடையவனும், அடியவர்கள் ஈசனே என்று நினைய நின்றவனும், இருவினையற்ற மேலோர் தொழும் வீழிமிழலை இறைவனே. |

| | | | |
|---|---|---|---|
| 1187. | மாடத் தாடு மனத்துடன் வைத்தவர்<br>கோடத் தார்குருக் கேத்திரத் தார்பலர்<br>பாடத் தார்பழிப் பார்பழிப் பல்லதோர்<br>வேடத் தார்தொழும் வீழி மிழலையே. | 4 | முதல்வனை மாடத்தும் (விமானத்தும்), ஆடும் மனத்தும் உடன் வைத்தவராகிய திருமாலும், வேத கோசம் செய்யும் பிரமனும், குரு சேத்திரத்தார் பலரும் (பாண்டவர்), வேதத்தின் மூல பாடம் பேணும் அந்தணர்களும், பழிப்பார் கூறும் பழிப்பு அல்லதாகிய திருவேடம் பூண்ட அடியார்களும், தொழும் (பதி) திருவீழி மிழலையே. |
| 1188. | எடுத்த வெல்கொடி யேறுடை யான்தமர்<br>உடுப்பர் கோவண முண்பது பிச்சையே<br>கெடுப்ப தாவது கீழ்நின்ற வல்வினை<br>விடுத்துப் போவது வீழி மிழலைக்கே. | 5 | உயர்த்துப் பிடித்த இடபக் கொடியையுடைய சிவபிரானின் அடியவர்கள், கோவணமே உடுப்பது; பிச்சை உணவே உண்பது; கீழ்நின்ற வல்வினைகளையே கெடுப்பது; பந்த பாசங்களை விடுத்துப் போவது வீழிமிழலைக்கே. |
| 1189. | குழலை யாழ்மொழி யாரிசை வேட்கையால்<br>உழலை யாக்கையை யூணு முணர்விலீர்<br>தழலை நீர்மடிக் கொள்ளன்மின் சாற்றினோம்<br>மிழலை யானடி சாரவிண் ணாள்வரே. | 6 | குழலையும், யாழையும் போன்ற மொழியார் வேட்கையினால் உழலும் உடலைத் தீநெறியின்கண் ஊன்றும் நல்லுணர் வற்றவர்களே! நெருப்பை நீர் மடியின்கண் கொண்டு கெடாதீர்; பன்முறையினும் சாற்றினோம். மிழலையான் திருவடி சார விண்ணாளும் திறம் பெறலாம். |
| 1190. | தீரன் தீத்திர என்சடைத் தங்கிய<br>நீர னாடிய நீற்றன்வண் டார்கொன்றைத்<br>தாரன் மாலையன் தண்நறுங் கண்ணியன்<br>வீரன் வீழி மிழலை விகிர்தனே. | 7 | அறிஞனும், தீத்திரளைக் கையிற்கொண்டு ஆடுபவனும், சடைத் தங்கிய கங்கையனும், ஆடிய திருநீற்றனும், வண்டார்ந்த கொன்றைத்தாரும், குளிர்ந்து மணக்கும் கண்ணியும் மாலையும் உடையவனும், புலன்களை வென்று விளங்கும் வீரனும் வீழிமிழலையிலுள்ள விகிர்தனே. |
| 1191. | எரியி னாரிறை யாரிடு காட்டிடை<br>**நரியி னார்**பரி யாமகிழ் கின்றதோர்<br>பெரிய னார்தம் பிறப்பொடு சாதலை<br>விரியி னார்தொழும் வீழி மிழலையே.<br><br>நரியினார் – இழிந்தவர். | 8 | எரியைக் கையால் ஏந்தியவரும், யாங்கணும் தங்கி நிற்போரும், நரிகளைப் பரிகளாகக் கொண்டு இடுகாட்டிடை ஆடுதலை மகிழ்கின்ற பெரியரும் (மகாதேவனும்) தங்கும் இடம் பிறப்போடு கூடிய இறப்பை அகல நினைப்பார் தொழும் தலமாகிய வீழிமிழலை ஆகும். |

**1192.** நீண்ட சூழ்சடை மேலொர் நிறைமதி
காண்டு சேவடி மேலொர் கனைகழல்
வேண்டு வாரவர் வீதி புகுந்திலர்
மீண்டும் போவது வீழி மிழலைக்கே. 9

நீண்டு சூழ்ந்த சடையின்மேல் ஓர் நிலாமதியும், சேவடியின்மேல் கூப்பிடுதூரம் ஒலிக்கும் ஓர் கழலும் கொண்டு, வேண்டுவாராகிய யாம் உள்ள வீதியுட் புகாது வீழிமிழலைக்கே மீண்டு போவர்; இதுவோ அவர்தம் அருள்!

**1193.** **பாலை யாழொடு செவ்வழி பண்கொள**
மாலை வானவர் வந்து வழிபடும்
ஆலை யாரழ லந்தண ராகுதி
வேலை யார்தொழும் வீழி மிழலையே. 10

தில்லை வாழ் அந்தணர், மிழலை வேதியர், அழுந்தை மறையோர் இவர்களெல்லாம் நாளும் வேள்வி, ஆகுதி உள்ளிட்ட சிறப்பான சிவபூசை செய்தவர்கள். இவையெல்லாம் நம் தமிழகத்தின் சிவ வழிபாட்டை பறைசாற்றுகின்றன.

மாலைக்காலத்து வானவர் வந்து பாலை யாழொடு செவ்வழிப் பண் சுமந்த பாடல்களைப் பாடி வழிபடும் இடம். அந்த மாலைக்காலத்தே அந்தணர் நிறைந்த நெருப்பை வளர்த்து ஆகுதி செய்யும் தொழிலராய் வழிபடும் திருவீழிமிழலையே ஆம். மாலைக்காலத்தே சுரர்பாடப் பூசுரர் வேட்டு வழிபடும் இடம் என்பது கருத்து. தமிழனின் இசைநுட்பத்தைப் பறைசாற்றும் இப்பாடலின் முதலடிக்கு விளக்கம் கீழ்க்காண் கட்டுரையில் தரப்பட்டுள்ளது.

## அப்பரடிகளும் இசையும்

**பண்ணாராய்ச்சி வித்தகர், ஏழிசைத் தலைமகன் குடந்தை ப. சுந்தரேசன்.**

அப்பரடிகள், தமிழோடு இசை பாடல் மறந்தறியேன் என்று, அழுத்தம் திருத்தமாய் அருளிப் பாடிய அன்புருவாயவர். இறைவனை இசையானை எனவும் பாடினார். பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி எனவும் போற்றினார்.

அப்பூதியடிகளின் மூத்த திருமகனாராம் ஒரு திருநாவுக்கரசு விடந் தீண்டி இறந்து கிடந்த ஞான்றும், ஏழு என்ற எண்ணலங்காரம் வருமிடத்துங்கூட ஏழு கொலாம் இசை யாக்கின தாமே என்றருளினார். பண்ணாகிப் பாடலாகிப் பரஞ்சுடராகிச் சென்றடிகள் நின்றவாரே எனவும் திகைத்தார். இசைகளாலாவது பண் என்பதனை, பயிற்சி முறையாலும், திருவருளாலும் உணர்ந்தவர் அப்பர்.

சித்த நிலை திரியாத அப்பர் பெருமான், தங் கையில் யாழும் வைத்தார் எனவும் பண்ணார்ந்த வீணை பயின்ற விரலவனே என்றும், இறையெனப்படும் சிவன்தன்னையே பல்வேறு வகையானும் உணர்கின்றாரன்றோ!

அத்தகு அப்பர் பெருந்தகை, பேதமிலா ஓருணர்விற் பெரியவர், அன்புறு பத்தி உருவான வாகீசர், முன் உணர்வின் முயற்சியினால் பல்வேறு திருப்பதிகங்களைப் பரமன் முன்னர் அருளிச் செய்தவர். நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி அரசாய் அமர்ந்தவர். அத்தகைய அவர் அருளிய, மேற்காண் திருப்பதிகக் குறுந்தொகைப் பாடலில் ஒப்பற்றதோர் இசை நுண்மை புலப்படுமாறு அருளியிருப்பதனை விளக்குவதே இக்கட்டுரையின் குறிக்கோள். அவர் திருவீழிமிழலையில்,

## பாலை யாழொடு செவ்வழிப் பண்கொள

என்றருளியிருப்பதே, பண்டைய இசைத் தமிழ்ப் பாலை நுண்மை ஒன்றினைப் புலப்படுத்துவதாகும். எளிமை பொருந்தப் பாடியுள்ளார். பாலை என்ற சொல் இயற்றமிழில் வேறாகவும் இசைத்தமிழில் வேறாகவும் பொருள் தந்து நிற்கும். அச்சொல்லின் பகுதி பால் விகுதி (பால் – ஐ = பாலை) இசைத் தமிழிலும் பாலை யென்றால் பகுதி யென்ற பொருளினோடு பகுதி பகுதி அறிய, பகுதி பகுதியாகப் பகுத்துக் காண்டல் எனும் பொருளில் அமைவுறுவதை அறியலாம்.

### இசைத் தமிழ் முதற்பாலைகள் ஏழு

1. மேற்செம்பாலை
2. செம்பாலை
3. படுமலைப்பாலை
4. செவ்வழிப்பாலை
5. அரும்பாலை
6. கோடிப்பாலை
7. விளரிப்பாலை

இவற்றை ஒவ்வொரு பாலைக்குரிய முதலிசைப் பெயரோடும் எடுத்துக் கூறப்பெறுதல் வேண்டும். இவை யாவும் மிகப் பழைய வழக்கே.

1. தாரம் தாரமாயது மேற்செம்பாலை
2. குரல் குரலாயது செம்பாலை
3. துத்தம் துத்தமாயது படுமலைப்பாலை
4. கைக்கிளை கைக்கிளையாயது செவ்வழிப்பாலை
5. உழை உழையாயது அரும்பாலை
6. இளி இளியாயது கோடிப்பாலை
7. விளரி விளரியாயது விளரிப்பாலை

இவற்றை, ஒவ்வொன்றையுமே குரலாயது எனக் கூறும் வழக்கும் உண்டு. குரலாயது என்பது முதலாக எடுக்கப்படுவது எனும் பொருளிலும் அவ்விடத்து வழங்கும்.

பல்வேறு பொருளில் வரும் பாலை என்ற சொல்லினை, அப்பர் பெருமான், பாலை நகுபனி, பாலையாடுவர் என்னும் பாட்டின் முதற்சொல்லாகப் பாட எடுத்துள்ளார். இன்னும் ஓரிடத்தே, பாலையாழ் மொழியாளவள் என்றும் குறித்துப் பாடியிருப்பதனை நன்கு ஓர்ந்தறியலாம்.

ஏழு பாலைகளையும் இசைப் பெயர்களுடனும் அலகு முறை என்பவற்றினுடனும் அட்டவணைப்படுத்தி அறிதல் வேண்டும். அத்துடன் அப்பர் திருப்பதிக இசை நுண்மையையும் குறிப்பாம்.

## 1. தாரங்குரலாய மேற்செம்பாலை

இக்காலம் மேச கல்யாணி

| இசை | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 8 | 12 | 13 | 17 | 21 |

## 2. குரல் குரலாய செம்பாலை

இக்காலம் அரி கம்போதி

| இசை | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 8 | 9 | 13 | 17 | 18 |

இப்பாலையே அப்பர் பெருமான் அருளிப் பாடிய திருத்தாண்டகச் செழும் பதிகங்களைப் பாடுதற்குரிய ஒரு மரபினைப் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றது.

செம்பாலை இக்காலம் ஹரிகம்போதி எனப்படும்.

குரல் குரலாய செம்பாலையினை உழை முதலாக எடுத்து, அதனை எடுத்தலில் வலிவுநிலைக் குரல் வரையும், படுத்தலில் மெலிவுநிலைக்குரல் வரையும் பாடப்பெறுவது கொல்லிப் பண்ணாகும். கொல்லிப் பண்ணையே செம்பாலையாகவும், கொல்லிப்பண் அரும்பாலையாகவும், அரும்பாலை, செம்பாலை, கொல்லி என்ற பண்களைத் தனித்தும், ஒவ்வொன்றினையும் உள்ளடக்கி பாடத்தக்கவாறு, அப்பர் பெருமானது முதற்பதிகமாம் கூற்றாயினவாறு, கொல்லிப் பண்ணிலமைந்துள்ளதும், கொல்லிப் பண்ணையே, குரல் முதலாக எடுத்துப் பாட அது செம்பாலையாதலால் அப்பர் பெருமானின் திருத்தாண்டகப் பாடல்கள் செம்பாலையில் பாடப்பெறுதல் வேண்டுமென்பதும் நன்கே அறிந்து, தெரிந்து, உணர்ந்து உளங்கொளல் வேண்டும்.

கூற்று எனக் கொல்லியில் தொடங்கி, புண்ணியனே, எனச் செம்பாலையில் முடிவுறும் அப்பர் பதிகத்திசை நுட்பம் அளவிடற்கரியதேயாம்.

## 3. துத்தம் குரலாய படுமலைப்பாலை

இக்காலம் நட பைரவி

| இசை | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் | குரல் |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 8 | 9 | 13 | 14 | 18 |

## 4. கைக்கிளை குரலாய செவ்வழிப்பாலை

இக்காலம் ஒரு மேளத்திலும் இல்லை

| இசை | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 1 | 5 | 9 | 10 | 14 | 18 |

இப்பாலையையே செவ்வழிப்பண் எனக் குறிப்பிடுகிறார் நம் அப்பர் பெருமான். இப்பண் (பாலை) பாலையாழாம் அரும்பாலையில் கொள்ளப்பெறுவதை இனியறியலாம். பாடல் வாய்ப்பாக அமையாத இப்பண் கருவியில் மட்டும் இசைத்துக் கேட்க வாய்ப்பாக உளது.

## 5. உழை குரலாய அரும்பாலை

இக்காலம் சங்கராபரணம்

| இசை | உழை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 8 | 9 | 13 | 17 | 21 |

இப்பாலையே, உழைமுதற் கைக்கிளை யிறுவாய்க்கட்டி எனப் பெறும், பண்டைய யாழ்க் கருவிகளுக்கு நரம்புகள் கட்டும் முறையினைப் பொறுத்து அறிவுறுத்துவதாகும்.

தாரத்துழை தோன்றப் பாலையாழ், எனும் பகுதி தாரத்திற்கு ஐந்தாமிசையாகிய உழை முதலாகக் கொள்ளப் பெரும்பாலையாம் அரும்பாலை, பாலையாழ் என்ற கருவியில் கட்டப்பெற்ற நரம்புகளின் வழியே உணரப் பெறுவதென்பதாம்.

சிறப்பான பண்ணமைதியுடைய கருவிப் பெயரைப் பண் பெயராகவும் கூறுவது மிக்க பழைய வழக்காம்.

இப்பாலையையே நம் அப்பர் பெருமானும் பாலையாழ் எனக் குறிப்பிட்டிருப்பது இசை நுண்மை பொருந்தியதாகும். பாலையாழ் என்பது பெரும்பண்ணாகிய அரும்பாலை என்ற பண்ணினைக் குறிப்பதோடு, அப்பண்ணமைதிக்குரிய கருவிப் பெயரையும் தாங்கி நிற்றலால், அரும்பாலைக்குரிய வேறொரு பெயரே பாலையாழ் என்பது நன்கு போதரும்.

இப்பாலையிலேயே அப்பர் பெருமான் அருளிய திருநேரிசைத் திருப்பதிகங்கள், பாடப்பெறும் ஒரு பெருவழக்கு இன்றளவும் தமிழகத்தில் இருப்பது பெரும் பேறாகும். குரல் குரலாய செம்பாலையினை உழை முதலாக எடுத்துப்பாட அரும்பாலையாம்.

குரல் குரலாயது செம்பாலை

உழை குரலாயது அரும்பாலை

குரல் என்ற இசைக்கு நான்காமிசை உழை

உழை என்ற இசைக்கு ஐந்தாமிசை குரல்

அப்பருடைய திருப்பதிகங்களைக் கூற்றாயினவாறு முதல் திருத்தாண்டகப் பதிகங்கள் வரை வலவோட்டாகக் காணுமிடத்து, கொல்லி அரும்பாலை செம்பாலை என்றதொரு அமைதி தோன்றி, திருத்தாண்டகம் முதலாகக் கூற்றாயின வரை இடவோட்டாகக் காணுமிடத்து, செம்பாலை, அரும்பாலை, கொல்லி என்றதொரு இசை நுண்ணமைதி தோன்றுவதனை உன்னித்தறியலாம்.

குரல் என்ற இசை தொடங்கி, நேர்முகமாகவே குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனச் செல்லும் நீர்மையில் திருத்தாண்டகப் பாடல்களையும் அருளி, உழை என்ற இசை தொடங்கி நேர்முகமாகவே உழை, இளி, விளரி, தாரம், குரல், துத்தம், கைக்கிளை எனச் செல்லும் நீர்மையில், திருநேரிசைப் பாடல்களையும் அருளி, உழை என்ற இசையில் எடுத்து உழை, இளி, விளரி, தாரம், குரல் என மட்டும் கொண்டு, உழை, கைக்கிளை, துத்தம், குரல் எனப்படுத்தலிற்படுத்திப்

பாடப் பெறுவதனை கொல்லி எனப்படுவதால், நம் அப்பர் பெருமான், அப்பண்ணின் நிலையை, கொல்லியாம் பண்ணுகந்தார் குறுக்கைவீரட்டனார் என்பதனாலும் புலப்படுத்தி, முன்னரே கூற்றாயினவாறு பாடினார் போலும்.

## 6. இளி குரலாய கோடிப்பாலை

இக்காலம் கரஹரப்பிரியா

| இசை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 5 | 9 | 13 | 17 | 18 |

## 7. விளரி குரலாய விளரிப்பாலை

இக்காலம் அனுமத்தோடி

| இசை | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 1 | 4 | 9 | 13 | 14 | 18 |

பாலையாழ் என்ற கருவியில் அரும்பாலைக்குரிய நரம்புகள் கட்டப்பெறுவது வழக்கம்.

குறிஞ்சியாழ் என்ற கருவியில் செம்பாலைக்குரிய நரம்புகள் கட்டப்பெறுவது வழக்கம்.

பேரியாழ் என்ற கருவியில் மேற்செம்பாலைக்குரிய நரம்புகள் கட்டப்பெறுவது வழக்கம். மற்றவை ஒருபுறம் இருக்க, பாலையாழ் என்ற கருவியை மட்டுமே ஈண்டு நாம் எடுத்துக்கொள்ள வேண்டும்.

பாலையாழில் ஒலிக்கப்பெறுகின்ற நரம்புகளின் பாலை அரும்பாலை. அரும்பாலை இக்காலத்தில் சங்கராபரணம் என வழங்கப்படுவதே பேருண்மையாகும். அரும்பாலை, பாலையாழ் ஆனமையால் அதில் செவ்வழிப்பாலை அதாவது செவ்வழிப்பண் எவ்வாறு கொள்ளும் அதாவது அடங்கும் என்பதைக் காணுதல் வேண்டும். இதற்கு உழைகுரலாய அரும்பாலையையும் கைக்கிளை குரலாய செவ்வழிப்பாலையையும் உடன் எழுதி அட்டவணைப்படுத்தி விளக்கப் பெறுதல் வேண்டும்.

அரும்பாலை (பாலையாழ்) உழை; இளி. விளரி. தாரம். குரல். துத்தம். கைக்கிளை

கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம், குரல், துத்தம், செவ்வழிப்பாலை அதாவது செவ்வழிப்பண்.

அரும்பாலையையே செவ்வழிப்பாலையாகக் கொள்ள, கைக்கிளை முதலாக எடுக்கப் பெறுதல் வேண்டும்.

செவ்வழிப் பாலையையே அரும்பாலையாகக் கொள்ள உழை முதலாக எடுக்கப்பெறுதல் வேண்டும். இந்நுண் கருத்தினை, மிகவும் தெளிவாக ஓரளவேனும் இசையறிவுடையார் பலருக்கும், கருவிப் பயிற்சி, வீணை அல்லது ஆர்மோனியம் சார்ந்த அறிவு ஓரளவேனும் உடையார் பலருக்கும், எளிதாக விளக்கவேண்டும் என்றால்,

1. இக்காலச் சங்கராபரண இராகத்தினை நன்கு தெளிவாக வாசித்தால் இதுவே பழைய பாலையாழ்.

சங்கராபரண இராகத்தையே நிஷாதம் முதல் நிஷாதம் வரை (தாரஷட்ஜம் தொடாது) வாசித்தால் அதுவே பழைய செவ்வழிப்பாலை. (செவ்வழிப்பண்)

மேலும் இக்கருத்தினை உணரவேண்டி, இவ்வாறு பழகிக் காணலாம். அதாவது எதிரெதிராக வீணை, அல்லது ஆர்மோனியம் என்ற கருவியை இருவர் வைத்துக் கொண்டு ஒருவர் சங்கராபரணத்தை வாசிக்கவேண்டும். மற்றொருவர் சங்கராபரணத்தையே நிஷாதம் முதல் நிஷாதம் வரை மட்டும் வாசித்தல் வேண்டும். இருவரும் மற்ற ஆறிசைகளை ஒன்றாக வாசிக்கலாம். இரண்டாமவர் நிஷாதம் தொடங்கும்போது முதலாமவர் தொடங்குதல் (அதாவது நிஷாதத்தை) கூடாது.

முதலாமவர் சரிகமபதநி என்றபின் மேல் நிலை ஷட்ஜம் இசைக்கும்போழ்து இரண்டாமவர் ஷட்ஜத்தை வாசித்தல் கூடாது.

முதலாமவர் சரிகமபதநிச சங்கராபரணம்

இரண்டாமவர் நிசரிகமபதநி சங்கராபரணம்

என வாசித்தால், நல்லதொரு நுண்ணறிவும் இசைப்புலமையிலும் பயிற்சியிலும், சாதனையிலும் வல்லுநருமான ஒருவர் அவ்விடத்து வரப்பெறுவாரானால், முதலாமவர் தனித்து வாசிக்கும்போது சங்கராபரணமாகவும் இரண்டாமவர் தனித்து வாசிக்கும்போது, செவ்வழிப்பாலை என்ற பண்ணுமாகவும் செவியிற்பட்டு இருவரும் சேர்ந்து வாசிக்குங்கால் இருவரும் வாசிப்பது (பழைய பாலையாழாக அரும்பாலையாக) சங்கராபரணமாகவே புலப்படும்.

இவ்வாறே மேலை வானவர்கள் திருவீழிமிழலையில் வந்து வணங்குவார்களாம். அதாவது வீழிமிழலையில் பண்டைய காலத்து இசைவாணர்கள் அவ்வாறு காலை மாலை இரு வேளைகளிலும் சிறப்பாக மாலை நேரத்திலும் இறைவன் முன்னின்று, ஒரு பகுதியில் பாலை யாழில் பண்ணார்ந்த பாடல்களைத் தொடங்க, மற்று ஒரு பகுதியில், அதாவது அவர்களுக்கு எதிர்ப்புறம் ஒரு கூட்டத்தார் செவ்வழிப்பாலை (பண்)யில் பண்ணார்ந்த பாடல்களைத் தொடங்க, வெளிப்புறம் இருந்து உள்ளே நுழைந்து இறைவன்முன் வரும் அடியார்களது திருச்செவியில் ஒருபுறம் தனித்துப் பாடும் அடியார்களின் பண் பாலையாழாகவும், மற்றொருபுறம் தனித்துப் பாடும் அடியார்களின் பண், செவ்வழிப்பண்ணாகவும் கேட்கும் பெற்றிமை தோன்றி இரு கூட்டத்தாரும் சேர்ந்து பாடுங்கால் எல்லாமே பாலையாழ் ஒலியாகவும் கேட்கப்படுகிறதாம். இத்தகு இசை நுட்பத்தினையே நம் அப்பர் பெருமான்,

> பாலை யாழொடு செவ்வழிப் பண்கொள
> மேலை வானவர் வந்து வணங்கிடும்
> (மாலை வானவர் வந்து வழிபடும்)
> ஆலை யாரழல் அந்தண ராகுதி
> வேலை யார்தொழும் வீழி மிழலையே.

என அருளிப்பாடிப் போந்தார் போலும்.

தமிழகத்துத் தெய்விகப் பேரவை தெய்வத் தன்மையைப் பாதுகாக்க முயன்றமையால் தெய்வத் தன்மையே உருவான பண்முறையையும் பதிகம் பாடும் முறையையும் ஒல்லும் வகையிலெல்லாம் பாதுகாக்க முற்படுவதாகுக.

| | | |
|---|---|---|
| **1194.** மழலை யேற்று மணாளன் திருமலை<br>சுழல ஆர்த்தெடுத் தான்முடி தோளிறக்<br>கழல்கொள் காலின் திருவிர லூன்றலும்<br>மிழலை யானடி வாழ்கென விட்டதே. | 11 | இளமையான ஆனேறுடைய உமை மணாளனது திருக்கயிலாயமலையைச் சுழல ஆர்த்து எடுத்த இராவணனது முடியும் தோளும் இறும்படியாக அவன் தன் கழலணிந்த திருவடியில் உள்ள ஒரு திருவிரலால் ஊன்றுதலும், அவ்வரக்கன் திருவீழிமிழலையானடி வாழ்க என்று வாய் விட்டரற்றினன். அரற்றவே உமைமணாளன் அவனை மேலும் ஒறுக்காமல் விடுவித்தனன். |

## 13. திருவீழிமிழலை

ப.தொ.எண் : 126 பதிக எண் : 13

| | | |
|---|---|---|
| **1195.** என்பொ னேயிமை யோர்தொழு பைங்கழல்<br>நன்பொ னேநலந் தீங்கறி வொன்றிலேன்<br>செம்பொ னேதிரு வீழி மிழலையுள்<br>அன்ப னேயடி யேனைக் குறிக்கொளே.<br><br>"அடியேனைக் குறிக்கொளே" என்பது பதிக மகுடம். இப்பதிகம் இறைவரிடம் செய்துகொள்ளும் பிரார்த்தனையை அடியார்களுக்கு உபதேசித்தது. | 1 | என் உயர்ந்த பொருளே! தேவர் தொழுகின்ற கழலணிந்த நல்ல பொருளே! நலம் தீங்கு பகுத்து அறியும் அறிவு சிறிதும் இல்லாத இயல்பினேன் அடியேன்; எனது செம்பொன்னே! திருவீழிமிழலையுள் **அன்பு வடிவாம் பெருமானே! அடியேனைக் குறிக்கொண்டு காத்தருள்வாயாக.** |
| **1196.** கண்ணி னாற்களி கூரக்கை யால்தொழு<br>தெண்ணு மாறறி யாதிளைப் பேன்றனை<br>விண்ணு ளார்தொழும் வீழி மிழலையுள்<br>அண்ண லேயடி யேனைக் குறிக்கொளே. | 2 | இன்பம் மிகும்படி கண்ணினாற்கண்டு, கையால் தொழுது, எண்ணுமாறறியாது இளைக்கும் எளியேனை, தேவர்கள் தொழும் வீழிமிழலையுள் **அண்ணலே! குறிக்கொண்டு காத்தருள்வாயாக.** |
| **1197.** ஞால மேவிசும் பேநலந் தீமையே<br>கால மேகருத் தேகருத் தாற்றொழும்<br>சீல மேதிரு வீழி மிழலையுள்<br>கோல மேயடி யேனைக் குறிக்கொளே. | 3 | உலகமே! விண்ணே! நன்மையே! தீமையே! காலமே! கருத்தே! கருத்தாற்றொழும் சீலமே! திருவீழிமிழலையுள் வீற்றிருக்கும் **கோலமே! அடியேனைக் குறிக்கொண்டு காத்தருள் வாயாக.** |
| **1198.** முத்த னேமுதல் வாமுகி ழும்முளை<br>ஒத்த னேயொரு வாவுரு வாகிய<br>சித்த னேதிரு வீழி மிழலையுள்<br>அத்த னேயடி யேனைக் குறிக்கொளே.<br><br>"முத்தனே முதல்வா முக்கணா முனிவா"<br>– திருவாசகம் | 4 | முத்தனே! முதல்வா! முகிழ்க்கும் முளையை ஒத்தவனே! ஒப்பற்றவனே! உருவத் திருமேனி உடைய சித்தனே! திருவீழிமிழலையுள் வீற்றிருக்கும் **அத்தனே! அடியேனைக் குறிக்கொண்டு காத்தருள்வாயாக.** |

| பாடல் | பொருள் |
|---|---|
| **1199.** கருவ னேகரு வாய்த்தெளி வார்க்கெலாம்<br>ஒருவ னேயுயிர்ப் பாயுணர் வாய்நின்ற<br>திருவ னேதிரு வீழி மிழலையுள்<br>குருவ னேயடி யேனைக் குறிக்கொளே. 5 | மூலப்பொருளாக உள்ளவனே! கருவாயுள்ளாய் என்று தெளிந்தவர்க்கெல்லாம் ஒப்பற்றவனே! உயிர்ப்பாகவும், உணர்வாகவும் நின்ற செல்வனே! திருவீழிமிழலையுள் வீற்றிருக்கும் **குருமூர்த்தியே! அடியேனைக் குறிக்கொண்டு காத்தருள்வாயாக.** |
| **1200.** காத்த னேபொழி லேழையுங் காதலால்<br>ஆத்த னேயம ரர்க்கயன் றன்றலை<br>சேர்த்த னேதிரு வீழி மிழலையுள்<br>கூத்த னேயடி யேனைக் குறிக்கொளே. 6 | ஏழுலகங்களையும் கருணையால் காத்தவனே! அமரர்க்கு நம்பத்தகுந்தவனே! அவர்களுக்குப் பிரமாண நூல்களை அருளியோனே! அயன்றலையைக் கையில் சேர்த்தவனே! திருவீழிமிழலையுள் வீற்றிருக்கும் **கூத்தப்பெருமானே! அடியேனைக் குறிக்கொண்டு காத்தருள்வாயாக.** |
| **1201.** நீதி வானவர் நித்தல் நியமஞ்செய்<br>தோதி வானவ ரும்முண ராததோர்<br>வேதி யாவிகிர் தாதிரு வீழியுள்<br>ஆதி யேயடி யேனைக் குறிக்கொளே. 7 | வானவர் தமக்குரிய நீதிப்படி நித்தலும் நியமங்கள் செய்து ஓதியும் அவர்களால் உணரப்படாது நின்ற ஒப்பற்ற வேதியா! விகிர்தனே! திருவீழிமிழலையுள் வீற்றிருக்கும் **ஆதியே! அடியேனைக் குறிக்கொண்டு காத்தருள்வாயாக.** |
| **1202.** பழகி நின்னடி சூடிய பாலனைக்<br>கழகின் மேல்வைத்த காலனைச் சாடிய<br>அழக னேயணி வீழி மிழலையுள்<br>குழக னேயடி யேனைக் குறிக்கொளே. 8<br><br>கழகு – சூது, வஞ்சனை | நின்னடியைப் பழகிச் சூடிய பாலனாகிய மார்க்கண்டேயனை வஞ்சனையால் பற்றமுற்பட்ட காலனைச் சாடிய அழகனே! அழகுமிக்க திருவீழிமிழலையுள் வீற்றிருக்கும் **இளமையுடையோனே! அடியேனைக் குறிக்கொண்டு காத்தருள்வாயாக.** |
| **1203.** அண்ட வானவர் கூடிக் கடைந்தநஞ்<br>சுண்ட வானவ னேயுணர் வொன்றிலேன்<br>விண்ட வான்பொழில் வீழி மிழலையுள்<br>கொண்ட னேயடி யேனைக் குறிக்கொளே. 9 | மேலுலகில் உள்ள தேவர்கள் அசுரர்களுடன் கூடிக்கடைதலால் எழுந்த நஞ்சினை உண்ட தேவனே! விரிந்த வான் பொழில் சூழ்ந்த **திருவீழிமிழலையிற் கோயில் கொண்டவனே! உணர்வு சிறிதும் இல்லேனாகிய அடியேனைக் குறிக்கொண்டு காத்தருள்வாயாக.** |
| **1204.** ஒருத்தன் ஓங்கலைத் தாங்க லுற்றானுரம்<br>வருத்தி னாய்வஞ்ச னேன்மனம் மன்னிய<br>திருத்த னேதிரு வீழி மிழலையுள்<br>அருத்த னேயடி யேனைக் குறிக்கொளே. 10<br><br>ஓங்கல் – திருக்கயிலை மலை<br>அருத்தன் – பொருள் வடிவாக உள்ளோன் | ஓங்கிய திருக்கயிலையைத் தாங்கிப் பெயர்க்கலுற்ற ஒருத்தனாகிய இராவணனின் வலிகெட அவனை வருத்தியவனே! வஞ்சனை உடையேன் மனத்தின்கண் நிலை பெற்ற அழகனே! **திருவீழிமிழலையுள் வீற்றிருக்கும் பொருள் வடிவாய் இருப்பவனே! அடியேனைக் குறிக்கொண்டு காத்தருள் வாயாக.** |

## 14. திருவிடைமருதூர்

ப.தொ.எண் : 127 பதிக எண் : 14

1205. பாச மொன்றில ராய்ப்பல பத்தர்கள்
வாச நாண்மலர் கொண்டடி வைகலும்
ஈச னெம்பெரு மானிடை மருதினில்
பூச நாம்புகு தும்புன லாடவே. 1

திருவிடைமருதூரில் தைப்பூச நீராட்டு விழா பன்னூறு ஆண்டுகளாக மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. ''பாசம் ஒன்றும் இலராயினும், சீவன் முத்தராயினும், பாச மற்றிலராயினும் பார்மிசை, ஆசை சங்கரற்காயின தன்மையால்'' திருஞானசம்பந்தர் புராணம். ''பூசத்தீர்த்தம் புரக்கும் பொன்னி, யயிராவணத்துறை யாடுமப்ப'' – திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.

பல அன்பர்கள் உலக பாசங்கள் ஒன்றும் இல்லாதவராய் மணமிக்க அன்றலர்ந்த புதுமலர்கள் கொண்டு திருஇடைமருதில் வீற்றிருக்கும் ஈசன் எம்பெருமான் திருவடியை நாள்தோறும் வழிபட்டு வைகுதலைக் கண்டு, புனலாட யாமும் பூசத் திருநாளில் அங்குப் புகுந்து வழிபடுவோம்.

பூசநீராடுதல் பற்றி கடுவாய்க் கரைப்புத்தூர் பதிகத்திலும் 1697 ஆவது பாடலில் பாடுகிறார்.

1206. மறையின் நாண்மலர் கொண்டடி வானவர்
முறையி னால்முனி கள்வழி பாடுசெய்
இறைவ னெம்பெரு மானிடை மருதினில்
உறையு மீசனை யுள்குமெ னுள்ளமே. 2

வானுலகில் உள்ளவர்களும் பூலோகம் வந்துதான், சிவ வழிபாடு செய்கிறார்கள். "இந்தப் பூமி சிவனுய்யக் கொள்கின்றவாறு" திருவாசகம்.

வானவர்களும் முனிவர்களும் **மறையின் முறையினால்** புதிய மலர்கள் கொண்டு வழிபாடு செய்கின்ற இறைவனும் எம்பெருமானுமாகிய இடைமருதூரில் உறைகின்ற ஈசனை என் உள்ளம் உள்கும்.

1207. கொன்றை மாலையுங் கூவிள மத்தமும்
சென்று சேரத் திகழ்சடை வைத்தவன்
என்றுமெந்தை பிரானிடை மருதினை
நன்று கைதொழு வார்வினை நாசமே. 3

கொன்றை மாலையும், வில்வமும், ஊமத்த மலரும் ஒருங்கு சென்று சேரும்படியாகத் திகழ்கின்ற சடையில் வைத்தவனாகிய இடைமருதூர் உறையும் எந்தையினை என்றும் நன்றுறக் கைதொழுவார் வினைகள் நாசமாகும்.

1208. **இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்**
**அம்மை யேற்பிற வித்துயர் நீத்திடும்**
எம்மை யாளு மிடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார்வினை சிந்துமே. 4

இம்மை, அம்மை, வீடு என்ற மூன்று பயனும் தருவது இடைமருதன் கழல்.

எம்மையாளும் இடைமருதூர் உறையும் இறைவன் கழலைச் செம்மையாகத் தொழுவார் வினை சிந்தும். அத்தொழுகை இம்மையில் வானவர் செல்வம் விளைத்திடும்; அப்பிறப்பில் பிறவித்துயர் இல்லாவகையில் நீங்கும்.

| பாடல் | | விளக்கம் |
|---|---|---|
| **1209.** வண்ட ணைந்தன வன்னியுங் கொன்றையும்<br>கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனார்<br>எண்டி சைக்கு மிடைமரு தாவென<br>விண்டு போயறும் மேலை வினைகளே. | 5 | வண்டுகள் அணைந்த வன்னியும் கொன்றையும் கொண்டு அணிந்த சடாமுடியை உடைய கூத்தனார் எனப் படர்க்கையிற் பரவியும், எண்டிசைக்கும் கதியாகிய **இடைமருதா** என முன்னிலைப்படுத்திப் புகழ்ந்தும் வழிபட, பழவினைகள் யாவும் நம்மைவிட்டு விலகிக்கெடும். |
| **1210.** ஏற தேறு மிடைமரு தீசனார்<br>கூறு வார்வினை தீர்க்குங் குழகனார்<br>ஆறு செஞ்சடை வைத்த அழகனார்<br>ஊறி யூறி யுருகுமெ னுள்ளமே. | 6 | விடையினை உகந்தேறும் இறைவரும், தன்னைக் கூறுவார் வினைகளைத் தீர்க்கும் குழகரும், ஆறு செஞ்சடையின்கண் வைத்த அழகருமாகிய இடைமருதூர் எம்பிரானையெண்ணி என் உள்ளம் ஊறி ஊறி உருகுகின்றது. |
| **1211.** விண்ணு ளாரும் விரும்பப் படுபவர்<br>மண்ணு ளாரும் மதிக்கப் படுபவர்<br>எண்ணி னார்பொழில் சூழிடை மருதினை<br>நண்ணி னாரைநண் ணாவினை நாசமே. | 7 | விண்ணிலுள்ள தேவரான் விரும்பப்படுபவரும், மண்ணிலுள்ள மனிதரான் மதிக்கப்படுபவரும் ஆகிய இறைவர்க்குரிய பொழில் சூழ்ந்த திருஇடைமருதூரரை எண்ணி நண்ணியவரை இனிவரும் வினையினால் வரும் கேடுகள் நண்ணமாட்டா. |
| **1212.** வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தனார்<br>கந்த மாலைகள் சூடுங் கருத்தனார்<br>எந்தை யென்னிடை மருதினி லீசனைச்<br>சிந்தை யால்நினை வார்வினை தேயுமே. | 8 | உலகங்கள் வெந்ததனால் உளதாகிய திருநீறு பூசும் விகிர்தரும், நறுமண மாலைகள் சூடும் தலைவரும், என் தந்தை போல்வாருமாகிய திருவிடைமருதூர் ஈசனைச் சிந்தையால் நினைப்பவர்களது வினைகள் தேயும். |
| **1213.** வேத மோதும் விரிசடை யண்ணலார்<br>பூதம் பாடநின் றாடும் புனிதனார்<br>ஏதந் தீர்க்கு மிடைமரு தாவென்று<br>பாத மேத்தப் பறையும்நம் பாவமே. | 9 | தேவர்கள் ஓதும் விரிசடை அண்ணலாரும் பூதங்கள் பாடநின்று ஆடும் புனிதருமாகியவரை "ஏதந்தீர்க்கும் இடைமருதூரில் எழுந்தருளி யிருக்கும் இறைவா!'' என்று சொல்லிப் பாதங்கள் ஏத்தினால் நம் பாவங்கள் நம்மை விட்டு நீங்கும். |

| | |
|---|---|
| 1214. கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்<br>பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்<br>தனிமு டிகவித் தாளு மரசினும்<br>இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே. 10<br><br>மக்கள் இனியன என்று நினைக்கும் அனைத்தினும் இறைவர் இனியர். | **இடைமருதூரில் எழுந்தருளியிருக்கும் ஈசன்,** தன்னையடைந்த அன்பர்களுக்குக் **கனி;** கட்டிபட்ட **கரும்பு;** குளிர் மலரணிந்த குழலையுடைய **பாவை** போன்ற பெண்கள்; தனித்து முடிகவித்து நின்று ஆளும் அரசு ஆகிய அனைத்தினும் மிக்க இனிமை உடையவன்; தன்னை அடைந்த மெய்ஞ்ஞானிகளுக்கு அவர்தம் உணர்வு புறத்தே செல்வுழி இல்பொருள்களிலெல்லாம் பரானந்த போகமாய் விளைவன் என்றலும் பொருத்தம். |
| 1215. முற்றி லாமதி சூடும் முதல்வனார்<br>ஒற்றி னார்மலை யாலரக் கன்முடி<br>எற்றி னார்கொடி யாரிடை மருதினைப்<br>பற்றி னாரைப் பற்றாவினை பாவமே. 11 | இளம்பிறை சூடும் முதல்வரும், மலையால் அரக்கன் முடியை விரலைச் சிறிது ஊன்றி ஒற்றியவரும், இடபக் கொடியை உடையவரும் ஆகிய பெருமான் எழுந்தருளியுள்ள **இடைமருதூரினைப் பற்றியவர்களை வினைகளும் அவற்றான் வரும் இடர்களும் பற்றமாட்டா.** |

## 15. திருவிடைமருதூர்

ப.தொ.எண் : 128 பதிக எண் : 15

| | |
|---|---|
| 1216. பறையி னோசையும் பாடலி னோசையும்<br>மறையி னோசையும் வைகு மயலெலாம்<br>இறைவ னெங்கள் பிரானிடை மருதினில்<br>உறையு மீசனை யுள்குமெ னுள்ளமே. 1 | தோற்கருவி வாத்தியம், இசைப் பாடலோசை, வேத முழக்கம் ஆகிய மூன்றின் ஓசைகளும் தங்கியிருக்கும் சுற்றுப்புறங்களை உடையதும், இறைவனாகிய எங்கள் பிரான் எழுந்தருளி யிருப்பதுமாகிய இடைமருதூரினில் உறைகின்ற ஈசனை என் உள்ளம் நினைக்கின்றது. |
| 1217. மனத்துள் மாயனை மாசறு சோதியை<br>புனிற்றுப் பிள்ளைவெள் ளைம்மதி சூடியை<br>எனக்குத் தாயையெம் மானிடை மருதனை<br>நினைத்திட் டூறி நிறைந்ததெ னுள்ளமே. 2<br><br>புனிறு – மிக்க இளமை | மனத்தினுள் மாயமாய் வந்து நிற்பவனும், குற்றமற்ற ஒளிவடிவானவனும், மிக்க இளமதியைச் சூடியவனும், எனக்குத் தாயானவனும், எம்மானும், இடைமருதூரில் எழுந்தருளி இருப்பவனும் ஆகிய இறைவனை நினைத்திட்டு அன்பு ஊறி என் உள்ளம் நிறைந்தது. |

| | |
|---|---|
| **1218.** வண்ட ணைந்தன வன்னியும் மத்தமும்<br>கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனை<br>எண்டி சைக்கு மிடைமரு தாவென<br>விண்டு போயறும் மேலை வினைகளே. **3**<br><br>இப்பாடலை **1209**ஆவது பாடலோடு ஒப்பிடுக. (மத்தம், கூத்தனார் என்ற சொற்கள் வேறுபாடு மட்டும் உண்டு). | வண்டணைந்த வன்னியும், மத்தமுமாகிய மலர்களைக் கொண்டு அணைந்த சடைமுடிக் கூத்தப் பிரானை, எண்டிசைக்கும் தலைவனாகிய இடைமருதா என்று கூற, நம் பழைய வினைகள் நம்மை விட்டுப் பிரிந்து கெட்டு நீங்கும். |
| **1219.** துணையி லாமையில் தூங்கிருட் பேய்களோ<br>டணைய லாவ தெமக்கரி தேயெனா<br>இணையி லாவிடை மாமரு தில்லெழு<br>பணையி லாகமஞ் சொல்லுந்தன் பாங்கிக்கே. **4**<br><br>ஆகமம் – நீதி என்ற பொருளும் உண்டு. | ஊழிக்காலத்துப் புலராது தாழ்க்கும் இருளில் முதல்வன் தனக்கு உடனிருப்பார் பிறரொருவரும் ஆண்டு இன்மையின், தன் கணங்களாகிய பேய்களோடு அணைந்து காலத்தைக் கழித்தல் அரிதென்று எண்ணி ஒப்பற்றதாகிய திருவிடை மருதூரில் எழுந்த மருதமரத்தின் கீழிருந்து தன் பாங்கியாகிய உமையம்மைக்கே ஆகமம் உரைப்பாராயினர். |
| **1220.** மண்ணை யுண்டமால் காணான் மலரடி<br>விண்ணை விண்டயன் காணான் வியன்முடி<br>மொண்ணை மாமரு தாவென்றென் மொய்குழல்<br>பண்ணை யாயமுந் தானும் பயிலுமே. **5**<br><br>**4, 5, 6** பாட்டுக்கள் அகப் பொருள்துறையில் அமைந்துள்ளன. | மண்ணுலகை உண்ட திருமால் மலரடி காணான் என்றும், விண்ணுலகைப் பிளந்து பறந்து சென்ற நான்முகன் வியன்முடி காணான் என்றும், மாமருதூரில் இருப்பவனே எனக்கருள் என்றும் என் மொய்குழலாளாகிய மகள் விளையாட்டுக் குரிய தன்தோழியர் கூட்டத்துடன் உரைத்து மகிழ்வாள். பருவம் எய்தாதாரையும் தன்பால் ஈர்ப்பவன் முதல்வன் என்றபடி. |
| **1221.** மங்கை காணக் கொடார்மண மாலையை<br>கங்கை காணக் கொடார்முடிக் கண்ணியை<br>நங்கை மீரிடை மருதரிந் நங்கைக்கே<br>எங்கு வாங்கிக் கொடுத்தா ரிதழியே. **6**<br><br>x x x x x x x x x x x x x x **7, 8, 9, 10**<br><br>இதழி – அடையாள மாலை – இதழி போன்ற பொன்னிறமாகிய பசலை. | பெண்களே, இடைமருதர் என்மகளாகிய நங்கைக்குக் கொன்றையைக் கொடுத்துள்ளார். (கொன்றை மலரின் நிறமாகிய பசலையைக் கொடுத்துள்ளார்). ஆயின் அவர் மார்பில், தாராக உள்ள மணமாலையைக் கொடுப்பின், பக்கத்தில் இருக்கும் பார்வதி காண்பள்; ஆகலின் அதனைக் கொடுத்தல் இயலாது. இனித் தமது முடியின் கண்ணதாகிய கண்ணியையும் கொடுப்பின் கங்கை ஆண்டிருந்து காண்பாள். ஆகலின், அதனையும் கொடுத்தல் இயலாது. மற்று எங்கிருந்து இப்பசலையாகிய கொன்றையைப் பெற்று இவளுக்குக் கொடுத்தார் ? |

## 16. திருப்பேரெயில்

ப.தொ.எண் : 129 பதிக எண் : 16

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1222.** மறையும் ஓதுவர் மான்மறிக் கையினர்<br>கறைகொள் கண்ட முடைய கபாலியார்<br>துறையும் போகுவர் தூயவெண் ணீற்றினர்<br>பிறையுஞ் சூடுவர் பேரெயி லாளரே. 1<br><br>பேரெயிலாளரே – பதிக மகுடம்.<br>துறைபோதல் – கரையைச் சென்றடைதல் அல்லது முற்றக்கற்றல் | பேரெயில் தலத்து இறைவர், மறையை ஓதுவர்; மான்குட்டியை யேந்திய கையினர்; திருநீலகண்டர்; கபாலத்தைக் கொண்ட கையினர்; எக்கலைக்கும் முதல்வர்; தூய வெண்ணீற்றினர்; பிறையும் சூடும் இயல்பினராவர். |
| **1223.** கணக்கி லாரையுங் கற்றுவல் லாரையும்<br>வணக்கி லாநெறி கண்டுகொண் டாரையும்<br>தணக்கு வார்தணிப் பாரெப் பொருளையும்<br>பிணக்கு வாரவர் பேரெயி லாளரே. 2 | பேரெயில் தலத்து இறைவர், கல்லாதவரையும், கற்று வல்லவரையும், வணங்காத நெறியைக் கட்டிப் பேசும் வீணரையும், ஒடுக்கும் இயல்புடையவர்; எப்பொருளையும் தணிப்பவர் (ஒடுக்குவர்); பிணக்கும் இயல்பினரும் ஆவர். |
| **1224.** சொரிவிப் பார்மழை சூழ்கதிர்த் திங்களை<br>விரிவிப் பார்வெயிற் பட்ட விளங்கொளி<br>எரிவிப் பார்தணிப் பாரெப் பொருளையும்<br>பிரிவிப் பாரவர் பேரெயி லாளரே. 3 | பேரெயில் தலத்து இறைவர், மழை பெய்விப்பார்; திங்களைச் சூழ்கதிர் விரிவிப்பார்; ஞாயிற்றின்கண் பொருந்திய விளங்கொளியை எரிவிப்பார்; எப்பொருளையும் அடங்கி நிற்கச் செய்வார்; அவற்றைப் பிரிவிக்கும் காலத்துப் பிரிக்கும் இயல்பினரும் ஆவர். |
| **1225.** செறுவிப் பார்சிலை யால்மதில் தீர்த்தங்கள்<br>உறுவிப் பார்பல பத்தர்க ளூழ்வினை<br>அறுவிப் பாரது வன்றியும் நல்வினை<br>பெறுவிப் பாரவர் பேரெயி லாளரே. 4 | பேரெயில் தலத்து இறைவர் மேருமலை வில்லால் முப்புரங்களை அழியச் செய்வார்; தீர்த்தங்களை மிகுவிப்பார்; பல பத்தர்களின் ஊழ்வினை அறுவிப்பார்; அதுவன்றியும் சிவனை வழிபடும் நல்வினை பெறும்படியும் செய்வார். |
| **1226.** மற்றை யாரறி யார்மழு வாளினார்<br>பற்றி யாட்டியோ ரைந்தலை பாம்பரைச்<br>சுற்றி யாரவர் தூநெறி யால்மிகு<br>பெற்றி யாரவர் பேரெயி லாளரே. 5<br><br>பாம்பரைச் சுற்றி – ஐந்தலைப் பாம்பைக் கையில் ஆட்டி, இடுப்பில் சுற்றிக் கொள்வது மகாமாயை என்னும் குண்டலினி சத்தியை ஆளும் பரத்துவத்தைக் குறிக்கிறது.<br>பெற்றி – இயல்பு, தன்மை, பெருமை, பேறு. | பேரெயில் தலத்து இறைவர், அன்பர்களால் அன்றி மற்றையவரால் அறியப்படாத இயல்புடையவர்; மழுவாளை உடையார்; ஓர் ஐந்தலைப் பாம்பைப் பற்றி ஆட்டி அரையிற் சுற்றியவர்; தூநெறியால் மிகுகின்ற தன்மை உடையவர். |

| பாடல் | பொருள் |
|---|---|
| **1227.** திருக்கு வார்குழற் செல்வன சேவடி<br>இருக்கு வாய்மொழி யால்தனை யேத்துவார்<br>சுருக்கு வார்துயர் தோற்றங்க ளாற்றறப்<br>பெருக்கு வாரவர் பேரெயி லாளரே. 6 | பேரெயில் தலத்து இறைவர், வளைத்து முறுக்கி முடிந்த நீண்ட குழலாளை உடைய செல்வராகிய தம்மடியை இருக்குவேதம் முதலிய மெய்ம்மொழிகளால் ஏத்துவார்களின் துயரைச் சுருக்குவார்; அத்துயர் தோன்றுகின்ற நெறி அறுமாறு அருளைப் பெருக்குவார். |
| **1228.** முன்னை யார்மயி லூர்தி **முருகவேள்<br>தன்னை** யாரெனின் தானோர் தலைமகன்<br>என்னை யாளுமி றையவ னெம்பிரான்<br>பின்னை யாரவர் பேரெயி லாளரே. 7<br><br>தன்னை யார் – தன் ஐயார் (தந்தையார்) | பேரெயில் தலத்து இறைவர் எனின் அவர், முன்னே தோன்றியவர்; மயிலை ஊர்தியாக உடைய முருகவேளின் தாதையார்; ஒப்பற்ற முதல்வர்; என்னையாளும் இறைவரும் எம்பிரானுமாவார்; புதியரிற் புதியவரும் அவரே. |
| **1229.** உழைத்துந் துள்ளியு முள்ளத்து ளேயுரு<br>இழைத்து மெந்தை பிரானென் றிராப்பகல்<br>அழைக்கு மன்பின ராய அடியவர்<br>பிழைப்பு நீக்குவர் பேரெயி லாளரே. 8<br><br>உழைத்தல் – மெய் வருந்தும்படி திருப்பணி செய்தல்.<br>துள்ளுதல் – பேரின்ப மேலீட்டால் ஆடுதல்.<br>"குற்றம் செயினும் குணமெனக் கருதும் கொள்கை"<br>– சுந்தரர் திருப்புன்கூர் தேவாரம். | பேரெயில் தலத்து இறைவர், உழைத்தும், துள்ளியும், தம் உள்ளத்துள்ளே உருவத்தைச் செம்மையாக மனதில் சிந்தித்தும், எந்தையே! பிரானே! என்று இரவும் பகலும் இடைவிடாது அழைக்கும் அன்பர்கள் இயற்றிய பிழைகளை நீக்கும் தன்மை உடையவராவர்.<br><br>பிழைப்பு – செய்த பிழையின் பயனாகிய துயர். |
| **1230.** நீரு லாநிமிர் புன்சடை யாவெனா<br>ஏரு லாவநங் கன்திறல் வாட்டிய<br>வாரு லாவன மென்முலை யாளொடும்<br>பேரு ளாரவர் பேரெயி லாளரே. 9<br><br>அநங்கன் – மன்மதன் | கங்கை உலாவிய நிமிர்ந்த புன்சடையா என்று போற்றாத அழகு பொருந்திய மன்மதன் திறலைவாட்டிய பெரும்புகழ் உடையவர்; கச்சுப் பொருந்திய அழகிய மென்முலையாளொடும் பேரெயிலில் வீற்றிருந்தவர். |
| **1231.** பாணி யார்படு தம்பெயர்ந் தாடுவர்<br>தூணி யார்விச யற்கருள் செய்தவர்<br>மாணி யாய்மண் ணளந்தவன் நான்முகன்<br>பேணி யாரவர் பேரெயி லாளரே. 10<br><br>பேரெயில் – ஓகைப் பேரையூர், வங்காரம் பேரையூர் என்றும் வழங்குவர். அக்கினி பூசித்த தலம். | பேரெயில் தலத்து இறைவர், 'படுதம்' என்று கூறப்பெறும் கூத்தைத் தாளம் பொருந்த ஆடுபவர்; அம்பறாத்தூணி உடையவராய் (வேடராய்) வந்து அருச்சுனர்க்கு அருள் செய்தவர்; பிரமசாரியாய் வந்து (வாமனாவதார காலத்து) மண்ணளந்தவனாகிய திருமால் பிரமன் என்போரால் பேணப்பட்ட பெருமை உடையவர். |

1232. மதத்த வாளரக் கன்மணிப் புட்பகம்
சிதைக்க வேதிரு மாமலைக் கீழ்ப்புக்குப்
பதைத்தங் கார்த்தெடுத் தான்பத்து நீண்முடி
பிதக்க வூன்றிய பேரெயி லாளரே. 11

பேரெயில் தலத்து இறைவர் செருக்குடைய வாள் அரக்கன் இவர்ந்து வந்த புட்பக விமானத்தைத் திருமலை தடுக்க உடனே பதைத்து அத்திருமலையின் கீழ்ப்புகுந்து அங்கு ஆர்த்து எடுத்தபோது, அவன் முடிபத்தும் சிதையும் படியாக ஊன்றியவர்.

## 17. திருவெண்ணி

(முன் நாள் கண்ட காட்சி உள்ளத்தே நின்று களிப்பைத்தர அதனாற் பாடியது இத்திருப்பதிகம்)

ப.தொ.எண் : 130 பதிக எண் : 17

1233. முத்தி னைப்பவ ளத்தை முளைத்தவெம்
தொத்தி னைச்சுட ரைச்சுடர் போலொளிப்
பித்த னைக்கொலும் நஞ்சினை வானவர்
நித்த னைநெரு நற்கண்ட வெண்ணியே. 1

ஒளிப்பித்தன் – ஒளியையுடைய அடியார் மாட்டுப் பேரன்புடையான்.

அன்பர்க்குச் சந்திரன்; அல்லாதவர்க்குச் சூரியன்.
நெருநல் – நேற்று

முத்தினை, பவளத்தை, முளைத்த எம் பூங்கொத்தினை, சுடரை, சுடர்போல் ஒளி உடைய பித்தனை, கொல்லும் நஞ்சு போல்பவனை, வானவர்க்கு அமரர் நிலை அளித்தானை, நேற்றுக் கண்ட வெண்ணித்தலமே இன்று என் உள்ளத்தில் பதிந்திருந்து பேரின்பத்தை மிகுவிப்பது.

1234. வெண்ணித் தொல்நகர் மேயவெண் திங்களார்
கண்ணித் தொத்த சடையர் கபாலியார்
எண்ணித் தம்மை நினைந்திருந் தேனுக்கு
அண்ணித் திட்டமு தூறுமென் நாவுக்கே. 2

வெண்ணியாகிய பழைய நகரத்தை மேவியவரும், வெண்திங்களைச் சூடியவரும், கொன்றைக் கண்ணியை உடைய கொத்தாக உள்ள சடையுடையவரும், கபாலத்தைக் கையில் ஏந்தியவரும் ஆகிய அப்பெருமானை எண்ணி நினைந்திருந்தேனுக்கு அவர் நினைவு என் நாவினில் அண்ணித்து அமுதாக ஊறும்.

1235. காற்றி னைக்கன லைக்கதிர் மாமணி
நீற்றி னைநினைப் பார்வினை நீக்கிடும்
கூற்றி னையுதைத் திட்ட குணமுடை
வீற்றி னைநெரு நற்கண்ட வெண்ணியே. 3

நீற்றினை – திருநீறணிந்தவனை
நினைப்பவர் வினை நீறாக்கியவனை.

காற்றும் கனலும் ஆவான்; கதிர்விக்கும் மாமணிமேற் சண்ணித்த திருநீறு போன்ற திருமேனியுடையான்; அத்திருமேனியை நினைப்பார் வினையை நீக்குபவன்; கூற்றினை உதைத்த குணமுடைய தனிச்சிறப்புடையவன். இப்பெருமானை நேற்றுக் காண்டற்கு இடமாக இருந்த திருவெண்ணியே எனக்கு இதுபோது பேரின்பத்தைப் பெருக்குவது.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1236.** நல்ல னைத்திகழ் நான்மறை யோதியைச்<br>சொல்ல னைச்சுட ரைச்சுடர் போலொளிர்<br>கல்ல னைக்கடி மாமதில் மூன்றெய்த<br>**வில்ல னை**நெரு நற்கண்ட வெண்ணியே. 4<br><br>வில்லன் – திரிபுரமழிக்க எடுத்த இமயமலையை வில்லாக உடையவன் | நல்லவனை, விளங்கும் நால்வேதங்களை ஓதும்பிரானை, சொல்வடிவானவனை, ஒளியை, சுடர்விட்டு ஒளிர்கின்ற திருக்கயிலாயத் திருமலை உடையவனை, திரிபுரம் எரிசெய்த வில்லுடையவனை நேற்றுக்கண்ட வெண்ணியே இன்று எம்மை இது செய்வது. |
| **1237.** சுடரைப் போலொளிர் சுண்ணவெண் ணீற்றனை<br>அடருஞ் சென்னியில் வைத்த அமுதினைப்<br>படருஞ் செஞ்சடைப் பான்மதி சூடியை<br>இடரை நீக்கியை யான்கண்ட வெண்ணியே. 5 | சுடரைப்போல் ஒளிர்கின்ற வெண்ணீற்றுப் பொடியணி மேனியனை, பூவிதழும் (பிறவும்) சென்னியிலே வைத்த அமுதனையானை, படர்ந்த செஞ்சடையிலே பால் போன்ற மதியைச் சூடியவனை, இடர்கள் நீக்கும் இறைவனை யான் கண்டது வெண்ணித் தலத்திலாகும். சடை நெருங்கிய சென்னியில் அமுது (நீர் – கங்கை) வைத்தவனை – எனினும் அமையும். (வைத்த அமுதினை என்பதை அருங்கேடன் என்பது போலக் கொள்க). |
| **1238.** பூத நாதனைப் பூம்புக லூரனைத்<br>தாதெ னத்தவ ழும்மதி சூடியை<br>நாதனை நல்ல நான்மறை யோதியை<br>வேத னைநெரு நற்கண்ட வெண்ணியே. 6 | பூதங்களுக்குத் தலைவனை, பூக்கள் நிறைந்த புகலூரனை, மகரந்தம் போல் தவழும் மதியைச் சூடியவனை, தலைவனை, நான்மறை ஓதியவனை, வேதப் பொருளானவனை நேற்று வெண்ணியிற் கண்டு ஏத்தினேன். |
| **1239.** ஒருத்தி யையொரு பாகத் தடக்கியும்<br>பொருத்தி யபுனி தன்புரி புன்சடைக்<br>கருத்த னைக்கறைக் கண்டனைக் கண்ணுதல்<br>நிருத்த னைநெரு நற்கண்ட வெண்ணியே. 7 | ஒருத்தியை ஒருபாகத்தில் அடக்கியும், மற்றொருத்தியைப் புன்சடையிற் பொருத்திய புனிதனை, கருத்துள் இருப்பவனை, திருநீலகண்டனை, கண்ணுதலானை, நிருத்தம் ஆடுவானை, நேற்று வெண்ணியிற் கண்டு ஏத்தினேன். |
| **1240.** சடைய னைச்சரி கோவண ஆடைகொண்<br>டுடைய னையுணர் வார்வினை தீர்த்திடும்<br>படைய னைமழு வாளொடு பாய்தரும்<br>விடைய னைநெரு நற்கண்ட வெண்ணியே. 8 | சடை உடையவனை, சரியும் கோவண ஆடை கொண்டு உடையவனை, உணர்வார் வினை தீர்த்திடும் மழுவாளொடு பிறவும் படை உடையவனை, பாய்ந்து செல்லும் விடை உடையவனை நேற்று வெண்ணியிற் கண்டு ஏத்தினேன். |

| | |
|---|---|
| 1241. பொருப்ப னைப்புன லாளொடு புன்சடை<br>அருப்ப னையிளந் திங்களங் கண்ணியான்<br>பருப்ப தம்பர வித்தொழுந் தொண்டர்கள்<br>விருப்ப னைநெரு நற்கண்ட வெண்ணியே. 9 | திருக்கயிலாய மலைக்குரியவனை, கங்கையாளைச் சடையிற் கொண்டவனை, அரும்பு போன்ற இளந்திங்களைக் கண்ணியாகக் கொண்டவனை, திருக்கயிலாயத்தைப் பரவி வாழ்த்தும் தொண்டர்கள் விருப்பத்துக்குரியவனை நேற்றுக் கண்டு வெண்ணியில் ஏத்தினேன். |
| 1242. சூல வஞ்சனை வல்லவெஞ் சுந்தரன்<br>கோல மாஅருள் செய்ததோர் கொள்கையான்<br>காலன் அஞ்ச வுதைத்திருள் கண்டமாம்<br>வேலை நஞ்சனைக் கண்டது வெண்ணியே. 10<br><br>வஞ்சனையை சூலவல்ல எம் சுந்தரன் என்று மாற்றிப் பொருள் கொள்க.<br>சூலுதல் – தோண்டுதல், களைதல் | வஞ்சிப்பார் வஞ்சனையைக் களையவல்ல எமது அழகன்; திருமேனிகாட்டி அருள்செய்த கொள்கையினை உடையான்; காலன் அஞ்சும்படி உதைத்தவன்; கண்டம் இருளும்படி செய்த கடல் நஞ்சினை உண்டு அமரர்களை உயிர் வாழச்செய்தவன். இப் பெருமானை நேற்று கண்ட இடம் திருவெண்ணியூரே ஆம். |
| 1243. இலையி னார்கொன்றை சூடிய ஈசனார்<br>மலையி னாலரக் கன்திறல் வாட்டினார்<br>சிலையி னால்மதி லெய்தவன் வெண்ணியைத்<br>தலையி னால்தொழு வார்வினை தாவுமே. 11<br><br>சிலை – வில் | இலைகளுடன் கூடிய கொன்றை சூடிய ஈசனார் மலையினால் அரக்கன் ஆற்றலை வாட்டினார். வில்லினால் முப்புரங்களை எய்தவர்க்குரிய **வெண்ணியைத் தலையினால் தொழுவார்களது வினை நீங்கும்.** |

## 18. திருக்கடம்பந்துறை

ப.தொ.எண் : 131 பதிக எண் : 18

| | |
|---|---|
| 1244. முற்றிலாமுலை யாளிவ ளாகிலும்<br>அற்றந் தீர்க்கு மறிவில ளாகிலும்<br>கற்றைச் செஞ்சடை யான்கடம் பந்துறைப்<br>பெற்றம் ஊர்தியென் றாளெங்கள் பேதையே. 1<br><br>உலாப்போந்த முதல்வனைக் கண்ட பேதைப் பருவப் பெண், அவன்றன் திருவுருவில் உளங்கொடுத்தாள். | எங்கள் பேதையாகிய இவள் முற்றாத இளமுலை உடையாள் ஆயினும், அற்றந் தீர்க்கும் அறிவில்லாதவள் ஆயினும், கற்றைச் செஞ்சடையானாகிய கடம்பந்துறைப் பெருமான் இவர்ந்து வரும் ஊர்தி இடபம் என்று கூறுகின்றாள். (செவிலி கூற்று) |
| 1245. தனகி ருந்ததொர் தன்மைய ராகிலும்<br>முனகு தீரத் **தொழுதெழு மின்களோ**<br>கனகப் புன்சடை யான்கடம் பந்துறை<br>நினைய வல்லவர் நீள்விசும் பாள்வரே. 2<br><br>முனகு – இழிவு, குற்றம்; தனகு – உள்ளக்களிப்பு | நீங்கள் உள்ளக்களிப்பு மிக்கு உடையீராயினும், நுமது இழிவு நீங்குதற்கு முதல்வனைத் தொழுமின்கள்; கனகப் பொன்சடையான் வீற்றிருக்கும் கடம்பந்துறையை நினையும் வல்லமை பெற்றவர் விசும்பு ஆள்வர் ஆதலால். |

1246. ஆரி யந்தமி ழோடிசை யானவன்
**கூரி யகுணத் தார்குறி நின்றவன்**
காரி கையுடை யான்கடம் பந்துறைச்
சீரி யல்பத்தர் சென்றடை மின்களே. 3

கூரிய – சிறந்த; மிகுந்த.

பெருமை மிக்க நல்லியல்புகள் பொருந்திய அன்பர்களே! வடமொழியும், தமிழும், இசையும் ஆனவனும் மிக்க குணத்தார் குறியாக நின்றவனும் ஒருபாற் பார்வதிதேவியாரை உடையவனுமாகிய பெருமான் வீற்றிருக்கும் கடம்பந்துறை சென்றடைவீர்களாக.

1247. **பண்ணின் இன்மொழி** கேட்கும் பரமனை
வண்ண நன்மல ரான்பல தேவரும்
கண்ண னும்மறி யான்கடம் பந்துறை
நண்ண நம்வினை யாயின நாசமே. 4

பண்ணின் இன்மொழி கேட்கும் விருப்புடைய பரமனும், நான்முகனும், தேவர்களும், திருமாலும் அறியப்படாதவனுமாகிய பெருமான் வீற்றிருக்கும் கடம்பந்துறையை நண்ணினால், நம்வினைகளாயவை நாசமாம்.

### பண்ணின் இன்மொழி கேட்கும் பரமன்

அடியார்கள் பாடும் பண்ணிசைப் பாடல்களைக் கேட்கும் பரமன், அடியார்கள் வாயாரப் பாடாத போதும், அப்பண்ணிசையைக் கேட்க வேண்டுமென்ற ஆர்வத்தால் அசுவதரன், கம்பளதரன் என்ற இரண்டு பாணர்களையும் குழை வடிவாகத் தமது காதில் அணிந்துகொண்டு எப்போதும் பண்ணிசைப் பாடல்களைக் கேட்டுக் கொண்டேயிருப்பார். நமது எல்லோருடைய மரபணுக்களிலும் சிவபெருமானின் மரபணுவும் இருக்கும். அதனால்தான் இந்த அலைபேசி, கணினி யுகத்தில் எண்ணற்ற இளைஞர்கள் தமது காதுகளில் சிறிய ஒலிபெருக்கிகளை மாட்டிக்கொண்டு பாடல்களைக் கேட்டுக்கொண்டே சுற்றித் திரிகிறார்கள். சிலர் வேலையும் செய்கிறார்கள். இது சிவபெருமான் பாணர்களைக் குழையாக அணிந்து பண்ணிசை கேட்டதன் தாக்கமாகும்.

1248. மறைகொண் டம்மனத் தானை மனத்துளே
நிறைகொண் டந்நெஞ்சி னுள்ளூற வைம்மினோ
கறைகண் டன்னுறை யுங்கடம் பந்துறை
சிறைகொண் டவ்வினை தீரத் தொழுமினே. 5

உபதேசப் பொருளைக் கொண்ட மனத்தே விளங்கித் தோன்றும் முதல்வனை ஒரு நெறிப்பட்ட நெஞ்சின் உள்ளூற வைப்பீர்களாக; திருநீலகண்டன் உறையும் கடம்பந்துறையை நுமது அறிவைக் கட்டுப்படுத்தும் இருவினை தீரத் தொழுவீர்களாக.

1249. நங்கை பாகம்வைத் தந்நறுஞ் சோதியைப்
பங்க மின்றிப் பணிந்தெழு மின்களோ
கங்கைச் செஞ்சடை யான்கடம் பந்துறை
அங்க மோதி யரனுறை கின்றதே. 6

கங்கையைச் செஞ்சடையில் வைத்த பெருமானும் ஆறங்கங்களை ஓதியோரும் ஆகிய இறைவர் உறைகின்றது கடம்பந் துறையாதலால் நங்கையை ஒருபாகம் வைத்த அந்த ஒளியுருவை அவ்விடத்துக் கேடின்றிப் பணிந்தெழுவீர்களாக.

கடம்பந்துறையானது, குளித்தலையில் அமைந்துள்ள வடக்கு நோக்கிய சிவாலயமாகும். காலையில் கடம்பரையும், மதியம் வாட்போக்கி எனப்படும் ஐவர்மலை ரத்தின கிரீஸ்வரரையும், மாலையில் ஈங்கோய் மலையையும் வழிபட வேண்டுமென்ற மரபு அப்பகுதியில் உள்ளது. கடம்பந்துறையும், வாட்போக்கியும் காவிரிக்குத் தென்கரை. ஈங்கோய் காவிரிக்கு வடகரை. ஐவர்மலை சுவாமி; ஈங்கோய் மலை அம்பாள்; கடம்பந்துறை முருகன் என்று சோமஸ்கந்தமாகவும் வழிபடுவார்கள்.

1250. அரிய **நான்மறை யாறங்க மாயைந்து**
**புரியன்** தேவர்க ளேத்தநஞ் சுண்டவன்
கரிய கண்டத்தி னான்கடம் பந்துறை
உரிய வாறு நினைமட நெஞ்சமே. 7

அறியாமை உடைய நெஞ்சமே! அரிய நான் மறை, ஆறங்கமாய் உள்ளவனும், அன்னமயகோசம் முதலிய ஐங்கோசங்களாகப் பேசப்பட்டவனும், தேவர்கள் வேண்ட நஞ்சுண்டவனும், அதனாற்கறுத்த கண்டத்தினனுமாகிய பெருமான் உறைகின்ற கடம்பந்துறையை விதிமுறைப்படி நினைப்பாயாக.

### நான்மறை – தைத்திரியம், பௌடிகம், தலவகாரம், சாமவேதம்

| | | |
|---|---|---|
| ஆறங்கம் | சிட்சை | உச்சரிப்பு முறை |
| (வேதாங்கம்) | நிருத்தம் | மந்திரம் (வேர்ச்சொற்கள்) |
| வேதப்பொருளை | கல்பம் | நிகண்டு (சமயக்கருமங்கள்) |
| அறிதற்குரிய | வியாகரணம் | இலக்கணம் |
| கருவிகள் | சந்தோவிசிதம் | அடிமுறை |
| | சோதிடம் | வானநூல் |

### ஐந்துபுரியன்

| | |
|---|---|
| அன்னமய கோசம் | தூல தேகம் – அறிகருவிகள் 5 + தொழிற்கருவிகள் 5 + பஞ்சபூதம் 5 |
| பிராணமய கோசம் (புரியட்டகாயம்) | தன்மாத்திரைகள் 5 + அந்தக்கரணங்களில் மனம், புத்தி, அகங்காரம் என்ற மூன்று மட்டும் (சூக்குமதேகம்) |
| மனமய கோசம் (குணம்) | சித்தம் (அதிசூக்கும தேகம்) |
| விஞ்ஞான கோசம் | காலம், நியதி, கலை, வித்தை, அராகம் (அதிசூக்கும தேகம்) |
| ஆனந்த கோசம் | மாயை (அதிசூக்கும தேகம்) |

உயிருக்கு இடமாயிருத்தலால் புரி. 36 தத்துவங்களால் பூட்டப்பட்ட உயிர்

உடலுக்குள்ளே உயிர் இருக்கிறது. உயிர் என்றும் அழியாதது (அநாதி). உடல் நிலையில்லாதது. அழிந்து சாம்பலாகி மண்ணோடு மண்ணாகும். வாழ்வாவது மாயம். இது மண்ணாவது திண்ணம். இந்த உடலுக்குச் சட்டையாகிய வெளி ஆடையும், பனியன் போன்ற உள்ளாடைகளையும் அணிகிறோம். உயிருக்கு உள்ளது இந்த மானுட உடல் சட்டையாகும். இந்த மானுடச் சட்டையிலும் 5 உள்ளாடைகள் உள்ளன. இவை கோசங்கள், உறைகள் என்று சொல்லப்படும். இந்த உயிர் மிக மிக நுண்ணியது. பாக்டீரியாவை விடச் சிறியது. இது உடலுக்குள் சிவபெருமானால் இயக்கப்படுகிறது. இதைக் கண்டு ஆராயும் நுண்ணோக்கியை பூலோக விஞ்ஞானிகள் இன்னும் கண்டுபிடிக்கவில்லை. இந்தக் கணினி யுகத்தில் பென்டிரைவ் என்று சொல்லப்படும் சொற்சேகரிப்பு நினைவுக் கருவியை நாம் டேர் ரிகார்டருக்கு பதில் பயன்படுத்தி வருகிறோம். அதை விடக் கோடி மடங்குத் தகவல்கள் இந்நுண்ணிய உயிரில் சேமித்து வைக்கப்பட்டு அதற்கு அடையாளமும் அதில் பொறிக்கப்பட்டுள்ளது. அது சித்தர்களுக்கும், ஞானிகளுக்கும் தெரிவதால்தான் காயப் பிரவேசம் செய்கிறார்கள்.

இறைவன் முதலில் இந்த உயிருக்கு அதிசூக்கும தேகமாக (மிக நுண்ணிய உடம்பாக) மாயையையும், பின்னர் காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்ற கருவிகளை உடைய புருடன் என்ற சட்டையையும், மூன்றாவதாக சித்தம் என்ற சட்டையையும் கொடுப்பார். அடுத்து புரியட்ட காயம் எனப்படும், பிராணமய தேகத்தையும், பூலோகவருகையின் போது தாயின் கருவழி அன்னமய கோசத்தையும் கொடுப்பார்.

உயிர் உடலைவிட்டுப் பிரியும்போது புரியட்ட காயத்துடன் தான் புறப்படும். அன்னமய கோசத்தை பூமியில் விட்டுவிட்டுத்தான் பயணத்தைத் தொடங்கும்.

1251. பூமென் கோதை யுமையொரு பாகனை
ஓமஞ் செய்தும் உணர்மின்க ளுள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாம மேத்தநம் தீவினை நாசமே. 8

அழலோம்புதல் சிவபூசையின் முக்கியமான அங்கங்களில் ஒன்று.

பூவணிந்த மென்கோதை உடையவளாகிய உமையை ஒருபாகத்தில் உடையவனை பூவும், நீரும் கொண்டு பூசித்தலோடு, வேள்விகள் செய்தும், உள்ளத்தால் உணர்வீர்களாக! மன்மதனைச் சினந்த பெருமான் உறையும் கடம்பந்துறையில் அத்திருநாமம் ஏத்த நம் தீவினைகள் நாசமாம்.

1252. பார ணங்கி வணங்கிப் பணிசெய
நார ணன்பிர மன்னறி யாததோர்
கார ணன்கடம் பந்துறை மேவிய
ஆர ணங்கொரு பாலுடை மைந்தனே. 9

திருமாலும் பிரமனும் உலகில் விரும்பி வணங்கிப் பணிசெய்ய அறியாது தேடி இளைத்தற்குக் காரணனாக இருந்தவன் கடம்பந்துறை மேவியவனும், ஆரணங்கை ஒருபால் உடையவனுமாகிய புலன்களைந்தும் வென்ற பெரு வீரனாகிய இறைவனே.

நாரணனும் பிரமனும் நிலமிசை விரும்பி வணங்கிப் பணி செய்திருப்பின் முதல்வனைக் கண்டிருப்பர். நாம் நம் சிவப்பணிகளைச் சீரோடும் சிறப்போடும் எந்தப் பலனையும் எதிர்நோக்காமல் செய்து கொண்டேயிருந்தால் சுவாமி நம்மைத் தேடி வருவார். நாம் உள்ளத்திலேயே தேடி அலைந்தால் போதும். அவர்களைப் போல விண்ணுக்கும், மண்ணுக்கும் அலைய வேண்டியதில்லை.

ஆரணங்கு – அரிய தெய்வமாகிய உமையம்மை.

1253. நூலால் நன்றா நினைமின்கள் நோய்கெடப்
பாலா னைந்துட னாடும் பரமனார்
காலா லூன்றுகந் தான்கடம் பந்துறை
மேலா னாஞ்செய்த வல்வினை வீடுமே. 10

பாலோடு கூடிய ஆனைந்தும் ஆடும் பரமனும், அரக்கனைக் காலால் ஊன்றி உகந்த பெருமானும் ஆகிய இறைவனைக் கடம்பந்துறையிற் சென்று வழிபட்டால், நாம் செய்த மேலைவல் வினைகள் கெடும். ஆதலால், துன்பங்கெடும்படியாக நூல் அறிவால் நன்றாக நினைத்து வழிபடுவீர்களாக. (நூல் – அறிவு – சிவாகம உணர்வு).

## 19. திருக்கடம்பூர்

## கடம்பூர் கரக்கோயில்

கடம்பு இத்தல மரமாதலின் கடம்பூர் எனப் பெயர் பெற்றது. இவ்வூர் கீழைக்கடம்பூர், மேலைக்கடம்பூர் என்ற இரு பிரிவுகளையுடையது. பாடல் பெற்ற தலம் மேலைக்கடம்பூரில் உள்ளது. இது கரக் கோயில் என்று சொல்லப்படுகிறது. சிதம்பரத்திற்கு அருகில் காட்டுமன்னார் குடியிலிருந்து **6** கல் தொலைவில் அமைந்துள்ளது. நால்வர் பாடல்களிலும் இடம்பெற்ற பதி. "கடம்பூர் தன்னில் இடம் பெற இருந்து" என்பது திருவாசகம். சுந்தரர் ஊர்த்தொகை "காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே" என்று இத்தலத்தைக் குறிப்பிட்டுள்ளார். திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், அப்பர் பதிகங்கள் இரண்டும் உள்ளன.

| | |
|---|---|
| மேலக்கடம்பூர் | கரக்கோயில் (பாடல் பெற்ற தலம்) |
| கீழக்கடம்பூர் | இளங்கோயில் (அப்பர் தேவார வைப்புத்தலம்) |

என்றும் சொல்லப்படுகின்றன.

### கரக்கோயில்

தேர்வடிவமான சக்கரங்களோடு மேலக் கடம்பூர் கோயில் அமைக்கப் பெற்றிருந்ததால் இது கரக்கோயில் எனப்படுகிறது. இந்தப் பெயருக்கு கீழ்க்காணும் புராண வரலாறும் கூறப்பெறுகிறது. இத்தலத்தை வணங்கிய இந்திரன் இதனைத் தன் உலகிற்குக் கொண்டுபோக நினைத்துப் பாதாளம் வரைத் தன் கரங்களால் அகழ்ந்தெடுக்க முயற்சித்தான். கோயிலின் அடிப்பகுதி அதற்கப்பாலும் சென்றதுகண்டு அஞ்சி முன்போலவே அமைத்துப் பூசித்து அமிர்தம் உண்டாகும்படி வரம் பெற்றனன் என்ற வரலாறு கருதி கரக்கோயில் எனப்படும் என்பர் என்று சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார் பெரியபுராண உரையில் குறித்துள்ளார். இந்திரனுடைய தாய் நாடொறும் விண்ணுலகத்திலிருந்து இப்பூவுலகுக்கு வந்து கடம்பூர் இறைவனை வழிபடும் கடமையை மேற்கொண்டு வாழ்ந்தார். தாயின் முதிய நிலையையும், அவர் இத்தலத்து இறைவர் மேல் கொண்டுள்ள பத்தியையும் அறிந்த இந்திரன் இக்கோயிலை இந்திரலோகத்துக்கு எடுத்துச் செல்ல விரும்பி கருவறைக்குச் சக்கரங்களைக் கட்டிக் குதிரைகளைப் பிணைத்து இழுக்க முயற்சி செய்தான். தோல்வியுற்றான் என்றும் வரலாறு இருப்பதாகத் தெரிகிறது.

கரம் – "சக்கரம்" என்ற சொல்லிலிருந்து பெறப்பட்டதாக நினைந்து இவ்வரலாறுகள் பேசப்படுகின்றன. சூரியனும், சந்திரனும் உள்ளவரை நிலைத்து நிற்க வேண்டுமென்று கட்டப்படும் கோயில்களுக்கு ஒரு சிற்பியோ, கர்த்தாவோ சக்கரங்களை வைத்துக் கட்டுவார்களா ? சக்கரம் வைத்தாலே அது ஊர்தி ஆகிவிடாதா ? சிவாலயங்கள் நிலைபெற்றிருக்க வேண்டியவை அல்லவா ? "மொபைல் சிவாலயம்" என்ற கொள்கையும் சிவபெருமானுக்கு உகந்ததா ? எனவே இன்றைய மொபைல் உலகம் போல "சக்கரக் கோயிலைக்" கொள்ளலாமா ? இந்திரன் கரத்தால் அகழ்ந்ததற்காக, அவ்வகையான கோயில்களே உள்ளதாகச் சொல்லலாமா ? கரக்கோயில் என்பதற்கு அப்பர் உள்ளக் கிடக்கையில் வேறு பொருள் இருந்துள்ளதா ? மற்ற நாயன்மார் பாடல்களிலும் "கரக்கோயில்" என்ற சொல் இருப்பதாகத் தெரியவில்லை. அடியார்கள் அவரருளாலே ஆய்ந்து உரிய பொருளை அறிய முயல வேண்டும்.

நாட்டுக்கோட்டை நகரத்தார் தென்னாட்டில் பாடல் பெற்ற பல சிவாலயங்களைப் பெரும் பொருட் செலவில் திருப்பணிகள் செய்வித்த புண்ணியப்பேறுடையவர்கள். இம்மரபினருள் தோன்றிய அருணாசலம்

செட்டியார் இத்திருக்கோயில் திருப்பணியைச் செய்வித்தவர். அவர் இக்கோயில் பணியைச் செய்த காரணத்தைக் கதையாக அன்பர்கள் பலர் இன்றும் கூறி வருகின்றார்கள்.

காட்டுமன்னார் கோயில் சரவணப்பிள்ளை என்பவர் தேவகோட்டை சென்று அருணாசலம் செட்டியாரைக் கண்டு கடம்பூர்க்கோயில் மிகவும் பழுதடைந்துள்ளது என்றும் அதனைத் தாங்கள் திருப்பணி செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். செட்டியார் பார்க்கலாம் என்று சொல்லிப் பிள்ளையை வழியனுப்பிவிட்டார்.

சில மாதங்கள் கழித்துச் செட்டியார் திருக்கூடலையாற்றூர் கோயிலைப் பெரும் பொருட்செலவில் கருங்கல் திருப்பணியாகச் செய்விக்கும் கருத்தோடு மாட்டு வண்டியிலேறி அத்தலத்திற்குப் புறப்பட்டார். இரவுநேரம் வண்டியில் உறங்கிய செட்டியார் கனவில், கடம்பூர் இறைவன் தமது கோயிற்பணியைச் செய்யுமாறு கூறி மறைந்தார். ஓட்டுநர் உறங்கியதால் வண்டி கூடலையாற்றூர் செல்லும் வழியிலிருந்து மாறி கடம்பூரை அடைந்தது. இளங்காலை நேரம். கனவு கண்டு விழித்த செட்டியார், கடம்பூர் இறைவர் தம்மைத் தடுத்தாட்கொண்டதை அறிந்து வியந்து அன்றே கால்கோள்விழா நிகழ்த்தினார். திருப்பணிகள் புரிவித்தார். பின்னர் அவர் மரபில் தோன்றிய சோமசுந்தரம் செட்டியார் மகாகும்பாபிஷேகத்தை நிகழ்த்தினார். பின் 23 ஆண்டுகள் கழித்து அவர் மரபினர் அருணாசலம் செட்டியார் அஷ்டபந்தனம் செய்வித்து மகாகும்பாபிஷேகம் செய்வித்துள்ளார்.

தற்பொழுது இராஜகோபுரத்தையும் மற்றும் பழுது அடைந்துள்ள பகுதிகளையும் திருப்பணிகள் செய்வித்து அன்பர்கள் மகா கும்பாபிஷேகம் நிகழ்த்தியுள்ளனர். ஆலயம் மிக்க பொலிவோடு காட்சி தருகிறது. மேலக்கடம்பூர், கூடலையாற்றூர் என்ற இரு தலங்களின் திருப்பணிகளுக்கு கற்பகம் அறக்கட்டளையும் தனது பணிகளை ஆற்றியுள்ளது.

**ப.தொ.எண் : 132** **பதிக எண் : 19**

**1254.** தளருங் கோளர வத்தொடு தண்மதி
வளருங் கோல வளர்சடை யார்க்கிடம்
கிளரும் பேரிசைக் கின்னரம் பாட்டறாக்
களருங் கார்க்கடம் பூர்க்கரக் கோயிலே. **1**

தளரும் – வளையும்; கோள் அரவம் – விழுங்குதலை உடைய பாம்பு; கின்னரம் – வாத்தியம்; களரும் – களர் உப்பு நிறமுடையதாய். இப்பாடல் 1271 ஆம் பாடலுடன் ஒத்திருக்கிறது.

தளருகின்ற கொள்ளுதல் தப்பாத பாம்பினோடு, குளிர்ந்த பிறைமதி வளரும் அழகு வளர்கின்ற சடையாராகிய சிவபெருமானுக்கு இடம், பேரிசை கிளர்கின்ற கின்னரங்களின் பாட்டு அறாத, கரிய கடம்பு நிறைந்த ஊரில் திருக்கரக் கோயிலே.

**1255.** வெலவ லான்புல னைந்தொடு வேதமும்
சொலவ லான்சுழ லுந்தடு மாற்றமும்
அலவ லான்மனை யார்ந்தமென் தோளியைக்
கலவ லான்கடம் பூர்க்கரக் கோயிலே. **2**

அலவலான் – நீக்க வல்லவன்
– இயல்பாகவே நீங்கியவன்

கடம்பூர் திருக்கரக் கோயிலின்கண் வீற்றிருக்கும் இறைவன் புலன் ஐந்தினை வெல்ல வல்லமை உடையவன்; வேதமும் சொல்ல வல்லவன்; சுழல்கின்ற தடுமாற்றமும் நீக்க வல்லவன்; மனையார்ந்த மங்கையாகிய மென்றோளுடைய உமாதேவியாரைக் கலத்தல் வல்லவன்.

**1256.** பொய்தொ ழாது புலியுரி யோன்பணி
செய்தெ ழாவெழு வார்பணி செய்தெழா
வைதெ ழாதெழு வாரவ ரெள்கநீர்
கைதொ ழாவெழு மின்கரக் கோயிலே. 3

உலகப் பொருள்களில் பற்றுச் செய்யாது, புலியின் தோலை உடுத்தோனாகிய சிவபிரான் பணியைச் செய்து, அவ்வாறு எழுவார் பணியினையும் உடன்செய்து கரக்கோயிலையும் கைதொழுது வணங்கி உய்வீராக! வைதெழாது எழுவார் எள்ளினால் எள்ளட்டும்.

| | |
|---|---|
| பொய்தொழாது | பொய்யான பொருள்களுக்கு அடிமைப்படாது |
| புலியுரியோன் பணி செய்தெழா | புலித்தோல் உடுத்த சிவபெருமானுக்குப் பணி செய்து |
| அவ்வாறு எழுவர் பணி செய்தெழா | அவ்வாறு பணிபுரிந்த அடியார்க்கும் பணிசெய்து |
| கைதொழா எழுமின் | திருக்கரக் கோயிலையும் கைதொழுது மேல் ஓங்குமின் |
| வைது எழாது எழுவர் | இறைவனை இகழ்ந்து, உணர்வின்றியே எழும் அறிவிலிகள் |

**1257.** துண்ணெ னாமனத் தால்தொழு நெஞ்சமே
பண்ணி னால்முனம் பாட லதுசெய்தே
எண்ணி லாரெயில் மூன்று மெரித்தமுக்
கண்ணி னான்கடம் பூர்க்கரக் கோயிலே. 4

நல்ல எண்ணமில்லாதாரது முப்புரம் எரித்த முக்கண்ணினானது கடம்பூர்க் கரக்கோயிலை, பண்ணினால், திருமுன்பு பாடல் பரவி அச்சமின்றி நெஞ்சமே தொழுவாயாக!

**1258.** சுனையுள் நீல மலரன கண்டத்தன்
புனையும் பொன்னிறக் கொன்றை புரிசடைக்
கனையும் பைங்கழ லான்கரக் கோயிலை
நினையு முள்ளத் தவர்வினை நீங்குமே. 5

சுனையுள் பூத்த நீலமலர் போன்ற கண்டத்தனும், புனையும் பொன்னிறக் கொன்றையுடைய புரிசடையும் ஒலிக்கின்ற கழலும் உடையவனுமாகிய கரக்கோயிற் பெருமானை நினையும் உள்ளத்தவர் வினைகள் நீங்கும்.

**1259.** குணங்கள் சொல்லியுங் குற்றங்கள் பேசியும்
வணங்கி வாழ்த்துவ ரன்புடை யாரெலாம்
வணங்கி வான்மலர் கொண்டடி வைகலும்
கணங்கள் போற்றிசைக் குங்கரக் கோயிலே. 6

அன்புடையாரெலாம் இறைவன் குணங்கள் சொல்லியும் தம் குற்றங்கள் பேசியும் வணங்கி வாழ்த்துவதும், கணங்கள் வணங்கி வான்மலர் கொண்டு வைகலும் அடி போற்றிசைப்பதும் கரக்கோயில் தலத்திலாகும்.

**1260.** பண்ணி னார்மறை பல்பல பூசனை
மண்ணி னார்செய்வ தன்றியும் வைகலும்
விண்ணி னார்கள் வியக்கப் படுவன
கண்ணி னார்கடம் பூர்க்கரக் கோயிலே. 7

"இந்தப்பூமி சிவனுய்யக் கொள்கின்றவாறு என்று நோக்கி" திருவாசகம்

திருக்கடம்பூர்க் கரக்கோயில் பண்ணினைப் பொருந்திய மறையோதிப் பல்பூசனைகளை மண்ணினுள்ளார் செய்வதன்றியும் நாள்தோறும் **விண்ணினுள்ளாரும் வியக்கப்படும் பூசனைகள் செய்யக் கருதினர்.**

| | |
|---|---|
| 1261. அங்கை ஆரழ லேந்திநின் றாடலன்<br>மங்கை பாட மகிழ்ந்துடன் வார்சடைக்<br>கங்கை யானுறை யுங்கரக் கோயிலைத்<br>தங்கை யால்தொழு வார்வினை சாயுமே. 8<br><br>ஆர்அழல் – தாங்குதற்கு அரிய நெருப்பு | உமையம்மை உடனிருந்து மகிழ்ந்து பாட அங்கையில் அழல் ஏந்தி நின்று ஆடல் புரிபவன். ஆய கங்கையுறையும் சடையான் வீற்றிருக்கும் கரக்கோயிலைத் தம்கையால் தொழுவாருடைய வினைகள் வலியற்றுக் கெடும். |
| 1262. நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்<br>தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்<br>தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்<br>என்க டன்பணி செய்து கிடப்பதே. 9 | கடம்பமாலை சூடிய நம் முருகனைப் பெற்ற உமாதேவியினைப் பங்கில் உடையவனாகிய தென்கடம்பைத் திருக்கரக்கோயிலான்தன் கடன் அடியேன் போன்றாரைத் தாங்குதல்; என் போன்றோர் கடன் பணிசெய்து தற்போதம் இன்றியே இருத்தல். |
| 1263. பணங்கொள் பாற்கடல் பாம்பணை யானொடும்<br>மணங்க மழ்மலர்த் தாமரை யானவன்<br>பிணங்கும் பேரழ லெம்பெரு மாற்கிடம்<br>கணங்கள் போற்றிசைக் குங்கரக் கோயிலே. 10 | பாற்கடலில் கிடக்கும் படம்கொண்ட பாம்பு அணையானாகிய திருமாலும், மணம் கமழ் மலர்த்தாமரையானாகிய பிரமனும் தம்மில் மாறுபட்டபோது பேரழலாய் நிமிர்ந்த எம் பெருமானுக்கு இடம், கணங்கள் போற்றிசைக்கும் கரக்கோயிலாகும். |
| 1264. வரைக்கண் நாலஞ்சு தோளுடை யான்தலை<br>அரைக்க வூன்றி யருள்செய்த ஈசனார்<br>திரைக்குந் தண்புனல் சூழ்கரக் கோயிலை<br>உரைக்கு முள்ளத் தவர்வினை யோயுமே. 11 | திருக்கயிலாயத் திருமலைக்கண் இருபது தோளுடைய இராவணன் தலைகள் அரைபடும்படி ஊன்றிப் பின்னர் அருள்புரிந்த ஈசனார் வீற்றிருக்கும், அலைவீசும் குளிர் புனல்சூழ் கரக்கோயிலைக் கூறும் உள்ளத்தவர் வினைகள் ஓயும். |

## 20. திருக்கடம்பூர்

ப.தொ.எண் : 133 பதிக எண் : 20

| | |
|---|---|
| 1265. ஒருவ ராயிரு மூவரு மாயவன்<br>குருவ தாய குழக னுறைவிடம்<br>பருவ ரால்குதி கொள்ளும் பழனஞ்சூழ்<br>கருவ தாங்கடம் பூர்க்கரக் கோயிலே. 1 | **ஒருவராய்,** இருவராய், மூவராய் நிற்பவனும் குருவடிவுமாகிய குழகன் உறைவிடம், பருத்த வரால் மீன்கள் குதித்தலைக் கொள்ளும் பழனங்கள் சூழ்ந்த இடமாகிய கடம்பூர்க் கரக்கோயிலே. |

| | |
|---|---|
| **1266.** வன்னி மத்தம் வளரிளந் திங்களோர்<br>கன்னி யாளைக் கதிர்முடி வைத்தவன்<br>பொன்னின் மல்கு புணர்முலை யாளொடும்<br>மன்னி னான்கடம் பூர்க்கரக் கோயிலே. 2 | வன்னியும், ஊமத்த மலரும், வளர் இளந் திங்களும், கங்கையும் ஆகியவற்றைக் கதிர் விரிக்கும் முடியில் வைத்தவன், பொன்னின் நிறைந்து புணர்முலையாளாகிய உமாதேவி யோடும் கடம்பூர்க் கரக்கோயிலில் நிலைபெற்றவன் ஆவன். (எல்லாம் வல்ல முதல்வன் உயிர்களுக்குப் போகம் உதவுதற்குப் போகியாய் இருந்தருள்கின்றான் என்பது கருத்து) |
| **1267.** இல்லக் கோலமு மிந்த இளமையும்<br>அல்லற் கோல மறுத்துய வல்லிரே<br>ஒல்லைச் சென்றடை யுங்கடம் பூர்நகர்ச்<br>செல்வக் கோயில் திருக்கரக் கோயிலே. 3 | இல்லத்திற்கொள்ளும் கோலங்களும், இந்த இளமையுமாகிய அல்லற் கோலங்களையும் அறுத்து உய்ய வல்லமை உடையீராவீர்; அதற்குக் கடம்பூர்நகர்ச் செல்வக் கோயிலாகிய கரக்கோயிலை விரைந்து சென்று அடைந்து தொழுவீர்களாக. |
| **1268.** வேறுசிந்தை யிலாதவர் தீவினை<br>கூறு செய்த குழக னுறைவிடம்<br>ஏறு செல்வத் திமையவர் தாந்தொழும்<br>ஆறு சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 4 | தம்மைப் பற்றியன்றி வேறு சிந்தனை இல்லாதவர்களது தீவினைகளைக் கூறு செய்யும் குழகன் உறைவிடம், செல்வம் பெருகுகின்ற தேவர்கள் தொழுகின்ற ஆற்றுவளம் சேர்ந்த கடம்பூர்க் கரக்கோயிலாகும். |
| **1269.** திங்கள் தங்கிய செஞ்சடை மேலுமோர்<br>மங்கை தங்கும் மணாள னிருப்பிடம்<br>பொங்கு சேர்மணற் புன்னையும் ஞாழலும்<br>தெங்கு சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 5 | இடப்பாகத்தே பார்வதியைக் கொண்டதன்றி, திங்கள் பொருந்திய செஞ்சடை மேலும் ஒரு மங்கை தங்கும் மணாளன் இருப்பிடம், மணல் நிறைந்த பகுதியில் புன்னையும், புலிநகக் கொன்றையும், தென்னையும் சேர்ந்த கடம்பூர்க் கரக்கோயிலாகும். |
| **1270.** மல்லை ஞாலத்து வாழு முயிர்க்கெலாம்<br>எல்லை யான பிரானா ரிருப்பிடம்<br>கொல்லை முல்லை கொழுந்தகை மல்லிகை<br>நல்ல சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 6 | வளம் பொருந்திய உலகத்து வாழும் உயிர்கட்கெல்லாம் எல்லையாகிய தலைவர் இருப்பிடம், முல்லை, கொழுத்த மல்லிகை ஆகிய நல்ல மலர்கள் சேர்ந்த கடம்பூர்க் கரக்கோயிலாகும். |

1271. தளரும் வாளர வத்தொடு தண்மதி
வளரும் பொற்சடை யாற்கிட மாவது
கிளரும் பேரொலி கின்னரம் பாட்டறாக்
களரி யார்கடம் பூர்க்கரக் கோயிலே. 7

நெகிழும் இயல்புடைய ஒளிபொருந்திய அரவத்தொடு, தண்மதி வளர்கின்ற பொன்னிறம் உடைய சடையார்க்கு இடமாவது, கிளர்கின்ற பேரொலி உடைய இசைக்கருவி இடைவிடாது இசைக்கும் களர் நிலத்தைச் சேர்ந்த கடம்பூர்க் கரக்கோயிலாகும்.

1254 ஆவது பாடலோடு ஒத்த பாடலாகும்

1272. உற்றா ராயுற வாகி யுயிர்க்கெலாம்
பெற்றா ராய பிரானா ருறைவிடம்
முற்றார் மும்மதி லெய்த முதல்வனார்
கற்றார் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 8

நமக்குற்றதைத் தமக்குற்றது போலக் கருதும் நெருங்கிய உறவுடையவராய் உறவாகி, உயிர்க்கெலாம் ஈன்றாராகிய தலைவர், அறிவிற் குறைபாடுடைய முப்புராதிகளின் எயில்களை எய்த முதல்வனார் உறைவிடம் கற்றார்கள், வாழும் கடம்பூர்க் கரக் கோயிலாகும்.

1273. வெள்ளை நீறணி மேனிய வர்க்கெலாம்
உள்ள மாய பிரானா ருறைவிடம்
பிள்ளை வெண்பிறை சூடிய சென்னியான்
கள்வன் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 9

திருநீறணிந்த மேனியவர்க்கெல்லாம் உள்ளத்தில் விளங்கும் தலைவனும், வெண்பிறை சூடிய சென்னியானும் ஆகிய பெருமான் உறைவிடம் கடம்பூரில் உள்ள கள்வன் சேர்ந்த கரக்கோயிலாகும்.

1274. பரப்பு நீரிலங் கைக்கிறை வன்அவன்
உரத்தி னாலடுக் கல்எடுக் கல்லுற
இரக்க மின்றி யிறைவிர லாற்றலை
அரக்கி னான்கடம் பூர்க்கரக் கோயிலே. 10

நீர்ப்பரப்புச் சூழ்ந்த இலங்கைக்குத் தலைவனாகிய இராவணன் தன் ஆற்றலினால் திருக்கயிலையை எடுக்கத் தொடங்க, இரக்கமின்றிச் சிறிது, விரலாற் றலையினை அழுத்தி நெரித்தவன் இடம் கடம்பூர்க் கரக்கோயில்.

## 21. திருஇன்னம்பர்

ப.தொ.எண் : 134 பதிக எண் : 21

1275. என்னி லாரு மெனக்கினி யாரில்லை
என்னி லும்மினி யானொரு வன்னுளன்
என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்ப ரீசனே. 1

என்னைவிட எனக்கு யாரும் இனியவர் இந்தப் பிரபஞ்ச வெளியில் இல்லை. ஆயினும் என்னைவிட இனியவன் ஒருவன் உள்ளான்; என்னுள்ளே உயிர்ப்பாகப் புறம் போந்தும் புக்கும் என்னுள்ளே நிற்கும் பரம்பொருளாம் இன்னம்பர் ஈசனே அவன்.

நம்முள்ளேயே இறைவர் இருக்கிறார். மனம் தூய்மை அடைய அடைய இருப்பு மிக நெருக்கமாகிறது. திருமால், பிரமன் போல நாம் எங்கும் தேடி அலைய வேண்டியதில்லை. உள்ளேயே இருக்கும் அவரை மானசீகமாக அன்பாக நித்தலும் பூசை செய்து திருப்பணி செய்து வந்தாலே போதும், அவரடியை அடைந்து விடலாம்.

| | |
|---|---|
| **1276.** மட்டுண் பார்கள் மடந்தையர் வாட்கண்ணால்<br>கட்டுண் பார்கள் கருதுவ தென்கொலோ<br>தட்டி முட்டித் தள்ளாடித் தழுக்குழி<br>எட்டு மூர்த்திய ரின்னம்ப ரீசனே. **2**<br><br>பஞ்சபூதங்கள், சூரியன், சந்திரன், உயிர் ஆகிய எட்டுமூர்த்தி | கள்ளுண்பவர்களும், பெண்கள் வாட் கண்ணால் கட்டுண்பவர்களும் கருதுவது எதனை ? தட்டி முட்டித் தள்ளாடி விழும் போது துணையாவார் எட்டு மூர்த்தியாகிய இன்னம்பர் ஈசனல்லனோ ? |
| **1277.** கனலுங் கண்ணியுந் தண்மதி யோடுடன்<br>புனலுங் கொன்றையுஞ் சூடும் புரிசடை<br>அனலுஞ் சூலமும் மான்மறிக் கையினர்<br>எனலு மென்மனத் தின்னம்ப ரீசனே. **3** | "கண்ணியும் கொன்றையும், தண்மதியோடு கங்கையும் சூடும் முறுக்குண்ட சடையர், அனல், சூலம், மான் மறி கூடிய கையை உடையவர்" என்று சொன்னவுடன் அவ் இன்னம்பர் ஈசன் என்மனத்தே வெளிப்பட்டொளிரும். |
| **1278.** மழைக்கண் மாமயி லாலு மகிழ்ச்சியான்<br>அழைக்குந் தன்னடி யார்கள்த மன்பினைக்<br>குழைக்குந் தன்னைக் குறிக்கொள வேண்டியே<br>இழைக்கு மென்மனத் தின்னம்ப ரீசனே. **4** | மழைக்காலத்தில் கரிய மயில்கள் ஆரவாரிக்கும் மகிழ்ச்சியைப் போன்று மகிழ்ந்து அழைக்கும் தன்னடியார்களின் அன்பினைத் தன்பாற் குறிக்கொள்ள வேண்டிக் குழைக்கும் பெருமை உடையவன் என்மனத்து இழைக்கும் இன்னம்பர் ஈசனாவான். |
| **1279.** தென்ன வன்னெனை யாளுஞ் சிவனவன்<br>மன்ன வன்மதி யம்மறை யோதியான்<br>முன்ன மன்னவன் சேர்வன பூழியான்<br>இன்னம் இன்புற்ற வின்னம்ப ரீசனே. **5**<br><br>பூழி – திருநீறு; இனன் – சூரியன்; அவன் வழிபட்டதால் இனன் + நம்பூர் – இன்னம்பர் ஆயிற்று | தென்னவனும், எனையாளும் சிவனும், மன்னவனும், மதித்தற்குரிய அழகிய மறைகளை ஓதியவனும், உலகத் தோற்றத்திற்கு முன்னரே நிலைத்திருந்தவனும், ஊழியிடத்துச் சேரும் திருநீற்றினை அணிந்தவனும் ஆகிய பெருமான் சூரியன் வழிபட்டு இன்புற்ற இன்னம்பரில் எழுந்தருளியுள்ள ஈசனாவான். |
| **1280.** விளக்கும் வேறு படப்பிற ருள்ளத்தில்<br>அளக்குந் தன்னடி யார்மனத் தன்பினைக்<br>குளக்கு மென்னைக் குறிக்கொள வேண்டியே<br>இளக்கு மென்மனத் தின்னம்ப ரீசனே. **6** | அடியவரல்லாத பிறர் உள்ளத்தில் தன்னை வேறுபடத் தோற்றுபவனும், தன்னடியார் மனத்து அன்பினை அளப்பவனும், தொடர்பு கொள்ளும் என்னைக் குறிக்கொள வேண்டி என் மனத்தினின்று உருகச் செய்பவனும் இன்னம்பர் ஈசனேயாவான். |

| | |
|---|---|
| 1281. சடைக்க ணாள்புன லாள்அனல் கையதோர்<br>கடைக்க ணால்மங்கை நோக்கிம வான்மகள்<br>படைக்க ணால்பரு கப்படு வான்நமக்<br>கிடைக்க ணாய்நின்ற வின்னம்ப ரீசனே. 7 | கங்கையாள் சடைக்கண் உள்ளாள்; அவன் கையது அனல். அக்கங்கையாகிய மங்கை ஒரு கடைக்கண்ணால் நோக்க, இமவான் மகளாம் பார்வதி தனது படையனைய கண்களால் அழகைப் பருகநிற்பவன்; நமக்குத் துன்பக் காலத்துப் பற்றுக்கோடாய் நின்ற இன்னம்பர் ஈசன். |
| 1282. தொழுது தூமலர் தூவித் துதித்துநின்<br>றழுது காமுற் றரற்றுகின் றாரையும்<br>பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்<br>எழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே. 8<br>கீழ்க்கணக்கு – சிறுவரிகளாய் எழுதும் குறிப்பு | தூமலர்களைத் தூவித் தொழுது, துதித்து, நின்று அழுது விருப்புற்று அரற்றுகின்ற மெய்யன்பர்களையும், வாளா பொழுதுபோக்கிப் புறக்கணிப்பார்களையும் கீழ்க்கணக்கெழுதும் இறைவன் இன்னம்பரில் உறையும் ஈசனேயாவான். |
| 1283. விரியுந் தண்ணிள வேனிலில் வெண்பிறை<br>புரியுங் காமனை வேவப் புருவமும்<br>திரியு மெல்லையில் மும்மதில் தீயெழுந்<br>தெரிய நோக்கிய வின்னம்ப ரீசனே. 9 | வெள்ளிய பிறைமதி தோன்றும் குளிர்ந்த இளவேனிற் காலத்திலே காமத்தை விளைக்கும் மன்மதன் வெந்தழியும்படி புருவம் நெரித்தவன், நெறிகடந்த மும்மதில் தீயெழுந்தெரியுமாறு நோக்கிய இன்னம்பர் ஈசனே. |
| 1284. சனியும் வெள்ளியுந் திங்களும் ஞாயிறும்<br>முனிவ னாய்முடி பத்துடை யான்றனைக்<br>கனிய வூன்றிய காரண மென்கொலோ<br>இனிய னாய்நின்ற வின்னம்ப ரீசனே. 10 | நமக்கு இனியவனாய் நின்ற இன்னம்பர் ஈசனே! சனியும், ஞாயிறும், வெள்ளியும், திங்களுமாகிய கோள்களை முனிபவனாகிய பத்துத் தலையுடைய இராவணனைக் கனியுமாறு திருவிரலால் ஊன்றிய இன்னாமைக் காரணம் என்னையோ? |

சிறப்பான சிவபூசை செய்து வரம்பெற்றவன் இராவணன். அதனால் கோள்கள் அவனுக்கு அடிமைகளாக விளங்கின. சூரியனும், சந்திரனும் இராவணனைக் கேட்டுத்தான் இலங்கை மீது வருவார்கள். அவன் வேண்டும் போதெல்லாம் தென்றல் வீசும். வர்ணன் மழை பொழிவான். அவனுக்கு நேரம் சரியில்லையென்றால் கோள்களைச் சிறையில் அடைத்து விடுவான். இதே கருத்தைத் திருஞானசம்பந்தர் 'சனி, புதன், ஞாயிறு, வெள்ளி, திங்கட் பல தீயன முனிவது செய்துகந்தானை வென்ற அவ்வினை மூடட' என்று திரு இராமேச்சுரப் பதிகத்தில் பதிவு செய்கிறார். முனிபவன் – வெறுப்பவன். இராவணனைப் போலவே நாமும் தவறாமல் சிறப்பாகச் சிவபூசை செய்தால் கோள்களை ஏவல் கொள்ளலாம்.

## 22. திருக்குடமூக்கு

ப.தொ.எண் : 135 பதிக எண் : 22

1285. பூவ ணத்தவன் புண்ணிய னண்ணியங்
காவ ணத்துடை யானடி யார்களைத்
தீவ ணத்திரு நீறுமெய் பூசியோர்
கோவ ணத்துடை யான்குட மூக்கிலே. 1

குடமூக்கிலே உள்ள பெருமான், பூவின் வண்ணத்தை உடையவன், புண்ணியமே வடிவானவன், அடியார்கள் ஆகும் வண்ணம் நண்ணி யருள்புரிந்து அடிமைச் சீட்டெழுதி ஆட்கொள்பவன், தீயின் நிறத்தை உடைய செம்மேனியில் திருநீறு பூசியவன், கோவண ஆடை உடையவன்.

"பூவண்ணம் பூவின் மணம் போல" என்றபடி எங்கும் அருளொடு நிறைந்தவன். "என் தாயோடு என்னப்பன் ஏழேழ் பிறவியும் அன்றே சிவனுக்கெழுதிய ஆவணம்" – திருமந்திரம். 'ஆவணம்' என்ற சொல்லை உரிமைச் சான்றிதழ் என்ற பொருளில் பெரும்பாலான இடங்களில் உபயோகித்தாலும் இந்த இடத்தில் அடிமைச்சான்றிதழ் என்று கொள்வதே பொருந்தும்.

1286. பூத்தா டிக்கழி யாதேநீர் பூமியீர்
தீத்தா டித்திறஞ் சிந்தையுள் வைம்மினோ
**வேர்த்தா டுங்காளி தன்விசை தீர்கென்று**
கூத்தா டிய்யுறை யுங்குட மூக்கிலே. 2

உலகில் உள்ளவர்களே! நீர் பிறந்து வாளா திரிந்து இறந்து போகாமல், எல்லா உலகங்களையும் எரித்து சர்வசங்கார காலத்தில் ஆடும் இறைவனின் திறத்தைச் சிந்தையுள் இருத்துவீராக! வேர்வை தோன்றுமாறு விரைந்து ஆடிய காளியின் ஆடலை வெல்லுமாறு கூத்து ஆடிய பெருமான் குடமூக்கில் உறைபவன் ஆவான்.

தம்மோடு போட்டியிட்ட காளியுடன் சுவாமி நடமாடி வென்றதற்கு நாவரசர் வாக்கே சான்றாகும்.

1287. நங்கை யாளுமை யாளுறை நாதனார்
அங்கை யாளொ டறுபதந் தாழ்சடைக்
கங்கை யாளவள் கன்னி யெனப்படும்
கொங்கை யாளுறை யுங்குட மூக்கிலே. 3

உமைநங்கையாளை ஒரு பாகத்திற்கொண்ட தலைவர். அழகிய கைகளொடு வண்டு தாழ்சடை யினளாகிய கங்கையாளும், உறையும் குடமூக்கில் காவிரியுமாகிய தீர்த்தச் சிறப்புக்கள் உள்ளன.

அறுபதம் – வண்டு
நங்கை – மகளிருள் சிறந்தாரை வழங்கும் பெயர். கங்கை முதலான சப்த தீர்த்த மாதாக்கள் மகாமகத் தீர்த்தத்தில் நீராடித் தூய்மை பெற்றதாக வரலாறு.

1288. **ஓதா நாவன்** திறத்தை யுரைத்திரேல்
ஏதா னும்மினி தாகும் மியமுனை
சேதா ஏறுடை யானமர்ந் தவிடம்
கோதா விரியுறை யுங்குட மூக்கிலே. 4

ஓதாதே உணர்ந்த முதல்வன் திறத்தை எவ்வளவேனும் கூறினால் இனிதாகும்; யமுனையும் கோதாவிரியும் தீர்த்தங்களாகப் பொருந்திய குடமூக்கே சிவந்த ஆனேறுடை யானாகிய சிவபிரான் உறையும் இடம்.

ஓதாநாவன் – நாவால் ஓதாது எல்லாம் உணர்ந்தவன்.
கல்லாமே கலை ஞானம் கற்பித்தான். பிறரைப் புகழாத நாவன்.

| | |
|---|---|
| **1289.** நக்க ரையனை நாடொறும் நன்னெஞ்சை<br>வக்க ரையுறை வானை வணங்குநீ<br>அக்க ரையோ டரவரை யார்த்தவன்<br>கொக்க ரையுடை யான்குட மூக்கிலே. 5 | நல்ல நெஞ்சே! நீ, திக்குகளையே ஆடையாக உடைய தலைவனும் வக்கரையென்னும் திருத்தலத்து உறைவானும் ஆகிய இறைவனை வணங்குவாயாக! அக்கு மாலையினையும், அரவினையும் அரையில் கட்டியவனும், கொக்கரையென்னும் பாடலையும் கூத்தையும் உடையவனுமாகிய பெருமான் குடமூக்கிலே உள்ளான். |
| **1290.** துறவி நெஞ்சின ராகிய தொண்டர்கள்<br>பிறவி நீங்கப் பிதற்றுமின் பித்தராய்<br>மறவனாய்ப் பார்த்தன் மேற்கணை தொட்டவெம்<br>குறவ னாருறை யுங்குட மூக்கிலே. 6 | பற்றுக்களைத் துறக்கும் நெஞ்சுடையவர் களாகிய தொண்டர்களே! மறவனாகிய பார்த்தன்மேற் கணைதொடுத்த எம் குறவேடம் கொண்ட பெருமானும், குடமூக்கில் உறைபவனுமாகிய இறைவனை உமது பிறவி நீங்குமாறு பித்தராய் நின்று பிதற்றுவீர்களாக. |
| **1291.** தொண்ட ராகித் தொழுது பணிமினோ<br>பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர்<br>விண்ட வர்புரம் மூன்றொரு மாத்திரைக்<br>கொண்ட வன்னுறை யுங்குட மூக்கிலே. 7 | பழையதாகிய வலிய வினைகளாம் பற்று அற வேண்டுவோரே! பகைவராகி யெதிர்ந்த முப்புராதிகளது மூன்று நகரங்களையும் ஒரு மாத்திரைப் போதில் எரியுண்ணக் கொண்டவன் உறையும் குடமூக்கில், தொண்டராகித் தொழுது பணிவீர்களாக! |
| **1292.** காமி யஞ்செய்து காலங் கழியாதே<br>ஓமியஞ் செய்தங் குள்ளத் துணர்மினோ<br>சாமி யோடு சரச்சு வதியவள்<br>கோமி யும்முறை யுங்குட மூக்கிலே. 8 | பயன் கருதிய செயல்களையே வாளா செய்து காலம் கழிக்காமல் வேள்விகள் பல செய்து, தன் கணவனாகிய பிரமனோடு சரசுவதியும் கோமி (கோதாவரி)யும், உறையும் குடமூக்கிற் பெருமானை, உள்ளத்தே உணர்வீர்களாக! |

**ஓமியம் – ஓமகாரியம்**

| புறத்தே | அகத்தே |
|---|---|
| அக்கினி காரியம் | ஆறாதார யோகம் |
| வேள்விச்சாலை, யாக குண்டங்கள் அமைத்து ஓமஞ் செய்தல் | குண்டலினித் தானமான உந்தியில் ஞான அனலை எழுப்பி அதனுள் விந்துத் தானத்து அமிழ்தமான நெய்யைச் சுழுமுனை இடைநாடிகளாகிய சுருக்கு சுருவங்களால் ஓமித்தல் |
| நாண்மலர் / அட்டபுட்ப அருச்சனைகள் | அன்பு, அருள், கொல்லாமை, பொறையுடைமை என்னும் எண்வகை புட்பங்களைக் கொண்டு ஞான பூசை செய்தல் |

1293. சிரமஞ் செய்து சிவனுக்குப் பத்தராய்ப்
பரம னைப்பல நாளும் பயிற்றுமின்
பிரமன் மாலொடு மற்றொழிந் தார்க்கெலாம்
குரவ னாருறை யுங்குட மூக்கிலே. 9

பிரமன், திருமால் முதலிய தேவர்க்கெல்லாம் பரம ஞானாசாரியனாக விளங்கும் பரமன் உறையும் குடமூக்கில், பல நாளும் பயின்று சிவனுக்குப் பக்தர்களாக முயற்சி செய்து வாழ்வீர்களாக.

1294. அன்று தானரக் கன்கயி லாயத்தைச்
சென்று தானெடுக் கவுமை யஞ்சலும்
நன்று தான்நக்கு நல்விர லூன்றிப்பின்
கொன்று கீதங்கேட் டான்குட மூக்கிலே. 10

அரக்கனாகிய இராவணன் திருக்கயிலாயத்தை அன்று சென்றுதான் எடுக்க, உமை அஞ்சுதலும் தான் பெரிதும் சிரித்துத் தன் நல்விரலை ஊன்றிப் பிறகு அவனை வருத்திச் சாமவேதம் கேட்ட பெருமான் குடமூக்கிலே உறைபவன் ஆவான்.

## 23. திருநின்றியூர்

(மூவர் தேவாரம் பெற்ற தலம்)

ப.தொ.எண் : 136 பதிக எண் : 23

1295. கொடுங்கண் வெண்தலை கொண்டு குறைவிலைப்
படுங்க ணொன்றில ராய்ப்பலி தேர்ந்துண்பர்
நெடுங்கண் மங்கைய ராட்டயர் நின்றியூர்க்
கடுங்கைக் கூற்றுதைத் திட்ட கருத்தரே. 1

நீண்ட கண்களை உடைய மங்கையர்கள் ஆடல் புரிகின்ற நின்றியூரில், கடிய கையுடைய கூற்றுவனை உதைத்திட்டவரும் அன்பர்களின் கருத்தில் உறைபவரும் ஆகிய இறைவர், கொடிய கண்களை உடைய வெள்ளிய கபாலம் கொண்டு, குறை கொண்டு விலை கூவுதற்குப்படும் பொருள் ஏதுமிலராகிய இரவலராய்ப் பலி தேர்ந்து உண்ணும் இயல்புடையவர் ஆவர்.

---

நியமமாய் தரிசித்து வந்த சோழ அரசன் ஒருவன் கொணர்ந்த திரி (தீவர்த்தி) நின்ற (அவிந்துவிட்டது) போது இலிங்கத்திருமேனியிலிருந்து சோதி தோன்றியவூர் நின்றியூராகும்.

1296. வீதி வேல்நெடுங் கண்ணியர் வெள்வளை
நீதி யேகொளற் பாலது நின்றியூர்
வேத மோதி விளங்குவெண் தோட்டராய்க்
காதில் வெண்குழை வைத்தவெங் கள்வரே. 2

வேதங்களை ஓதுபவரும், விளங்குகின்ற வெள்ளியதோடும் வெள்ளிய சங்கக்குழையும் உடைய காதினருமாகிய (அர்த்தநாரீசுவரரும்) எமது கள்வரே! வீதியில் வேலனைய நீண்ட கண்களை உடைய பெண்களின் வெள்வளைகளைக் கொள்வது தேவரீர்க்கு நீதியோ? உரைத்தருள்வீராக.

**1297.** புற்றி னாரர வம்புலித் தோல்மிசைச்
சுற்றி னார்கண்ணப் போர்வைகொண் டார்சுடர்
நெற்றிக் கண்ணுடை யாரமர் நின்றியூர்
பற்றி னாரைப்பற் றாவினை பாவமே. 3

புற்றில் வாழ்கின்ற பாம்பினைப் புலித்தோலின் மேல் சுற்றியவரும், திருநீற்றைப் பூசிய மேனியரும், சுடர் நெற்றிக்கண்ணை உடையவருமாகிய இறைவர் அமர்கின்ற நின்றியூரை பற்றிய அன்பர்களை, வினைகளும், வினை விளைவாகிய பாவங்களும் பற்றா.

**வினை – பாவம்**

| இப்பிறவியில் செய்து கொண்டிருப்பது | ஆகாமியம் | நல்வினை | தீவினை |
|---|---|---|---|
| உயிரின் கணக்கில் இப்பிறப்பின் முடிவில் சேமித்து வைக்கப்படுகிறது | சஞ்சிதம் | புண்ணியம் | பாவம் |
| அடுத்த பிறப்பில் அனுபவிக்க கொடுக்கப்படுவது | பிரார்த்தம் | இன்பம் | துன்பம் |

இறைவனுடைய பெருங்கணினியில் இத்தகவல்கள் சேமித்து வைக்கப்பட்டுள்ளன. இக்குறுந்தகடுகளின் ஒருநகல் பிரமனிடமும், மற்றொன்று எமனிடமும், பிறிதொன்று கோள்களிடமும் உள்ளன.

**1298.** பறையி னோசையும் பாடலி னோசையும்
மறையி னோசையும் மல்கி யயலெலாம்
நிறையும் பூம்பொழில் சூழ்திரு நின்றியூர்
உறையு மீசனை யுள்குமென் னுள்ளமே. 4

பறையின் ஓசையும், தெய்வப் பாடல்களின் ஓசையும், வேதங்களின் ஓசையும் நிறைந்து மருங்கெல்லாம் ஒலிக்கின்ற பூம்பொழில் சூழ்ந்த திருநின்றியூரில் உறையும் ஈசனை நினைந்து என் உள்ளம் உள்குகின்றது.

**1299.** சுனையுள் நீலஞ் சுளியும் நெடுங்கணாள்
இனைய னென்றென்று மேசுவ தென்கொலோ
நினையுந் தண்வயல் சூழ்திரு நின்றியூர்ப்
பனையின் ஈருரி போர்த்த பரமரே. 5

நினைத்தற்குரிய குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த திருநின்றியூரில், பனைபோன்ற துதிக்கையை உடைய யானையின் உரியினைப் போர்த்த பரமரே! சுனையிற் பூத்த நீல மலரும் தோற்றுச் சுளித்தற்கேதுவாய் நெடுங்கண்களை உடையளாகிய இவள், இத்தன்மை உடையவன் என்று, என்றும் ஏசுவதன் காரணம் என்னை ?

**1300.** உரைப்பக் கேண்மின்நும் உச்சியு ளான்றனை
நிரைப்பொன் மாமதில் சூழ்திரு நின்றியூர்
உரைப்பொற் கற்றைய ராரிவ ரோவெனில்
திரைத்துப் பாடித் திரிதருஞ் செல்வரே. 6

உரைப்பக் கேட்பீராக; நும் சென்னியின்கண் உள்ள சிவபிரானை, வரிசையாகிய பொன்மதில் சூழ்ந்த திருநின்றியூரில் மாற்றுரைக்கத்தக்க பொன் போன்ற கற்றைச் சடையுடையராகிய இவரை ஆர் என்று வினவுவீராயின், அலைத்துப் பாடித் திரிதரும் செல்வர் இவர்.

| | |
|---|---|
| 1301. கன்றி யூர்முகில் போலுங் கருங்களிறு<br>இன்றி ஏறல நாலிது என்கொலோ<br>நின்றி யூர்பதி யாக நிலாயவன்<br>வென்றி யேறுடை யெங்கள் விகிர்தனே. 7 | திருநின்றியூரைப் பதியாகப் பொருந்தியவனும், வெற்றிமிக்க ஆனேறு உடையவனுமாகிய எங்கள் விகிர்தன், கறுத்து ஊர்ந்து வருகின்ற முகில்போன்ற கருங்களிற்றை ஊர்தியாகக் கொள்ளாமல் காளையைக் கொள்ளுதல் என்ன காரணமோ? |
| 1302. நிலையி லாவெள்ளை மாலையன் நீண்டதோர்<br>கொலைவி லாலெயி லெய்த கொடியவன்<br>நிலையி னார்வயல் சூழ்திரு நின்றியூர்<br>உரையி னால்தொழு வார்வினை யோயுமே. 8 | நிலையற்றவர்களுடைய வெள்ளெலும்புகளை மாலையாக உடையவனும், நீண்டதோர் கொல்லுந் தொழிலுடைய வில்லால் திரிபுர மதில் எய்த கொடியவனும், நிலையினார் வயல்சூழ் திருநின்றியூர் இறைவனும் ஆகிய பெருமானை மொழியினாற் பாடித் தொழுவார் வினைகள் கெடும். |
| 1303. **அஞ்சி யாகிலு மன்புபட் டாகிலும்**<br>**நெஞ்சம் வாழி நினைநின்றி யூரைநீ**<br>இஞ்சி மாமதி லெய்திமை யோர்தொழக்<br>குஞ்சி வான்பிறை சூடிய கூத்தனே. 9 | நெஞ்சமே! இஞ்சியாகிய மதிலையுடைய முப்புரங்களை எய்து, தேவர்கள் தொழ, தன் சடையில் வெள்ளிய பிறையைச் சூடிய கூத்தன் உறைகின்ற நின்றியூரை, நீ, அஞ்சியாயினும், அன்பினைப் பொருந்தியாயினும் நினைத்து உய்வாயாக. |
| 1304. எளிய னாமொழி யாவிலங் கைக்கிறை<br>களியி னாற்கயி லாய மெடுத்தவன்<br>நெளிய வூன்றவல் லானமர் நின்றியூர்<br>அளியி னாற்றொழு வார்வினை யல்குமே. 10 | எளியனாக மொழியாத இலங்கைக்கு இறைவனாம் இராவணன் செருக்கினாற் கயிலாயம் எடுத்தபோது நெளியுமாறு திருவிரலால் ஊன்ற வல்லவன் அமர்கின்ற திருநின்றியூரை அன்பினால் தொழுவார்களின் வினைகள் நீங்கும். |

## 24. திருவொற்றியூர்

**ப.தொ.எண் : 137** **பதிக எண் : 24**

| | |
|---|---|
| 1305. ஒற்றி யூரு மொளிமதி பாம்பினை<br>ஒற்றி யூருமப் பாம்பும் அதனையே<br>ஒற்றி யூர வொருசடை வைத்தவன்<br>ஒற்றி யூர்தொழ நம்வினை யோயுமே. 1<br><br>பாம்பும் மதியும் – தம்மிற் பகையாயினும் ஒன்றையொன்று பற்றி ஊறும். உயிர்ப்பகை போக்குபவன். உயிர்கட்குப் பகையாகிய ஆணவப் பகையின் வலியைப் போக்குபவன். | ஒளி விளங்குகின்ற மதி பாம்பினை ஒற்றி ஊரும்; பாம்பும் அம்மதியினைக் கொள்வதற்காக ஒற்றி ஊர்ந்து வரும்; இவ்வாறு இவை ஒன்றையொன்று ஒற்றி ஊரும்படியாக ஒரு சடையில் வைத்த சிவபெருமானுக்குரிய ஒற்றியூரைத் தொழ நம்வினைகள் ஓயும். |

1306. வாட்ட மொன்றுரைக் கும்மலை யான்மகள்
ஈட்ட வேயிரு ளாடி யிடுபிணக்
காட்டி லோரி கடிக்க எடுத்ததோர்
ஓட்டை வெண்தலைக் கையொற்றி யூரரே. 2

மலையரசன் மகளாகிய உமாதேவியார் தன் கணவன் இருளிலே பேய்களோடு சுடலையாடுகிறான் என்று வருந்தி உரைக்க, நள்ளிருளின் கண் இடுபிணக்காட்டில் நரி கடிக்கும்படியாக எடுத்த துளை உடைய வெண்தலையினைக் கையிலே உடையவர் ஒற்றியூர்த் தலத்து இறைவர்.

ஓரி – நரி.

நந்திதேவர் கயிலாயத்தில் பிரதோச நடனங்கண்டமை போலவே அமர்ந்திருந்தவாறே புரியும் நித்திய நடனமும் காணுதல் வேண்டிக் கொள்ள, இறைவர் அருளிய தலம். அந்நடனத்தை மால், பிரமன், உரோமச முனிவர் இவர்களும் கண்டுய்ந்தனர்.

1307. கூற்றுத் தண்டத்தை யஞ்சிக் குறிக்கொண்மின்
ஆற்றுத் தண்டத் தடக்கு மரனடி
நீற்றுத் தண்டத்த ராய்நினை வார்க்கெலாம்
ஊற்றுத் தண்டொப்பர் போலொற்றி யூரரே. 3

கூற்றுவனால் வருந்தண்டமாகிய இறப்புக்கு அஞ்சி, அறநெறிக் கண்ணதாகிய தண்டத்தினால் அனைத்தையும் இயக்கும் சிவபிரானடியைக் குறிக் கொள்ளுவீராக! திருநீற்றினைப்பூசி வணங்கி யெழுந்து நினைக்கின்ற அன்பர்க்கெல்லாம் இனிப்பு ஊறும் கரும்பினை ஒத்து இனிப்பர் ஒற்றியூர்த்தலத்து இறைவர்.

கூற்றுத் தண்டனை – இயம வாதனை.

ஆற்றுத் தண்டத்தும் – அறநெறிக் கண்ணதாகிய தண்டம்

நீற்றுத் தண்டத்தாய் – திருநீறணிந்து வணங்கித் தெண்டம் செய்பவராய். ஊற்றுத்தண்டு – கரும்பு ஊன்றுகோல்

1308. சுற்றும் பேய்சுழ லச்சுடு காட்டெரி
பற்றி யாடுவர் பாய்புலித் தோலினர்
மற்றை யூர்களெல் லாம்பலி தேர்ந்துபோய்
ஒற்றி யூர்புக் குறையு மொருவரே. 4

மற்றையூர்களிலெல்லாம் சென்று பலி தேர்ந்து பெற்று மீண்டுபோய் ஒற்றியூரிற்புக்கு உறையும் ஒப்பற்றவராகிய இறைவர் பாய்கின்ற புலியினை யுரித்த தோலுடையினராய், சுற்றி நிற்கின்ற பேய்கள் சுழலச் சுடுகாட்டின்கண் கையில் எரியினைப் பற்றி ஆடும் இயல்பினர்.

1309. புற்றில் வாளர வாட்டி யுமையொடு
பெற்ற மேறுகந் தேறும் பெருமையான்
மற்றை யாரொடு வானவ ருந்தொழ
ஒற்றி யூருறை வானோர் கபாலியே. 5

மற்றையவர்களோடு தேவர்களும் தொழுமாறு ஒற்றியூரில் உறைவானாகிய கபாலம் கைக்கொண்ட இறைவன் புற்றிலுறையும் வாள்போன்று வருத்தந்தரவல்ல பாம்பினை ஆட்டி உமையோடு ஆனேற்றின்மேல் உயர்ந்து ஏறித்தோன்றும் பெருமையை உடையவன்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1310.** போது தாழ்ந்து புதுமலர் கொண்டுநீர்<br>மாது தாழ்சடை வைத்த மணாளனார்<br>ஓது வேதிய னார்திரு வொற்றியூர்<br>பாத மேத்தப் பறையும்நம் பாவமே. 6 | போதுகளைவிட்டுப் பூத்த புதுமலர்களைக் கொண்டு கங்கையைத் தாழ்சடையின்கண் வைத்த மணாளனாரும், திருவொற்றியூரில் வேதம் ஓதும் வித்தகரும் ஆகிய பெருமானின் திருவடிகளை ஏத்தினால் நம் பாவங்கள் கெடும். |
| **1311.** பலவும் அன்னங்கள் பன்மலர் மேல்துஞ்சும்<br>கலவ மஞ்ஞைகள் காரென வெள்குறும்<br>உலவு பைம்பொழில் சூழ்திரு வொற்றியூர்<br>நிலவி னானடி யேயடை நெஞ்சமே. 7 | நெஞ்சமே! அன்னங்கள் பலவும் பல மலர்கள் மேல் தூங்குவதும், கருமை உடைய இருள் விளைத்தலைக் கண்டு, பைம்பொழிலை, அங்கு உலவும் தோகையுடைய மயில்கள், மேகமெனக் கருதிப் பின் அவையின்மை தெரிந்து வெட்கமுறுதற் சிறப்புடையதுமாகிய திருவொற்றியூரில் விளங்குகின்ற இறைவன் திருவடிகளையே அடைவாயாக! |
| **1312.** ஒன்று போலும் உகந்தவ ரேறிற்று<br>ஒன்று போலு முதைத்துக் களைந்தது<br>ஒன்று போலொளி மாமதி சூடிற்று<br>ஒன்று போலுகந் தாரொற்றி யூரரே. 8<br><br>ஒன்று – ஒன்றுதல்; ஏகனாகி அவனருள் வழிநிற்றல் | உகந்து அவர் ஏறியதும் ஒரு விடையினை; உதைத்துக் களைந்ததும் ஒரு கூற்றுவனை; சூடியதும் ஒளி விளங்கும் ஒரு மதியினை; இவையனைத்தும் ஒன்றுபோல் உகந்தவர் ஒற்றி யூர்த்தலத்து இறைவர். |
| **1313.** படைகொள் **பூதத்தர் வேதத்தர் கீதத்தர்**<br>சடைகொள் வெள்ளத்தர் சாந்தவெண் நீற்றினர்<br>உடையுந் தோலுகந் தாருறை யொற்றியூர்<br>அடையு முள்ளத் தவர்வினை யல்குமே. 9 | பூதப்படை கொண்டவரும், வேதத்தவரும், இனிய கீதத்தவரும், சடையிற்கொண்ட கங்கையினரும், சாந்தமெனப் பூசும் வெண்ணீற்றினரும், தோலை உடையாக உகந்தவரும் ஆகிய பெருமான் உறைகின்ற ஒற்றியூரை அடையும் உள்ளத்தவர்களின் வினைகள் சுருங்கும். |
| **1314.** வரையி னாலுயர் தோளுடை மன்னனை<br>வரையி னார்வலி செற்றவர் வாழ்விடம்<br>திரையி னார்புடை சூழ்திரு வொற்றியூர்<br>**உரையி னாற்பொலிந் தாருயர்ந் தார்களே.** 10 | மலையென உயர்ந்த தோள்களை உடைய மன்னனான இராவணனை ஒரு சிறு எல்லையில் ஆற்றல் கெடுத்த பெருமான் வாழும் இடம், அலைகள் பக்கங்களிற்சூழ்ந்த திருவொற்றியூர்; அதனை வாக்கினாற் கூறி விளக்கமுறுவோரே உயர்ந்தவராவர். |

ஒற்றியூரனைப் புகழ்ந்து பேசுவதால் விளக்கம் பெற்று உயர்நிலை அடையலாம். திரையினார் புடைசூழ் – பிரமனின் தவத்தில் அவரது யோகத்தீயின் நடுவுள் இறைவர் தோன்றி அந்தத் தீயையே கோயிலாகக் கொண்டு எழுந்தருளி, ஊழி வெள்ளத்தை மேல் வராது தடுத்தமையின் ஒற்றியூர் எனப்பட்டது.

## 25. திருப்பாசூர்

ப.தொ.எண் : 138 பதிக எண் : 25

**1315.** முந்தி மூவெயி லெய்த முதல்வனார்
**சிந்திப்பார்வினை தீர்த்திடுஞ் செல்வனார்**
அந்திக் கோன்தனக் கேயருள் செய்தவர்
பந்திச் செஞ்சடைப் பாசூ ரடிகளே. 1

வரிசையாகிய அடர்ந்த செஞ்சடை யுடையவராகிய திருப்பாசூர்த் தலத்து இறைவர், **முதற்கண் முப்புரங்களை எய்த முதல்வர்;** சிந்திப்பவர்கள் தாம் நினைக்குமுன்னே வினைகளைத் தீர்க்கும் செல்வர்; சந்திரனுக்கு அருள் செய்த தண்ணளியாளர்.

முந்தி – தேவர்கள் முறையிட்ட ஒலியின் எதிரொலி அடங்குமுன் முப்புரம் எரிந்து சாம்பலானது. "மணியை கையால் நாவாய் அசைத்த ஒலி ஒலிமாறிய தில்லையிப்பால், தீயாய் எரிந்து பொடியாய்க் கழிந்த திரிபுரமே" கணை எய்யுமுன் எனலுமாம்.

மூவெயில் – திரிபுரம். திரிபுரம் எரித்த விரைவுபோல **நினைக்குமுன் வினை தீர்ப்பான்** என்க.

அந்திக்கோன் – சந்திரன். பரந்துவிரியும் கங்கையை அடக்கியதுபோல என் **எண்ணச் சிதறலையும் அடக்குவான்** என்று பிறிதொரு இடத்தில் இயம்புகிறார்.

---

**1316.** மடந்தை பாகம் மகிழ்ந்த மணாளனார்
தொடர்ந்த வல்வினை போக்கிடுஞ் சோதியார்
கடந்த காலனைக் கால்கொடு பாய்ந்தவர்
படர்ந்த நாகத்தர் பாசூ ரடிகளே. 2

படர்ந்தெழும் நாகத்தைப் பூண்ட திருப்பாசூர்த் தலத்து இறைவர், உமாதேவியை ஒரு பாகத்து மகிழ்ந்த மணவாளர்; உயிர்களைப் பிறவிதோறும் தொடர்ந்து வரும் வல்லமை உடைய வினைகளாகிய இருளைப் போக்கிடும் ஒளி வடிவானவர்; எல்லை கடந்த இயமனைக் கால்கொண்டு பாய்ந்து உதைத்தவர்.

---

**1317.** நாறு கொன்றையும் நாகமுந் திங்களும்
ஆறுஞ் செஞ்சடை வைத்த அழகனார்
காறு கண்டத்தர் கையதோர் சூலத்தர்
பாறி னோட்டினர் பாசூ ரடிகளே. 3

பருந்துகள் அலைக்கும் மண்டையோட்டினைக் கையில் ஏந்தியவராகிய திருப்பாசூர்த் தலத்து இறைவர், மணம்வீசும் கொன்றையும், நாகமும், திங்களும், கங்கையாறும் செஞ்சடையில் வைத்த அழகர்; கரியகண்டத்தர்; கையிற் பிடித்த சூலத்தர்.

---

**1318.** வெற்றி யூருறை வேதிய ராவர்நல்
ஒற்றி யேறுகந் தேறு மொருவனார்
நெற்றிக் கண்ணினர் நீளர வந்தனைப்
பற்றி யாட்டுவர் பாசூ ரடிகளே. 4

நீண்ட அரவினைப் பற்றியாட்டும், இயல்பினர் ஆகிய திருப்பாசூர்த் தலத்து இறைவர், வெற்றியூரில் உறையும் வேதியர். ஏற்றினை ஒற்றி உகந்து ஏறும் ஒப்பற்றவர், நெற்றிக் கண்ணினர்.

பாசு – மூங்கில். சுவாமி அதனடியில் முளைத்து எழுந்தவர். வெற்றியூர் – தேவார வைப்புத்தலம்.

| | | |
|---|---|---|
| **1319.** மட்ட விழ்ந்த மலர்நெடுங் கண்ணிபால்<br>இட்ட வேட்கைய ராகி யிருப்பவர்<br>துட்ட ரேலறி யேனிவர் சூழ்ச்சிமை<br>பட்ட நெற்றியர் பாசூ ரடிகளே.<br><br>5, 6, 7 அகத்துறைப் பாடல்கள் | 5 | பட்டமணிந்த நெற்றியை உடையவராகிய திருப்பாசூர்த்தலத்து இறைவர், தேன் விரிந்த மலர்களையணிந்த நீண்ட கண்ணுடைய உமாதேவியார்பால் விருப்பமும் வேட்கையும் உடையவராயிருப்பவர்; இவர் தீயவரேல் இவரது சூழ்ச்சித் தன்மைகளை அறியேன். |
| **1320.** பல்லில் ஒடுகை யேந்திப் பகலெலாம்<br>எல்லி நின்றிடு பெய்பலி யேற்பவர்<br>சொல்லிப் போய்ப்புகு மூரறி யேன்சொலீர்<br>பல்கு நீற்றினர் பாசூ ரடிகளே.<br><br>பாசூரடிகளே – பதிக மகுடம் | 6 | நிறைந்த திருவெண்ணீற்றினராகிய திருப்பாசூர்த்தலத்து இறைவர், பல்லில்லாத ஓட்டினைக் கையேந்திப் பகலெல்லாம் வெயிலில் நின்று இடுகின்ற பலியினை ஏற்பவர்; சொல்லிவிட்டுச் சென்று புகுந்த ஊரினை அறியேன்; சொல்லுவீராக பாசூர் அடிகளே! |
| **1321.** கட்டி விட்ட சடையர் கபாலியர்<br>எட்டி நோக்கிவந் தில்புகுந் தவ்வவர்<br>இட்ட மாவறி யேனிவர் செய்வன<br>பட்ட நெற்றியர் பாசூ ரடிகளே. | 7 | பட்டமணிந்த நெற்றியை உடையவராகிய திருப்பாசூர்த் தலத்து இறைவர் கட்டிவிட்ட சடையை உடையவரும், கபாலம் கைக்கொண்டவரும், எட்டிப்பார்த்து, இல்லத்தில் புகுந்தவரும் ஆகியர். 'இவர் விரும்பிச் செய்வன இவை'யென யான் முற்ற அறியேன். |
| **1322.** வேத மோதிவந் தில்புகுந் தாரவர்<br>காதில் வெண்குழை வைத்த கபாலியார்<br>நீதி யொன்றறி யார்நிறை கொண்டனர்<br>பாதி வெண்பிறைப் பாசூ ரடிகளே.<br><br>பாதி வெண்பிறை – இளம்பிறையைக் கூறும் சொல் வழக்கு. மாதொருகூறன் ஆதலின் இறைவர்க்குரியது பாதி வெண்பிறை ஆயிற்று என்றும் கொள்ளலாம். | 8 | பாதி வெண்பிறையணிந்த திருப்பாசூர்த் தலத்து இறைவர், வேதங்களை ஓதிவந்து இல்லத்துட் புகுந்தார்; காதில் வெண்குழை வைத்த கபாலியார்; நீதியொன்றறியாது என்னுடைய கற்பினைக் கொண்டார். |
| **1323.** சாம்பல் பூசுவர் தாழ்சடை கட்டுவர்<br>ஓம்பன் மூதெரு தேறு மொருவனார்<br>தேம்பல் வெண்மதி சூடுவர் தீயதோர்<br>பாம்பு மாட்டுவர் பாசூ ரடிகளே.<br><br>சாம்பல் – சர்வ சங்காரச் சுடலைப்பொடி<br>ஓம்பல் – காத்தல், தாங்குதல்<br>தேம்பல் – இளைத்தல் | 9 | தீயதாகிய பாம்பினையும் பற்றி ஆடுபவராகிய திருப்பாசூர்த் தலத்திறைவர், சாம்பல் பூசுவர்; தாழ்கின்ற சடையினைக் கட்டுவர்; தாங்கும் இயல்புள்ள முதிர்ந்த எருதினையேறும் ஒருவர்; ஒளிதேம்பிய வெண்மதியைச் சூடுவர். |

| | | |
|---|---|---|
| 1324. மாலி னோடு மறையவன் தானுமாய்<br>மேலுங் கீழு மளப்பரி தாயவர்<br>ஆலின் நீழ லறம்பகர்ந் தார்மிகப்<br>பால்வெண் நீற்றினர் பாசூ ரடிகளே. | 10 | பால் போன்ற வெண்ணீற்றையணிந்தவராகிய திருப்பாசூர்த் தலத்திறைவர் மாலினோடு பிரமனும் மேலும் கீழும் அளந்தும் காண்டற்கரியவர்; ஆலின்நீழல் இருந்து அறம் பகர்ந்த ஞான வடிவினர். |
| 1325. திரியும் மூஎயில் செங்கணை யொன்றினால்<br>எரிய எய்தன ரேனு மிலங்கைக்கோன்<br>நெரிய வூன்றியிட் டார்விர லொன்றினால்<br>பரியர் **நுண்ணியர்** பாசூ ரடிகளே. | 11 | பருப்பொருளும், நுண்பொருளுமாகிய திருப்பாசூர்த் தலத்து இறைவர், திரியும் மூன்று புரங்களைச் சிவந்த கணையொன்றினால் எரியுமாறு எய்தனரேனும், இலங்கையரசன் நெரியுமாறு திருவிரலால் ஊன்றியவர் ஆவர். |

---

நுண்ணியர் – அண்டங்களெல்லாம் அணுவாக, அணுக்களெல்லாம் அண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினானும் (திருவிளையாடற்புராணம் கடவுள் வாழ்த்து – 7). மிகமிகச் சுத்தமாக வடித்தெடுக்கப்பட்ட குடிநீரில் கூட கண்ணுக்குத் தெரியாத நுண்ணுயிர்கள் இருப்பதாக விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளார்கள். அதோடு அவர்கள் கண்டுபிடிப்பு சரி. அதனுள்ளேயும் உயிர் இருக்கிறது. அதனுள்ளே சிவம் இருக்கிறது. ஏனெனில் அதுவும் சிவபெருமான் படைத்த 84 லட்சம் யோனி பேதங்களில் ஒன்றாகும்.

## 26. திருவன்னியூர்

ப.தொ.எண் : 139 பதிக எண் : 26

| | | |
|---|---|---|
| 1326. காடு கொண்டரங் காக்கங்குல் வாய்க்கணம்<br>பாட மாநட மாடும் பரமனார்<br>வாட மானிறங் கொள்வர் மணங்கமழ்<br>மாட மாமதில் சூழ்வன்னி யூரரே. | 1 | மணம் கமழ்கின்ற மாடங்களும், மாமதில்களும் சூழ்கின்ற வன்னியூரில் வீற்றிருக்கும் இறைவர், சுடுகாட்டினை அரங்காகக் கொண்டு நள்ளிரவில் பூதகணங்கள் பாடப் பெருநடம் ஆடும் பரமர்; மான்போன்ற இப்பெண் வாட, இவளது பொன்னிறத்தைத் தாம் கொண்டு பசலை நிறம் தந்த இயல்புடையவர். |
| 1327. செங்கண் நாகம் அரையது தீத்திரள்<br>அங்கை யேந்திநின் றாரெரி யாடுவர்<br>கங்கை வார்சடை மேலிடங் கொண்டவர்<br>மங்கை பாகம்வைத் தார்வன்னி யூரரே. | 2 | உமையம்மையாரை ஒரு பாகமாக வைத்த வன்னியூரில் வீற்றிருக்கும் இறைவர், அரையின்கண் சிவந்த கண்ணையுடைய நாகத்தைக் கட்டியவர்; தீத்தொகுதியை அழகிய கரத்தில் ஏந்தி ஆடுபவர்; நீண்ட சடை மேலிடத்தில் கங்கையைக் கொண்டவர். |

1328. ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானங் காட்டுவர் தம்மடைந் தார்க்கெலாம்
தானங் காட்டித்தன் தாளடைந் தார்கட்கு
வானங் காட்டுவர் போல்வன்னி யூரரே. 3

வன்னியூர்த் தலத்து இறைவர், தம்மையடைந்த அன்பர்கட்கெல்லாம் ஞானமும், அதனை அடைதற்குரிய நல்ல நெறியும், அடைதற்குரிய இடமும் காட்டுவர்; தன் திருவடியில் அடைந்தவர்கட்குத் தானங்காட்டு வதோடமையாது வானங்காட்டி ஆளவும் வைப்பார்.

---

தானங்காட்டுவர் – சரியை, கிரியை, யோகநெறியினர்க்கு – சாலோக, சாமீப, சாரூபங்களாகிய தானத்தை (இடத்தை) வழங்குபவர்.

வானங்காட்டுவர் – ஞானநெறி நின்றார்க்குச் சாயுச்சியமாகிய வீட்டு நெறிக்கு வழிசெய்வார்.

1329. இம்மை அம்மை யெனவிரண் டும்மிவை
மெய்ம்மை தானறி யாது விளம்புவர்
மெய்ம்மை யால்நினை வார்கள்தம் வல்வினை
வம்மின் றீர்ப்பர்கண் டீர்வன்னி யூரரே. 4

உலகினுள்ளீரே! வன்னியூர்த் தலத்து இறைவர் தம்மை மெய்ம்மையாக நினைவார்களுடைய வலிய வினையைத் தீர்க்கும் இயல்பினர்; இப்பிறப்பு, அப்பிறப்பு என்ற இரண்டின் உண்மைத் தன்மை அறியாது விளம்பும் சிலரைச் சாராது வந்து வழிபடுவீராக.

1330. பிறைகொள் வாள்நுதற் பெய்வளைத் தோளியர்
நிறையைக் கொள்பவர் நீறணி மேனியர்
கறைகொள் கண்டத்தர் வெண்மழு வாளினர்
மறைகொள் வாய்மொழி யார்வன்னி யூரரே. 5

வேதங்களை வாய்மொழியாக உடைய வன்னியூர்த்தலத்து இறைவர், பிறையின் பேரழகு கொண்ட ஒளி நுதலையும் வளைபெய் கரங்களையும் உடைய பெண்களது கற்பினைக் கவர்பவர்; திருநீறணிந்த திருமேனியர்; திருநீல கண்டத்தர், ஒளிவீசும் வெள்ளிய மழுவினை உடையவர் ஆவர்.

---

நிறை – காப்பனகாத்து, கடிவனகடிந்து ஒழுகும் ஒழுக்கம்.

1331. திளைக்கும் வண்டொடு தேன்படு கொன்றையர்
துளைக்கை வேழத்தர் தோலர் சுடர்மதி
முளைக்கு மூரற் கதிர்கண்டு நாகம்நா
வளைக்கும் வார்சடை யார்வன்னி யூரரே. 6

வன்னியூர்த்தலத்து இறைவர் வண்டும், தேனும் திளைத்துப் பொருந்தும் கொன்றையர். துளையுடைய அயிராவணம் என்ற வேழத்தினை உடையவர்; புலித்தோலினர்; ஒளி வீசும் மதியில் தோன்றும் நிலாக்கதிரைக் கண்டு நாகமானது கொள்ளுவதற்கு நாவினை வளைக்கின்ற நீண்ட சடையினர் ஆவர்.

| | |
|---|---|
| 1332. குணங்கொள் தோளெட்டு மூர்த்தி யிணையடி<br>இணங்கு வார்கட் கினியனு மாய்நின்றான்<br>வணங்கி மாமலர் கொண்டவர் வைகலும்<br>வணங்கு வார்மனத் தார்வன்னி யூரரே. 7 | வன்னியூர்த்தலத்து இறைவர் எட்டுத் தோள்களையும் எட்டுக் குணங்களையு உடைய மூர்த்தி; தன் இணையடிகளை இணங்கி வழிபடுவார்கட்கு இனியராகியவர்; மலர்கள் கொண்டு வணங்குவார் மனத்தின் கண்ணவர். |
| 1333. இயலு மாலொடு நான்முகன் செய்தவம்<br>முயலிற் காண்பரி தாய்நின்ற மூர்த்திதான்<br>அயலெ லாமன்ன மேயுமந் தாமரை<br>வயலெ லாங்கயல் பாய்வன்னி யூரரே. 8<br><br>x x x x x x x x x x x x x x 9 | அயற்பக்கமெல்லாம் அன்னங்கள் மேய்கின்ற, அழகிய தாமரைகளை உடைய வயல்களிலெல்லாம் கயல்மீன்கள் பாய்கின்ற, வன்னியூர்த் தலத்து இறைவர், இயலுகின்ற திருமாலோடு நான்முகன் தவம் செய்து முயன்றும் காண்டல் அரியராய் நின்ற மூர்த்தியாவர். |
| 1334. நலங்கொள் பாகனை நன்று முனிந்திடா<br>விலங்கல் கோத்தெடுத் தானது மிக்கிட<br>இலங்கை மன்ன னிருபது தோளினை<br>மலங்க வூன்றிவைத் தார்வன்னி யூரரே. 10<br><br>விலங்கல் – கயிலை மலை<br>முனிந்திடா – சினந்து | வன்னியூர்த்தலத்து இறைவர், நன்மை கொண்ட பாகராகிய தம்மை முனிந்திடாது திருக்கயிலையைக் கரங்களைக் கொண்டு கோர்த்தெடுத்தபோது அவ்விலங்கை மன்னனின் இருபது தோள்களை மலங்கும்படியாகத் திருவிரலை ஊன்றியவர் ஆவர். |





திருவையாறு:
தேசவிளக்கெல்லாம் ஆனாய் நீயே
திருவையாறகலாத செம்பொற்சோதி

## 27. திருவையாறு

ப.தொ.எண் : 140 பதிக எண் : 27

1335. சிந்தை வாய்தலு ளான்வந்து சீரியன்
பொந்து வார்புலால் வெண்தலைக் கையினன்
முந்தி வாயதோர் மூவிலை வேல்பிடித்
தந்தி வாயதோர் பாம்பரை யாறரே. 1

ஐயாற்றின் கண் எழுந்தருளியுள்ள இறைவர், அன்பர்களின் சிந்தையின்கண் வந்து பொருந்துதல் உடையவர்; சீர்மை உடையவர்; பொந்துகளை உடைய நீண்ட புலால் உடைய வெண் தலையைக் கையில் ஏந்தியவர்; முந்துகின்ற வாயை உடையதோர் மூவிலை வேல் பிடித்து, அந்தியைப் போன்று சிவந்த வாயினதோர் பாம்பினை அணிந்தவர் ஆவர்.

1336. பாகம் மாலை மகிழ்ந்தனர் பால்மதி
போக ஆனையி னீருரி போர்த்தவர்
கோக மாலை குலாயதோர் கொன்றையும்
ஆக ஆன்நெயஞ் சாடுமை யாறரே. 2

கோகு – தோள்; குலாயது – விளங்கிச் சூழ்ந்து

ஒருபாகத்தே திருமாலை உடையவர். பால்மதியை மகிழ்ந்தளித்தவர். இடர்கள்போக ஆனையின் உரியைப் போர்த்தவர். தோள்களில் கொன்றை மலர் சூடியவர். ஆனைந்து ஆடுபவர்.

| | |
|---|---|
| 1337. நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே<br>வஞ்ச மென்பதோர் வான்சுழிப் பட்டுநான்<br>துஞ்சும் போழ்துநின் னாமத் திருவெழுத்<br>தஞ்சும் தோன்ற அருளுமை யாறரே. 3 | ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவரே! நெஞ்சமாகிய ஆழமுடைய நீர் நிலைக்குள்ளே வஞ்சம் என்கின்ற தப்பவியலாத சுழியிலே நான்பட்டு இறக்கும் போது, தேவரீர் திருநாமமாகிய திருவைந்தெழுத்தும் தோன்ற அருள்வீராக. |
| 1338. நினைக்கும் நெஞ்சினுள் ளார்நெடு மாமதில்<br>அனைத்தும் ஒள்ளழல் வாயெரி யூட்டினார்<br>பனைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்<br>அனைத்து வாய்தலுள் ளாருமை யாறரே. 4 | ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர் தம்மை நினைக்கின்றவர்தம் நெஞ்சில் உள்ளவர்; நீண்ட முப்புரங்கள் மூன்றையும் சுடர் விடுகின்ற அழல் உண்ணுமாறு எரியூட்டியவர். பனை போன்ற துதிக்கையை உடைய யானையின் தோலை உரித்துத் தம் திருமேனியிற் போர்த்தவர்; எல்லாப் பொருள்களினுள்ளும் கலந்து நிற்கும் இயல்பினர். |
| 1339. பரியர் நுண்ணியர் பார்த்தற் கரியவர்<br>அரிய பாடல ராடல ரன்றியும்<br>கரிய கண்டத்தர் காட்சி பிறர்க்கெலாம்<br>அரியர் தொண்டர்க் கெளியரை யாறரே. 5<br>பரியர் – பருமையிற் பருமையர்<br>நுண்ணியர் – நுண்மையிற் நுண்ணியர் | ஐயாற்றில் எழுந்தருளும் இறைவர், பருப் பொருளாயவர். நுண் பொருளாயவர். பார்த்தற்கு அரியவர். அரிய பாடலையும் ஆடலையும் உடையவர். கரிய கழுத்தினர் (திருநீல கண்டர்). பிறர்க்கெலாம் காண்டற்கு அரியவர். **தொண்டருக்கோ எளியவர்.** |
| 1340. புலரும் போது மிலாப்பட்ட பொற்சுடர்<br>மலரும் போதுக ளாற்பணி யச்சிலர்<br>இலரும் போது மிலாதது மன்றியும்<br>அலரும் போதும் அணியுமை யாறரே. 6<br>இலாப்பட்ட பொற்சுடர்ப்போது – மாலை | இருள்புலரும் காலைப் பொழுதிலும், சூரியன் மறையும் அந்திப்பொழுதிலும் இதழ்விரியும் மலர்களால் விதிமுறை தெரிந்தோர் சிலர் பணிய, அங்ஙனம் ஆகமவிதி அறியாதார், இறைவன் சூடும் மலரல்லாத மலர்களையும், இலைகளையும் கொண்டு அருச்சிக்க அவற்றையும் அணிவன் ஐயாறன். |
| 1341. பங்க மாலைக் குழலியொர் பால்நிறக்<br>கங்கை மாலையர் காதன்மை செய்தவர்<br>மங்கை மாலை மதியமும் கண்ணியும்<br>அங்க மாலையுஞ் சூடுமை யாறரே. 7<br>மாலை மதியம் – பிறை; அங்கமாலை–எலும்பு மாலை | இம் மங்கையைக் காதன்மை செய்தவர், இடப் பாகத்தே அழகிய மாலையணிந்த கூந்தலையுடைய பார்வதியைக் கொண்ட கங்கை மாலையர்; அங்கமாலை முதலியவற்றைச் சூடும் ஐயாறர். |
| 1342. முன்னை யாறு முயன்றெழு வீரெலாம்<br>பின்னை யாறு பிரியெனும் பேதைகாள்<br>மன்னை யாறு மருவிய மாதவன்<br>தன்னை யாறு தொழத்தவ மாகுமே. 8 | முன் துன்ப நெறியின்கண் முயன்றொழுகுவீர் எல்லோரும் பின் அத்துன்ப நெறியினின்று பிரித்தருளுவீராக என்று வேண்டும் அறியாமையுடையவர்களே! நிலைத்த ஐயாற்றில் எழுந்தருளிய மாதவனை முறையே தொழத்தவமாகும். |

| | | |
|---|---|---|
| **1343.** ஆனை யாறென ஆடுகின் றான்முடி<br>வானை யாறு வளாயது காண்மினோ<br>நான்ஐ யாறுபுக் கேற்கவ னின்னருள்<br>தேனை யாறு திறந்தாலே யொக்குமே. | 9 | பஞ்சகவ்வியங்களைத் திருவபிடேகம் கொண்டு ஆடுகின்றவனாகிய பெருமான் திருமுடியில் வானையளாவிய கங்கை பாய்வதைக் காண்பீராக; ஐயாறு புகுந்த அடியேனுக்கு அவன் இன்னருள் தேன் ஆறு திறந்து பாய்ந்தாற் போன்று தித்தித்திருக்கும். |
| **1344.** அரக்கின் மேனியன் அந்தளிர் மேனியன்<br>அரக்கின் சேவடி யாளஞ்ச அஞ்சலென்<br>றரக்க னீரைந்து வாயு மலறவே<br>அரக்கி னானடி யாலுமை யாறனே. | 10 | ஐயாற்றுத் தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் செவ்வரக்கினைப் போன்று சிவந்த மேனியனும், அழகிய தளிர் போன்று விளங்கும் மேனியனும் ஆவன்; செவ்வரக்கனைய சிவந்த அடி உடைய உமாதேவி அஞ்சுதலும், 'அஞ்சேல்' என்று கூறி இராவணனது பத்து வாய்களும் அலறுமாறு தன் திருவடி விரலால் அரக்கியவன் ஆவன். |

## 28. திருவையாறு
## (வண்ணப்பதிகம்)

ப.தொ.எண் : 141 பதிக எண் : 28

| | | |
|---|---|---|
| **1345.** சிந்தை வண்ணத்த ராய்த்திறம் பாவணம்<br>முந்தி வண்ணத்த ராய்முழு நீறணி<br>சந்தி வண்ணத்த ராய்த்தழல் போல்வதோர்<br>அந்தி வண்ணமு மாவரை யாறரே.<br><br>சந்தி வண்ணத்தர் – நன்றாகத் தியானிப்பவரது தியான உருவே தன் உருவமாக உடையவர்.<br>சந்தி – காலை, மாலைகளிற் காணும் செவ்வானம்.<br>அந்தி – மாலை | 1 | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர்**, அடியவர்களின் சிந்தை வண்ணமும்; மாறுபடாத வண்ணம் முன்னே தோன்றிய வண்ணமும், முழுநீறு அணிந்து அந்திவண்ணமாகிய செவ்வண்ணமும், தழல் போல்வதோர் வண்ணமும் உடைய இயல்பினர். |
| **1346.** மூல வண்ணத்த ராய்முத லாகிய<br>கோல வண்ணத்த ராகிக் கொழுஞ்சுடர்<br>நீல வண்ணத்த ராகி நெடும்பளிங்<br>கால வண்ணத்த ராவரை யாறரே.<br><br>மூல வண்ணம் – உலக காரணர்<br>முதலாகிய கோலம் – ஒடுக்கிய உலகம் முதலியவற்றைத் தம்மிடமிருந்து தோற்றுவிப்பவர். | 2 | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர்,** எல்லா உலகங்களுக்கும் மூலமாகிய இயல்பும், முதலாகித் தோன்றிய திருக்கோலத்தின் இயல்பும், வளமையான சுடர் விடுகின்ற நீலநிறமும் நீண்ட பளிங்கனைய தம் திருவுருவத்தில் நஞ்சின் வண்ணமும் உடையவராய்த் திகழ்வர். |

| | |
|---|---|
| 1347. சிந்தை வண்ணமுந் தீயதோர் வண்ணமும்<br>அந்திப் போதழ காகிய வண்ணமும்<br>பந்திக் காலனைப் பாய்ந்த தொர் வண்ணமும்<br>அந்தி வண்ணமு மாவரை யாறரே. 3<br><br>இது வண்ணப் பதிகமாகும். எல்லா அடிகளிலும் வண்ணம் என்ற சொல்லைப் பிரயோகம் செய்துள்ளார். ஒரு சில அடிகளில் இரண்டு வண்ணங்களும் பிரயோகிக்கப்பட்டுள்ளன. | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர்** சிந்தை வண்ணமும், தீயின் வண்ணமும், அழகாகிய அந்திப்போதின் வண்ணமும், தானும், கடாவும், பாசக்கயிறுமாக வரிசையாகவரும் காலனைப் பாய்ந்து உதைத்த இயல்பும் உடையவர். |
| 1348. இருளின் வண்ணமு மேழிசை வண்ணமும்<br>சுருளின் வண்ணமுஞ் சோதியின் வண்ணமும்<br>மருளு நான்முகன் மாலொடு வண்ணமும்<br>அருளும் வண்ணமு மாவரை யாறரே. 4<br><br>வண்ணம் என்ற ஒரு சொல்லை – இயல்பு, நிறம், அழகு, பிரதிபலிப்பு, இசை, குணம், சந்தனம், வடிவு, ஒப்பனை, செயல், நன்மை, சிறப்பு, மாலை என்ற பல பொருள்களில் பயன்படுத்தியுள்ளார். | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர்**, இருளின் வண்ணமும், ஏழிசைகளின் வண்ண வேற்றுமைகளும், சுருண்ட சடையின் வண்ணமும், ஒளியின் வண்ணமும், நான்முகனும் திருமாலும் விண்பறந்தும் மண் புகுந்தும் காண்டற் கரிதென மருளும் வண்ணமும் அவர்கள் ஆணவம் அடங்கியவழி அருளும் வண்ணமும் உடையவராவர். |
| 1349. இழுக்கின் வண்ணங்க ளாகிய வெவ்வழல்<br>குழைக்கும் வண்ணங்க ளாகியுங் கூடியும்<br>மழைக்கண் மாமுகி லாகிய வண்ணமும்<br>அழைக்கும் வண்ணமு மாவரை யாறரே. 5 | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர்** நல்லியல்புகளினின்றும் இழுக்கி அல்லவை செய்தால் வெவ்விய அழலைப் போன்று வருத்தும் மறக்கருணை வண்ணமும், மழையைத் தன்னிடத்துடைய பெரிய மேகங்களின் இயல்பு போன்று வரையாது அருள் வழங்கும் வண்ணமும், தம்மடியார்களை அழைத்து அருள்வழங்கும் வண்ணமும் உடையவர். |
| 1350. இண்டை வண்ணமு மேழிசை வண்ணமும்<br>தொண்டர் வண்ணமுஞ் சோதியின் வண்ணமும்<br>கண்ட வண்ணங்க ளாய்க்கனல் மாமணி<br>அண்ட வண்ணமு மாவரை யாறரே. 6 | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர்** இண்டைமாலை சூடும் இயல்பும், ஏழிசை வடிவாகிய இயல்பும், தொண்டர்கள் நடுவில் நிற்கும் இயல்பும், ஒளி இயல்பும், கண்ட வண்ணங்கள் அனைத்தும், கனல்போன்று செவ்வொளி விரிக்கும் மாணிக்கவண்ணமும், அண்டங்களின் வண்ணமும் ஆகியவர். |

| | |
|---|---|
| **1351.** விரும்பும் வண்ணமும் வேதத்தின் வண்ணமும்<br>கரும்பின் இன்மொழிக் காரிகை வண்ணமும்<br>விரும்பு வார்வினை தீர்த்திடும் வண்ணமும்<br>அரும்பின் வண்ணமு மாவரை யாறரே. 7 | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர்** எல்லோரும் விரும்பும் இயல்பும், வேதத்தின் இயல்பும், கரும்பினையொத்த இனிய மொழியையுடைய உமையம்மையார் இயல்பும், தம்மை விரும்பும் மெய்யடியார்களின் வினைகளைத் தீர்த்திடும் இயல்பும், அரும்பின் இயல்பும் உடையவராவர். |
| **1352.** ஊழி வண்ணமு மொண்சுடர் வண்ணமும்<br>வேழ ஈருரி போர்த்ததொர் வண்ணமும்<br>வாழித் தீயுரு வாகிய வண்ணமும்<br>ஆழி வண்ணமு மாவரை யாறரே. 8 | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர்** ஊழிகள் தோறும் ஒளிரும் இயல்பும், ஒளிச்சுடர் இயல்பும், யானையின் பச்சைத் தோலைப் போர்த்தருளிய இயல்பும், ஊழித்தீ உருவாகிய இயல்பும், கடல்வண்ணமும் உடையவராவர். |
| **1353.** செய்த வன்திரு நீறணி வண்ணமும்<br>எய்த நோக்கரி தாகிய வண்ணமும்<br>கைது காட்சி யரியதோர் வண்ணமும்<br>ஐது வண்ணமு மாவரை யாறரே. 9<br><br>கைது காட்சி – மனத்திற் சிறைப்படுத்திக் காணுதல்<br>கைது – கைப்பற்றாக; அநுபவமாக.<br>ஐது – மென்மை அல்லது அழகு | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவன்,** ஒருகால் யோகு செய்தவனாகத் திருநீறணிந்த வண்ணத்தினன். காண்பதற்கு அரிய தன்மை வாய்ந்தவன், மனத்திலே சிறைப்படுத்தித் தியானிப்பதற்கு அருமை வாய்ந்த தன்மையன். மென்மை தழுவிய அழகினன். |
| **1354.** எடுத்த வாளரக் கன்திறல் வண்ணமும்<br>இடர்கள் போற்பெரி தாகிய வண்ணமும்<br>கடுத்த கைந்நரம் பாலிசை வண்ணமும்<br>அடுத்த வண்ணமு மாவரை யாறரே. 10 | **ஐயாற்றுத் தலத்தின்கண் எழுந்தருளியுள்ள இறைவர்**, திருக்கயிலாயத்தை எடுக்கலுற்ற வாளினை உடைய இராவணன் ஆற்றல், துன்பங்கள் போற் பெரிதாகுமாறு செய்தருளிய இயல்பும், மிகுந்த தன் கைநரம்புகளையே யாழாக்கி அவன் இசைத்தவண்ணம் கண்டு அவனுக்கு அருளாளராக அடுத்த வண்ணமும் உடையவர் ஆவர். |

## 29. திருவாவடுதுறை

(அகப்பொருட் கருத்தமைந்த பதிகம்)

ப.தொ.எண் : 142 பதிக எண் : 29

1355. நிறைக்க வாலிய எல்லளிந் நேரிழை
மறைக்க வாலிய எல்லளிம் மாதராள்
பிறைக்க வாலப் பெரும்புன லாவடு
துறைக்க வாலியோ டாடிய சுண்ணமே. 1

பிறவி தீர்ந்து பசுத்தன்மை நீங்க வேண்டுவோர் அடையுமிடம் ஆவடுதுறை. திருமூலர், பட்டினத்தார், திருமாளிகைத்தேவர், நமச்சிவாய தேசிகர் போன்ற ஞானமுனிவர்கள் வந்தடைந்த இடம்.

பிறையோடு கூடிய செஞ்சடையில் கங்கையாகிய பெரும்புனலை உடையவரும், திருவாவடுதுறையில் உள்ள கபாலியுமாகிய சிவபெருமானோடு ஆடிய திருநீற்றினை நிறைக்கத் தூய்மையுடையவள் அல்லள் இந்த நேரிழையணிந்த பெண்; அன்றியும் இப்பெண் அதனால் வரும் துயரங்களை மறைக்கும் வல்லமை உடையவளுமல்லள்.

1356. தவள மாமதிச் சாயலோர் சந்திரன்
பிளவு சூடிய பிஞ்ஞக னெம்மிறை
அளவு கண்டில ளாவடு தண்டுறைக்
களவு கண்டன ளொத்தனள் கன்னியே. 2

இக்கன்னி, வெள்ளிய, பெருமை மிகுந்து மதிக்கத்தக்க சாயலை உடைய சந்திரனின் பிளவாகிய பிறையினைச் சூடிய எம்மிறைவனாகிய பிஞ்ஞகனின் அன்பின் அளவை முற்றும் கண்டிலளேனும், திருவாவடுதுறையிலே அவனைக் களவொழுக்கத்தாற் கண்டவளை ஒத்தாள் ஆயினள்.

1357. பாதிப் பெண்ணொரு பாகத்தன் பன்மறை
ஓதி யென்னுளங் கொண்டவ னொண்பொருள்
ஆதி ஆவடு தண்டுறை மேவிய
சோதி யேசுட ரேயென்று சொல்லுமே. 3

இப்பெண், தன் திருமேனியில் ஒரு பாதிப் பெண்ணினை உடையவனே என்றும், பலவாகிய மறைகளை ஓதியருளி என்னுள்ளத்தைக் கவர்ந்து கொண்டவனே என்றும், ஒள்ளிய உலகத்துப் பொருள்களுக் கெல்லாம் ஆதியானவனே என்றும், திருவாவடுதுறையில் விரும்பியெழுந்தருளி யிருக்கும் சோதியே என்றும், சுடரே என்றும் சொல்லும் இயல்பினள்.

| | |
|---|---|
| **1358.** கார்க்கொண் மாமுகில் போல்வதோர் கண்டத்தன்<br>வார்க்கொண் மென்முலை சேர்ந்திறு மாந்திவள்<br>ஆர்க்கொள் கொன்றைய னாவடு தண்டுறைத்<br>தார்க்கு நின்றிவள் தாழுமா காண்மினே. 4 | இப்பெண், கருமையைக் கொண்ட பெரிய முகில் போலும் கண்டத்தை உடையவனும், கச்சினைக் கொண்ட மெல்லிய முலையாளாகிய உமையம்மையைச் சேர்ந்து இறுமாந்து இவளது நெஞ்சைப் பிணைக்கும் கொன்றையினை உடையவனும் ஆகிய திருவாவடுதுறைப் பெருமானின் திருமார்பில் அணிந்துள்ள கொன்றைமாலைக்கு மனம் தாழ்கின்றனள்; காண்பீராக. |
| **1359.** கருகு கண்டத்தன் காய்கதிர்ச் சோதியன்<br>பருகு பாலமு தேயெனும் பண்பினன்<br>அருகு சென்றில ளாவடு தண்டுறை<br>ஒருவ னென்னை யுடையகோ வென்னுமே. 5 | இப்பெண், கருத்த கண்டத்தை உடையவனும், கதிர்காய்கின்ற ஒளிவடிவினனும், பருகுதற்கினிய பால் அமுது என்று கூறத்தக்க பண்பை உடையவனுமாகிய அப்பெருமான் அருகிற் சென்றனள். அல்லளாயினும், அவன்பாற்கொண்ட காதல் மிகுதியால் என்னை உடையவன் திருஆவடு தண்டுறையில் உறையும் தலைவனே என்று கூறும் இயல்பினள். |
| **1360.** குழலுங் கொன்றையுங் கூவிள மத்தமும்<br>தழலுந் தையலோர் பாகமாத் தாங்கினான்<br>அழக னாவடு தண்டுறை யாவெனக்<br>கழலுங் கைவளை காரிகை யாளுக்கே. 6 | இவ்வழகுடைய பெண், கொன்றை மலர்களும், கூவிளந்தளிர்களும், ஊமத்தமலர்களும் சூடிய சடையும், தையல் ஒரு பாகமும் கொண்ட ஆவடுதண்டுறைக்குரிய அழகனே என்று விரும்பி அழைத்தலால், கைவளைகள் கழலுகின்ற நிலைமையள் ஆயினள். |
| **1361.** பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்<br>தஞ்ச மென்றிறு மாந்திவ ளாரையும்<br>அஞ்சு வாளல்ல ளாவடு தண்டுறை<br>மஞ்ச னோடிவ ளாடிய மையலே. 7 | இப்பெண் திருவாவடுதண்துறையில் உள்ள, புலன் ஐந்தும் வென்ற பெருவீரனாகிய சிவபெருமானோடு ஆடிக் கொண்ட மயக்கத்தினால், பஞ்சனைய மெல்லடியுடைய உமா தேவியாரைப் பங்கிற்கொண்ட அப்பரமனைத் தஞ்சப்பொருளாகக் கொண்டு இறுமாப்பு எய்தி, வேறு யாரையும் அஞ்சாதவள் ஆயினள். |

| | |
|---|---|
| **1362.** பிறையுஞ் சூடிநற் பெண்ணோ டாணாகிய<br>நிறையும் நெஞ்சமும் நீர்மையும் கொண்டவன்<br>அறையும் பூம்பொழி லாவடு தண்டுறை<br>இறைவ னென்னை யுடையவ னென்னுமே. 8 | இப்பெண், பிறையினைச் சென்னியிற் சூடிய பெண்ணும் ஆணுமாகிய இறைவனும், மேகங்களும், வண்டினங்களும் ஒலிக்கின்ற பூம்பொழில்களை உடைய ஆவடுதண்துறையில் என்னை உடையவனும் ஆகிய பெருமானே, என் கற்பினையும், உள்ளத்தினையும் பிற தன்மைகளையும் கவர்ந்து கொண்டவன் என்று சொல்லுமியல்பினள். |
| **1363.** வையந் தானளந் தானும் அயனுமாய்<br>மெய்யைக் காணலுற் றார்க்கழ லாயினான்<br>ஐய னாவடு தண்டுறை யாவெனக்<br>கையில் வெள்வளை யுங்கழல் கின்றதே. 9 | உலகங்களைத் தான் அளந்தவனாகிய திருமாலும், பிரமனும் ஆகிய இருவரும் மெய்ப்பொருளாகிய பிரமத்தைக் காணலுற்ற போது அவ்விருவர் முன்னே பேரழலாய் நிமிர்ந்த பெருமானே! ஐயனே! ஆவடு தண்டுறையில் உள்ள அண்ணலே! என்று வாய்விட்டுக் கூவி உடல் மெலிதலால் இவள் கைகளில் உள்ள வெள்வளைகள் கழல்கின்றவாயின. |
| **1364.** பக்கம் பூதங்கள் பாடப் பலிகொள்வான்<br>மிக்க வாளரக் கன்வலி வீட்டினான்<br>அக்க ணிந்தவ னாவடு தண்டுறை<br>நக்க னென்னுமிந் நாணிலி காண்மினே. 10 | பெருமான் தன் நெஞ்சும் கற்பும் கவர்ந்து கொண்டனனேனும், அதுகுறித்துச் சிறிதும் நாணமில்லாதவளாகிய இப்பெண், மீண்டும், பூதங்கள் பக்கத்தில் நின்று பாடப் பலி கொள்வான் என்றும், ஆற்றல்மிக்க வாளை உடைய அரக்கனை வலி கெடுத்தான் என்றும், அக்கமாலைகள் அணிந்தான் என்றும், திரு ஆவடுதண்டுறையில் உள்ள மெய்ஞானி என்றும் கூறிப் புகழ்ந்தவண்ணம் இருப்பாள். |

## 30. திருப்பராய்த்துறை

ப.தொ.எண் : 143 — பதிக எண் : 30

| | |
|---|---|
| **1365.** கரப்பர் கால மடைந்தவர் தம்வினை<br>சுருக்கு மாறுவல் லார்கங்கை செஞ்சடைப்<br>பரப்பு நீர்வரு காவிரித் தென்கரைத்<br>திருப்ப ராய்த்துறை மேவிய செல்வரே. 1 | நீர் பரந்துவருகின்ற காவிரியின் தென்கரையில் உள்ள திருப்பராய்த்துறையில் விரும்பி எழுந்தருளியிருக்கும் அருட்செல்வர், தம்மடியடைந்த அன்பர்கட்குப் பக்குவகாலம் வருந்துணையும் மறைந்துநின்று அருள்வர். பின் அக்காலம் வாய்த்தவழி, அவ்வினைகளைச் சுருக்கிக் கெடுக்குமாற்றில் வல்லவர். செஞ்சடையில் கங்கையை உடையார், (காலத்தில் வந்தடைந்தவர் வினைகளை மறையும்படிச் செய்பவர். விரிந்த கங்கையைத் தம் செஞ்சடையில் சுருக்குமாற்றிலும் வல்லவர் என்றும் இணைக்கலாம்) |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1366.** மூடி னார்களி யானையின் ஈருரி<br>பாடி னார்மறை நான்கினோ டாறங்கம்<br>சேட னார்தென்ப ராய்த்துறைச் செல்வரைத்<br>தேடிக் கொண்டடி யேன்சென்று காண்பனே. 2 | தென்பராய்த்துறையுறையும் அருட்செல்வர், செருக்குடைய யானையின் பச்சைத் தோலினால் போர்த்தித் தம் திருமேனியை மூடியவர்; வேதங்கள் நான்கினோடு, அங்கங்கள் ஆறினையும் பாடியவர்; மிக்க பெருமையை உடையவர்; அப் பெருமானைத் தேடிக்கொண்டு சென்று அடியேன் காண்பேன். |
| **1367.** பட்ட நெற்றியர் பால்மதிக் கீற்றினர்<br>நட்ட மாடுவர் நள்ளிரு ளேமமும்<br>சிட்ட னார்தென்ப ராய்த்துறைச் செல்வனார்<br>இட்ட மாயிருப் பாரை யறிவரே. 3 | தென்பராய்த்துறை உறையும் அருட்செல்வர் பட்டமணிந்த நெற்றியினை உடையவர்; பாலனைய நிலவு சொரியும் மதிக்கீற்றினை உடையவர்; நள்ளிருளில் உலகிற்கு இன்பம் செய்யும் பொருட்டு நடனம் ஆடுபவர்; உயர்வுடையவர்; தம்மிடம் விருப்பமாயிருக்கும் அடியார்களைத் தாம் நன்கு அறியும் இயல்பினர் ஆவர். |
| **1368.** முன்பெ லாஞ்சில மோழைமை பேசுவர்<br>என்பெ லாம்பல பூண்டங் குழிதர்வர்<br>தென்ப ராய்த்துறை மேவிய செல்வனார்<br>அன்ப ராயிருப் பாரை யறிவரே. 4<br><br>மோழைமை – அறியாமை; உழிதர்வர் – திரிவர். | தென்பராய்த்துறை உறையும் அருட்செல்வர், அறியாமையொடு கூடிய சில சொற்களைப் பலர் முன்னிலையிலும் பேசுவார். எலும்புகள் பலவற்றைப் பூண்டு திரிவார், தம்மீது அன்பராய் இருப்பாரை நன்கு அறியும் இயல்பினர். |
| **1369.** போது தாதொடு கொண்டு புனைந்துடன்<br>தாத விழ்சடைச் சங்கரன் பாதத்துள்<br>வாதை தீர்க்கவென் றேத்திப் பராய்த்துறைச்<br>சோதி யானைத் தொழுதெழுந் துய்ம்மினே. 5<br><br>சங்கரன் – இன்பத்தைச் செய்பவன்<br>வாதை – பிறவி நோய் | உலகில் உள்ளவர்களே! தென்பராய்த் துறையில் உறைகின்ற ஒளி வடிவான பெருமானை மகரந்தத்தொடும் கூடிய போதுகளைக் கொண்டு புனைந்து மகரந்த முறைந்து மணந்து விளக்கும் சடையுடைய அச்சங்கரன் திருவடிகளில் துயரங்களைத் தீர்த்தருள்க என்று பரவித் தொழுதெழுந்து உய்வீர்களாக. |
| **1370.** நல்ல நான்மறை யோதிய நம்பனைப்<br>பல்லில் வெண்டலை யிற்பலி கொள்வனைத்<br>தில்லை யான்தென் பராய்த்துறைச் செல்வனை<br>வல்லை யாய் வணங் கித்தொழு வாய்மையே. 6 | நெஞ்சே! தென்பராய்த்துறையில் உறைகின்ற அருட்செல்வரும், நல்லனவாகிய நான்கு மறைகளை ஓதிய நம்பரும், பல இல்லங்களிலும் வெள்ளியதலையிற் பலிகொள்ளும் இயல்பினரும், தில்லைத்தலத்தில் எழுந் தருளியவரும் ஆகிய பெருமானை விரைந்து வணங்கி மெய்ம்மையாகத் தொழுவாயாக! |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1371.** நெருப்பி னாற்குவித் தாலொக்கு நீள்சடைப்<br>பருப்ப தம்மத யானை யுரித்தவன்<br>திருப்ப ராய்த்துறை யார்திரு மார்பின்நூல்<br>பொருப்ப ராவி யிழிபுனல் போன்றதே. 7 | நெருப்பினைக் குவித்துவைத்தாலொத்த நீண்ட சடை உடையவரும், மலையினையொத்த மதயானையினை உரித்துப் போர்த்தவரும் ஆகிய திருப்பராய்த்துறையில் எழுந் தருளியிருக்கும் இறைவர் திருமார்பிற் புரள்கின்ற முந்நூல், மலையினை அரித்துக் கொண்டு இழிகின்ற அருவிப்புனலைப் போன்றுள்ளது. |
| **1372.** எட்ட விட்ட விடுமண லெக்கர்மேல்<br>பட்ட நுண்துளி பாயும் பராய்த்துறைச்<br>சிட்டன் சேவடி சென்றடை கிற்றிரேல்<br>விட்டு நம்வினை யுள்ளன வீடுமே. 8<br><br>இடுமணல் எக்கர் – காற்றாலும், அலையாலும் சேர்க்கப்பட்ட மணல் குன்றுகளின் மேல் | வானை எட்டுமாறு இட்ட மணலிடு குன்றின் மேல் நுண்ணிய நீர்த்துளிகள் பாய்கின்ற பராய்த்துறையில் உறைகின்ற உயர்ந்த இறைவன் சேவடிகளிற் சென்று அடையும் வல்லமை உடையீராயின், நம்வினைகளாய் உள்ளவை நம்மைவிட்டு நீங்கிக் கெடும். |
| **1373.** நெருப்ப ராய்நிமிர்ந் தாலொக்கு நீள்சடை<br>மருப்ப ராய்வளைந் தாலொக்கும் வாண்மதி<br>திருப்ப ராய்த்துறை மேவிய செல்வனார்<br>**விருப்ப ராயிருப் பாரை யறிவரே.** 9 | நெருப்பு அராவி நிமிர்ந்ததனையொத்த நீண்ட சடையையும், தந்தத்தை அராவி வளைத்தது போன்ற பிறைமதியையும் உடையராய்த் திருப்பராய்த்துறையில் விரும்பியெழுந்தருளி இருக்கும் அருட்செல்வர் தம்மிடம் விருப்பமாக உள்ளவர்களை நன்கு அறியும் இயல்பினர் ஆவர். |
| **1374.** தொண்டு பாடியுந் தூமலர் தூவியும்<br>இண்டை கட்டி யிணையடி யேத்தியும்<br>பண்ட ரங்கர் பராய்த்துறைப் பாங்கரைக்<br>கண்டு கொண்டடி யேனுய்ந்து போவனே. 10 | திருப்பராய்த்துறைத் தலத்து எழுந்தருளி யிருப்பவரும், பாண்டரங்கக் கூத்துடையவரும் ஆகிய இறைவர்க் குற்ற தொண்டுகளைப் பற்றிப் பாடியும், அப்பெருமான் இணையடிகளில் இண்டைமாலை சாத்தியும், தூமலர்கள் தூவியும், கண்டும், உள்ளத்திற் கொண்டும் அடியேன் உய்ந்து போவேன். |
| **1375.** அரக்க னாற்ற லழித்த அழகனைப்<br>பரக்கு நீர்ப்பொன்னி மன்னு பராய்த்துறை<br>இருக்கை மேவிய ஈசனை யேத்துமின்<br>பொருக்க நும்வினை போயறுங் காண்மினே. 11 | இராவணனது ஆற்றலை அழித்த அழகனும், நீர் பரக்கின்ற பொன்னி மன்னுகின்ற பராய்த் துறையில் இருக்கை பொருந்திய ஈசனுமாகிய பெருமானை ஏத்துவீர்களாக! நும் வினைகள் விரைந்து போய்த் தொலையும்; காண்பீர்களாக. |

## 31. திருவானைக்கா

ப.தொ.எண் : 144

பதிக எண் : 31

1376. கோனைக் காவிக் குளிர்ந்த மனத்தராய்த்
தேனைக் காவியுண் ணார்சில தெண்ணர்கள்
ஆனைக் காவிலம் மானை யணைகிலார்
ஊனைக் காவி யுழிதர்வ ரூமரே. 1

தெண்ணர்கள் – தெளிந்த அறிவில்லாதவர்கள்.
காவி –காப்பாற்றி, விரும்பிக்காத்து. ஓம்பி.

தெளிவற்ற சிலர், உலகிற்கெல்லாம் அரசனாகிய சிவபெருமானைச் சுமத்தலாற் குளிர்ந்த மனத்தை உடையராய் அச்சிவானந்தத் தேனை உண்ணாதவராயுள்ளனர்; சில ஊமர்கள் ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள தலைவனை அணையாதவர்களாய்த் தம் தசை பொதிந்த உடலை வீணே சுமந்து திரிவர்!

---

1377. திருகு சிந்தையைத் தீர்த்துச்செம் மைசெய்து
பருகி யூறலைப் பற்றிப் பதமறிந்
துருகி நைபவர்க் கூனமொன் றின்றியே
அருகு நின்றிடும் ஆனைக்கா வண்ணலே. 2

“திருகலாகிய சிந்தை திருத்தலாம்” – திருநாவுக்கரசர் – திருமருகல் பதிகம் பாடல் எண் 1934.
ஊறல் – உள்ளத்துள்ளே ஊறும் தேன் போன்ற சிவானந்த அனுபவம்.

மாறுபடும் மனத்தினை மாறுபாடு நீக்கிச் செம்மைப்படுத்திப் பருகுதற்குரிய தேன் போல் இனிக்கும் பெருமானைப் பற்றிச் செவ்வியறிந்து உருகி நைபவர்க்கு வரக்கடவனவாகிய குற்றங்கள் இல்லாததோடு, அவர்கள் அருகு நின்று ஆனைக்காவின் அண்ணலும் அருள்புரிவன்.

---

1378. துன்ப மின்றித் துயரின்றி யென்றுநீர்
இன்பம் வேண்டி லிராப்பக லேத்துமின்
என்பொன் ஈச னிறைவனென் றுள்குவார்க்
கன்ப னாயிடும் ஆனைக்கா வண்ணலே. 3

துன்பம் – உடலால் நுகரப்படும்
துயர் – மனத்தால் நுகரப்படும்

என் பொன்போல்வான் என்றும், ஈசன் என்றும், இறைவன் என்றும் உள்ளத்தே உள்குவார்கட்கு ஆனைக்காவின் அண்ணல் அன்பனாய் அருள்புரிவான் ஆதலால், துன்பமும் துயரமும் இன்றி என்றும் குன்றாத இன்பத்தை நீர் விரும்புவீரேயாயின், இரவு பகல் எப்போதும் வழிபடுவீராக.

---

1379. நாவால்நன்று நறுமலர்ச் சேவடி
ஓவா தேத்தி யுளத்தடைத் தார்வினை
காவா யென்றுதங் கைதொழு வார்க்கெலாம்
ஆவா என்றிடும் ஆனைக்கா வண்ணலே. 4

நறுமணம் வீசுகின்ற சிவந்த தன் இணையடிகளை நாவினால் பெரிதும் இடைவிடாது ஏத்தி உள்ளத்தே அடைத்தவர்களுக்கும், ‘வினைத் துன்பங்களினின்று எம்மைக் காப்பாயாக’ என்று கைதொழுவார்களுக்கும், ஆனைக்காவின் அண்ணல் **ஆவா** என்று அபயம் கொடுத்தருளும் இயல்பினன் ஆவன்.

| | |
|---|---|
| **1380.** வஞ்ச மின்றி வணங்குமின் வைகலும்<br>வெஞ்சொ லின்றி விலகுமின் வீடுற<br>நைஞ்சு நைஞ்சுநின் றுள்குளிர் வார்க்கெலாம்<br>அஞ்ச லென்றிடும் ஆனைக்கா வண்ணலே. 5 | ஆனைக்காவின் அண்ணலை வஞ்சமின்றி நாள்தோறும் வழிபடுவீர்களாக; வெவ்விய சொற்களினின்றும் விலகுவீர்களாக; வீட்டின்பம் பெறும் பொருட்டு நைந்து நைந்து நின்று உள்ளம் குளிர்வார்க்கெல்லாம் 'அஞ்சேல்' என்று அருள்பவன் அப்பெருமானேயாவன். |
| **1381.** நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே<br>**படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்**<br>தடையொன் றின்றியே தன்னடைந் தார்க்கெலாம்<br>அடைய நின்றிடும் ஆனைக்கா வண்ணலே. 6 | உலகியலையே மெய்யென்று கருதும் பொய்யாகிய நாத்திகம் பேசாமல், படைகள் போல் வருகின்ற ஐந்து பெரும் பூதங்களால் வரும் தடைகள் ஒன்றும் இன்றித் தன்னை யடைந்த அன்பர்களுக்கெல்லாம் அடையும் பொருளாக நிற்பவன் ஆனைக்காவின் அண்ணலே ஆவன். |
| **1382.** ஒழுகு மாடத்து ளொன்பது வாய்தலுங்<br>கழுக ரிப்பதன் முன்னங் கழலடி<br>தொழுது கைகளால் தூமலர் தூவிநின்<br>றழுவ வர்க்கன்ப னானைக்கா வண்ணலே. 7<br><br>"மலஞ்சோரும் ஒன்பது வாயில் குடில்" – திருவாசகம் | ஒன்பது வாயில்களும், ஒழுகுகின்ற மாடமாகிய உடம்பினைக் கழுகுகள் அரிக்கும் இறுதிக்காலம் வருவதற்கு முன்பே தன் இணையடிகளைக் கைகளால் தொழுது தூய மலர்களால் தூவி நின்று அழுகின்ற அன்பர்கட்கு அன்பனாய் நின்று அருள்பவன் ஆனைக்காவின் அண்ணலே ஆவன். |
| **1383.** உருளும் போதறி வொண்ணா வுலகத்தீர்<br>தெருளுஞ் சிக்கனெத் தீவினை சேராதே<br>இருள றுத்துநின் றீசனென் பார்க்கெலாம்<br>அருள்கொ டுத்திடும் ஆனைக்கா<br>வண்ணலே. 8<br><br>உருளும்போது – அழியுங்காலம் | உலக வாழ்வினை உதறி இறக்கும் போது இது என்று அறிய இயலாத உலகத்தவர்களே! தெளிவடைவீர்களாக; தீவினையைச் சேராமல் விரைந்து, இருள் அறுத்து நின்று 'ஈசனே' என்று உரைப்பவர்க்கெல்லாம் அருள்கொடுப்பவன் ஆனைக்காவின் அண்ணலே ஆவான். |
| **1384.** நேச மாகி நினைமட நெஞ்சமே<br>நாச மாய குலநலஞ் சுற்றங்கள்<br>பாச மற்றுப் பராபர வானந்த<br>ஆசை யுற்றிடும் ஆனைக்கா வண்ணலே. 9 | அறியாமை உடைய நெஞ்சமே! உன்னைக் கெடுக்கும் இயல்புடையனவாகிய குலம், நலம், சுற்றம், பாசம் முதலியவை அற்று மிக உயர்ந்த ஆனந்த ஆசை உற்று, ஆனைக்காவின் அண்ணலை நேசமாகி நினைந்து உய்வாயாக. |

1385. ஓத மாகடல் சூழிலங் கைக்கிறை
கீதங் கின்னரம் பாடக் கெழுவினான்
பாதம் வாங்கிப் பரிந்தருள் செய்தங்கோர்
ஆதி யாயிடும் ஆனைக்கா வண்ணலே. 10

ஆனைக்காவின் அண்ணல், அலைகடல் சூழ்ந்த இலங்கைக்கிறைவனாகிய இராவணன் கீதத்தைக் கின்னரம் போல் மிகப் பொருந்திப் பாடத் தன் திருப்பாதத்துத் திருவிரல் ஒன்றினால் முன்னம் ஊன்றியவர் பின்னவற்குப் பரிந்து அருள் செய்து ஆதி ஆயினர்.

## 32. திருப்பூந்துருத்தி

இப்பதிகம் திருவடிக்கீழிருந்து அனுபவிக்கும் இன்புறுநிலையை உணர்த்துகின்றது. 'ஓங்குணர்வின் உள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத் தூங்குவர் மற்றேதுண்டுசொல்' (திருவருட்பா 10.1) என உணர்த்தப்படும் நிட்டையின் இயல்பு, இங்குள திருவாக்குப் போலெழும் திருமுறைகளை மூலமாகக் கொண்டது. இது பரமுத்தி நிலையைக் குறிக்கும். திருப்பூந்துருத்தியில் திருமடம் அமைத்து அப்பர் பெருமான் தங்கி வாழ்ந்த குறிப்பு இப்பதிகத்தில் அமைந்திருப்பதை நாம் அறிய வேண்டும்.

சைவ சமய வரைபடத்தில் பூந்துருத்திக்கும் ஒரு இடம் உண்டு. திருஞானசம்பந்தரும், அப்பரும் பலநாள் தங்கிப் பெருமான் புகழைப் போற்றிப் பரவிய புண்ணியத் தலம். பூந்துருத்திக்கு திருஞானசம்பந்தர் வருகைபுரிந்த போது எல்லைக்கப்பாலேயே அப்பர் வரவேற்று, முத்துப் பல்லக்கைப் புண்ணியமென்று சுமக்க ஆரம்பிக்கிறார். அதைக் கண்ணுறாத திருஞானசம்பந்தர், அப்பர் எங்கே ? என வினவ, "இங்குற்றேன்" என இயம்பிய பண்பை, பணிவை, எந்த வார்த்தைகளால் வர்ணிக்க முடியும் ? அடிகள், தீர்த்தன், தேவன், நம்பன், செல்வன், திருத்தன், அதிபன், சதுரன், சேவடிக்கீழ் நாமிருப்பதே என்று சுவாமிகள் இப்பதிகப் பாடல்களை நிறைவு செய்கிறார்.

ப.தொ.எண் : 145 பதிக எண் : 32

1386. கொடிகொள் செல்வ விழாக்குண லைஅறாக்
கடிகொள் பூம்பொழிற் கச்சியே கம்பனார்
பொடிகள் பூசிய பூந்துருத் திந்நகர்
அடிகள் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 1

சேவடிக்கீழ் நாமிருப்பதே – பதிக மகுடம்

அதைவிடப் பாதுகாப்பான, இன்பமான இடம் வேறெங்குமில்லை.

பல கொடிகள் எடுக்கப்பெற்றதும், திருவிழாக்களினால் உண்டாகும் ஆரவாரங்கள் அறாததும், மணமிக்க பூம்பொழில்கள் சூழ்ந்ததுமாகிய திருக்கச்சி யேகம்பரும், திருநீற்றுப் பொடியினைப் பூசிய **பூந்துருத்தி** நகரத்து எழுந்தருளியிருக்கும் சுவாமியும் ஆகிய பெருமான் சேவடிக்கீழ் நாமிருக்கப் பெற்றோம்.

1387. ஆர்த்த தோலுடை கட்டியோர் வேடனாய்ப்
பார்த்த னோடு படைதொடு மாகிலும்
பூத்த நீள்பொழிற் பூந்துருத் திந்நகர்த்
தீர்த்தன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 2

தோல் உடையினை ஆர்த்துக்கட்டி ஒரு வேட வடிவம் கொண்டு அருச்சுனனோடு படைக்கலந் தொடுக்குமாயினும், பூத்த மலர்கள் நிறைந்த நீள்பொழில்களை உடைய **பூந்துருத்தி** நகரத்துத் தீர்த்தவடிவாய் உள்ள பெருமான் சேவடிக்கீழ் நாமிருக்கப் பெற்றோம்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1388.** மாதி னைமதித் தானொரு பாகமாக்<br>காத லாற்கரந் தான்சடைக் கங்கையைப்<br>பூத நாயகன் பூந்துருத் திந்நகர்க்<br>காதி சேவடிக் கீழ்நா மிருப்பதே. 3<br><br>சேவடிக்கீழ் நாமிருப்பதற்கு நமது தகுதியை உயர்த்திக் கொள்ள வேண்டும். | உமையம்மையை ஒரு பாகமாக மதித்து ஏற்றவனும், சடையின்கண் கங்கையைக் காதலால் ஒளித்துக் கொண்டவனும், பூதங்களுக்குத் தலைவனும் **பூந்துருத்தி** நகரில் எழுந்தருளியிருக்கும் முதல்வனும் ஆகிய பெருமான் சேவடிக்கீழ் நாமிருக்கப் பெற்றோம். |
| **1389.** மூவ னாய்முத லாயிவ் வுலகெலாம்<br>காவ னாய்க்கடுங் காலனைக் காய்ந்தவன்<br>பூவின் நாயகன் பூந்துருத் திந்நகர்த்<br>தேவன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 4 | முப்பெருங்கடவுளராயும் அவருள் முதல்வனாயும், இவ்வுலகெல்லாவற்றையும் காப்பவனாயும், கடிய காலனைக் காய்ந்தவனாயும், அன்பானினைவாரது உள்ளக் கமலத்தின்கண் தலைவனாக எழுந்தருளி யிருப்பவனாயும் உள்ள **பூந்துருத்தி** நகரின் தேவன் சேவடிக்கீழ் நாமிருக்கப் பெற்றோம். |
| **1390.** செம்பொ னேயொக்கும் மேனியன் தேசத்தில்<br>உம்ப ராரவ ரோடங் கிருக்கிலும்<br>பொன்பொன் னார்செல்வப் பூந்துருத் திந்நகர்<br>நம்பன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 5 | நம் தேசத்தில் இருப்பினும் உம்பர் உள்ள தேவருலகத்தவரோடு இருப்பினும், பொன்னும் பொலிவார்ந்த செல்வமும் உள்ள **பூந்துருத்தி** நகரத்து நம்மவனாகவும், செம்பொன்னையே யொத்த திருமேனியினனாகவும் வீற்றிருக்கும் பெருமான் சேவடிக்கீழ் நாமிருக்கப் பெற்றோம். |
| **1391.** வல்லம் பேசி வலிசெய்மூன் றூரினைக்<br>கொல்லம் பேசிக் கொடுஞ்சரம் நூறினான்<br>புல்லம் பேசியும் பூந்துருத் திந்நகர்ச்<br>செல்வன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 6 | வன்மை பேசி வன்மையான கொடிய செயல்களையே செய்து திரிந்த திரிபுரங்களைக் கொல்ல எண்ணிப் பேசிக் கொடிய அம்பால் அழித்த **பூந்துருத்தி** நகர்ச்செல்வன் புன்மை பேசினும் அவன் திருவடிக்கீழேயே இருத்தலை எண்ணுவோம். |
| **1392.** ஒருத்த னாயுல கேழுந் தொழநின்று<br>பருத்த பாம்பொடு பால்மதி கங்கையும்<br>பொருத்த னாகிலும் பூந்துருத் திந்நகர்த்<br>திருத்தன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 7 | ஒப்பற்றவனாய் ஏழு உலகங்களும் தொழ நின்று, பெரிய பாம்பும், மதியும், கங்கையும் சடையிற் பொருந்தியவனாய்ப் **பூந்துருத்தி** நகரத்தே எழுந்தருளியிருக்கும் திருத்தமானவனின் சேவடிக்கீழ் நாமிருக்கப் பெற்றோம். |

| | |
|---|---|
| 1393. அதிரர் தேவ ரியக்கர் விச் சாதரர்<br>கருத நின்றவர் காண்பரி தாயினான்<br>பொருத நீர்வரு பூந்துருத் திந்நகர்ச்<br>சதுரன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 8 | உரத்த குரலினராகிய தேவர், இயக்கர், விச்சாதரர் இவர்களுக்குத் தலைவராக நின்ற திருமால் – பிரமன் ஆகிய கருத நின்றவர் அனைவரும் காண்டலரிய காட்சியானும், நீர் இருகரையும் பொருதுவருகின்ற **பூந்துருத்தி** நகரத்து எழுந்தருளியிருப்பவனும், வல்லவனும் ஆகிய பெருமானின் சேவடிக் கீழ் நாம் இருக்கப் பெற்றோம். |
| 1394. செதுக றாமனத் தார்புறங் கூறினும்<br>கொதுக றாக்கண்ணி னோன்பிகள் கூறினும்<br>பொதுவி னாயகன் பூந்துருத் திந்நகர்க்<br>கதிபன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 9<br><br>கொதுகு – கொசு | குற்றம் நீங்காத மனத்தினர் புறம் பேசினும் கொசு நீங்காத பீளைசார்ந்த கண்களையுடைய புறச்சமய நோன்பிகள் இழித்துக் கூறினும் மன்றவாணனாகிய பூந்துருத்திப் பெருமான் சேவடிக்கீழேயே நாம் இருப்போம். |
| 1395. துடித்த தோள்வலி வாளரக் கன்தனைப்<br>பிடித்த கைஞ்ஞெரிந் துற்றன கண்ணெலாம்<br>பொடிக்க வூன்றிய பூந்துருத் திந்நகர்ப்<br>படிகொள் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 10<br><br>படிகொள் சேவடி – அன்பர்க்கருள வேண்டி நிலத்தின் கண்ணே பொருந்திய அவனது சிவந்த திருவடிகள் | தோளாற்றலும் மிக்க வாளாற்றலும் உடைய இராவணனை துடிக்குமாறும், அவன் பிடித்த கைகள் நெரிவுறுமாறும், கண்ணெலாம் நீர்த் துளிகள் பொடிக்குமாறும் திருவிரலால் ஊன்றிய **பூந்துருத்தி** நகரத்து எழுந்தருளியிருக்கும் பெருமானின் பெருமைமிக்க சேவடிக்கீழ் நாமிருக்கப் பெற்றோம். |

## 33. திருச்சோற்றுத்துறை

ப.தொ.எண் : 146 பதிக எண் : 33

| | |
|---|---|
| 1396. கொல்லை யேற்றினர் கோளர வத்தினர்<br>தில்லைச் சிற்றம் பலத்துறை செல்வனார்<br>தொல்லை யூழியர் சோற்றுத் துறையர்க்கே<br>வல்லை யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 1<br><br>சோறு என்பதற்கு வீடுபேறு, முத்தி என்ற பொருளும் உண்டு. இது உண்ணும் உணவையும், வீடுபேற்றையும் அருளும் திருத்தலம். | அறியாமையை உடைய நெஞ்சமே! முல்லை நிலத்துக்குரிய விடையேற்றினை உடையவரும், கொல்லும் அரவத்தினை உடையவரும், தில்லைத் திருநகரில் சிற்றம்பலத்தே உறையும் அருட்செல்வரும், பழைய ஊழிக்காலத்தவரும் ஆகிய சோற்றுத் துறையர்க்கு வல்லமை உடையையாய்ப் பணிசெய்வாயாக. |

| | |
|---|---|
| **1397.** முத்தி யாக வொருதவஞ் செய்திலை<br>அத்தி யாலடி யார்க்கொன் றளித்திலை<br>தொத்து நின்றலர் சோற்றுத் துறையர்க்கே<br>பத்தி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 2<br><br>"பணி செய் மடநெஞ்சமே" – பதிக மகுடம் அடியார்க்களித்தல் – சிறந்த அரன் பணிகளில் ஒன்றாகும். அத்தி – அருத்தி – விருப்பம் | அறியாமையை உடைய நெஞ்சமே! முத்திப் பேறெய்தற்பொருட்டு ஒரு தவமும் செய்திலை; அடியார்களுக்கு விருப்பத்தோடு ஒன்றையும் அளித்தாயில்லை; பூங்கொத்துகள் நின்று மலர்கின்ற சோற்றுத்துறையர்க்கு இனியாகிலும் பத்தியோடு பணி செய்வாயாக. |
| **1398.** ஒட்டி நின்ற உடலுறு நோய்வினை<br>கட்டி நின்ற கழிந்தவை போயறத்<br>தொட்டு நின்றுமச் சோற்றுத் துறையர்க்கே<br>பட்டி யாப்பணி செய்மட நெஞ்சமே. 3<br><br>பட்டியாய் – மீளா அடிமையாகி | அறியாமையை உடைய நெஞ்சமே! உடலை ஒட்டி நின்ற மிகுந்த நோய்களையும், பிணித்து நிற்கும் வினைகளையும் கழிந்து அறும்படியாகச் சோற்றுத்துறையர் திருவடிகளைத் தொட்டு நின்று பட்டியாகப் பணிசெய்வாயாக. |
| **1399.** ஆதியா னண்ட வாணர்க் கருள்நல்கு<br>நீதி யானென்றும் நின்மல னேயென்றும்<br>சோதி யானென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே<br>வாதி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 4<br><br>சோற்றுத்துறை – திருவையாற்றுச் சப்தத்தானமாகும். | அறியாமையை உடைய நெஞ்சமே! முதல்வனும் தேவர்களுக்கு அருள்நல்கும் நீதியனும், நின்மலனும், சோதியனும் ஆகிய சோற்றுத்துறைப் பெருமானுக்கு வேறொன்றும் வாளா வாதித்துக் காலம் போக்காது, பணி செய்வாயாக. |
| **1400.** ஆட்டி னாயடி யேன்வினை யாயின<br>ஓட்டி னாயொரு காதி லிலங்குவெண்<br>தோட்டி னாயென்று சோற்றுத் துறையர்க்கே<br>நீட்டி நீபணி செய்மட நெஞ்சமே. 5 | அறியாமையை உடைய நெஞ்சமே! அடியவனை ஆட்டுவிப்பானே என்றும், வினைகளாயின வற்றை ஒட்டியவனே என்றும், திருச்செவியில் விளங்குகின்ற சங்கவெண் தோட்டினை யணிந்தவனே என்றும் சோற்றுத்துறை யனார்க்கு நீள நினைந்து நீ பணிசெய்வாயாக. |
| **1401.** பொங்கி நின்றெழுந் தகடல் நஞ்சினைப்<br>பங்கி உண்ட**தோர் தெய்வமுண் டோசொலாய்**<br>தொங்கி நீயென்றுஞ் **சோற்றுத் துறையர்க்குத்**<br>**தங்கி நீபணி செய்மட நெஞ்சமே.** 6<br><br>தீமையாகிய நஞ்சைத் தமக்கு வைத்தும் நல்லதாகிய அமிர்தத்தைத் தேவர்க்கு வைத்தும் அந்த நஞ்சைத் தமக்குரிய பங்காகக் கொண்டு, தான் உண்டதுபோல உண்டது வேறு கடவுள் உண்டோ ? | அறியாமையை உடைய நெஞ்சமே! **பொங்கி நின்று எழுந்த கடலினின்றும் விளைந்த ஆலகால விடத்தை விழுங்கி உண்ட ஒரு தெய்வம் இத்தெய்வத்தையன்றி வேறு உண்டோ சொல்வாயாக!** அச்சோற்றுத் துறையர்க்கு மனம் தாழ்ந்து என்றும் தங்கி நீ பணி செய்வாயாக. |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| 1402. ஆணி போலநீ ஆற்ற வலியைகாண்<br>ஏணி போலிழிந் தேறியு மேங்கியும்<br>தோணி யாகிய சோற்றுத் துறையர்க்கே<br>பூணி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 7<br><br>ஏணி – பிறர் ஏறவும், இறங்கவும் உதவும். தான் மேலே ஏறாது. இருந்த இடத்தில் இருக்கும். சடப்பொருள். தோணி – தன்னுட் சார்ந்தாரைச் சாரும் இடத்தில் ஏற்றி, வேண்டிய இடத்தில் சேர்க்கும். தானும் நகரும். நம்மையும் நகர்த்தும். உயிர்ப்பொருள். | அறியாமையை உடைய நெஞ்சமே! ஆணி போல நீ மிகவும் வலி உடையையாயினும், ஏணியைப் போல் இழிந்தும் ஏறியும் இறங்கியும் வாடுகின்றனை; பிறவிப் பெருங்கடற்குத் தோணியாகிய சோற்றுத்துறையர்க்குப் பூணியாக நின்று பணி செய்வாயாக. |
| 1403. பெற்ற மேறிலென் பேய்படை யாகிலென்<br>புற்றி லாடர வேயது பூணிலென்<br>சுற்றி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே<br>பற்றி நீபணி செய்மட நெஞ்சமே. 8<br><br>பெற்றம் – எருது – விடை | அறியாமையை உடைய நெஞ்சமே! ஏற்றினை ஏறினாலென்ன, பேய்கள் படைகளாகிலென்ன, புற்றினைப் பொருந்திய அரவை அணியாகப் பூண்டாலென்ன, நீ என்றும் சோற்றுத் துறையர்க்கே சுற்றியும் பற்றியும் பணிசெய்வாயாக. |
| 1404. அல்லி யானர வைந்தலை **நாகணைப் பள்ளி யானறி** யாத பரிசெலாம்<br>சொல்லி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே<br>புல்லி நீபணி செய்மட நெஞ்சமே. 9<br><br>அல்லியான் – பிரமன்<br>புல்லி – கலந்து, பொருந்தி<br>நாகணைப் பள்ளி – பாம்பினை அணையாகவும், பள்ளியாகவும் கொண்ட திருமால். | அறியாமையை உடைய நெஞ்சமே! தாமரையின் அகவிதழில் வீற்றிருக்கும் பிரமனும், ஆதிசேடனாகிய படுக்கையை உடையவனாகிய திருமாலும் அறிய முயன்றும் அறிய இயலாத தன்மையெல்லாம் சொல்லி, சோற்றுத் துறையர்க்கே நீ என்றும் பொருந்திப் பணிசெய்வாயாக. |
| 1405. மிண்ட ரோடு விரவியும் வீறிலாக்<br>குண்டர் தம்மைக் கழிந்துய்யப் போந்துநீ<br>தொண்டு செய்தென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே<br>உண்டு நீபணி செய்மட நெஞ்சமே. 10 | அறியாமையை உடைய நெஞ்சமே! அமண் முண்டர்களோடு கலந்தும், பெருமையில்லாத குண்டர்களோடு பொருந்தியும் நின்ற நிலைமையினின்று நீங்கி உய்யப் போந்து நீ, சோற்றுத்துறையர்க்கே தொண்டு செய்து என்றும் உண்டு பணி செய்வாயாக. |
| 1406. வாழ்ந்த வன்வலி வாளரக் கன்றனை<br>ஆழ்ந்து போயல றவ்விர லூன்றினான்<br>சூழ்ந்த பாரிடஞ் சோற்றுத் துறையர்க்குத்<br>தாழ்ந்து நீபணி செய்மட நெஞ்சமே. 11 | அறியாமையை உடைய நெஞ்சமே! ஆற்றலோடு வாழ்ந்தவனாகிய இராவணன் ஆழ்ந்துபோய் அலறுமாறு விரலால் ஊன்றினவனாகிய பூதப்படை சூழ்ந்த சோற்றுத்துறைப் பெருமானுக்கு மனமொழி மெய்களாற்றாழ்ந்து பணி செய்வாயாக. |

## 34. திருநெய்த்தானம்

ப.தொ.எண் : 147 பதிக எண் : 34

1407. கொல்லி யான்குளிர் தூங்குகுற் றாலத்தான்
புல்லி யார்புரம் மூன்றெரி செய்தவன்
நெல்லி யானிலை யானநெய்த் தானனைச்
சொல்லி மெய்தொழு வார்சுடர் வாணரே. 1

நாமக்கல்லுக்கு அருகில் உள்ள கொல்லிமலையில் அறப்பளீசுவரர் கோயில் அமைந்துள்ளது. அற்புதமான தலம். அறப்பளீசுவர சதகம் படிக்க வேண்டிய நூலாகும். புல்லியோர் – கீழ்மையோர்

கொல்லிமலையில் வீற்றிருப்பவனும், குளிர்ச்சி செறியும் குற்றாலத்தில் வீற்றிருப்பவனும், பகைவர் புரங்கள் மூன்றையும் எரிசெய்தவனும், திருநெல்லிக்காவில் உள்ளவனும், நிலைபெற்றிருக்கும் திருநெய்த்தானனுமாகிய பெருமானை வாயினாற் சொல்லி மெய்யினால் தொழுவார்கள் ஒளியோடு கூடி வாழும் உயர்நிலை பெறுவர்.

---

1408. இரவ னையிடு வெண்தலை யேந்தியைப்
பரவ னைப்படை யார்மதில் மூன்றையும்
நிரவ னைநிலை யானநெய்த் தானனைக்
குரவ னைத்தொழு வார்கொடி வாணரே. 2

இரத்தலை உடையவனும், வெண்தலை ஏந்தியவனும், எல்லோராலும் பரவப்படுபவனும், படையுடையார் முப்புரங்களையும் எரியால் அழித்தவனும், ஞானாசாரியனும் நிலை பெற்றிருக்கும் திருநெய்த்தானனுமாகிய பெருமானைத் தொழுவார்கள் இவ்வுலகத்து நன்கு வாழ்வோராவர்.

---

1409. ஆனிடை யைந்தும் ஆடுவ ராரிருள்
கானிடை நடம் ஆடுவர் காண்மினோ
தேனிடை மலர் பாயுநெய்த் தானனை
வானி டைத்தொழு வார்வலி வாணரே. 3

பஞ்சகவ்வியங்களை விரும்பித் திருமஞ்சனம் கொள்பவரும், நள்ளிருளில் இடுகாட்டிடை நடம் ஆடுபவரும் ஆவர்; காண்பீராக! மலரிடைத் தேன் பொழிந்து பாயும் திருநெய்த்தானனை வானிடைத் தொழுவார்கள் வலிமையோடு வாழ்பவராவர்.

---

1410. விண்ட வர்புர மூன்றும்வெண் ணீறெழக்
கண்ட வன்கடி தாகிய நஞ்சினை
உண்ட வன்னொளி யானநெய்த் தானனைத்
தொண்ட ராய்த்தொழு வார்சுடர் வாணரே. 4

பகைவர் புரமூன்றையும் வெள்ளிய சாம்பலாகி யெழுமாறு கண்டு எரித்தவனும், கடிதாகிய ஆலகாலத்தை உண்டவனும் ஆகிய ஒளியான திருநெய்த்தானனைத் தொண்டராகித் தொழுவார் ஒளியோடு கூடி வாழ்பவராவர்.

---

1411. முன்கை நோவக் கடைந்தவர் நிற்கவே
சங்கி யாது சமுத்திர நஞ்சுண்டான்
நங்கை யோடு நவின்றநெய்த் தானனைத்
தங்கை யால்தொழு வார்தலை வாணரே. 5

தன் முன்கைகள் நோகுமாறு கடைந்த தேவர்களும் அசுரர்களும் அஞ்சிநிற்கச் சிறிதும் ஐயுறாது கடல் நஞ்சுண்டு அனைவரையும் காத்தவனும், உமாதேவியோடு விரும்பி எழுந்தருளியிருப்போனுமாகிய திருநெய்த் தானனைத் தம் கைகளால் தொழுவார் தலைமைத் தன்மையோடு கூடி வாழ்பவராவர்.

| | | |
|---|---|---|
| 1412. | சுட்ட நீறுமெய் பூசிச் சுடலையுள்<br>நட்ட மாடுவர் நள்ளிருள் பேயொடே<br>சிட்டர் வானவர் தேருநெய்த் தானனை<br>இட்ட மாய்த்தொழு வாரின்ப வாணரே. 6 | உலகெல்லாவற்றையும் சுட்ட திருவெண் ணீற்றினைத் திருமேனியிற்பூசி, நள்ளிருளில் பேய்களோடு சுடுகாட்டில் நடம் ஆடுபவரும், உயர்ந்த முனிவர்களும் தேவர்களும் ஆராய்ந்து காணும் திருநெய்த்தானரும் ஆகிய பெருமானை விருப்பமாகத் தொழுவார் இன்பத்தோடு கூடி வாழ்பவராவர். |
| 1413. | கொள்ளித் தீயெரி வீசிக் கொடியதோர்<br>கள்ளிக் காட்டிடை யாடுவர் காண்மினோ<br>தெள்ளித் தேறித் தெளிந்துநெய்த் தானனை<br>உள்ளத் தால்தொழு வாரும்பர் வாணரே. 7 | தீக்கொள்ளியினின்று எரிவீசிக் கொடிதாகிய கள்ளிக்காட்டில் ஆடும் இயல்பினர் காண்பீராக; தெளிவு அடைந்து தேறிப் பின்னும் தெளிந்து அத்திருநெய்த்தானரை உள்ளத்தால் தொழுவார் தேவர்களோடு ஒத்த பேரின்பம் பொருந்தி வாழ்பவராவர். |
| 1414. | உச்சி மேல்விளங் கும்மிள வெண்பிறை<br>பற்றி யாடர வோடுஞ்ச டைப்பெய்தான்<br>நெற்றி யாரழல் கண்டநெய்த் தானனைச்<br>சுற்றி மெய்தொழு வார்சுடர் வாணரே. 8 | சென்னியில் உச்சியின்மேல் விளங்கும் இள வெண்பிறையையும் பற்றியாட்டற்குரிய பாம்பையும் சடையின்கண் வைத்தவனும், நெற்றிக் கண்ணனுமாகிய திருநெய்த் தானனைச் சுற்றி வந்து மெய்யால் தொழுவார் ஒளி பொருந்தி வாழ்பவராவர். |
| 1415. | மாலொ டும்மறை யோதிய நான்முகன்<br>காலொ டும்முடி காண்பரி தாயினான்<br>சேலொ டுஞ்செருச் செய்யுநெய்த் தானனை<br>மாலொ டுந்தொழு வார்வினை வாடுமே. 9 | திருமாலோடும் வேதங்களை ஓதிய பிரமனும் திருவடியும் திருமுடியும் காண்டற்கரிய னாயினானும், சேல்மீன்கள் தம்மிற் போர் செய்யும் திருநெய்த்தானத்தில் எழுந்தருளி யிருப்பவனும் ஆகிய பெருமானை அன்பு மயக்கத்தால் தொழுவார்களின் வினைகள் வாடிக்கெடும். |
| 1416. | வலிந்த தோள்வலி வாளரக் கன்றனை<br>நெருங்க நீள்வரை யூன்றுநெய்த் தானனார்<br>புரிந்து கைந்நரம் போடிசை பாடலும்<br>பரிந்த னைப்பணி வார்வினை பாறுமே. 10 | வலிமை பெற்ற தோளாற்றல் உடைய இராவணனை நீண்டவரை நெருங்கும்படித் திருவிரலையூன்றிய திருநெய்த்தானனாரை விரும்பி கைநரம்புகளோடு இசையினால் அவன் பாடுதலும் அதற்கு விரும்பிய பெருமானைப் பணிவார்களின் வினைகள் கெடும். |

## 35. திருப்பழனம்

ப.தொ.எண் : 148 பதிக எண் : 35

1417. அருவ னாய்அத்தி யீருரி போர்த்துமை
உருவ னாயொற்றி யூர்பதி யாகிலும்
பருவ ரால்வயல் சூழ்ந்த பழனத்தான்
**திருவி னாற்றிரு வேண்டுமித் தேவர்க்கே.** 1

திருவினால் திருவேண்டும் – செல்வங்களைக் கொண்டு திருப்பணி செய்து வீடுபேற்றைக் கேட்கச் சொல்கிறார்

அருவத் திருமேனியுடையவனாய் யானையின் ஈரப்பட்ட உரியைப் போர்த்தவனாய், உமையை ஒரு பாகத்தில் உடையவனாய் ஒற்றியூரைத் தன்பதியாகக் கொண்டவன் ஆயினும், பருத்த வரால் மீன்கள் நிறைந்த வயல்கள் சூழ்ந்த பழனம் என்னும் தலத்தினுள்ளான் அருட் செல்வத்தினால் மற்ற தேவர்களுக்குச் செல்வம் பெருக வேண்டுவோம்.

1418. **வையம் வந்து வணங்கி வலங்கொளும்**
**ஐய னை**யறி யார்சிலர் ஆதர்கள்
பைகொ ளாடர வார்த்த பழனன்பால்
பொய்யர் காலங்கள் போக்கிடு வார்களே. 2

திருப்பழனத்தலம் இப்போதும் இப்படித்தான் உள்ளது

படங்கொண்ட பாம்பை அரையில் ஆர்த்துக் கட்டிய பழனத்தலத்து இறைவனும், **உலகத்தினுள்ளார் எல்லாரும் வந்து வணங்கி வலம் கொள்ளுதற்குரிய தலைவனும்** ஆகிய பெருமானைச் சில குருடர்கள் அறியார்; சில பொய்யர்கள் வணங்காது வீண் காலங்கள் போக்குவர்.

1419. வண்ண மாக முறுக்கிய வாசிகை
திண்ண மாகத் திருச்சடைச் சேர்த்தியே
பண்ணு மாகவே பாடும் பழனத்தான்
**எண்ணும் நீர் அவ னாயிர நாமமே.** 3

''ஆயிரம் திருநாமம்பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ” – திருவாசகம்

அழகுபெற முறுக்கப்பெற்ற வட்டமாகிய திருச்சடையிற் சேர்த்து உறுதியாகக் கட்டி முடித்துப் பண்பாடும் இறைவனாகிய பழனத்தலத்துப் பெருமானின் ஆயிரம் நாமங்களை நீர் எண்ணுவீராக.

1420. மூர்க்கப் பாம்பு பிடித்தது மூச்சிட
வாக்கப் பாம்பினைக் கண்ட துணிமதி
பாக்கப் பாம்பினைப் பற்றும் பழனத்தான்
தார்க்கொண் மாலை சடைக்கணிந் திட்டதே. 4

பிடித்த கொடுமையை உடைய பாம்பு நெடுமூச்சு விடவும், அப்பாம்பினைக் கண்ட பிறைமதி நடுங்கிக் காண அப்பாம்பைப் பற்றியாடுபவனாகிய கொன்றைத்தாரும் மாலையும் உடைய பழனத்தலத்துப் பெருமான் இவற்றைச் சடைக்கணிந்திட்டது என்னையோ?

1421. நீல முண்ட மிடற்றினன் நேர்ந்ததோர்
கோல முண்ட குணத்தால் நிறைந்ததோர்
பாலு முண்டு பழனன்பா லென்னிடை
மாலு முண்டிறை யென்றன் மனத்துளே. 5

நேர்ந்ததாகிய கோலமாக நஞ்சினை உண்ட குணத்தால் நிறைந்த நீலகண்டனும், பழனத்தலத்தின் கண் உள்ள இறைவனும் ஆகிய பெருமானிடத்து என்றன் மனத்துள் சிறிது மயக்கம் உளதாகின்றது.

| | | |
|---|---|---|
| **1422.** மந்த மாக வளர்பிறை சூடியோர்<br>சந்த மாகத் திருச்சடை சாத்துவான்<br>பந்த மாயின தீர்க்கும் பழனத்தான்<br>எந்தை தாய்தந்தை யெம்பெரு மானுமே. | 6 | பெருமை தரும்படியாக வளர்பிறையைச் சூடி ஒரு சந்தமாகத் திருச்சடை சாத்துவானும், பந்தமாயினவற்றைத் தீர்ப்பானும் ஆகிய திருப்பழனத்து இறைவன் எந்தையும், தாயும், தந்தையும், எம்பெருமானும் ஆவன். |
| **1423.** மார்க்க மொன்றறி யார்மதி யில்லிகள்<br>பூக்க ரத்திற் புரிகிலர் மூடர்கள்<br>பார்க்க நின்று பரவும் பழனத்தான்<br>தாட்க ணின்று தலைவணங் கார்களே. | 7 | எல்லோரும் பார்க்க நின்று பழனத்தின்கண் பரவுவார்க்கு அருள் வழங்கும் இறைவனின் திருவடிக்கண் நின்று தலைவணங்காதவர்கள், அறிவிலிகளாகி வழியொன்றறியாதவர்களும், பூக்களைக் கொண்டு கரத்தால் தொழ விழையாத மூடர்களும் ஆவர். |
| **1424.** ஏறி னாரிமை யோர்கள் பணிகண்டு<br>தேறு வாரலர் தீவினை யாளர்கள்<br>பாறி னார்பணி வேண்டும் பழனத்தான்<br>கூறி னானுமை யாளொடுங் கூடவே. | 8 | இமையோர்களாகிய தேவர்கள் பணி பல கண்டு தம் பதவியினின்றும் மேலே உயர்ந்தது கண்டும், தீவினையாளர்கள் தெளிவடைந் தாரல்லர். இழிந்தவராய மக்கள் பணியையும் விரும்பும் பழனத்தலத்து இறைவன் உமையாளொடுங் கூடி ஒரு கூறனாயினன். |
| **1425.** சுற்று வார்தொழு வார்சுடர் வண்ணன்மேல்<br>தெற்றி னார்திரி யும்புரம் மூன்றெய்தான்<br>பற்றி னார்வினை தீர்க்கும் பழனனை<br>எற்றி னான்மறக் கேனெம் பிரானையே. | 9 | திரியும் புரங்கள் மூன்றையும் எய்தவனும், பற்றியவர்களுடைய வினைகளைத் தீர்க்கும் பெருமானுமாகிய பழனத்தலத்து இறைவன் சுற்றுவாரையும் தொழுவாரையும் மேலே உயர்த்தும் ஒளிவண்ணனாயுள்ளனன்; எம்பெருமானை எதனால் அடியேன் மறக்கக் கூடும் ? |
| **1426.** பொங்கு மாகடல் சூழிலங் கைக்கிறை<br>அங்க மான இறுத்தருள் செய்தவன்<br>பங்க னென்றும் பழன னுமையொடும்<br>தங்கன் தாளடி யேனுடை யுச்சியே. | 10 | பழனத்தலத்து இறைவன், பொங்குகின்ற பெருங்கடல் சூழ்ந்த இலங்கைக்கரசனாம் இராவணனது அங்கமானவற்றை இறுத்து அருள்செய்தவனும், உமையொரு பாகனும், அடியேனுடைய உச்சியிலே தன் தாளிணைகளைத் தங்குமாறு செய்தவனும் ஆவான். |

## 36. திருச்செம்பொன்பள்ளி

குறிகளும், அடையாளமும், கோயிலும், நெறிகளும், அவர் நின்றதோர் நேர்மையும் என்று நாவரசர் சொன்னபடி, இறைவர் வெளிப்படுமிடம், கோலம், தன்மை, கொள்கை, அடையும் சாதனம் முதலியவற்றை இப்பதிகம் கூறுகிறது.

ப.தொ.எண் : 149 பதிக எண் : 36

1427. கான றாத கடிபொழில் வண்டினம்
தேன றாத திருச்செம்பொன் பள்ளியான்
ஊன றாததோர் வெண்டலை யிற்பலி
தான றாததோர் கொள்கையன் காண்மினே. 1

பலி அறாததோர் கொள்கையன் – பலி ஏற்றல் ஒரு கொள்கைப்பாலது. "நிரந்தரமாக நினையுமடியார் இரந்துண்டு தன்னடியெட்டச் செய்தானே" – திருமந்திரம்.

மணம் நீங்காத விளக்கம் உடைய பொழில்களின் வண்டினங்களின் தேன் நீங்காத திருச்செம்பொன் பள்ளி இறைவன், தசைவிட்டு நீங்காத ஒரு வெண்தலையில் பலியினைத் தான் ஏற்றலினின்றும் நீங்காத இயல்புடையவன்; காண்பீர்களாக.

1428. என்பு மாமையும் பூண்டங் குழிதர்வர்க்
கன்பு மாயிடும் ஆயிழை யீரினிச்
செம்பொன் பள்ளியு ளான்சிவ லோகனை
நம்பொன் பள்ளியுள் கவினை நாசமே. 2

நம் பொன் பள்ளி – தவத்தால் அழகுபடுத்திய நமது மனப்பள்ளியுள் இருக்கும்படி நினைத்தல். "கீழ்மையில் தொடர்ந்து கிடந்தவென் சிந்தைப்பாழறை யுனக்கு பள்ளியறையாக்கி" – கழுமல மும்மணிக்கோவை

எலும்பும், ஆமை முதுகோடும் அணிந்து திரிதருகின்ற செம்பொன்பள்ளி இறைவனும் சிவலோகனு மாகிய பெருமானை அன்பு செய்யும் ஆராய்ந்த இழையை அணிந்த பெண்களே! அப் பெருமானை நம் அழகிய மனக்கோயிலின் கண்ணே நினைந்தால் நம் வினைகள் நாசமாகும்.

1429. **வேறு கோலத்த ரா**ணலர் பெண்ணலர்
கீறு கோவண வைதுகி லாடையர்
தேற லாவதொன் றன்றுசெம் பொன்பள்ளி
ஆறு சூடிய அண்ண லவனையே. 3

வேறு கோலத்தர் – மானுடர்களாகிய நாமெல்லாம் கற்பனை கூட செய்து பார்க்க முடியாத திருக்கோலம்.

நாமெல்லாம் காணாத வேறுகோலத்தோடு கூடியவரும், ஆண், பெண் அல்லாதவரும், கிழித்த கோவணத்துகிலாடை யுடையவரும், செம்பொன் பள்ளியில் வீற்றிருந்து கங்கையாளைச் சடையிற் சூடிய அண்ணலாகிய அப்பெருமானைத் தெளிந்து கொள்ளுதல் யார்க்கும் எளிதாம் ஒன்றன்று.

1430. அருவ ராததோர் வெண்டலை யேந்திவந்
திருவ ராயிடு வார்கடை தேடுவார்
**தெருவெ லாமுழல் வார்**செம்பொன் பள்ளியார்
ஒருவர் தாம்பல பேருளர் காண்மினே. 4

வெண்டலையில் ஆணவத்தைப் பலிகொடுத்தல். "ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றிலார்க்கு ஆயிரம் திருநாமம் பாடித் தெள்ளேணம் கொட்டாமோ"
– திருவாசகம்

அருவருப்புக் கொள்ளாது ஒரு வெண்டலையை ஏந்திவந்து தெருவெல்லாம் உழல்வார் செம்பொன் பள்ளி இறைவர்; திருமாலும் பிரமனுமாகிய இருவரால் திருமுடி, திருவடிகளின் எல்லை தேடப்பட்ட அவ்வொருவர் பல பெயர்களும் கொண்டு திகழ்வர்; காண்பீர்களாக.

| | |
|---|---|
| **1431.** பூவு லாஞ்சடை மேற்புனல் சூடினான்<br>ஏவ லாலெயின் மூன்று மெரித்தவன்<br>தேவர் சென்றிறைஞ் சுஞ்செம்பொன் பள்ளியான்<br>மூவ ராய்முத லாய்நின்ற மூர்த்தியே. 5<br><br>படைத்தலுக்காகப் பிரமனும், கணவனைப் பெற இரதியும், விருத்திராசுரன் என்னும் அரக்கனைக் கொல்வதற்காகவும், தக்க யாகத்தில் போந்த பழி நீங்குதற் பொருட்டு இந்திரனும், எட்டுத்திக்குப் பாலரும் வழிபட்டதாய் வரலாறு | தேவர்கள் சென்று இறைஞ்சுகின்ற செம்பொன் பள்ளி இறைவர் கொன்றைப்பூப் பொருந்திய சடையில் கங்கையைச் சூடியவரும், ஓரம்பினால் முப்புரம் எரித்தவரும், மூவர்க்கும் முதலாய் நின்ற மூர்த்தியும் ஆவர். |
| **1432.** சலவ ராயொரு பாம்பொடு தண்மதிக்<br>கலவ ராவதின் காரண மென்கொலோ<br>திலக நீண்முடி யார்செம்பொன் பள்ளியார்<br>குலவில் லாலெயில் மூன்றெய்த கூத்தரே. 6 | பெருமைக்குரிய வில்லால் மூன்றெயில்களை எய்த கூத்தரும், பொட்டணிந்தவரும், நீண்ட சடாமுடி உடையவருமாகிய செம்பொன்பள்ளி இறைவர் கங்கையைச் சூடியவராய், பாம்பும் குளிர்பிறையும் கலந்தவராய் ஆவதன் காரணம் என்னையோ ? |
| **1433.** கைகொள் சூலத்தர் கட்டுவாங் கத்தினர்<br>மைகொள் கண்டத்த ராகி யிருசுடர்<br>செய்ய மேனிவெண் ணீற்றர்செம் பொன்பள்ளி<br>**ஐயர் கையதோ ரைந்தலை நாகமே.** 7 | கையிற்கொண்ட சூலம் உடையவரும், மழுவாயுதத்தை உடையவரும், திருநீலகண்டரும் ஆகி இருசுடர்களைப் போன்று சிவந்த திருமேனியும் அதிற்பூசிய வெண்ணீற்றினரு மாகிய செம்பொன்பள்ளித் தலைவர் கையின்கண் உள்ளது ஓர் ஐந்தலை நாகமாகும். |
| **1434.** வெங்கண் நாகம் வெருவுற ஆர்த்தவர்<br>பைங்கண் ஆனையி னீருரி போர்த்தவர்<br>செங்கண் மால்விடை யார்செம்பொன் பள்ளியார்<br>அங்க ணாயடைந் தார்வினை தீர்ப்பரே. 8<br><br>தக்கயாக சங்காரத்தின் பொருட்டு வீரபத்திரர் அவதரித்த தலம். இறந்தார் எலும்புகள் இங்குக் காவிரியில் இட்டால் அவை சிவ பூசைக்குரிய மரங்களாய் முளைக்கும் என்பது வரலாறு. | வெவ்விய கண்ணையுடைய நாகத்தினை அஞ்சும்படி ஆர்த்துக்கட்டியவரும், பசுமையான கண்ணையுடைய ஆனையின் பச்சைத் தோலைப் போர்த்தவரும், செங்கண்ணை யுடைய திருமாலைத் தமக்கு விடையாக உடையவரும் ஆகிய செம்பொன் பள்ளி இறைவர் தம்மை அடைக்கலமாக அடைந்தவர்களின் வினைகளைத் தீர்ப்பர். |
| **1435.** நன்றி நாரணன் நான்முக னென்றிவர்<br>நின்ற நீண்முடி யோடடி காண்புற்றுச்<br>சென்று காண்பரி யான்செம்பொன் பள்ளியான்<br>நின்ற சூழலில் நீளெரி யாகியே. 9 | செம்பொன்பள்ளி இறைவர் நன்மை மிக்க நாரணனும், பிரமனும் ஆகிய இருவரும் நிலைபெற்ற திருமுடியையும் திருவடியையும் காணத் தொடங்கிச் சென்றும் காண்டலரியவராய் நின்ற அச்சூழ்நிலையில் நீண்டு அழலுருவாயினர். |

| | |
|---|---|
| 1436. திரியும் மும்மதில் செங்கணை யொன்றினால்<br>எரிய வெய்தன லோட்டி யிலங்கைக்கோன்<br>நெரிய வூன்றியிட் டார்செம்பொன் பள்ளியார்<br>அரிய வான மவரருள் செய்வரே. 10 | செம்பொன்பள்ளி இறைவர், திரிகின்ற மும்மதில்களைச் செங்கணை ஒன்றினால் எரியுமாறு எய்து அனலினால் ஓட்டி, இராவணன் நெரியுமாறு தம் திருவிரல் ஒன்றால் ஊன்றியவர். தம்மையடைந்த அன்பர்க்கு அரிதாகிய வீட்டுலக இன்பத்தை அப்பெருமான் அருள்வர். |

## 37. திருக்கடவூர் மயானம்

ப.தொ.எண் : 150 பதிக எண் : 37

| | |
|---|---|
| 1437. குழைகொள் காதினர் கோவண ஆடையர்<br>உழையர் தாங்கட வூரின் மயானத்தார்<br>**பழைய தம்மடி யார்**செய்த பாவமும்<br>பிழையுந் தீர்ப்பர் பெருமா னடிகளே. 1<br><br>பெருமானடிகளே – பதிக மகுடம்<br>உழையர் – மான்கன்றை உடையவர் | கடவூர் மயானத்தாராகிய பெருமான் அடிகள் சங்கவெண்குழையணிந்த காதினர்; கோவண ஆடையினர்; மானைக் கையில் உடையவர். அன்பு செய்யும் அடியார்கட்கு மிக்க அண்மையில் உள்ளவர்; தம் பழைய அடியார்கள் செய்த பாவமும் பிழையும் தீர்ப்பவர். |
| 1438. உன்னி வானவ ரோதிய சிந்தையில்<br>கன்னல் தேன்கடவூரின் மயானத்தார்<br>தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெலாம்<br>பின்னை யென்னார் பெருமா னடிகளே. 2<br><br>பெருமானடிகள் – இத்தலத்து சுவாமி பெயர்<br>ஒரு கற்பத்தில் பிரமனை எரித்து மீள உயிர்ப்பித்துச் சிருட்டி வல்லமை பெற அருளிய தலமாதலின் மயானம் எனப் பெயர் வழங்குவது. | கடவூர் மயானத்தாராகிய பெருமான் அடிகள், தம்மைச் சிந்தித்துத் தேவர்கள் ஓதும்போது அவர் சிந்தையில் கரும்பு போன்றும் தேன் போன்றும் இனிப்பவர்; தம்மை நோக்கித் தொழுது எழும் அடியவர்கட்கெல்லாம் **பிறகு அருள்செய்வோம் என்னாது அப்போதே அருளும் பெருங்கருணை உடையவர்.** |
| 1439. சூல மேந்துவர் தோலுடை ஆடையர்<br>ஆல முண்டமு தேமிகத் தேக்குவர்<br>கால காலர் கடவூர் மயானத்தார்<br>மாலை மார்பர் பெருமா னடிகளே. 3<br><br>உடை ஆடை – இருபெயரொட்டு | கடவூர் மயானத்தாராகிய பெருமான் அடிகள், சூலம் ஏந்தியிருப்பவர்; புலித்தோலை உடுத்திருப்பவர்; ஆலம் உண்டு அமுதைப் பிறர்க்குத் தேக்கி அளிப்பவர். காலனுக்கும் காலர். மாலையணிந்த மார்பினர். |
| 1440. இறைவ னாரிமை யோர்தொழு பைங்கழல்<br>மறவ னார்கட வூரின் மயானத்தார்<br>அறவ னாரடி யாரடி யார்தங்கள்<br>பிறவி தீர்ப்பர் பெருமா னடிகளே. 4 | கடவூர் மயானத்தாராகிய பெருமான் அடிகள், தேவர்கள் தொழுகின்ற பைங்கழலை உடைய இறைவர்; வீரம் உடையவர்; அறமே வடிவானவர்; அடியார்களின் பிறவி நோயைத் தீர்ப்பவர். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1441.** கத்து காளி கதந்தணி வித்தவர்<br>மத்தர் தாங்கட வூரின் மயானத்தார்<br>ஒத்தொவ் வாதன செய்துழல் வாரொரு<br>பித்தர் காணும் பெருமா னடிகளே. 5<br><br>பித்தர் – ஒரு நெறிப்பட்ட செயல் இல்லாதவர்<br>கதம் – கோபம்<br>மத்தர் – உன்மத்தர் – ஊமத்தை அணிந்தவர் | கடவூர் மயானத்தாராகிய பெருமான் அடிகள், ஆரவாரம் செய்கின்ற காளியின் சினத்தைத் தணிவித்தவர்; மதம் பொருந்தியவர் (ஊமத்த மலரைச் சூடியவர்) ஒத்தும் ஒவ்வாதும் செய்யும் செயல் பலவற்றைச் செய்து உழல்கின்ற பித்தர் போல்வர்; காண்பீர்களாக. |
| **1442.** எரிகொள் மேனி யிளம்பிறை வைத்தவர்<br>கரியர் தாங்கட வூரின் மயானத்தார்<br>அரிய ரண்டத்து ளோரயன் மாலுக்கும்<br>பெரியர் காணும் பெருமா னடிகளே. 6 | கடவூர் மயானத்தாராகிய பெருமான் அடிகள், சிவந்த தழல் வண்ணம் கொண்ட திருமேனியும், இளம்பிறை வைத்த சடையும் உடையவர்; அயிராவணம் என்ற ஆனையை உடையவர்; அயன், திருமால் முதலிய தேவர்கள் யாவருக்கும் காண்டற்கு அரியர்; பெரியர்; காண்பீர்களாக. |
| **1443.** அணங்கு பாகத்தர் ஆரண நான்மறை<br>கணங்கள் சேர்கட வூரின் மயானத்தார்<br>வணங்கு வாரிடர் தீர்ப்பர் மயக்குறும்<br>பிணங்கொள் காடர் பெருமா னடிகளே. 7 | கடவூர் மயானத்தாராகிய பெருமான் அடிகள், உமை ஒருபாகம் உடையவர்; ஆரணங்களாகிய நான்மறைகளின் தொகுதிகள் தொழுது சேரும் தகைமை உடையவர்; தம்மை வணங்குவார்களது துன்பங்களைத் தீர்ப்பவர்; மயக்கம் மிகுவிக்கும் பிணங்களைக் கொண்ட சுடுகாடே பெரும்பதியாக் கொண்டவர். |
| **1444.** அரவு கையின ராதி புராணனார்<br>மரவு சேர்கட வூரின் மயானத்தார்<br>பரவு வாரிடர் தீர்ப்பர் பணிகொள்வர்<br>பிரமன் மாற்கும் பெருமா னடிகளே. 8<br><br>மரவம் – குங்கும மரம்<br><br>x x x x x x x x x x x x x 9, 10 | குங்கும மரங்கள் சூழ்ந்த கடவூர் மயானத்தாராகிய பெருமான் அடிகள், அரவம் உடைய கையினர்; ஆதியிற்றோன்றிய பழமையானவர்; தம்மைப் பரவும் அடியார்களது இடர்களைத் தீர்ப்பவர்; அவர்களைப் பணியும் கொள்பவர்; பிரமன், மாலுக்கும் பெரிய இயல்புடையவராவர். |

## 38. திருக்கடவூர் வீரட்டம்

(குங்கிலியக் கலிய நாயனார் திருமடத்தில் தங்கி, திருக்கோயில் வழிபாடு செய்த நாட்களில் பாடியருளிய "ஆனையார்" திருப்பதிகம்)

ப.தொ.எண் : 151 பதிக எண் : 38

1445. மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை
நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே
கொலைக்கை யானையுங் கொன்றிடு மாதலால்
கலைக்கை யானைகண் டீர்கட வூரரே. 1

| மலைக்கொள் யானை மயக்கிய வல்வினை | மலையில் வாழும் யானை போன்று மயக்கத்தைச் செய்த கொடிய வினைகள் |
|---|---|
| வல்வினை நிலைக் கொளானை | கொடிய வினைகளுக்கே நிலைக்களமாய் யானை போன்று அடங்காது பலவற்றை நினைக்கும் |
| கொலைக் கையானையும் | வல்வினையாகிய யானையையும் ஏனைய மத யானையையும் |
| கலைக்கை யானை | கல்வி அறிவினலாகிய ஒழுக்கத்தின் பயனாக அடையத்தக்க பொருள்களாயுள்ளவர் |

1446. வெள்ளி மால்வரை போல்வதொ ரானையார்
உள்ள வாறெனை யுள்புகு மானையார்
கொள்ள மாகிய கோயிலு ளானையார்
கள்ள வானைகண் டீர்கட வூரரே. 2

வெள்ளிமால்வரை போன்ற அயிராவணம் என்னும் ஒப்பற்ற ஆனையை உடையார்; உள்ளவாறே என் உள்ளத்தில் புகுகின்ற பெரியவர்; கொள்ளும் இடமாகிய அழகிய கோயிலுள் ஆனையாய் உள்ளவர்; ஆதலின் கடவூர்த்தலத்து இறைவர் காண்பதற்கரிய ஆனைபோல்வார்; காண்பீர்களாக.

ஆன் – எருது என்றும் பொருளுண்டு.
ஆனையார் – பெரியர். ஆனை– யானை.

1447. ஞான மாகிய நன்குண ரானையார்
ஊனை வேவ வுருக்கிய வானையார்
வேன லானை யுரித்துமை யஞ்சவே
கான லானைகண் டீர்கட வூரரே. 3

ஞானமாகிய நன்குணரத்தக்க ஆனையார்; உடற் பொதியை மேவுமாறு உருக்கி உள்ளொளி பெருக்கும் ஆனையார்; சினமாக வந்த ஆனையை உமாதேவியார் அஞ்சுமாறு உரித்த கடவூர்த் தலத்து இறைவர்; காட்டில் திரியாத நல்ல ஆனையும் போல்வர்; காண்பீர்களாக.

1448. ஆல முண்டழ காயதொ ரானையார்
நீல மேனி நெடும்பளிங் கானையார்
கோல மாய கொழுஞ்சுட ரானையார்
கால வானைகண் டீர்கட வூரரே. 4

நஞ்சினை உண்டும் அழகுபெற்ற ஆனையார்; நீலமேனியை ஒருபாகத்தே உடைய நீண்ட பளிங்கனைய ஆனையார்; கொழுவிய சுடர்விடும் கோலம் உடைய ஆனையார்; கடவூர்த் தலத்து இறைவர் காலனுக்கு ஆனை போல்வர்; காண்பீர்களாக.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **1449.** அளித்த ஆன் அஞ்சு மாடிய வானையார்<br>வெளுத்த நீள்கொடி யேறுடை யானையார்<br>எளித்த வேழத்தை எள்குவித் தானையார்<br>களித்த வானைகண் டீர்கட வூரரே. 5<br><br>பதிகம் முழுவதும் கடவூரரை ஆனையர் – ஆனை போல்பவர் என்று உருவகித்தார். | அன்பர்கள் பரிந்து கொடுக்கும் பஞ்ச கவ்வியங்களை ஆடிய ஆனையார்; வெண்மையான இடபக்கொடி உடைய ஆனையார்; இகழ்ந்து வந்த யானையினை எல்லோரும் எள்குமாறு உரித்த ஆனையார்; கடவூர்த்தலத்து இறைவர் களிப்புற்ற யானை போல்வர்; காண்பீர்களாக. |
| **1450.** விடுத்த மால்வரை விண்ணுற வானையார்<br>தொடுத்த மால்வரை தூயதொ ரானையார்<br>கடுத்த காலனைக் காய்ந்தொ ரானையார்<br>கடுத்த வானைகண் டீர்கட வூரரே. 6 | விடுத்த பெரியமலையை விண்ணுற நிமிர்க்கும் ஆனையார்; தொடுத்த பெரியமலை தூய்மையாக உடைய ஆணையார்; சினந்து வந்த காலனைக் காய்ந்த ஒப்பற்ற கடவூர்த் தலத்து இறைவர் சினத்தலுற்ற ஆனை போல்வர்; காண்பீர்களாக. |
| **1451.** மண்ணு ளாரை மயக்குறு மானையார்<br>எண்ணு ளார்பல ரேத்திடு மானையார்<br>விண்ணு ளார்பல ரும்மறி யானையார்<br>கண்ணு ளானைகண் டீர்கட வூரரே. 7 | மண்ணுலகின் உள்ளாரை மயக்கம் உறுவிக்கும் ஆனையார்; எண்ணிக்கையிற் பெருகிய நல்லடியார் பலர் ஏத்தித் தொழும் ஆனையார்; விண்ணுலகின்கண் உள்ள தேவர்கள் பலரும் அறிகின்ற ஆனையார்; கடவூர்த் தலத்து இறைவர் காதலாகித் தொழும் அடியார் கண்ணுள் நின்று காட்சி வழங்கும் ஆனை போல்வர்; காண்பீர்களாக. |
| **1452.** சினக்குஞ் செம்பவ ளத்திர ளானையார்<br>மனக்கும் வல்வினை தீர்த்திடு மானையார்<br>அனைக்கும் அன்புடை யார்மனத் தானையார்<br>கனைக்கு மானைகண் டீர்கட வூரரே. 8 | சிவனார் செம்பவளம் ஒப்ப செம்மேனி உடைய பெரியவர். மனத்தின்கண் நிறைந்த வல்வினைகளைத் தீர்க்கும் ஆனையார்; அன்னைக்கும் மேலாகிய அன்புடையார் மனத்து உறையும் ஆனையார்; கடவூர்த்தலத்து இறைவர் ஒலித்து முழங்கி வரும் ஆனைபோல்வர்; காண்பீர்களாக. |
| **1453.** வேத மாகிய வெஞ்சுட ரானையார்<br>நீதி யானில னாகிய வானையார்<br>ஓதி யூழி தெரிந்துண ரானையார்<br>காத லானைகண் டீர்கட வூரரே. 9 | வேதங்களாய் அதன் ஒளியாய் விளங்கும் ஆனைபோன்றவர். நீதிமுறை விளங்க நிலத்தின்கண் தோன்றியவர் என்க. வேதங்களை ஓதி பல ஊழிகளையும் கண்டறிந்தவர். அன்பர்க்கன்பர் கடவூர் இறைவர்; காண்பீர்களாக. |

| | |
|---|---|
| 1454. நீண்ட மாலொடு நான்முகன் தானுமாய்க்<br>காண்டு மென்றுபுக் கார்க ளிருவரும்<br>மாண்ட வாரழ லாகிய வானையார்<br>காண்ட லானைகண் டீர்கட வூரரே. 10 | நெடியோனாகிய திருமாலும், நான்முகனும் காண்போம் என்று ஆணவத்தாற் கருதிப் புகுந்தும் காண்டற்கரியவராய் மாட்சி உடைய பேரழலாக நிமிர்ந்த ஆனையார்; கடவூர்த் தலத்து இறைவர் காண்டற்குரிய ஆனைபோல்வர்; காண்பீர்களாக. |
| 1455. அடுத்து வந்த இலங்கையர் மன்னனை<br>எடுத்த தோள்க ளிறநெரித் தானையார்<br>கடுத்த காலனைக் காய்ந்ததொ ரானையார்<br>கடுக்கை யானைகண் டீர்கட வூரரே. 11 | எடுப்பேன் என்று அடுத்துவந்த இலங்கை வேந்தனை எடுக்கலுற்ற இருபது தோள்களும் இறும் வண்ணம் நெரித்த ஆனையார்; சினந்த காலனைக் காய்ந்த ஆனையார்; கடவூர்த் தலத்து இறைவர் கொன்றையணிந்த ஆனை போல்வர்; காண்பீர்களாக. |

கடுக்கை – கொன்றை. காலனை உதைத்த காலனைக் கண்டவுடன் அப்பருக்குத் தம்மைக் கொல்ல வந்த யானை நிகழ்வுகள் நினைவுக்கு வர "ஆனையாகவே" பதிகம் பாடிவிட்டார் போலும்.





## 39. திருமயிலாடுதுறை

ப.தொ.எண் : 152 பதிக எண் : 39

1456. கொள்ளுங் காதன்மை பெய்துறுங் கோல்வளை
உள்ள முள்கி யுரைக்குந் திருப்பெயர்
வள்ளல் மாமயி லாடு துறையுறை
வெள்ளந் தாங்கு சடையனை வேண்டியே. 1

செவிலி கூற்றாக அமைந்த பாடலாகும்

மயிலாடுதுறையில் உறைகின்ற வள்ளலும், கங்கை வெள்ளம் தங்கிய சடையனுமாகிய பெருமானை விரும்பிக் காதல் கொள்ளும் இயல்புடைய திரண்ட வளைகள் பெய்யப்பட்ட இப்பெண் உள்ளத்தால் உள்கி அப்பெருமான் திருப்பெயரையே உரைக்கும் தன்மையள் ஆயினள்.

1457. சித்தந் தேறுஞ் செறிவளை சிக்கெனும்
பச்சை தீருமென் பைங்கொடி பால்மதி
வைத்த மாமயி லாடு துறையரன்
கொத்தி னிற்பொலி **கொன்றை கொடுக்கிலே.** 2

கொன்றை கொடுக்கில் சித்தம் தேறும் என முன்னே கூட்டிப் பொருள் காண வேண்டும். இதுவும் செவிலி கூற்றாகும்.

சடையின்கண் வெண்பிறை வைத்த பெருமை பொருந்திய மயிலாடுதுறைத் தலத்து இறைவனது, கொத்தாகப் பொலியும் கொன்றை மலரினைக் கொடுத்தால், தன் சித்தம் தெளிந்து, உடல் பூரித்து, வளைகளைச் செறிப்பாள், என் பைங்கொடியாகிய இவள்! தன் பச்சைவண்ணமும் நீங்கிப் பழைய நிறம் பெறுவாள்.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| 1458. **அண்டர் வாழ்வும் அமர ரிருக்கையும்**<br>கண்டு வீற்றிருக் குங்கருத் தொன்றிலோம்<br>வண்டு சேர்மயி லாடு துறையரன்<br>தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே. 3<br><br>(தொண்டர் பெருமை கூறும் பாடல்) | வண்டுகள் சேர்ந்த மயிலாடுதுறைத் தலத்து இறைவனுக்குத் தொண்டுசெய்யும் அடியார் திருப்பாதங்களைச் சூடிச் செறிந்துகொண்டால், தேவ உலக வாழ்வும், தேவர்களது பதவி இன்பங்களும் கண்டு வீற்றிருக்கும் கருத்து எமக்குச் சிறிதும் இல்லை. |
| 1459. வெஞ்சி னக்கடுங் காலன் விரைகிலான்<br>அஞ்சி றப்பும் பிறப்பும் அறுக்கலாம்<br>மஞ்சன் மாமயி லாடு துறையுறை<br>அஞ்சொ லாளுமை பங்க னருளிலே. 4<br><br>ஆலமிடற்றான் அடியார் என்று அடர அஞ்சுவர் எமன் தூதர். | பெருவீரம் உடையானும், பெருமைக்குரிய மயிலாடுதுறையில் உறையும் அழகிய சொல்லை உடையானாகிய உமைபங்கனும் ஆகிய பெருமான் அருளினால், வெவ்விய சினத்தை உடையனாய் விரைந்துவரும் காலன் நம்மிடம் விரைய மாட்டான்; அஞ்சத்தகுவனவாகிய இறப்பும் பிறப்பும் அறுக்கலாம். |
| 1460. குறைவி லோங்கொடு மாநுட வாழ்க்கையால்<br>கறைநி லாவிய கண்டனெண் தோளினன்<br>மறைவ லான்மயி லாடு துறையுறை<br>இறைவன் நீள்கழ லேத்தி யிருக்கிலே. 5 | திருநீலகண்டனும், எட்டுத் தோளினனும், வேதம் வல்லவனுமாகிய மயிலாடுதுறை உறையும் இறைவனின் நீண்ட கழல்களை ஏத்தி இருந்தால், கொடிய மானிட வாழ்க்கையால் வருகின்ற குறைவு சிறிதும் இல்லாதவராவோம். |
| 1461. **நிலைமை சொல்லுநெஞ் சேதவ மென்செய்தாய்**<br>கலைகள் ஆயவல் லான்கயி லாயநன்<br>மலையன் மாமயி லாடு துறையன்நம்<br>தலையின் மேலும் மனத்துளுந் தங்கவே. 6 | கலைகளை ஆய வல்லவனும், கயிலாய மலைக்குத் தலைவனும், பெருமைமிக்க மயிலாடுதுறையில் எழுந்தருள்பவனுமாகிய இறைவன், நம் தலையின் மேலும் (திருவடி சூட்டல்), மனத்துள்ளும் தங்குவதற்கு, மனமே! எத்தகைய பெருந்தவத்தை நீ செய்துள்ளாய். |
| 1462. நீற்றி னான்நிமிர் புன்சடை யான்விடை<br>ஏற்றி னான்நமை யாளுடை யான்புலன்<br>மாற்றி னான்**மயிலாடு துறையென்று**<br>**போற்று வார்க்குமுண் டோபுவி வாழ்க்கையே.** 7 | திருநீறணிந்தவனும், நிமிர்தலுற்ற பொலிவுற்ற சடையினனும், விடையாகிய ஏற்றினை உடையவனும், நம்மை ஆளுடையவனும், புலன்களின் நெறியை மாற்றியவனுமாகிய **மயிலாடுதுறை** என்று போற்றுகின்ற அடியார்கட்குத் துயரம் மிகுந்த இவ்வுலக வாழ்க்கை உண்டோ? |

1463. கோலும் புல்லு மொருகையிற் கூர்ச்சமும்
தோலும் பூண்டு துயரமுற் றென்பயன்
நீல மாமயி லாடு துறையனே
நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந் தோர்கட்கே. 8

நீல நிறம் உடைய கரிய மயில்கள் ஆடும் துறையினை உடையவனே! முக்கோலும், தருப்பைப்புல்லும், ஒரு கையில் கூர்ச்சமும், தோலும் பூண்டு துயரம் அடைந்து பயன் யாது? மெய்ப்பொருளை நுணுகி உள்ளவாறு அறிந்த ஞானிகளுக்குச் சாதனங்கள் வேண்டாம்.

---

கோல் – மூன்று கிளைவடிவாய கோல். யோகதண்டம். புல் – தருப்பைப்புல்; கூர்ச்சம் – தர்ப்பை நுனிகளை முடிந்தது. உயிரையோ, கடவுளையோ ஆவாகனம் செய்வதற்கு உரியது. யோகதண்டம் பெற்று வேதம் ஓதுவதற்கு உரிமை பெற்றும் இறைவனை உணர்ந்து தானும் அனுபவிக்காமல், மற்றவர்க்கு எடுத்துச் சொல்லாமலும் வாழும் வாழ்க்கையால் என்ன பயன்?

1464. பணங்கொ ளாடர வல்குற் பகீரதி
மணங்கொ ளச்சடை வைத்த மறையவன்
வணங்கு மாமயி லாடு துறையரன்
அணங்கொர் பால்கொண்ட கோல மழகிதே. 9

படத்தினைக் கொண்டு ஆடுகின்ற அரவனைய அல்குலை உடைய கங்கையை, மணம்கமழும்படி சடையின்கண் வைத்த மறைவடிவானவனும், வணங்கியெழும் **மயிலாடுதுறை** உறைபவனுமாகிய இறைவன் அம்மையினை ஒருபாகத்தே கொண்டு அருள்செய்யும் திருக்கோலம் மிக அழகியதாகும்.

---

அவனருளில் திளைக்க வேண்டும்

1465. நீணி லாவர வச்சடை நேசனைப்
பேணி லாதவர் பேதுற வோட்டினோம்
வாணி லாமயி லாடு துறைதனைக்
காணி லார்க்குங் கடுந்துய ரில்லையே. 10

நீண்ட நிலவினையும், அரவத்தையும் சடையில் விரும்பிச் சூடியுள்ளவனைப் பேணாதவர் பேதுறும்படி விலக்கினோம். ஒளிபொருந்திய **மயிலாடுதுறை**யினைக் காணில், ஆர்க்கும் கடுந்துயரங்கள் இல்லை.

1466. பருத்த தோளும் முடியும் பொடிபட
இருத்தி னானவ னின்னிசை கேட்டலும்
வரத்தி னான்மயி லாடு துறைதொழும்
கரத்தி னார்வினைக் கட்டறுங் காண்மினே. 11

இராவணனது பருத்த தோள்களும் முடிகளும் தூளாகுமாறு இருத்தினவனும், அவனது இன்னிசையைக் கேட்டலும் வரம் அருளியவனும் ஆகிய பெருமானை, **மயிலாடுதுறை**யில் தொழும் கரத்தினை உடையவர்கள் வினை, கட்டற்றுப்போகும் காண்பீராக.

---

ஐப்பசி மாதம் அமாவாசையன்று தென்முகக் கடவுள் எழுந்தருளி வந்து காவிரியிலே கங்கையை வருவிப்பார் என்ற வரலாறு உண்டு.

## 40. திருக்கழிப்பாலை

ப.தொ.எண் : 153 (அகப்பொருட் பதிகம்) பதிக எண் : 40

1467. வண்ண மும்வடி வுஞ்சென்று கண்டிலள்
எண்ணி நாமங்க ளேத்தி நிறைந்திலள்
கண்ணு லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம்
அண்ண லேயறி வானிவள் தன்மையே. 1

கழிப்பாலைப் பெருமான் மேல் காதல் கொண்டு வருந்தும் ஒருத்தியை ஆற்றுவிக்கச் செவிலி கூறும் கூற்று.

கழிப்பாலை இறைவனின் நிறம் வடிவம் முதலியவற்றைச் சென்று நேரே கண்டிலள். அவன் திருநாமங்களை எண்ணினாளில்லை. காணாமலே காதல்கொண்டு பிதற்றும் இவள் தன்மையைப் பொழில் சூழ்ந்த கழிப்பாலை இறைவனே அறிவான்.

1468. மருந்து வானவ ருய்யநஞ் சுண்டுகந்
திருந்த வன்கழிப் பாலையு ளெம்பிரான்
திருந்து சேவடி சிந்தையுள் வைத்திவள்
பரிந்து ரைக்கிலு மென்சொற் பழிக்குமே. 2

தேவர்கள் அமிர்தத்தை உண்டு உய்யத் தான் நஞ்சினை உண்டு உகந்து இருப்பவனும் வலிய கழிப்பாலையில் வீற்றிருக்கும் எம்பெருமானு மாகிய இறைவனின் சேவடிகளைச் சிந்தையுள் வைத்து யான் பரிந்து உரைத்தாலும், இவள் என் சொல்லைப் பழிக்கின்றாள்.

1469. மழலை தான்வரச் சொல்தெரி கின்றிலள்
குழலின் நேர்மொழி கூறிய கேண்மினோ
அழக னேகழிப் பாலையெம் மண்ணலே
இகழ்வ தோவெனை யேன்றுகொ ளென்னுமே. 3

குழல் இசை போன்ற மொழியினை உடைய இவள், மழலைச்சொல்லே கிளக்கும் இயல்பினள்; தெரியுமாறு சொற்களைப் பேசா இயல்பினளாய்க் கூறிய மொழிகளைக் கேட்பீர்களாக; 'அழகனே! கழிப்பாலையில் வீற்றிருக்கும் எம் தலைவனே! என்னை இகழ்வதோ? ஏற்றுக்கொள்' என்கின்றாள்.

1470. செய்ய மேனிவெண் ணீறணி வான்றனை
மைய லாகி மிதக்கில ளாரையும்
கைகொள் வெண்மழு வன்கழிப் பாலையெம்
ஐய னேயறி வானிவள் தன்மையே. 4

சிவந்த மேனியும், அதில் வெண்ணீறு அணியும் கோலமும் உடைய சிவபெருமானின் மேல் மையல் உடையவளாகி, இவள் ஆரையும் மதிக்கிலள்; கையிற் பிடித்த வெண்மழுவினனும், கழிப்பாலையில் உறைவானும் ஆகிய இறைவனே இவள் தன்மையை அறிவான்.

1471. கருத்த னைக்கழிப் பாலையுள் மேவிய
ஒருத்த னைஉமை யாளொரு பங்கனை
அருத்தி யாற்சென்று கண்டிட வேண்டுமென்
றொருத்தி யாருள மூசல தாடுமே. 5

ஒருத்தியின் உள்ளம் – கருத்தின்கண் இருப்பவனும், கழிப்பாலையுள் எழுந்தருளி யிருக்கும் ஒப்பற்றவனும், உமையாளை ஒருபங்கில் உடையவனும் ஆகிய பெருமானை விருப்பத்தாற்சென்று கண்டிட வேண்டும் என்று ஊசலாடுகிறது.

| | |
|---|---|
| **1472.** கங்கை யைச்சடை வைத்து மலைமகள்<br>நங்கை யையுட னேவைத்த நாதனார்<br>திங்கள் சூடித் திருக்கழிப் பாலையான்<br>இங்கு வந்திடு மென்றிறு மாக்குமே. 6 | இப்பெண், சடையிற் கங்கையை வைத்து மலைமகளாகிய நங்கையைத் தன்னொரு பங்கில் வைத்த இறைவனாகிய திருக்கழிப்பாலைப் பெருமான் இளம்பிறை சூடி இங்குத் திருவுலாப் போதற்கு எழுந்தருள்வான் என்று இறுமாப்பு அடைகின்றாள். |
| **1473.** ஐய னேயழ கேயன லேந்திய<br>கைய னேகறை சேர்தரு கண்டனே<br>மையு லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம்<br>ஐய னேவிதி யேயரு ளென்னுமே. 7 | இவள், 'தலைவனே! அழகனே! தழலை ஏந்திய கரத்தவனே! திருநீலகண்டனே! மேகங்கள் உலாவுகின்ற பொழில் சூழ்ந்த கழிப்பாலையில் வீற்றிருக்கும் எம் அழகியவனே! நன்மை தீமைகளை விதிப்பவனே! அருள்வாயாக!' என்று கூறுகின்றாள். |
| **1474.** பத்தர் கட்கமு தாய பரத்தினை<br>முத்த னைமுடி வொன்றிலா மூர்த்தியை<br>அத்த னையணி யார்கழிப் பாலையெம்<br>சித்த னைச்சென்று சேருமா செப்புமே. 8<br>x x x x x x x x x x x x x 9 | இவள், அன்பர்கட்கு அமுதாயுள்ள மேலானவனை, முத்தியை அளிப்பவனை, முடிவு ஒன்று இல்லாத மூர்த்தியை, தலைவனை, அழகு நிரம்பிய கழிப்பாலையில் வீற்றிருப்பவனாகிய என் சித்தத்தவனைச் சென்று சேருமாறு ஒரு நெறி எனக்குச் செப்புவீர்களாக!' என்கின்றாள். |
| **1475.** பொன்செய் மாமுடி வாளரக் கன்தலை<br>அஞ்சு நான்குமொன் றும்மிறுத் தானவன்<br>என்செ யான்கழிப் பாலையு ளெம்பிரான்<br>துஞ்சும் போதும் துணையென லாகுமே. 10 | பொன்னாற் செய்யப்பட்ட முடியணிந்தவனும், வாளுடையவனுமாகிய இராவணன் தலைகள் பத்தும் இறுத்தவன்! கழிப்பாலையுள் எம் தலைவன் என்ன செய்யாதவன்? ஆதலின் அப்பெருமானே தூங்கும்போதும் நமக்குத் துணை என்பதற்குப் பொருந்தியவன் ஆவன். |

## 41. திருப்பைஞ்ஞீலி

(ஞீலி – ஒருவகை வாழையால் பெற்ற பெயர்)

ப.தொ.எண் : 154 பதிக எண் : 41

**1476.** உடையர் கோவண மொன்றுங் குறைவிலர்
படைகொள் பாரிடஞ் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
**சடையிற் கங்கை தரித்த சதுரரை**
அடைய வல்லவர்க் கில்லை அவலமே. 1

கோவண உடையினரும், ஒன்றும் குறைவில்லா தவரும், படைக்கலங்களைக் கொண்ட பூதகணங்கள் சூழ்ந்த திருப்பைஞ்ஞீலித் திருத்தலத்தில் எழுந்தருளியவரும் ஆகிய சடையிற் கங்கையை வைத்த சதுரப்பாடு உடைய பெருமானை அடையும் வல்லமை உடைய அன்பர்களுக்குத் துன்பங்கள் இல்லை.

உலகமெல்லாம் பரவி அழிக்கவல்லதாக வந்த கங்கையைப் பனித்துளி போலச் சடையில் தரித்தது மிகப் பெரிய சாதனை. தனித்தன்மை. அவர் தம் சதுரப்பாடு. திறமை.

1477. மத்த மாமலர் சூடிய மைந்தனார்
சித்த ராய்த்திரி வார்வினை தீர்ப்பரால்
பத்தர் தாந்தொழு தேத்துபைஞ் ஞீலியெம்
அத்த னைத்தொழ வல்லவர் நல்லரே. 2

ஊமத்தம் மலர்களைச் சூடிய பெருவீரரும், சித்தராகத் திரிபவரும், அன்பர் பலர் தொழுதேத்தும் பைஞ்ஞீலியில் உறையும் அத்தரும், தொழுவார் வினை தீர்ப்பவரும் ஆகிய அப்பெருமானைத் தொழும் வல்லமை உடையவர் நல்லவர் ஆவர்.

திருநீற்று அந்தணராய் வந்து, இறைவர் திருநாவுக்கரசருக்குப் பொதிச்சோறு தந்தருளிய தலம்.

1478. விழுது சூலத்தன் வெண்மழு வாட்படைக்
கழுது துஞ்சிருள் காட்டகத் தாடலான்
பழுதொன் றின்றிப் பைஞ்ஞீலிப் பரமனைத்
தொழுது செல்பவர் தம்வினை தூளியே. 3

விழுதொத்த சூலத்தையும், வெண் மழு வாளையும் படைக்கலமாக உடையவனும், பேய்களும் தூங்குகின்ற நள்ளிருளில் சுடுகாட்டில் ஆடலை உடையவனும், பைஞ்ஞீலியில் உறையும் பரமனும் ஆகிய பெருமானைப் பழுது ஒன்றும் இன்றித் தொழுது செல்பவர் வினைகள் பொடியாகும்.

விழுது சூலம் :

விழுது – ஆலமரம் முதலானவற்றின் கிளைகளி லிருந்து இறங்குகின்ற பிற்கால வேர்த்தொகுதி. அவ்வேர்த்தொகுதியே சிறுமரமானது, பெருமரமாகக் கிளை பரப்பிப் பெருகுதற்குக் காரணமாவது. அத்துடன், பல்கிப் பெருகிய பெருமரத்தையும் அதுவே தாங்கி நிற்பது.

பெருமானும், விழுதின் கிளைகளின் அமைப்பிலான, முத்தலைச் சூலத்தை ஏந்தியருள்கின்றான். அது, பெருமானது படைத்தல், காத்தல் முதலான தொழில்களை உள்ளடக்கி, உயிர்த்தொகுதியின் வினை நுகர்வுக்கு உதவுதலைக் குறிக்கின்ற வளமைக் குறியீடாகும்.

அநாதி கேவல நிலையில் எந்த இயக்கமும் இன்றி இருந்த உயிருக்குப் பிறப்பைக் கொடுத்து வாழ்வதற்குரிய வகையில், படைத்தும், காத்தும், தான் புரிகின்ற அருள் தொழிலின் குறியீடாக அவன் மூன்று கிளைகளின் அமைப்பிலான சூலத்தை ஏந்தியருள்கின்றான். அவ்அருள் சிறப்பினைக் குறிக்கவே அடிகளும், ‘விழுது சூலம்’ எனக் குறித்துள்ளார்.

1479. ஒன்றி மாலும் பிரமனுந் தம்மிலே
நின்ற சூழ லறிவரி யானிடம்
சென்று பாரிட மேத்துபைஞ் ஞீலியுள்
என்றும் மேவி யிருந்த அடிகளே. 4

திருமாலும் பிரமனும் தம்மிலே ஒன்றித் தேட முற்பட்டும் திருவடியும் திருமுடியும் நின்ற சூழல் அறிய அரியவனாய் விளங்கிய பெருமான் வீற்றிருக்கும் இடம், பூதங்கள் சென்று ஏத்துகின்ற பைஞ்ஞீலியாகும். இத்தலத்தி லேயே அடிகள் என்றும் மேவியிருப்பது.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1480.** வேழத் தின்னுரி போர்த்த விகிர்தனார்<br>தாழச் செஞ்சடை மேற்பிறை வைத்தவர்<br>தாழைத் தண்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலியார்<br>யாழின் பாட்டை யுகந்த அடிகளே. 5 | வேழத்தின் தோலை உரித்துப் போர்த்த விகிர்தரும், செஞ்சடைமேல் தாழுமாறு பிறை வைத்தவரும், தாழைகள் நிறைந்த குளிர்ந்த பொழில்கள் சூழ்ந்த பைஞ்ஞீலித் தலத்து உறைபவரும் ஆகிய பெருமான் யாழுக்குப் பொருந்திய பாடலை உகந்த அடிகள் ஆவர். |
| **1481.** குண்டு பட்டுக் குறியறி யாச்சமண்<br>மிண்ட ரோடு படுத்துய்யப் போந்துநான்<br>கண்டங் கார்வயல் சூழ்ந்தபைஞ் ஞீலியெம்<br>அண்ட வாண னடியடைந் துய்ந்தனே. 6<br><br>குண்டு – தாழ்வு; மிண்டர் – சொற் செயலால் வலியர் | உடல் பெருக்கிக் குறிக்கோளையறியாச் சமண் மிண்டரோடு பொருந்தி உய்யப்போந்து நான், கரும்புகள் நிறைந்த வயல் சூழ்ந்த பைஞ்ஞீலித் தலத்து எழுந்தருளியுள்ள தேவதேவன் திருவடிகளை அடைந்து உய்ந்தேன். |
| **1482.** வரிப்பை யாடர வாட்டி மதகரி<br>உரிப்பை மூடிய வுத்தம னாருறை<br>திருப்பைஞ் ஞீலி திசைதொழு வார்கள்போய்<br>இருப்பர் வானவ ரோடினி தாகவே. 7 | வரிகளை உடைய படத்தினைப் பொருந்தி ஆடும் அரவத்தை ஆட்டி மதச் செருக்குடைய யானையின் உரியை மெய்ப்பையாக மூடிய உத்தமனார் உறைகின்ற திருப்பைஞ்ஞீலித் தலத்தைத் திக்குநோக்கித் தொழுபவர்கள் வானவர்களோடு இனிதாக இருப்பர். |
| **1483.** கோடல் கோங்கம் புறவணி முல்லைமேல்<br>பாடல் வண்டிசை கேட்கும்பைஞ் ஞீலியார்<br>பேடு மாணும் பிறரறி யாததோர்<br>ஆடு நாக மசைத்த அடிகளே. 8<br><br>கோடல் – காந்தள் மலர்; புறவு – காடு | செங்கோடலும், வெண்கோடலும், கோங்கமும் ஆகிய பூக்கள் புறவுநிலமாகிய முல்லைநிலத்தை அணிசெய்தலால், வண்டிசைக்கும் பாடல் கேட்கின்ற பைஞ்ஞீலித் தலத்து இறைவர், பேடும் ஆணும் ஆகிய பிறர் அறியாத இயல்பினர், ஆடும் பாம்பைக் கட்டிய ஒப்பற்ற அடிகள் ஆவர். |
| **1484.** காரு லாமலர்க் கொன்றையந் தாரினான்<br>வாரு லாமுலை மங்கையொர் பங்கினன்<br>தேரு லாம்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலியெம்<br>ஆர்கி லாவமு தையடைந் துய்ம்மினே. 9<br><br>1090 ஆவது பாடலை ஒத்துளது இப்பாடல் | கார்காலத்துப் பொருந்திய கொன்றை மலர்களாலாகிய தாரினை அணிந்தவனும், கச்சுப் பொருந்திய தனங்களை உடைய உமை மங்கையை ஒரு பங்கில் உடையவனும், பொழில் நுகரவருவோர் இவர்ந்துவந்த தேருலாவுகின்ற பூம்பொழில் சூழ்ந்த பைஞ்ஞீலியில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய தெவிட்டாத அமுதை அடைந்து உய்வீர்களாக. |

| | |
|---|---|
| 1485. தருக்கிச் சென்று தடவரை பற்றலும்<br>நெருக்கி யூன்ற நினைந்து சிவனையே<br>அரக்கன் பாட அருளுமெம் மானிடம்<br>இருக்கை ஞீலியென் பார்க்கிட ரில்லையே. 10 | அரக்கனாகிய இராவணன் செருக்கினை உற்றுத் தடவரையாகிய திருக்கயிலாயத்தைப் பற்றுதலும், நெருக்கித் திருவிரலால் ஊன்ற, சிவனையே நினைந்து அவன்பாட அவனுக்கு அருள்புரியும் எம்மான் இடம் பைஞ்ஞீலி என்றுரைப்பார்க்கு இடர்கள் இல்லை. |

## 42. திருவேட்களம்

ப.தொ.எண் : 155 பதிக எண் : 42

| | |
|---|---|
| 1486. நன்று நாடொறும் நம்வினை போயறும்<br>என்று மின்பந் தழைக்கவி ருக்கலாம்<br>சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை<br>துன்று பொற்சடை யானைத் தொழுமினே. | திருவேட்களத்துள்ளுறைகின்ற நெருங்கிய பொலிவார்ந்த சடையுடைய ஈசனைத் தொழுவீர்களாக; அங்ஙனம் தொழுதால் நாள்தோறும் நம்வினை பெரிதும் தொலையும்; என்றும் இன்பம் தழைக்க இருந்து உய்யலாம். |
| 1487. கருப்பு வெஞ்சிலைக் காமனைக் காய்ந்தவன்<br>பொருப்பு வெஞ்சிலை யாற்புரஞ் செற்றவன்<br>விருப்பன் மேவிய வேட்களங் கைதொழு<br>திருப்ப னாகி லெனக்கிட ரில்லையே. 2 | கரும்பாகிய விருப்பத்தை விளைக்கும் வில்லை உடைய மன்மதனைக் காய்ந்தவனும், மேரு மலையாகிய வில்லினால் முப்புரங்களைச் செற்றவனும், அடியார்களிடத்து விருப்பம் உடையவனும் ஆகிய பெருமான் உறையும் வேட்களத்தைக் கைதொழுது இருந்தேனாயின், எனக்கு இடர்களே இல்லை. |
| 1488. வேட்க ளத்துறை வேதிய னெம்மிறை<br>ஆக்க ளேறுவ ரானைஞ்சு மாடுவர்<br>**பூக்கள் கொண்டவன் பொன்னடி போற்றினால்**<br>காப்பர் நம்மைக் கறைமிடற் றண்ணலே. 3 | வேட்களத்துறையும் வேதியனும், எம் இறைவனும், திருநீலத் திருமிடறு உடைய தலைவனும் ஆகிய பெருமான் விடையுகந்து ஏறுவர்; பஞ்சகவ்வியம் ஆடுவர்; பூக்களைக் கொண்டு திருவடி போற்றினால் நம்மைக் காப்பர். |
| 1489. **அல்ல லில்லை அருவினை தானில்லை**<br>மல்கு வெண்பிறை சூடும் மணாளனார்<br>செல்வ னார்திரு வேட்களங் கைதொழ<br>வல்ல ராகில் வழியது காண்மினே. 4 | நிறைந்த வெண்பிறையைச் சூடும் மணவாளராகிய திருவேட்களத்து அருட் செல்வரைக் கைகளால் தொழ வல்லவராகில் அதுவே வழியாகும்; காண்பீர்களாக; அவ்வழியே நின்றால் அல்லல்கள் இல்லை; அரிய வினைத் துன்பங்களும் இல்லையாம். |

| | |
|---|---|
| 1490. **துன்ப மில்லைத் துயரில்லை** யாமினி<br>நம்ப னாகிய நன்மணி கண்டனார்<br>என்பொ னாருறை வேட்கள நன்னகர்<br>இன்பன் சேவடி யேத்தி யிருப்பதே. 5 | நம்மவராகிய திருநீலகண்டனும், என் பொன் போன்றவனும் ஆகிய இறைவன் உறைகின்ற திருவேட்கள நன்னகரில் இன்பமே வடிவாகிய அவன் சேவடியை ஏத்தியிருப்பதனால், இனித் துன்பமும் இல்லை; துயரங்களும் இல்லை. |
| 1491. கட்டப் பட்டுக் கவலையில் வீழாதே<br>பொட்ட வல்லுயிர் போவதன் முன்னம்நீர்<br>சிட்ட னார்திரு வேட்களங் கைதொழப்<br>பட்ட வல்வினை யாயின பாறுமே. 6 | கவலைகளாற் கட்டப்பெற்று வீழ்ந்திடாது, விரைந்து உயிர்போவதற்கு முன்பே நீர், உயர்ந்த இறைவர் எழுந்தருளியுள்ள திருவேட்களம் கைதொழுவீர்களாக; தொழுவீராயின், பொருந்திய வல்வினைகள் அனைத்தும் கெடும். |
| 1492. வட்ட மென்முலை யாளுமை பங்கனார்<br>எட்டு மொன்று மிரண்டுமூன் றாயினார்<br>சிட்டர் சேர்திரு வேட்களங் கைதொழு<br>திட்ட மாகி யிருமட நெஞ்சமே. 7 | அறியாமை உடைய நெஞ்சமே! வட்ட வடிவாகிய மென்முலைகளை உடைய உமாதேவியை ஒரு பங்கில் உடையவரும், எட்டு மூர்த்தியானவரும், ஒரு பரம்பொருளானவரும், இரண்டு (சிவம், சத்தி) ஆனவரும், மும்மூர்த்தியானவரும் உறைகின்ற சிறப்புடையதும், உயர்ந்தவர்கள் சேர்ந்ததுமான திருவேட்களம் கைதொழுது விருப்புற்று இருப்பாயாக. |
| 1493. நட்ட மாடிய நம்பனை நாள்தொறும்<br>இட்டத் தாலினி தாக நினைமினோ<br>வட்ட வார்முலை யாளுமை பங்கனார்<br>சிட்ட னார்திரு வேட்களந் தன்னையே. 8 | வட்டவடிவமாகிய மென்முலைகளை உடைய உமாதேவியை ஒரு பங்கில் உடையவரும், உயர்ந்தவரும் ஆகிய பெருமான் உறையும் திருவேட்களத்தையும், அங்கு நட்டமாடிய நம்பனையும், நாள்தோறும் விருப்பத்துடன் இனிது நினைப்பீராக. |
| 1494. வட்ட மாமதில் மூன்றுடை வல்லரண்<br>சுட்ட கொள்கைய ராயினுஞ் சூழ்ந்தவர்<br>குட்ட வல்வினை தீர்த்துக் குளிர்விக்கும்<br>சிட்டர் பொற்றிரு வேட்களச் செல்வரே. 9<br><br>இப்பாடல் 1598 ஆவது பாடலோடு ஒத்துள்ளது | திருவேட்களத்து அருட்செல்வர் வட்டமாக வளைந்த மதில்கள் சூழ்ந்த திரிபுரங்கள் மூன்றையும் சுட்ட கொள்கையர். ஆயினும், தம்மைச் சூழ்ந்தவர் வல்வினைகளைத் தீர்த்து அவர்களைக் குளிர்விக்கும் சிட்டராவர். |
| 1495. சேட னாருறை யுஞ்செழு மாமலை<br>ஓடி ஆங்கெடுத் தான்முடி பத்திற<br>வாட வூன்றி மலரடி வாங்கிய<br>வேட னாருறை வேட்களஞ் சேர்மினே. 10<br><br>வேடனார் – பல கோலங்களைக் கொண்டவர் | பெருமை உடையனாய பெருமான் உறையும் திருமாமலையாகிய திருக்கயிலாயத்தை ஓடி எடுத்தவனாகிய இராவணன் முடிகள் பத்தும் இறும்படியாக வாட ஊன்றி, மலரடியினை வளைத்த வேடனார் உறைகின்ற **திருவேட்களம் சேர்வீராக.** |

## 43. திருநல்லம்

ப.தொ.எண் : 156 | பதிக எண் : 43

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1496.** கொல்லத் தான்நம னார்தமர் வந்தக்கால்<br>**இல்லத் தார்செய்ய லாவதெ னேழைகாள்**<br>நல்லத் தான்நமை யாளுடை யான்கழல்<br>சொல்லத் தான்வல்லி ரேல்துயர் தீருமே. 1 | அறிவற்றவர்களே! நமன் தமராகிய எமதூதர் கொல்லவந்தபோது இல்லத்தில் உள்ளவர்கள் செய்யலாவது யாது? திருநல்லத்தில் எழுந்தருளியிருப்பவனும், நம்மை ஆளுடையவனும் ஆகிய பெருமான் கழல் சொல்ல வல்லமை உடையீரேல், உம் துயர்கள் தீரும். |
| **1497.** பொக்கம் பேசிப் பொழுது கழியாதே<br>துக்கந் தீர்வகை சொல்லுவன் கேண்மினோ<br>தக்கன் வேள்வி தகர்த்த தழல்வண்ணன்<br>நக்கன் சேர்நல்லம் நண்ணுதல் நன்மையே. 2<br><br>நக்கன் – திகம்பரன் – திசைகளையே ஆடையாக உடையவன். | பொய்ம்மொழிகளைப் பேசிப் பொழுது கழியாமல் துயரங்கள் தீர்தற்கு ஓர் உபாயம் சொல்லுவேன்; கேட்பீராக; தக்கன் வேள்வியைத் தகர்த்த தீவண்ணனாகிய திகம்பரன் உறைகின்ற திருநல்லம் நண்ணி வழிபடுதலே உமக்கு நன்மை. |
| **1498.** பிணிகொள் வார்குழற் பேதையர் காதலால்<br>பணிகள் மேவிப் பயனில்லை பாவிகாள்<br>அணுக வேண்டி லரன்நெறி யாவது<br>நணுக நாதன் நகர்திரு நல்லமே. 3 | பாவம் செய்தவர்களே! மலர் முதலியன விட்டுப் பிணித்தலைக் கொண்ட நீண்ட கூந்தலை உடைய பெண்களிடத்து வைத்த காதலால், அவர்கட்கு ஆளாகிப் பணிகளைப் பொருந்திச் செய்து பயன் இல்லையாதலால், நெருங்கிப் பணி செய்ய வேண்டில் அரன் நெறியே அணுகி திருநல்லம் சென்று வழிபடுவீர்களாக. |
| **1499.** தமக்கு நல்லது தம்முயிர் போயினால்<br>இமைக்கும் போது மிராதிக் குரம்பைதான்<br>உமைக்கு நல்லவன் தானுறை யும்பதி<br>நமக்கு நல்லது நல்ல மடைவதே. 4 | தம்முயிர் தம்மைவிட்டு நீங்கினால் தமக்கு நல்லது; அங்ஙனமே இவ்வுடலாகிய குடிசை இமைப்பொழுது கூட நில்லா இயல்புடையது; உமாதேவிக்கு நல்லவனாகிய இறைவன் உறைகின்ற பதியாகிய திருநல்லம் என்னுந் தலத்தை அடைந்து வழிபடுவதே நமக்கு நல்லது ஆகும். |
| **1500.** உரை தளர்ந்துட லார்நடுங் காமுனம்<br>நரை விடையுடை யானிடம் நல்லமே<br>பரவு மின்பணி மின்பணி வாரொடே<br>விரவு மின்விர வாரை விடுமினே. 5 | வார்த்தைகள் தளர்ந்து உடல் நடுங்குவதற்கு முன்பே, வெள்ளிய இடப வாகனத்தை உடைய இறைவன் வீற்றிருக்கும் இடமாகிய திருநல்லத்திற்சென்று பரவிப் பணிவீர்களாக; பணிகின்ற அன்பர்களோடு கலந்து வழிபடுவீராக; அங்ஙனம் கலவாதவர்களை நீங்குவீர்களாக. |

| | | |
|---|---|---|
| **1501.** அல்ல லாகஐம் பூதங்க ளாட்டினும்<br>வல்ல வாறு **சிவாய நமவென்று**<br>நல்லம் மேவிய நாத னடிதொழ<br>வெல்ல வந்த வினைப்பகை வீடுமே. | 6 | ஐம்பெரும் பூதங்கள் துன்பங்கள் உண்டாக ஆட்டினாலும், திருநல்லத்தில் எழுந்தருளியுள்ள நாதன் திருவடிகளை வல்லவாறு **'சிவாயநம'** என்று தொழுதால் வெல்லுதற்கு வந்த வினைகளாகிய பகை கெடும். |
| **1502.** மாத ராரொடு மக்களுஞ் சுற்றமும்<br>பேத மாகிப் பிரிவதன் முன்னமே<br>நாதன் மேவிய நல்லம் நகர்தொழப்<br>போது மின்னெழு மின்புக லாகுமே. | 7 | மனைவியரும், மக்களும், சுற்றத்தாரும் வேற்றுமைப்பட்டுப் பிரிகின்ற இறுதிக்காலம் வருவதற்கு முன்பே; தலைவன் மேவியுள்ள திருநல்லமாகிய நகரைத் தொழப் போதுவீர்களாக; எழுவீர்களாக; அப்பெருமானே புகலாவான். |
| **1503.** வெம்மை யான வினைக்கடல் நீங்கிநீர்<br>செம்மை யாய சிவகதி சேரலாம்<br>சும்மை யார்மலர் தூவித் தொழுமினோ<br>நம்மை யாளுடை யானிடம் நல்லமே. | 8 | வண்டுகளின் ஒலி பொருந்திய மலர்களைத் தூவி, நம்மை ஆளுடையானாகிய பெருமான் உறையும் திருநல்லத்தினைத் தொழுவீர்களாக; தொழுதால், வெப்பம் பொருந்திய வினைக் கடலினின்றும் நீங்கி நீர் செம்மையாகிய சிவகதியினைச் சேரலாம். |
| **1504.** கால மான கழிவதன் முன்னமே<br>ஏலு மாறு வணங்கிநின் றேத்துமின்<br>மாலும் மாமல ரானொடு மாமறை<br>நாலும் வல்லவர் கோனிடம் நல்லமே. | 9 | திருமாலும், பிரமனும், பெருமைமிக்க வேதங்கள் நான்கும், வல்லவர்களாகிய முனிவர்களும் ஆகிய அனைவர்க்கும் கோனாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் இடம் திருநல்லம். ஆதலால், பொருந்திய காலம் கழிவதற்கு முன்பே, இயலும் நெறியில் வணங்கி நின்று வழிபடுவீராக. |
| **1505.** மல்லை மல்கிய தோளரக் கன்வலி<br>ஒல்லை யில்லொழித் தானுறை யும்பதி<br>**நல்ல நல்ல மெனும்பெயர் நாவினால்**<br>சொல்ல வல்லவர் தூநெறி சேர்வரே. | 10 | வளம் நிறைந்த தோள்களை உடைய இராவணன் ஆற்றலை விரைந்து ஒழித்த பெருமான் உறைகின்ற பதியாகிய நல்ல நல்லம் என்னும் பெயரை நாவினால் சொல்லும் வல்லமை உடையவர்கள் தூயநெறியிற் சேர்வர். |

## 44. திருஆமாத்தூர்

ப.தொ.எண் : 157 பதிக எண் : 44

**1506.** மாமாத் தாகிய மாலயன் மால்கொடு
தாமாத் தேடியுங் காண்கிலர் தாள்முடி
**ஆமாத் தூரர னேயரு ளாயென்றென்**
றேமாப் பெய்திக்கண் டாரிறை யானையே. 1

மாமாத்து ஆகிய – மிக்க பெருமை உடையராகிய திருமாலும், பிரமனும்
தாமா – "நாம் அறிவோம்" என்னும் ஆணவம்;
மால் கொடு – அறியாமை கொண்டு

தமக்குள்ளே பெரும் பூசல் கொண்டவராகிய திருமாலும் பிரமனும் ஆணவ மயக்கம் கொண்டு தாமாகத் தேடியும், பெருமானின் திருவடியையும் திருமுடியையும் காண்கிலர்; 'ஆமாத்தூர் அரனே! அருள்வாயாக' என்று பலமுறை இன்பமுறக் கூவியே இறையானைக் கண்டார்.

ஏமாப்பெய்தி – களிப்பெய்தி.

**1507.** சந்தி யானைச் சமாதிசெய் வார்தங்கள்
புந்தி யானைப்புத் தேளிர் தொழப்படும்
அந்தி யானை ஆமாத்தூ ரழகனைச்
சிந்தி யாதவர் தீவினை யாளரே. 2

சமாதி – யோகநிட்டை
புந்தி – மனம்; புத்தேளிர் – தேவர்

காலை மாலை ஆகிய சந்திகளில் வணங்கப்படுவானும், யோகநெறி தலைப்பாடுவாருடைய புந்தியில் உறைபவனும், தேவர்களால் தொழப்படும் அந்திவானத்தைப் போன்ற செம்மேனியானும் ஆகிய ஆமாத்தூர் அழகனைச் சிந்திக்காதவர்கள் தீவினையாளரே ஆவர்.

**1508.** காமாத் தம்மெனுங் கார்வலைப் பட்டுநான்
போமாத் தையறி யாது புலம்புவேன்
ஆமாத் தூரர னேயென் றழைத்தலும்
தேமாத் தீங்கனி போலத்தித் திக்குமே. 3

போமாத்தை – மீளும் வழி

காமமும் பொருளுமாகிய அறியாமை வலையிலே பட்டுப்போகும் நெறியை அறியாமற் புலம்புகின்ற அடியேன் ஆமாத்தூர் அரனே! என்று அழைத்தலும், இனிய மாங்கனி போலப் பெருமான் தித்தித்தனன்.

**1509.** பஞ்ச பூத வலையிற் படுவதற்
கஞ்சி நானு மாமாத்தூ ரழகனை
நெஞ்சி னால்நினைந் தேன்நினை வெய்தலும்
வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே. 4

இறைவனை எப்போதும் நினைப்போரை மாயா காரியங்கள் மயக்க மாட்டா.

ஐம்பெரும் பூதங்களாலாகிய வலையிற் படுவதற்கு அஞ்சி அடியேனும் ஆமாத்தூர் அழகனை நெஞ்சின் கண் நினைந்தேன்; அந்நினைப்பு என்னை எய்துதலும் வஞ்சனையாகிய ஆறுகள் வற்றிவிட்டன; காண்பீராக.

**1510.** குராமன் னுங்குழ லாளொரு கூறனார்
அராமன் னுஞ்சடை யான்திரு வாமாத்தூர்
**இராம னும்வழி பாடுசெய் யீசனை**
நிராம யன்தனை நாளும் நினைமினே. 5

அரா – பாம்பு; நிராமயன் – நோயற்றவன் – பசுத்துவம் இல்லாதவன் – பிறவி நோயற்றவன்

குரவ மலர்கள் நிலைபெற்ற கூந்தலை உடைய உமாதேவியை ஒரு கூற்றில் உடையவனும், பாம்பு நிலைபெற்ற சடையனும், திருவாமாத்தூரில் இராமனால் வழிபாடு செய்யப் பெற்ற ஈசனும், பிறவி நோயற்றவனும் ஆகிய பெருமானை நாள்தோறும் நினைப்பீர்களாக.

| | |
|---|---|
| **1511.** பித்த னைப்பெருந் தேவர் தொழப்படும்<br>அத்த னையணி யாமாத்தூர் மேவிய<br>முத்தி னையடி யேனுள் முயறலும்<br>பத்தி வெள்ளம் பரந்தது காண்மினே. 6 | பித்தேறியவனும், பெரிய தேவர்களால் தொழப்படும் தலைவனும், அழகு பொருந்திய ஆமாத்தூரை விரும்பிப் பொருந்திய முத்துப் போல்வானும் ஆகிய பெருமானை அடியேன் உள்ளத்தே முயன்று உள்குதலும், அன்பு என்னும் வெள்ளம் பரவி எழுவதாயிற்று; காண்பீர்களாக. |
| **1512.** நீற்றி னார்திரு மேனியன் நேரிழை<br>கூற்றி னான்குழற் கோலச் சடையிலோர்<br>ஆற்றி னானணி யாமாத்தூர் மேவிய<br>ஏற்றி னான்எமை யாளுடை யீசனே. 7<br><br>குழல் – தலை மயிர் | எம்மை ஆளுடைய இறைவன், திருநீற்றினால் நிறைந்த திருமேனி உடையவனும், நேரிழையை ஒரு கூற்றில் உடையவனும், அழகு நிறைந்த குழலாகிய சடையில் ஓர் ஆறாம் கங்கையை உடையவனும் ஆகிய அழகு நிறைந்த ஆமாத்தூரில் விரும்பியெழுந்தருளிய இடப வாகனத்தை உடையவன் ஆவான். |
| **1513.** **பண்ணிற் பாடல்கள் பத்திசெய்** வித்தகர்க்<br>கண்ணித் தாகு மமுதினை யாமாத்தூர்<br>சண்ணிப் பானைத் தமர்க்கணித் தாயதோர்<br>**கண்ணிற் பாவையன்** னானவன் காண்மினே. 8<br><br>சண்ணிப்பான் – திருநீற்றை உத்தூளனமாகப் பூசுபவன். தமர் – அடியார். | பண்ணினை உடைய பாடல்களைப் பாடித் தன்னை அன்புசெய்யும் திறம் உடையவர் களுக்கு இனிக்கும் அமுது போல்வானும், ஆமாத்தூரில் பொருந்தியவனும், திருநீற்றைப் பூசி தன்னைச் சார்ந்த அடியார்களுக்கு மிக நெருங்கிக் கண்ணிலுள்ள கருமணிப் பாவை போன்றவனுமானவனைக் காண்பீர்களாக! |
| **1514.** குண்டர் பீலிகள் கொள்ளுங் குணமிலா<br>மிண்ட ரோடெனை வேறு படுத்துய்யக்<br>கொண்ட நாதன் குளிர்புனல் வீரட்டத்<br>தண்ட னாரிட மாமாத்தூர் காண்மினே. 9 | தின்று கொழுத்தவர்களும், மயிற்பீலிகளைக் கொள்ளும் குணமில்லாத வலியர்களுமாகிய சமணர்களோடு என்னை வேறுபடுத்தி உய்யுமாறு கொண்ட நாதனாகிய குளிர்புனல் சூழ்ந்த வீரட்டத்துத் தேவதேவர் உறையும் இடம் ஆமாத்தூரேயாகும். காண்பீர்களாக! |
| **1515.** வானஞ் சாடு மதியர வத்தொடு<br>தானஞ் சாதுடன் வைத்த சடையிடைத்<br>தேனஞ் சாடிய தெங்கிள நீரொடும்<br>ஆனஞ் சாடிய வாமாத்தூ ரையனே. 10<br><br>தேன் அஞ்சு – தேன் முதலிய அஞ்சு – பஞ்சாமிர்தம் ஆன் அஞ்சு – பஞ்சகவ்வியம் –ஆனைந்து. | ஆகாயத்தே இருளைச் சிதைக்கும் மதியை அரவொடும் அஞ்சாதபடி நட்புக் கொள்ள வைத்தவர். தேன் முதலிய பஞ்சாமிர்தத் தொடும் இளநீர், பஞ்சகவ்வியம் முதலியவற்றை அபிடேகம் கொண்டவர் ஆமாத்தூர்ப் பெருமான். |

பசுவிலிருந்து பெறப்படும் பால், தயிர், நெய், கோமயம், கோசலம் ஆகிய ஐந்தைக் குறிப்பிட்ட விகிதத்தில் கலந்து தினமும் திருமஞ்சனம் ஆட்டும்போது சிவலிங்கத்துக்கு அபிடேகம் செய்யவேண்டும். பால், தயிர், வெண்ணெய், நெய், மோர் என்ற கருத்து வேறுபாடு உடைய சைவர்களும் உண்டு. உரிய விடையை சிவபரம்பொருள் தான் உரிய நேரத்தில் உணர்த்த வேண்டும்.

1516. விடலை யாய்விலங் கல்லெடுத் தான்முடி
அடர வோர்விர லூன்றிய வாமாத்தூர்
இடம தாக்கொண்ட ஈசனுக் கென்னுளம்
இடம தாகக்கொண் டின்புற் றிருப்பனே. 11

விலங்கல் – கயிலை மலை

அடங்காத மூர்க்கனாய் வந்த இராவணன் திருக்கயிலாயத்தை எடுக்கலுற்றபோது அவன் முடிகள் அடரும்படியாக ஒரு விரல் ஊன்றியவனும், ஆமாத்தூரை இடமாகக் கொண்ட ஈசனுமாகிய பெருமானுக்கு என்னுள்ளத்தை இடமாக வைத்து இன்புற்று இருப்பன் அடியேன்.



திருத்தோணிபுரம்: சோதியார் திருத்தோணிபுரவர்

## 45. திருத்தோணிபுரம்

**(சீர்காழிக்குரிய பனிரெண்டு பெயர்களில் ஒரு பெயர். (பிரளய காலத்தில் மிதந்ததால் தோணிபுரம்)**

ப.தொ.எண் : 158 பதிக எண் : 45

1517. மாதி யன்று மனைக்கிரு வென்றக்கால்
நீதி தான்சொல நீயெனக் காரெனும்
சோதி யார்தரு தோணி புரவர்க்குத்
தாதி யாவன்நா னென்னுமென் தையலே. 1

சிவபெருமான்மேற் காதல் மிகுந்து, 'மனைக் கண் இரு' என்று நான் கூறியபோது, 'எனக்கு நீதி சொல்ல நீ என்ன உறவுடையை ?' என்று சொல்வதோடு, 'ஒளி நிறைந்த **தோணிபுரத்து** இறைவர்க்குத் தாதியாக நான் ஆவேன்' என்றும் கூறுகின்றனள் என் மகள்.

செவிலி கூற்று. அன்னையையும், அத்தனையும் அன்றே நீத்து தோணிபுரத்து இறைவர் மேல் காதல் கொண்டாள் ஒருத்தியின் நிலையை விரித்தது.

---

1518. நக்கம் வந்து பலியிடென் றார்க்கிட்ட
மிக்க தையலை வெள்வளை கொள்வது
தொக்க நீர்வயல் தோணி புரவர்க்குத்
தக்க தன்று தமது பெருமைக்கே. 2

நீர்வளம் தொகுத்த வயல்களை உடைய **தோணிபுரத்து இறைவர்** பிட்சாடனராக வந்து 'பலி இடுக' என்றார்க்கு இட்டம் மிகுந்த என் பெண்ணின் வெள்வளைகளை அவர் கொள்வது தமது பெருமைக்குச் சிறிதும் தகுதியுடைய தன்று.

---

1519. கெண்டை போல்நய னத்திம வான்மகள்
வண்டு வார்குழ லாளுட னாகவே
துண்ட வான்பிறைத் தோணி புரவரைக்
கண்டு காமுறுகின்றனள் கன்னியே. 3

கெண்டைமீன் போன்ற கண்களை உடைய இமவான் மகளாகிய வண்டுகள் செறிந்த நீண்ட குழலாள் உடனாக உறையும் வெள்ளிய பிறைமதி அணிந்த **தோணிபுரத்து இறை**வரைக் கண்டு இப்பெண் காமுறுகின்றனள்.

---

1520. பாலை யாழ்மொழி யாளவள் தாழ்சடை
மேல ளாவது கண்டனள் விண்ணுறச்
சோலை யார்தரு தோணி புரவர்க்குச்
சால நல்லளா கின்றனள் தையலே. 4

பாலையாழ் என்னும் யாழிற் பிறக்கும் பண்ணின் இனிய இசையை ஒத்த மொழியாளாகிய கங்கை தாழ்சடையின் மேல் உள்ளவளாதலைக் கண்டும், விண்ணை மிக்குப் பொருந்திய சோலைகள் செறிந்த **தோணிபுரத்து இறைவர்க்கு** மிகவும் நல்லவளாகின்றனள் இப் பெண்.

செவிலி கூற்று. பாலை யாழின் சிறப்புகளை 1193 ஆம் பாடலின் கீழ்க் காண்க.

| | |
|---|---|
| **1521.** பண்ணின் நேர்மொழி யாள்பலி யிட்டவிப்<br>பெண்ணை மால்கொடு பெய்வளை கொள்வது<br>சுண்ண மாடிய தோணிபு ரத்துறை<br>அண்ண லாருக்குச் சால அழகிதே. 5<br><br>திருநீறு பூசித் துறவிக்கோலம் கொண்டவர். இவ்வாறு செய்வது அழகன்று என்றபடி. பண்ணின் நேர் மொழியாள் – இசையினை ஒத்த மொழியை உடையவள். | சுண்ணமாடிய **தோணிபுரத்து உறைகின்ற அண்ணலாராகிய சிவபெருமானுக்குப்** பலியிட்டவளும், பண்ணை ஒத்த இனிய மொழியாளுமாகிய இப்பெண்ணுக்கு மயக்கம் கொடுத்துப் பெய்யப் பெற்ற வளைகளையும் கொள்வது சால அழகுடைய செயலோ? |
| **1522.** முல்லை வெண்நகை மொய்குழ லாயுனக்<br>கல்ல னாவ தறிந்திலை நீகனித்<br>தொல்லை யார்பொழில் தோணி புரவர்க்கே<br>நல்லை யாயிடு கின்றனை நங்கையே. 6 | முல்லையரும்புகளைப் போன்ற ஒளிச் சிரிப்பையும், வண்டுகள் மொய்க்கும் கூந்தலையும் உடைய நங்கையே! கனிகள் உடையதாகிய பொழில் சூழ்ந்த பழைய **தோணிபுரத்து இறைவர்க்கு** நீ நல்லவளாகின்றனை; ஆயினும் உனக்கு அவன் அல்லனாவதனை நீ அறிந்திலை. |
| **1523.** ஒன்று தானறி யாருல கத்தவர்<br>நின்று சொல்லி நிகழ்ந்த நினைப்பிலர்<br>துன்று வார்பொழில் தோணி புரவர்தம்<br>கொன்றை சூடுங் குறிப்பது வாகுமே. 7<br><br>செவிலி உலகவரை நோக்கி இரங்கியது | தலைவிக்குற்ற நோயின் காரணம் வேறொன்றாதலை இவ்வுலகத்தவர் அறியார்; நின்று அறிவுரை சொல்லி அவளுக்கு நிகழ்ந்த நினைப்பு இல்லாதவர்கள்; நெருங்கிய நீண்டுயர்ந்த பொழில்களை உடைய **தோணிபுரத்து இறைவ**ருடைய கொன்றை மலரைச் சூட விழையும் குறிப்பே அந்நோய்க்குக் காரணமாகும். |
| **1524.** உறவு பேய்க்கண முண்பது வெண்தலை<br>உறைவ தீமம் உடலிலோர் பெண்கொடி<br>துறைக ளார்கடல் தோணி புரத்துறை<br>இறைவ னார்க்கிவ ளென்கண்டன் பாவதே. 8<br><br>செவிலி கூற்று | உறவு – பேய்க்கூட்டங்கள்; உண்பதோ – வெண் தலையில்; வாழ்வதோ – சுடுகாட்டில்; உடலின் ஒரு கூற்றிலோ – ஒரு பெண்கொடி; துறைகள் பொருந்திய கடலை அடுத்த **தோணிபுரத்து உறைகின்ற இறைவ**னாராகிய பெருமானிடத்து இவள் இவற்றுள் எதனைக்கண்டு அன்பு ஆயினள்? |
| **1525.** மாக யானை மருப்பேர் முலையினர்<br>போக யானு மவள்புக்க தேபுகத்<br>தோகை சேர்தரு தோணி புரவர்க்கே<br>ஆக யானு மவர்க்கினி யாளதே. 9<br><br>தலைவி கூற்று | மேகம் போன்ற கரிய யானையின் தந்தங்களைப் போன்ற தனங்களை உடையவர் காதலித்துச் செல்ல **தோணிபுரத்து இறைவர்** அவர்பின் யானும் சென்று காதலிக்க அவர் அழகில் ஈடுபட்டு அடிமையேன் ஆயினேன். |

| | |
|---|---|
| 1526. இட்ட மாயின செய்வாளென் பெண்கொடி<br>கட்டம் பேசிய காரரக் கன்றனைத்<br>துட்ட டக்கிய தோணி புரத்துறை<br>அட்ட மூர்த்திக்கு அன்பது வாகியே. 10 | என் பெண்கொடியாகிய மகள், தன் தொல்லைகளால் உழந்து இசைபாடிய இராவணனாகிய கரிய அரக்கனது தீய செயலை அடக்கி **தோணிபுரத்து இறை**வராகிய அட்டமூர்த்திக்கு அன்பு கொண்டவளாகித் தன் விருப்பத்திற்கு உரியனவற்றைச் செய்பவளாயினள். |

## 46. திருப்புகலூர்

குலங்கள் இரண்டு. பசுக்குலம் ஒன்று. மற்றது, பதிக்குலம். பாசமாகிய கட்டினால் கொள்ளப்பட்ட போது, உயிர்களாகிய நாம் பசுக்குலத்தைச் சார்வோம். கட்டு நீங்கியபோது, பதியாகிய குலம் சார்வோம். பசுக்குலமாக மானுடச் சட்டையோடு வாழும்போது, உடலுக்குத்தான் ஆண் / பெண் என்ற வேறுபாடு. உயிருக்கு இல்லை. பதிக்குலமாகும்போது இறைவன் ஒருவன்தான் ஆண். நாமெல்லோரும் பெண்கள். எனவே அந்த நிலையில் காதல் நோயின் மெய்ப்பாடுகள் அனைத்தும் உயிர் வர்க்கத்துக்கும் பொருந்தும்.

பக்தி இலக்கியங்களில் அகத்துறைப் பாடல்கள் வரும்போது இவ்வுண்மையை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

இப்பதிகத்தில் புகலூர் இறைவரைத் தலைவியாகக் கொண்ட தலைவி அசதியாடிய குறிப்பு முதற்பாட்டு. 2–3 பாட்டுக்கள் தலைவி நிலைகண்டு நற்றாயிரங்கல், தலைவரை நினைந்து இரங்கல் 4வது பாட்டு.

ப.தொ.எண் : 159 பதிக எண் : 46

| | |
|---|---|
| 1527. துன்னக் கோவணச் சுண்ணவெண் ணீறணி<br>பொன்னக் கன்ன சடைப்புக லூரரோ<br>மின்னக் கன்னவெண் திங்களைப் பாம்புடன்<br>என்னுக் கோவுடன் வைத்திட் டிருப்பதே. 1<br><br>பகையாயினவற்றை ஒன்றாய் வைத்திருப்பது | தைக்கப்பட்ட கோவண ஆடையையும், திருவெண்ணீற்றுப் பொடியணிந்த மேனியையும், பொன்னொளி விளங்கும் சடையையும் உடைய புகலூர்த்தலத்துப் பெருமானே! மின்னல் மலர்ந்தது போன்ற வெண்திங்களைப் பாம்புடன் எதற்காகத் தேவரீர் திருச்சடையில் உடன்வைத்துக் கொண்டுள்ளீர்? |
| 1528. இரைக்கும் பாம்பு மெறிதரு திங்களும்<br>நுரைக்குங் கங்கையும் நுண்ணிய செஞ்சடைப்<br>புரைப்பி லாத பொழிற்புக லூரரை<br>உரைக்கு மாசொல்லி யொள்வளை சோருமே. 2<br><br>உரைக்கு மாசொல்லி – பிறரை உரைக்கும்படி சொல்லி | இப்பெண், சீறும் பாம்பையும், அதனால் கவ்வப்படுகின்ற திங்களையும், நுரைத்தெழுந்து அலைவீசும் கங்கையையும் நுண்ணிய செஞ்சடையில் வைத்துக் குற்றமில்லாத பொழில்கள் சூழ்ந்த புகலூரில் உறையும் பெருமானை உரைக்குமாறு கூறித் தன் ஒளிபொருந்திய வளைகள் நெகிழ்கின்றாள். |

| | |
|---|---|
| **1529.** ஊச லாம்அர வல்குலென் சோர்குழல்<br>ஏச லாம்பழி தந்தெழில் கொண்டனர்<br>ஓசொ லாய்மக ளேமுறை யோவென்று<br>பூசல் நாமிடு தும்புக லூரர்க்கே. 3<br><br>செவிலி கூற்று. சோர்குழல் – அவிழ்ந்து விழும் கூந்தல். | அசைந்தாடும் அரவத்தின் படத்தைப் போன்ற அல்குலை உடைய என் சோர்குழலாளாகிய பெண்ணைச் சுற்றத்தார் முதலாயினோர் ஏசலாகும் பழி சுமத்தி அவள் எழிலைக் கொண்டனர். ஆதலால், 'ஓ, மகளே! சொல்வாயாக! முறையோ?' என்று புகலூர் இறைவர்க்கு நாம் பூசல் இடுவோமாக. |
| **1530.** மின்னின் நேரிடை யாளுமை பங்கனைத்<br>தன்னை நேரொப் பிலாத தலைவனைப்<br>புன்னைக் கானற் பொழிற்புக லூரனை<br>**என்னு ளாகவைத் தின்புற் றிருப்பனே.** 4 | மின்னலையொத்த இடையாளாகிய உமையினை ஒருபங்கில் உடையவனும், தன்னை நிகர்க்குமொன்றில்லாத தலைவனும் ஆகிய புன்னைக்கானல் பொழில் சூழ்ந்த புகலூரனை என் உள்ளத்து வைத்து அடியேன் இன்பமுற்றிருப்பேன். |
| **1531.** விண்ணி னார்மதி சூடிய வேந்தனை<br>எண்ணி நாமங்க ளோதி யெழுத்தஞ்சுங்<br>கண்ணி னாற்கழல் காண்பிட மேதெனில்<br>**புண்ணி யன்புக லூருமென் நெஞ்சுமே.** 5<br><br>புறக்கண்களால் புகலூரிலும், அகக்கண்களால் நெஞ்சிலும் காணலாம். விண்ணினார் என்று பாட எடுத்தாலே திருவைந்தெழுத்தைச் சொல்ல வேண்டும் என்று சுவாமிகள் நினைக்கிறார் போலும். பாடல் எண். 1584 ஐப் பார்க்க. | விண்ணிற் பொருந்திய பிறைமதியினைச் சூடிய அருள்வேந்தனை, நாமங்கள் கூறியும், திருவைந்தெழுத்தால் தியானித்தும், கண்ணினாற் கழலடிகளைத் தரிசிக்கும் இடங்கள் எவை என்றால் அப்புண்ணியன் எழுந்தருளியிருக்கும் புகலூரும் என் நெஞ்சமும் ஆம். |
| **1532.** அண்ட வாண ரமுதுண நஞ்சுண்டு<br>பண்டு நான்மறை யோதிய பாடலன்<br>தொண்ட ராகித் தொழுது மதிப்பவர்<br>புண்ட ரீகத்து ளார்புக லூரரே. 6<br><br>புண்டரீகம் – இதயக்கமலம் | புகலூர்த் தலத்து இறைவர், தேவர்கள் அமுதுண்ணவும் தாம் நஞ்சுண்டவர். பழமையில் நான்மறைப் பாடல்களால் ஓதப்பட்டவர்; தொண்டராகித் தொழுது மதிக்கின்றவர்களின் இதயத் தாமரையில் உள்ளவர் ஆவர். |
| **1533.** தத்து வந்தலை கண்டறி வாரிலைத்<br>தத்து வந்தலை கண்டவர் கண்டிலர்<br>தத்து வந்தலை நின்றவர்க் கல்லது<br>தத்து வனலன் தண்புக லூரனே. 7<br><br>முன்னைய மூன்றடிகளில் கூறப்படும் தத்துவம் – 36 தத்துவங்களையும், ஈற்றடி தத்துவம் மெய்ப் பொருளையும் குறிக்கும். | தத்துவங்களின் கூறுபாடுகளை முடிவு போகக் கண்டு அறிவார் இலர்; அவ்வாறு தத்துவங்களை முடிவு போகக் கண்டவர் காணாதவரேயாவர்; தத்துவம் தலை நின்றவர்க்கே அல்லது தத்துவவடிவானவன் அல்லன் புகலூரப் பெருமான். தத்துவங்களைப் பற்றி முழுதும் தெரிந்துணர்ந்தபின் தத்துவங் கடந்த நிலைக்குச் சென்றால் தான் சிவ பரம்பொருளைப் பற்றித் தெளிவு பெற முடியும். |

1534. பெருங்கை யாகிப் பிளிறி வருவதோர்
கருங்கை யானைக் களிற்றுரி போர்த்தவர்
வருங்கை யானை மதகளி றஞ்சினைப்
பொருங்கை யானைகண் டீர்புக லூரரே. 8

மத களிறு அஞ்சு – ஐம்பொறிகள்

புகலூர்த் தலத்து இறைவர், நீண்டு புரளும் துதிக்கையோடு அலறி வருவதாகிய ஒரு வலியகையானையை உரித்துப் போர்த்த இயல்பினர்; துதிக்கையை உடைய மதயானைகளாகிய ஐம்புலன்களைப் பொறாது வெல்லும் ஆனைபோல்வார் ஆவர்.

1535. பொன்னொத் தனிறத் தானும் பொருகடல்
தன்னொத் தநிறத் தானு மறிகிலாப்
புன்னைத் தூது பொழிற்புக லூரரை
**என்னத் தாவென என்னிடர் தீருமே.** 9

பொன்னை ஒத்த நிறம் உடைய பிரமதேவனும், அலைவீசும் கடலையொத்த நீல நிறத்தவனான திருமாலும் அறியப்படாத இயல்பினரும் புன்னையின் மகரந்தங்களை உடைய பொழில் சூழ்ந்த திருப்புகலூரின்கண் எழுந்தருளி யிருப்பவருமான பெருமானை 'என் தந்தையே!' என்று கூற என் இடர்கள் அனைத்தும் தீரும்.

1536. மத்த னாய்மதி யாது மலைதனை
எத்தி னான்திரள் தோண்முடி பத்திற
ஒத்தி னான்விர லாலொருங் கேத்தலும்
பொத்தி னான்புக லூரைத் தொழுமினே. 10

பொத்தினான் – காப்பாற்றினான்

மதச் செருக்குடையவனாய்ச் சிறிதும் மதியாமல் திருக்கயிலாயத்தை எடுக்கலுற்ற இராவணனின் திரண்ட தோள்களும், முடிபத்தும் இறும்படியாகத் திருவிரலால் ஒற்றியவனும், தன் நரம்புகளே யாழாகக் கொண்டு அவன் ஏத்துதலும் மீண்டும் அருள்செய்தவனும் ஆகிய பெருமான் உறையும் **திருப்புகலூரைத் தொழுவீர்களாக.**

## 47. திருக்கச்சி ஏகம்பம்

ப.தொ.எண் : 160 பதிக எண் : 47

1537. பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகாண் நெஞ்சமே
வண்டு லாமலர்ச் செஞ்சடை **யேகம்பன்**
**தொண்ட னாய்த்திரி யாய்துயர் தீரவே.** 1

பண்டு செய்த பழவினை – முற்பிறவிகளில் செய்யப்பட்டு தொகுத்து வைக்கப்பட்டுள்ள சஞ்சிதம். பயன் – பிராரத்தமாக இப்பிறவியில் நுகர்ந்து கொண்டிருப்பது.

நெஞ்சமே! நீ முற்பிறவிகளிற் செய்த பழவினைகளின் பயனை அனுபவத்தால் பார்த்தும் பார்த்தும் பின்னும் களிப்புற்றுக் கெடுகின்றனையே; வண்டு உலாவுகின்ற மலரையணிந்த செஞ்சடை உடையவனாகிய திருவேகம்பத்துப் பெருமானுக்குத் தொண்டனாகி உன் துயர்கள் தீரும்பொருட்டுத் திரிவாயாக.

1538. நச்சி நாளும் நயந்தடி யார்தொழ
இச்சை **யாலுமை நங்கை வழிபடக்**
கொச்சை யார்குறு கார்செறி தீம்பொழில்
கச்சி யேகம்ப மேகை தொழுமினே. 2

அடியார்கள் நாள்தோறும் அன்பு கொண்டு நயந்து தொழவும், உமைநங்கையார் இச்சையால் வழிபடவும் கண்டு, செறிந்த இனிய பொழில்களை உடைய கச்சியேகம்பத்தினை நீங்களும் கைகளாற் றொழுவீர்களாக.

"ஏலவார் குழலாள் உமைநங்கை என்றும் ஏத்தி வழிபடப்பட்ட காலகாலன்" – சுந்தரர். "அண்ணலார்தமை அருச்சனை புரிய ஆதரித்தாள் பெண்ணின் நல்லவளாகிய பெருந்தவக் கொழுந்து" சேக்கிழார். உமைப்பெருமாட்டி நமக்கெல்லாம் பூசைநெறி முறைகளைக் கற்றுக் கொடுத்த இடம் கச்சிஏகம்பம்.

1539. **ஊனி லாவி யியங்கி யுலகெலாம்**
தானு லாவிய தன்மைய ராகிலும்
வானு லாவிய பாணி பிறங்கவெங்
கானி லாடுவர் கச்சியே கம்பரே. 3

**கச்சி ஏகம்பர்,** உடல்கள்தோறும் உயிராய் இயங்கி உலகமெல்லாம் பொருந்திய இயல்பினை உடையவராயினும், வானமெங்கும் உலாவிய இசை விளங்கும்படியாக வெவ்விய சுடுகாட்டில் நட்டமும் ஆடுவர்.

1540. இமையா முக்கண ரென்நெஞ்சத் துள்ளவர்
தமையா ரும்மறி வொண்ணாத் தகைமையர்
இமையோ ரேத்த இருந்தவ னேகம்பன்
நமையா ளும்மவ னைத்தொழு மின்களே. 4

இமையாத முக்கண்ணை உடையவரும், என் நெஞ்சத்தின்கண் உள்ளவரும், தம்மை யாரும் அறியவொண்ணாத பெருந்தகைமை உள்ளவரும், தேவர்கள் ஏத்துமாறு வீற்றிருந்தவரும், நம்மையாள்பவருமாகிய திருவேகம்பரைத் தொழுவீர்களாக.

1541. மருந்தி னோடுநற் சுற்றமும் மக்களும்
பொருந்தி நின்றெனக் காயவெம் புண்ணியன்
**கருந்த டங்கண்ணி னாளுமை கைதொழ**
இருந்த வன்கச்சி யேகம்பத் தெந்தையே. 5

கச்சியேகம்பத்தின்கண் எழுந்தருளியுள்ள எந்தை, எனக்கு மருந்தும், சுற்றமும், மக்களும் ஆகப் பொருந்திநின்று விளங்கும் புண்ணிய வடிவினன்; கரிய பெரிய கண்ணை உடைய உமாதேவி கைதொழ இருந்தவன் ஆவன்.

கம்பையாற்றங்கரையில் உமை செய்த பூசையை நினைவு கூர்வோமாக.

1542. பொருளி னோடுநற் சுற்றமும் பற்றிலர்க்
கருளு நன்மைதந் தாயவ ரும்பொருள்
சுருள்கொள் செஞ்சடை யான்கச்சி யேகம்பம்
இருள்கெ டச்சென்று கைதொழு தேத்துமே. 6

பற்று அற்றவர்களுக்குப் பொருளும், நற்சுற்றமும் அருளும், நன்மைதந்து ஆதலுற்ற அரும்பொருளும் ஆகியவனும், சுருளுதலைக் கொண்ட செஞ்சடை உடையவனும் ஆகிய பெருமான் உறைகின்ற கச்சி ஏகம்பத்தை, உம்மைச் சார்ந்த இருள் மலங்கெடச் சென்று கரங்குவித்து வழிபடுவீர்களாக.

1543. மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்
தாக்கு மைவர்த மாப்பை யவிழ்த்தருள்
நோக்கு வான்நமை **நோய்வினை வாராமே**
**காக்கும்** நாயகன் கச்சியே கம்பனே. 7

கச்சியேகம்பத்து இறைவன், மெய், வாய், கண், மூக்குச் செவியாகி வந்து ஆக்கிய ஐம்புலன்களினாலாய கட்டினை அவிழ்த் தருளித் தன் திருக்கண்களால் நம்மை நோக்குவான்; நோய்களை உண்டாக்கும் வினைகள் நம்மிடத்துவாராமற் காக்கும் நாயகன் ஆவன்.

1544. பண்ணி லோசை பழத்தினி லின்சுவை
பெண்ணொ டாணென்று பேசற் கரியவன்
வண்ண மில்லி வடிவுவே றாயவன்
கண்ணி லுண்மணி கச்சியே கம்பனே. 8

இப்பாடல் இறைவன் உயிர்களுள் பிரிவின்றியிருக்கும் அத்துவித நிலையையும், காட்டுவிக்கும் நிலையையும் உணர்த்துகிறது.

கச்சியேகம்பத்து இறைவன் பண்ணின் இசையாகவும் பழத்தில் இனிய சுவையாகவும், பெண் ஆண் என்று ஒருபாற்படுத்திப் பேசுதற்கு அரியவனாகவும், வண்ணம் இல்லாத வனாகவும், வடிவம் வேறாயவனாகவும், கண்ணினுட் கருமணியாகவும் உள்ளான்.

1545. திருவின் நாயகன் செம்மலர் மேலயன்
வெருவ நீண்ட விளங்கொளிச் சோதியான்
ஒருவ னாயுணர் வாயுணர் வல்லதோர்
கருவுள் நாயகன் கச்சியே கம்பனே. 9

கச்சியேகம்பத்து இறைவன், திருமகளின் நாயகனாகிய திருமாலும், சிவந்த தாமரை மலர்மேல் உள்ள பிரமனும் அஞ்சி வெருவும்படியாக விளங்குகின்ற நிமிர்ந்த சோதி ஒளியாகவும், ஒப்பற்றவனாகவும், உணர்வு ஆகவும், கருவினுள் நாயகனாகவும் உள்ளான்.

1546. இடுகு நுண்ணிடை யேந்திள மென்முலை
வடிவின் மாதர் திறம்மனம் வையன்மின்
பொடிகொள் மேனியன் பூம்பொழிற் கச்சியுள்
அடிக ளெம்மை யருந்துயர் தீர்ப்பரே. 10

மிகச் சிறிய (இடுகிய) நுண்ணிடையையும், இளமை உடைய சற்றே ஏந்தினாற்போன்ற மென்முலைகளையும் உடைய வடிவினை யுடைய பெண்கள்பால் உள்ளம் வையாதீர்கள். திருநீற்றுப்பொடியணிந்த மேனியனாகிய, பொழில் சூழ்ந்த கச்சியேகம்பத்து எழுந்தருளியுள்ள இறைவன் எம்மையெல்லாம் அரிய துயரங்கள் தீர்த்துக் காப்பர். அவரை நினைந்து உய்மின்.

| | |
|---|---|
| **1547.** இலங்கை வேந்த னிராவணன் சென்றுதன்<br>விலங்க லையெடுக் கவ்விர லூன்றலும்<br>கலங்கிக் **கச்சியே கம்பவோ வென்றலும்**<br>**நலங்கொள் செலவளித் தானெங்கள்**<br>**நாதனே.**<br>11 | எங்கள் நாதனாகிய கச்சியேகம்பத்து இறைவன் இலங்கை வேந்தனாகிய இராவணன் சென்று தம் திருக்கயிலாயத்தை எடுக்க முற்படுதலும், தன் திருவிரலை ஊன்றக் கலங்குதலுற்று கச்சி ஏகம்பத்து இறைவா! என்று அவன் அலறினன்; அதுகேட்டு நலம் பெற மீளும் செலவை அவனுக்கு அருளிய பெருங்கருணைத்திறம் உடையவன். |

## 48. திருக்கச்சி ஏகம்பம்

ப.தொ.எண் : 161 பதிக எண் : 48

| | |
|---|---|
| **1548.** பூமே லானும் பூமகள் கேள்வனும்<br>நாமே தேவ ரெனாமை நடுக்குறத்<br>தீமே வும்முரு வாதிரு வேகம்பா<br>ஆமோ அல்லற் படவடி யோங்களே. 1 | தாமரைப்பூமேல் உள்ளவனாகிய பிரமதேவனும், பூமகளாகிய இலக்குமிநாயகனாகிய திருமாலும் 'யாங்களே பிரமம்' என்று கூறாது நடுக்குறும் படியாகத் தீ வடிவாகிய பெருமானே! திருவேகம்பத்தை உடையவனே! நின் அடியோமாகிய யாங்கள் அல்லற்படுதலும் ஆமோ? |
| **1549.** அருந்தி றல்அம ரர் அயன் மாலொடு<br>திருந்த நின்று வழிபடத் தேவியோ<br>டிருந்த வன்னெழி லார்கச்சி யேகம்பம்<br>பொருந்தச் சென்று புடைபட் டெழுதுமே. 2 | அரிய திறலை உடைய தேவர்களும், திருமாலும், பிரமனும் திருத்தமுறநின்று வழிபடும் வண்ணம் உமைநங்கையோடு இருந்த பெருமானது அருள் எழில் சேர்ந்த கச்சி ஏகம்பத்தைப் பொருந்தச் சென்று தங்கி வழிபடற்கு எழுவோமாக. |
| **1550.** கறைகொள் கண்டத்தெண் தோளிறை முக்கணன்<br>மறைகொள் நாவினன் வானவர்க் காதியான்<br>உறையும் பூம்பொழில் சூழ்கச்சி யேகம்பம்<br>முறைமை யாற்சென்று முந்தித் தொழுதுமே. 3 | திருநீலகண்டனும், எட்டுத்தோள்களை உடைய இறைவனும், முக்கண்ணினனும், வேதம் ஓதும் நாவினனும், தேவர்களுக்கெல்லாம் ஆதியானவனும் ஆகிய பெருமான் உறைகின்ற பூம்பொழில்கள் சூழ்ந்த கச்சியேகம்பத்தை நெறியினாற் சென்று முந்துறத் தொழுவோமாக. |
| **1551.** **பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை**<br>**நெறிப்ப டுத்து** நினைந்தவர் சிந்தையுள்<br>அறிப்பு றுமமு தாயவ னேகம்பம்<br>குறிப்பி னாற்சென்று கூடித் தொழுதுமே. 4 | பொறிகளைப் புலன்களின்வழிப் போதல் தவிர்த்து, உள்ளத்தை ஒரு நெறியின்கண் படச் செய்து நினைந்த மெய்யடியார்களின் சிந்தனையுள் அறிதலுறும் அமுதாகிய பெருமான் எழுந்தருளியுள்ள திருஏகம்பத்தைத் திருவருட் குறிப்பினாற் சென்று கூடித் தொழுவோமாக. |

| | | |
|---|---|---|
| **1552.** சிந்தை யுட்சிவ மாய்நின்ற செம்மையோ<br>டந்தி யாயன லாய்ப்புனல் வானமாய்ப்<br>புந்தி யாய்ப்புகுந் துள்ள நிறைந்தவெம்<br>எந்தை யேகம்பம் ஏத்தித் தொழுமினே. | 5 | சிந்தையுள் சிவமாகி நின்ற செம்மையினோடு, அந்தியாகவும், அனலாகவும், புனலாகவும், வானமாகவும் நினைவார் புத்தியாகிய அந்தக் கரணமாகவும் எல்லாவற்றுள்ளும் புகுந்து, உள்ளத்தில் நிறைந்த எந்தையாரின் கச்சி ஏகம்பத்தை ஏத்தித் தொழுவீர்களாக. |
| **1553.** சாக்கி யத்தோடு மற்றுஞ் சமண்படும்<br>பாக்கி யம்மிலார் பாடுசெ லாதுறப்<br>பூக்கொள் சேவடி யான்கச்சி யேகம்பம்<br>நாக்கொ டேத்தி நயந்து தொழுதுமே. | 6 | புத்தமும், சமணமுமாகிய நெறிகளிற் பட்டுத் திருவருட்செல்வம் இல்லாதவர் மருங்கு செல்லாமல், மிகுந்த பூக்களைக் கொண்ட சேவடியானது கச்சியேகம்பத்தை நாவினைக் கொண்டு ஏத்தி விரும்பித் தொழுவோமாக. |
| **1554.** மூப்பி னோடு முனிவுறுத் தெந்தமை<br>ஆர்ப்ப தன்முன் னணியம ரர்க்கிறை<br>காப்ப தாய கடிபொழி லேகம்பம்<br>சேர்ப்ப தாகநாஞ் சென்றடைந் துய்துமே. | 7 | வெறுப்புமிகுந்து முதுமைத் தன்மையோடு எம்மையெல்லாம் கட்டுவதற்கு முன்பே, அணி உடைய அமரர்க்கு இறை உறைவதும், காவலுடைய மணமிக்க பொழில் சூழ்ந்ததுமாகிய ஏகம்பத்தைச் சேர்வதாக நாம் சென்று தரிசித்து உய்வோமாக. |
| **1555.** ஆலு மாமயிற் சாயல்நல் லாரொடும்<br>சால நீயுறு மால்தவிர் நெஞ்சமே<br>நீல மாமிடற் றண்ணலே கம்பனார்<br>கோல மாமலர்ப் பாதமே கும்பிடே. | 8 | நெஞ்சமே! ஆடுகின்ற பெரிய மயில்போலும் சாயலை உடைய பெண்களோடும் நீ மிகுந்து கொண்ட மயக்கத்தைத் தவிர்வாயாக; நீலமாகிய பெருமைமிக்க கழுத்தினை உடைய அண்ணலாகிய ஏகம்பனாருடைய கோலமிக்க மலர்ச் சேவடிகளைக் கும்பிட்டு உய்வாயாக. |
| **1556.** பொய்ய னைத்தையும் விட்டவர் புந்தியுள்<br>மெய்ய னைச்சுடர் வெண்மழு வேந்திய<br>கைய னைக்கச்சி யேகம்பம் மேவிய<br>ஐய னைத்தொழு வார்க்கில்லை யல்லலே. | 9 | அனைத்துப் பொய்யையும் விட்ட உயர்ந்தவர் புந்தியுள் மெய்யாக விளங்குபவனும், சுடர் விடுகின்ற வெண்மழு ஏந்திய கையை உடையவனும் ஆகிய கச்சியேகம்பத்தை விரும்பிப் பொருந்திய தலைவனைத் தொழுவார்க்கு அல்லல்கள் இல்லையாம். |
| **1557.** அரக்கன் தன்வலி யுன்னிக் கயிலையை<br>நெருக்கிச் சென்றெடுத் தான்முடி தோள்நெரித்<br>திரக்க இன்னிசை கேட்டவ னேகம்பம்<br>தருக்க தாகநாஞ் சார்ந்து தொழுதுமே. | 10 | தன் ஆற்றலைக் கருதியவனாய்த் திருக்கயிலையைச் சென்று எடுத்தவனாகிய அரக்கனின் முடிகளையும் தோள்களையும் நெரித்தவனும், அவனது இரக்கத்திற்குரிய இன்னிசையைக் கேட்டருள்புரிந்தவனும் ஆகிய பெருமான் உறைகின்ற திருவேகம்பத்தை நாம் அருள் இறுமாப்புடன் சார்ந்து தொழுவோமாக. |

## 49. திருவெண்காடு
### (உபதேசம்)

ப.தொ.எண் : 162

பதிக எண் : 49

1558. பண்காட் டிப்படி யாயதன் பத்தர்க்குக்
கண்காட் டிக்கண்ணில் நின்ற மணியொக்கும்
பெண்காட் டிப்பிறை சென்னிவைத் தான்திரு
வெண்காட் டையடைந் துய்ம்மட நெஞ்சமே. 1

அறியாமையை உடைய நெஞ்சமே! பண்ணிசை காட்டி வழிபடுகின்ற, நிலவுலகிற் பொருந்திய தன் அன்பர்களுக்குத் திருக்கடைக்கண் காட்டி அருளி, கண்ணிற்கருமணி போன்றுள்ளவனும், சென்னியின்கண் பெண், பிறை ஆகியவற்றை வைத்தவனும் ஆகிய பெருமானது திருவெண்காட்டை அடைந்து உய்வாயாக.

கண் – உண்மை அறியும் அறிவுக்கண்

---

1559. கொள்ளி வெந்தழல் வீசிநின் றாடுவார்
ஒள்ளி யகணஞ் சூழுமை பங்கனார்
வெள்ளி யன்கரி யன்பசு வேறிய
தெள்ளி யன்றிரு வெண்கா டடை நெஞ்சே. 2

நெஞ்சே! கொள்ளியாகிய வெவ்விய தழலைவீசி நின்று ஆடுபவரும், ஒள்ளிய பூதகணங்கள் சூழ்பவரும், உமை பங்கரும், வெள்ளிய திருவெண்ணீற்றினரும், அயிராவணம் என்ற ஆனைக்குரியவரும், விடையேறிய தெளிவுடையவரும் ஆகிய பெருமானுக்குரிய திருவெண்காட்டை அடைந்து வழிபாடு செய்வாயாக.

---

1560. **ஊனோக் குமின்பம் வேண்டி யுழலாதே**
**வானோக் கும்வழி** யாவது நின்மினோ
**தானோக் குந்தன் னடியவர் நாவினில்**
தேனோக் குந்திரு வெண்கா டடை நெஞ்சே. 3

நெஞ்சே! தன்னால் நோக்கப்படும் அடியார்கள் நாவினில் அருள் தேன் பாயுமாறு நோக்கும் திருவெண்காட்டை அடைவாயாக! உலகீர்! உடல் நோக்கிய சிற்றின்பங்களை விரும்பி உழலாது, வான்நோக்கும் வழி எதுவோ அதில் நிற்பீர்களாக.

---

1561. பருவெண் கோட்டுப் பைங்கண்மத வேழத்தின்
உருவங் காட்டிநின் றானுமை யஞ்சவே
பெருவெண் காட்டிறை வன்னுறை யும்மிடம்
திருவெண் காடடைந் துய்ம்மட நெஞ்சமே. 4

நெஞ்சமே! பருத்த வெள்ளிய தந்தங்களையும், பசுங்கண்களையும், மதத்தையும் உடைய வேழத்தின் உருவத்தை உமையாள் அஞ்சக் காட்டி நின்றவனும், பெரிய சாம்பலால் வெள்ளிய இடுகாட்டில் தங்குபவனும் ஆகிய இறைவன் உறையும் இடமாம் திருவெண்காட்டை அடைந்து உய்வாயாக.

| | |
|---|---|
| **1562.** பற்ற வன்கங்கை பாம்பு மதியுடன்<br>உற்ற வன்சடை யானுயர் ஞானங்கள்<br>கற்ற வன்கய வர்புர மோரம்பால்<br>செற்ற வன்திரு வெண்கா டடைநெஞ்சே. **5** | நெஞ்சே! உயிர்களாற் பற்றத்தக்கவனும், கங்கை, பாம்பு, பிறையுடன் உற்றவனும் சடையினனும், உயர்ஞானங்கள் கற்றவனும், கீழ்மைக்குணமுடையார் புரங்களை ஓரம்பாற் செற்றவனும் ஆகிய பெருமான் உறையும் திருவெண்காட்டை அடைந்து வழிபாடு செய்வாயாக. |
| **1563.** கூடி னானுமை யாளொரு பாகமாய்<br>வேட னாய்விச யற்கருள் செய்தவன்<br>சேட னார்சிவ னார்சிந்தை மேயவெண்<br>காட னாரடி யேயடை நெஞ்சமே. **6**<br><br>சேடனார் – பெருமை உடையவர் | நெஞ்சமே! உமையாளை ஒருபாகமாய்க் கூடியவரும், விசயற்கு வேடனாய் அருள்புரிந்தவரும், உயர்ந்த சிவனாரும் ஆகிய அன்பானினைவார் சிந்தையில்மேவிய திருவெண்காடனாரின் திருவடியே அடைவாயாக. |
| **1564.** தரித்த வன்கங்கை பாம்பு மதியுடன்<br>புரித்த புன்சடை யான்கய வர்புரம்<br>எரித்த வன்மறை நான்கினோ டாறங்கம்<br>விரித்த வன்னுறை வெண்கா டடைநெஞ்சே. **7** | நெஞ்சே! கங்கை, பாம்பு, மதி ஆகியவற்றை ஒருங்கு தாங்கியவனும், முறுக்குண்ட புன்சடையுடையவனும், கீழவர் புரங்களை எரித்தவனும், நான்கு மறைகளையும், ஆறங்கங்களையும் விரித்தவனும் ஆகிய பெருமான் உறைகின்ற திருவெண்காட்டை அடைந்து வழிபடுவாயாக. |
| **1565.** பட்டம் இண்டை யவைகொடு பத்தர்கள்<br>சிட்ட னாதியென் றுசிந்தை செய்யவே<br>நட்ட மூர்த்திஞா னச்சுட ராய்நின்ற<br>அட்ட மூர்த்திதன் வெண்கா டடைநெஞ்சே. **8** | நெஞ்சே! நெற்றியில் பட்டமும், தலையில் இண்டை மாலைகளும் கொண்டு அன்பர்கள் 'உயர்ந்தவனே! ஆதியே!' என்று சிந்தைசெய்ய நடனமாடும் மூர்த்தியாகவும், ஞானச்சுடராய் நின்ற அட்டமூர்த்தியாகவும் உள்ள பெருமானின் திருவெண்காடடைந்து வழிபடுவாயாக. |
| **1566.** ஏன வேடத்தி னானும் பிரமனும்<br>தான வேடமுன் தாழ்ந்தறி கின்றிலா<br>ஞான வேடன் விசயற் கருள்செயும்<br>கான வேடன்றன் வெண்கா டடைநெஞ்சே. **9** | நெஞ்சே! பன்றி வேடம் கொண்ட திருமாலும், பிரமனும் தானவேடத்தை முன் தாழ்ந்து அறிய வலிமையில்லாத ஞானவேடனும், அருச்சுனனுக்கு அருள்செய்யும் காட்டு வேடனும் ஆகிய பெருமானின் திருவெண்காடு அடைந்து வழிபடுவாயாக. |

1567. பாலை யாடுவர் பன்மறை யோதுவர்
சேலை யாடிய கண்ணுமை பங்கனார்
வேலை யார்விட முண்டவெண் காடர்க்கு
மாலை யாவது மாண்டவ ரங்கமே. 10

மாண்டவர் அங்கம் – இறந்தவர் எலும்புகள்

பால் அபிடேகம் கொள்பவரும், ஆடுபவரும், பல மறைகளை ஓதுபவரும், சேல்மீன்போன்று காதளவும் ஆடுகின்ற கண்ணை உடைய உமையொரு பாகரும், கடலிற் பொருந்திய விடமுண்டவரும் ஆகிய வெண்காடர்க்கு இறந்தவர் உறுப்புக்களாகிய எலும்புகளே மாலையாவது.

1568. இராவ ணஞ்செய மாமதி பற்றவை
இராவ ணம்முடை யான்றனை யுள்குமின்
இராவ ணன்றனை யூன்றி யருள்செய்த
இராவ ணன்திரு வெண்கா டடைமினே. 11

அறிவைப் பற்றியிருக்கும் பற்று இல்லாதபடி செய்தற்பொருட்டு அயிராவணத்தை உடைய பெருமானை நினைமின். இராவணனைக் கால்விரலால் ஊன்றி அருள்செய்த அகோர முகத்தினரின் திருவெண்காட்டை அடைவீராக.

முதலடியை மாமதி பற்று இராவணம் செய எனப் படிக்கவும்
இரண்டாமடியை முதலடி ஈற்றோடு சேர்த்து ஐராவணமுடையான் என்று கொள்க
மூன்றாமடி இராவணன் – பதிகந்தோறும் இடம்பெறும் இலங்கை மன்னன்
நான்காமடி இராவணன் – கரிய நிறமுடையவன் – அகோர முகத்தினர் சிவபெருமான் எனப் பொருள் படும்.





திருவாய்மூர்:
திருஞானசம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் இறைவன் காட்சி கொடுத்தருளல்

## 50. திருவாய்மூர்

**(சூரியன் பூசித்த தலம். முசுகுந்த விடங்கத்தலம்)**

இப்பதிகம் முழுமையும் நாயனாரது வரலாற்றில் இப்பகுதியை விளக்கும் பேராதரவாகிய அகச்சான்றாகும்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருமறைக்காட்டில் வேதங்களால் பூசிக்கப்பட்டு இலச்சினையிட்டுத் திருக்காப்பிடப்பட்டக் கதவினைத் திறப்பிக்க, "பண்ணினேர் மொழியாள்" எனப் பதிகம்பாடி அருளினார். பதிகப் பயனைத் துய்ப்பராகி, இறைவர் பதிகம் பத்துப்பாட்டு அளவும் கதவம் திறக்கத் தாழ்த்தனர். திருக்கடைக் காப்பில் நாயனார் "இரக்கமொன்றிலீர் எம்பெருமானீரே" என்று பாடி இறைஞ்சினார். திருவருளால் கதவு திறந்தது. உட்புகுந்து இறைவனை வணங்கிப்பின் திருஞானசம்பந்தர் "சதுரம்மறை" என்ற பதிகம் பாடியருள எடுத்த திருப்பாட்டிலேயே கதவம் திருக்காப்புக் கொண்டது. அது முதல் அக்கதவம் திறக்கவும் அடைக்கவுமாக நிகழ்ந்தது. அது கண்டு மகிழ்ந்து வணங்கி இருவரும் புறம்போந்து திருமடங்களில் தங்கியருளினர்.

அன்றிரவு தாம் அரிதில் திறக்கப் பாடினமையினையும், பிள்ளையார் அடைக்கப்பாடிய எளிமையினையும் எண்ணி "நம்பர் திருவுள்ளம் அறியாதயர்ந்தேன்" என்றும் பெரிதும் அஞ்சி இறைவர் திருவடிகளை நினைந்து திருமடத்தில் ஒரு பக்கத்தில் அணைந்து பொருந்திய அவ்வுணர்வுடன் வாகீசர் துயில் கொண்டருளினார்.

இறைவர் அவரது கனவில் தோன்றி "வாய்மூரில் இருப்போம் தொடர வா" என்றருளி மறைந்தனர். நாயனார் உடனே துயிலுணர்ந்து "வா என்று போனார், அது என்கொல்" என்ற இப்பதிகம் பாடி வாய்மூரை நோக்கிப் புறப்பட்டனர். இறைவனார் முன் காட்டும் அந்தத் திருவேடத்துடன் முன்னே சென்றனர். நாயனார் பின் செல்லச் செல்ல அவர் அணுக முடியாதபடி முன்னே சென்று பொற்கோயில் ஒன்று காட்டி அதனுள் சென்று மறைந்தனர். இந்த அளவில் நாவரசர் சென்ற செய்தி கேட்டு திருஞானசம்பந்தரும் அங்கு எழுந்தருளினார். "பிழைத்துச் செவ்வியறியாதே திறப்பித்தேனுக்கே ஒளிக்கலாமேயன்றித் தமிழ் உறைப்புப் பாடி அடைப்பித்த பிள்ளையார் ஈண்டு வந்துளர். அவருக்கு ஒளிக்கலாமோ ? என்று நாயனார் பாடியருள, இறைவர் பிள்ளையார் காண காட்சிதர அவர் பாடித்தொழுது அரசுகளுக்குக் காட்டக்கண்டு "பாடவடியார் பரவக்கண்டேன்" என்று பாடித் தொழுதனர். இருவரும் திருவாய்மூர் தொழுது திருமறைக் காட்டுக்கெழுந் தருளியிருந்தனர். பின் தொடர்ந்தன கோளறு பதிகமும், மதுரை நிகழ்வுகளும்.

**ப.தொ.எண் : 163** **பதிக எண் : 50**

**1569.** எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாள மருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனா ரதென்கொலோ. 1

அடையாளம் – வெண்ணீறு புனைந்த கோலப் பொலிவு

தென்னைகள் நன்கு தோன்றுகின்ற திருவாய்மூரில் எழுந்தருளியுள்ள அருட் செல்வராகிய இறைவர், என்னை எங்கே என்று தேடி, இருந்த இடத்தைக் கண்டுகொண்டு அங்கே வந்து அடையாளம் அருளியவர், **'திருவாய்மூர்க்கு வா'** என்று கூறியருளிச் சென்றார்; அதன் காரணம் என்னை கொல் ?

**1570.** மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி யுன்னி யுறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி
என்னை வாவென்று போனார தென்கொலோ. 2

உன்னி உன்னி என்ற அடுக்குப் பலமுறையும் நினைத்துக் கொண்டேயிருந்தமை குறித்தது.

எம்பெருமானையே நினைந்து, நினைந்து உறங்குகின்ற எளியேனுக்கு நிலைபெற்ற பெருமை உடைய மறைக்காட்டுறையும் மணவாளனார், தன்னை, வாய்மூர் இறைவனாமாற்றை விளங்கக்கூறி, என்னை, 'அங்கு வா' என்று கூறியருளிச் சென்றார்; அதன் காரணம் என்னை கொல் ?

**1571.** தஞ்சே கண்டேன் தரிக்கிலா தாரென்றேன்
அஞ்சே லுன்னை யழைக்கவந் தேனென்றார்
உஞ்சே னென்றுகந் தேயெழுந் தோட்டந்தேன்
வஞ்சே வல்லரே வாய்மூ ரடிகளே. 3

தஞ்சே கண்டேன் – எளிமையாகவே கண்டேன்.
தரிக்கிலாது – தாமதியாது
உஞ்சேன் – உய்ந்தேன் என்பதன் போலி.

தரித்து ஓரிடத்தில் இராதவர்க்குத் தஞ்சப் பொருளைக் கண்டேன் என்றேன்; 'அஞ்சாதே! உன்னை அழைக்க வந்தேன்' என்று அருளினார்; 'உய்ந்தேன்' என்று மகிழ்ந்து எழுந்து ஓட்டம் எடுத்தேன்; வாய்மூர் அடிகள் வஞ்சனையில் வல்லவரோ ?

| | |
|---|---|
| 1572. கழியக் கண்டிலேன் கண்ணெதி ரேகண்டேன்<br>ஒழியப் போந்திலே **னொக்கவே யோட்டந்தேன்**<br>வழியிற் கண்டிலேன் வாய்மூ ரடிகள்தம்<br>சுழியிற் பட்டுச் சுழல்கின்ற தென்கொலோ. 4<br><br>ஒக்கவே ஓட்டந்தேன் – இறைவ ரொடொப்ப நானும் விரைவாக ஓடினேன். | அவர் என்னைவிட்டு நீங்குமாறு கண்டேனில்லை; கண்ணெதிரே கண்டேன்; என்னைவிட்டு அவர் நீங்கியபின் போந்தேனில்லை; ஒக்கவே ஓடிவந்தேன்; ஆயினும் இடைவழியிற் கண்டேனில்லை; வாய்மூர் அடிகளின் மாயச்சுழலில் அடியேன் இவ்வாறு பட்டுச் சுழல்கின்றதன் காரணம் என்னையோ? |
| 1573. ஒள்ளி யாரிவ ரன்றிமற் றில்லையென்<br>றுள்கி யுள்கி யுகந்திருந் தேனுக்குத்<br>தெள்ளி யாரிவர் போலத் திருவாய்மூர்க்<br>கள்ளி யாரவர் போலக் கரந்ததே. 5 | ஒளியுடையவர் இவரையன்றி மற்றுயாரும் இல்லை என்று நினைந்து நினைந்து மகிழ்ந்திருந்த எளியேனுக்கு, திருவாய்மூரின் கண் தெளிந்தவர் இவர்போலக் காட்டிக் கள்ளம் உடையவர் போல ஒளித்துவிட்டனரே. |
| 1574. யாதே செய்துமி யாமலோ நீயென்னில்<br>ஆதே யேயு மளவில் பெருமையான்<br>மாதே வாகிய வாய்மூர் மருவினார்<br>போதே யென்றும் புகுந்ததும் பொய்கொலோ. 6 | எச்செயல் செய்தாலும் அவன் செயல் என்று எண்ணினால் அதுவே நல்ல பயனைத்தரும். அளவில்லாத பெருமையுடையான் அவன், மாதேவனாகிய வாய்மூர் இறைவர் 'வருவாயாக' என்றதும், சென்றதும், பொய்யோ? |

யாதே செய்தும் – பாதகத்தைச் செய்திடினும். 'யாம்அலோம் நீ எனில்' – "உலகினில் என்செயல் எல்லாம் உன் விதியே. நீயே உண்ணின்றும் செய்வித்தும் செய்கின்றாயென்றும் நிலவுவதோர் செயல் எனக்கு இன்று உன் செயலே" என்று நினையின்.

| | |
|---|---|
| 1575. பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு<br>வாடி வாட்டந் தவிர்ப்பா ரவரைப்போல்<br>தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயெனா<br>ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ. 7<br><br>வீழிமிழலையில் படிக்காசு பெற்ற வரலாறு | பாடி அதனாற்பெற்ற பரிசிலாகிய பழங்காசினைக் கொண்டு வாடிய வாட்டத்தைத் தவிர்ப்பாரைப் போல 'திருவாய்மூர் வா!' என்றழைத்து, ஒளித்தவாற்றிற்கான காரணம் என்னையோ? |
| 1576. திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்<br>உறைப்புப் பாடி யடைப்பித்தா ருந்நின்றார்<br>மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்<br>பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே. 8 | வேதங்களாற் பூசிக்கப்பெற்று அடைக்கப் பட்டிருந்த மறைக்காட்டுத் திருக்கதவத்தைத் திறக்குமாறு பாடிய என்னினும், செந்தமிழ்ப் பாடலை உறுதியுடன்பாடி அடைப்பித்தவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் உதோ நின்றார். திருவாய்மூரில் பிறையைக் கொண்ட செஞ்சடை உடையாராகிய பெருமான் தம்மை இவருக்கும் மறைக்க வல்லரோ? இவர் பித்தரேயாவர். |

**1577.** தனக்கே றாமை தவிர்க்கென்று வேண்டினும்
நினைத்தேன் பொய்க்கருள் செய்திடு நின்மலன்
எனக்கே வந்தெதிர் வாய்மூருக் கேயெனாப்
புனற்கே பொற்கோயில் புக்கதும் பொய்கொலோ. 9

தனக்கு உள்ளம் பொருந்தாமையைத் தவிர்த்தருள்வாயாக என்று வேண்டினும், பொய்யாக நினைக்கும் எளியேன் பொய்க்கும் அருள் செய்யும் நின்மலனாகிய இறைவன், எனக்கு எதிரேவந்து 'வாய்மூருக்கே வா' என்று கூறிவந்து தீர்த்தத்தை அடுத்த பொற்கோயிலில் வந்து புகுந்ததும் பொய்தானோ?

**1578.** தீண்டற் கரிய திருவடி யொன்றினால்
மீண்டற் கும்மிதித் தார்அரக் கன்தனை
வேண்டிக் கொண் டேன்திரு வாய்மூர் விளக்கினைத்
தூண்டிக் கொள்வன்நா னென்றலுந் தோன்றுமே. 10

பன்றி வடிவாகச் சென்று தோண்டியும் தீண்டுதற்கரிய திருவடியின்கண் அமைந்த திருவிரல் ஒன்றினால் அரக்கனை மீண்டு அருள்புரிவதற்கும் மிதித்தவராகிய பெருமானை வேண்டிக் கொண்டேன்; திருவாய்மூர் விளக்கினைத் தூண்டிக் கொள்வேன் நான் என்றலும் தோன்றி அருள்புரிந்தான்.

## 51. திருப்பாலைத்துறை

ப.தொ.எண் : 164 — பதிக எண் : 51

**1579.** நீல மாமணி கண்டத்தர் நீள்சடைக்
கோல மாமதி கங்கையுங் கூட்டினார்
சூல மான்மழு ஏந்திச் சுடர்முடிப்
பால்நெய் யாடுவர் பாலைத் துறையரே. 1

பாலைத்துறையரே – பதிக மகுடம்

திருப்பாலைத்துறையர், நீலமாமணி போலும் திருக்கழுத்தினர்; நீண்ட சடையில் அழகுமிக்க பெரிய மதியையும் கங்கையையும் கூட வைத்தவர்; சூலம், மான், மழு ஏந்தித் தம் ஒளி முடியில் பாலும் நெய்யும் திருவபிடேகம் கொள்வர்.

**1580.** கவள மாகளிற் றின்உரி போர்த்தவர்
**தவள வெண்ணகை மங்கை**யொர் பங்கினர்
திவள வானவர் போற்றித் திசைதொழும்
பவள மேனியர் பாலைத் துறையரே. 2

தவள வெண்ணகை மங்கை – தல அம்மை பெயர்
தவளம் – வெண்மை.

திருப்பாலைத்துறையர், சோற்றுக்கவளம் கொள்ளும் யானையின் உரியைப் போர்த்தவர்; வெள்ளிய நகைப்பை உடைய உமை மங்கையை ஒருபங்கிற் கொண்டவர்; தேவர்கள் போற்றித் திசைநோக்கித் தொழும் பவளம் போன்று சிவந்த மேனியர்.

| | |
|---|---|
| **1581.** மின்னின் நுண்ணிடைக் கன்னியர் மிக்கெங்கும்<br>பொன்னி நீர்மூழ்கிப் போற்றி யடிதொழ<br>மன்னி நான்மறை யோடுபல் கீதமும்<br>பன்னி னாரவர் பாலைத் துறையரே. 3<br><br>பன்னினார் – சொன்னார் | திருப்பாலைத்துறையர், மின்னலையொத்த நுண்ணிடையை உடைய கன்னிப்பெண்கள் எங்கும் பலராய்க்கூடிக் காவிரியில் நீராடிப் போற்றித் திருவடிகளைத் தொழ நிலைபெற்று, நான்கு வேதங்களும் பல கீதங்களும் சொல்லிய சிறப்புடையவராவர். |
| **1582.** நீடு காடிட மாய்நின்ற பேய்க்கணங்<br>கூடு பூதங் குழுமிநின் றார்க்கவே<br>ஆடி னாரழ காகிய நான்மறை<br>பாடி னாரவர் பாலைத் துறையரே. 4 | திருப்பாலைத்துறையர், சுடுகாடே இடமாய் நீண்டு நின்ற பேயின் தொகுதிகளும், கூடிய பூதங்களும் தம்மில் இணைந்து நின்று ஆர்க்குமாறு ஆடியவர்; அழகாகிய நான்மறை பாடியவர். |
| **1583.** சித்தர் கன்னியர் தேவர்கள் தானவர்<br>பித்தர் நான்மறை வேதியர் பேணிய<br>அத்த னேநமை யாளுடை யாயெனும்<br>பத்தர் கட்கன்பர் பாலைத் துறையரே. 5 | திருப்பாலைத்துறையர், சித்தரும், கன்னியரும், தேவரும், அசுரர்களும், பித்தர்களும், நான்கு மறைகளில் வல்ல வேதியரும் பேணிய அத்தனே! நம்மை ஆளுடையாய்! என்று கூறும் அன்பர்களுக்கு அன்பராய் இருப்பர். |
| **1584.** விண்ணி னார்பணிந் தேத்த வியப்புறும்<br>மண்ணி னார்மற வாதுசி வாயவென்<br>றெண்ணி னார்க்கிட மாஎழில் வானகம்<br>பண்ணி னாரவர் பாலைத் துறையரே. 6 | தேவர்கள் பணிந்து ஏத்த (அதுகண்டு) வியப்புறும் மண்ணுலகத்தோர், மறவாது 'சிவாய' என்று தியானிக்க, அவர்களுக்கு இடமாக எழில் மிகும் வானகத்தைப் படைத்தருளியவர், திருப்பாலைத்துறைப் பிரானே. |

இந்தத் திருப்பாடல் நடுவில் சிவாய என்னும் சிவமூலமந்திரம் அமைந்து விளங்கும் தெய்வ அமைப்பை உடையது. மூவர் தேவாரத்தில் நடுவண் அமைந்தது திருநாவுக்கரசர் தேவாரம். நாவரசர் தேவாரத்தில் 4, 5, 6 திருமுறைகளில் ஐந்தாவதாகிய இத்திருமுறை நடுவண் அமைந்துள்ளது. ஐந்தாவது திருமுறையின் 100 பதிகங்களின் நடுவணாக 51ஆவது பதிகமாக இப்பாலைத்துறைப் பதிகம் அமைந்துள்ளது. இப்பதிகத்தின் நடுவண் பாடல் (6) இப்பாடலாகும். இப்பாடலின் நடுவரியில் அமைந்துள்ள 'சிவாய' – சூக்கும பஞ்சாக்கரம் எனப்படுகிறது. ஐந்தெழுத்தைக் கீழ்வருமாறு வகைப்படுத்துவார்கள்.

| | |
|---|---|
| நமசிவாய | தூலபஞ்சாக்கரம் |
| சிவாயநம | சூக்கும பஞ்சாக்கரம் |
| சிவாயசிவ (சிவாய) | அதிசூக்கும பஞ்சாக்கரம் |
| சிவசிவ | மகாமனு |
| சிவ | சூக்குமா சூக்குமம் |
| சி | நாயோட்டு மந்திரம் |

முதன்முதலில் சிவனடியார்களுக்கு உபதேசிக்கப்படும் மந்திரம் நமசிவாய. அது சரியை நிலை – ஆரம்பக்கல்விக்கு முந்தைய நிலை என்று கொண்டு ஆரம்பப்பள்ளி நிலையில் சிவாயநம, உயர்நிலைப் பள்ளியில் சிவாயசிவ, கல்லூரி இளங்கலையில் சிவசிவ. முதுகலையில் சிவ. முனைவர் பட்ட நிலையில் சி. என்று ஐந்தெழுத்து யாத்திரை தொடர்கிறது.

| | |
|---|---|
| **1585.** குரவ னார்கொடு கொட்டியுங் கொக்கரை<br>விரவி னார்பண் கெழுமிய வீணையும்<br>மருவு நாண்மலர் மல்லிகை செண்பகம்<br>பரவு நீர்ப்பொன்னிப் பாலைத் துறையரே. 7 | மருவிய புதுமலர்களாகிய மல்லிகையும் செண்பகமும் உதிர்ந்து பரவிய நீர்ப்பரப்பை உடைய பொன்னிக் கரையிலுள்ள திருப்பாலைத்துறையர், கொடுகொட்டி, கொக்கரை, பண் பொருந்திய வீணை ஆகிய வாச்சியங்களின் இசையினை விரவியவரும், குரவரும் ஆவர். |
| **1586.** தொடருந் **தொண்டரைத் துக்கந் தொடர்ந்துவந்**<br>**தடரும் போதர னாயருள் செய்பவர்**<br>கடலின் நஞ்சணி கண்டவர் கடிபுனல்<br>படருஞ் செஞ்சடைப் பாலைத் துறையரே. 8 | நறுமணமுடைய கங்கை படரும் செஞ்சடை உடைய திருப்பாலைத்துறையர், தம்மைத் தொடரும் தொண்டரைத் துன்பங்கள் தொடர்ந்துவந்து வருத்தும்போது அரனாகத் தோன்றி அருள்செய்பவர்; கடலினின்றெழுந்த நஞ்சினை உண்டு அணிசெய்யப் பெற்ற திருக்கழுத்தினர். |
| **1587.** மேகந் தோய்பிறை சூடுவர் மேகலை<br>நாகந் தோய்ந்த அரையினர் நல்லியல்<br>போகந் தோய்ந்த புணர்முலை மங்கையோர்<br>பாகந் தோய்ந்தவர் பாலைத் துறையரே. 9 | திருப்பாலைத்துறையர், மேகமண்டலத்தைத் தோய்கின்ற பிறையினைச் சூடுவர்; மேகலையாக நாகம் தோய்ந்த அரையினை உடையவர்; நல்லியலுடைய போகம் தோய்தற்குரிய இரண்டு தனங்களையுடைய உமையம்மையை ஒரு பாகம் தோய்ந்தவர். |
| **1588.** வெங்கண் வாளர வாட்டி வெருட்டுவர்<br>அங்க ணாரடி யார்க்கருள் நல்குவர்<br>செங்கண் மாலயன் தேடற் கரியவர்<br>பைங்க ணேற்றினர் பாலைத் துறையரே. 10 | திருப்பாலைத்துறையர், வெவ்விய கண்ணை உடைய வாளரவை ஆட்டி அச்சுறுத்துவர்; அழகிய கண்ணை உடையவர்; அடியார்க்கு அருள் வழங்குபவர். செங்கண்ணை உடைய மாலும் அயனும் தேடற்கு அரியவர்; பைங் கண்ணை உடைய இடபத்தை வாகனமாக உடையவர். |

தமிழகத்தின் மிகத் தொன்மையான, பெரிய நெற்களஞ்சியம் இக்கோயிலில் உள்ளது. இக்காலத்தில் பாபநாசம் எனப்பட்டு தஞ்சை, கும்பகோணம் நெடுஞ்சாலையில் உள்ளது. இதே ஊரில் 108 சிவாலயம் என்று 108 சிவலிங்கங்களுடனும் ஒரு தலம் உள்ளது.

ஆனால் அதற்கு நால்வர் பாடலில்லை.

| | |
|---|---|
| 1589. உரத்தி னாலரக் கன்னுயர் மாமலை<br>நெருக்கி னானை நெரித்தவன் பாடலும்<br>இரக்க மாஅருள் செய்தபா லைத்துறை<br>கரத்தி னால்தொழு வார்வினை யோயுமே. 11 | தன் ஆற்றலினால் இராவணன் உயர்ந்த திருக்கயிலாய மாமலையை நெருக்க லுற்றானை நெரித்து, அவன் பாடலும் கேட்டு இரக்கமாக அருள்புரிந்த திருப்பாலைத் துறையைக் கரங்களால் தொழுவார் வினை நீங்கும். |

## 52. திருநாகேச்சரம்

ப.தொ.எண் : 165 பதிக எண் : 52

| | |
|---|---|
| 1590. நல்லர் நல்லதோர் நாகங்கொண் டாட்டுவர்<br>வல்லர் வல்வினை தீர்க்கும் மருந்துகள்<br>பல்லில் ஓடுகை யேந்திப் பலிதிரி<br>செல்வர் போல்திரு நாகேச் சரவரே. 1<br><br>திருநாகேச்சரவரே – பதிக மகுடம் | திருநாகேச்சரத்திறைவர், நல்லவர்; நல்லதோர் நாகத்தைக் கையிற்கொண்டு ஆடச் செய்வர்; வல்வினைகளைத் தீர்க்கும் மருந்துகள் அளிக்க வல்லவர்; பல்லில்லாத ஓடு கையேந்திப் பலி திரிகின்ற அருட்செல்வர் ஆவர். |
| 1591. நாவ லம்பெருந் தீவினில் வாழ்பவர்<br>மேவி வந்து வணங்கி வினையொடு<br>பாவ மாயின பற்றறு வித்திடும்<br>தேவர் போல்திரு நாகேச் சரவரே. 2<br><br>திருஞானசம்பந்தரின் திருநாகேச்சுரப் பதிகங்களிலும் அவரால் வினைக் கொள்கை பேசப்படுகிறது | திருநாகேச்சரத்திறைவர், நாவலம் பெருந்தீவாகிய (ஜம்புத்வீபம்) காட்டிலுள்ளவர். அனைவரும் மேவிவந்து வணங்கி, வினையொடு பாவமாயினவற்றைப் பற்றறுவித்திடும் தேவர் ஆவர். |
| 1592. ஓத மார்கட லின்விட முண்டவர்<br>ஆதி யாரய னோடம ரர்க்கெலாம்<br>மாதொர் கூறர் மழுவல னேந்திய<br>நாதர் போல்திரு நாகேச் சரவரே. 3 | திருநாகேச்சரத்திறைவர், அலைகள் பொருந்திய கடலின் விடம் உண்டவர்; அயன் தேவர்களாதியாகிய உலகங்களுக்கெல்லாம் ஆதியாயவர்; உமையொரு பாகர்; மழுவினை வலக்கையில் ஏந்திய நாதர் ஆவர். |
| 1593. சந்தி ரன்னொடு சூரியர் தாமுடன்<br>வந்து சீர்வழி பாடுகள் செய்தபின்<br>ஐந்த லையர வின்பணி கொண்டருள்<br>மைந்தர் போல்மணி நாகேச் சரவரே. 4<br><br>இன்றும் நாகபூசை சிறப்பாக நடைபெறுகிறது. இது தல வரலாறாகும் | திருநாகேச்சரத்திறைவர், சந்திரனோடு சூரியனும் வந்து சீர்வழிபாடுகள் செய்தபின் ஐந்துதலை உடைய அரவின் பணியையும் கொண்டருளும் மைந்தர் (பெருவீரர்) ஆவர். |

| | |
|---|---|
| **1594.** பண்டொர் நாளிகழ் வான்பழித் தக்கனார்<br>கொண்ட வேள்விக் குமண்டை யதுகெடத்<br>தண்ட மாவிதா தாவின் தலைகொண்ட<br>செண்டர் போல்திரு நாகேச் சரவரே. **5**<br><br>வேள்விக்கு மண்டை – வேள்வியாகிய செருக்கு மிக்க செயல்.<br>விதாதா – பிரமன்; செண்டர் – செண்டு என்னும் ஆயுதத்தை உடையவர் | திருநாகேச்சரத்திறைவர், முன்னோர் நாளில் குற்றங்களை உடைய தக்கன் இகழ்வதற்காகக் கொண்ட வேள்வியினைக் கெடும்படியாகச் செய்தவரும், தண்டனையாகப் பிரம தேவனின் தலையைக் கொண்ட செண்டு உடையவரும் ஆவர். |
| **1595.** வம்பு பூங்குழல் மாது மறுகவோர்<br>கம்ப யானை யுரித்த கரத்தினர்<br>செம்பொ னாரித ழிம்மலர்ச் செஞ்சடை<br>நம்பர் போல்திரு நாகேச் சரவரே. **6**<br><br>வம்பு – மணம் பொருந்திய<br>நம்பர் – விரும்பத்தக்கவர்<br>மறுக – அஞ்சி மயங்க | திருநாகேச்சரத்திறைவர், மணம் பொருந்திய புதிய பூக்களை யணிந்த குழல் உடைய உமாதேவியார் அஞ்சி மயங்க, ஒப்பற்றதாய் நினைப்பாரை நடுங்கச் செய்யும் இயல்பினதாய யானையை உரித்த திருக்கையினர்; செம்பொன்னைப் போன்ற கொன்றை மலர்களையணிந்த செஞ்சடையை உடைய நம்பர் ஆவர். |
| **1596.** மானை யேந்திய கையினர் மையறு<br>ஞானச் சோதிய ராதியர் நாமந்தான்<br>ஆன அஞ்செழுத் தோதவந் தண்ணிக்கும்<br>தேனர் போல்திரு நாகேச் சரவரே. **7** | திருநாகேச்சரத்திறைவர், மானை ஏந்திய கையை உடையவர்; குற்றமற்ற ஞானவொளி யவர்; உலகிற்கெல்லாம் ஆதியாயவர்; தம் திருநாமமாகிய அஞ்செழுத்தை ஓதினால் வந்து அருள்கின்ற இனிக்கும் தேனும் ஆவர். |
| **1597.** கழல்கொள் காலினர் காலனைக் காய்ந்தவர்<br>தழல்கொள் மேனியர் சாந்தவெண் ணீறணி<br>அழக ரால்நிழற் கீழற மோதிய<br>குழகர் போல்குளிர் நாகேச் சரவரே. **8**<br><br>குழகர் – அழகர்; பிறர்க்கு இணங்குபவர் | திருநாகேச்சரத்திறைவர், கழல்கொண்ட சேவடியினர்; காலனைக் காய்ந்தருளியவர்; தழல் வண்ணம் கொண்ட செம்மேனியர்; வெண்ணீற்றுப்பொடியணிந்த அழகர்; கல்லால நிழற் கீழ் இருந்து அறம் ஓதிய குழகர் ஆவர். |
| **1598.** வட்ட மாமதில் மூன்றுடன் வல்லரண்<br>சுட்ட செய்கைய ராகிலுஞ் சூழ்ந்தவர்<br>குட்ட வல்வினை தீர்த்துக் குளிர்விக்கும்<br>சிட்டர் போல்திரு நாகேச் சரவரே. **9**<br><br>இப்பாடல் 1494 பாடலுடன் ஒத்துள்ளது | திருநாகேச்சரத்திறைவர், வட்டமாக வளைந்த மதில் மூன்றுடன் கூடிய வல்லரண்களைச் சுட்ட செய்கையர்; ஆயினும் தம்மை உள்ளத்தே சூழ்ந்தவர்களின் திரண்ட வல்வினைத் துன்பங்களைத் தீர்த்துக் குளிரும்படிச் செய்யும் உயர்ந்தோர் ஆவர். |

1599. தூர்த்தன் தோண்முடி தாளுந் தொலையவே
சேர்த்தி னார்திருப் பாதத் தொருவிரல்
ஆர்த்து வந்துல கத்தவ ராடிடும்
தீர்த்தர் போல்திரு நாகேச் சரவரே. 10

திருநாகேச்சரத்திறைவர், மிக்க கொடியவனாகிய இராவணனது தோள்களும், முடிகளும், தாள்களும் தொலையுமாறு திருப்பாதத்து ஒரு விரலைச் சேர்த்தியவர்; உலகிலுள்ளோரெலாம் ஆர்த்துவந்து நீராடிடும் தீர்த்த வடிவினர் ஆவர்.

தூர்த்தன் – தீய ஒழுக்கமுடையவன்
ஆர்த்து – ஆரவாரம் செய்து

## 53. திருஅதிகைவீரட்டம்

ப.தொ.எண் : 166 பதிக எண் : 53

1600. கோணன் மாமதி சூடியோர் கோவணம்
நாணில் வாழ்க்கை நயந்தும் பயனிலை
பாணில் வீணை பயின்றவன் வீரட்டம்
காணி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 1

வளைந்த பிறைமதி சூடி, கோவணம் அணிந்து விரும்பியும் பயனற்ற நாணமில்லாத வாழ்க்கை உடையவரேனும், வீணையிற் பாடல் பயின்ற சிவபெருமான் உறையும் திருவதிகை வீரட்டத்தைக் கண்டு தொழுதபின்னல்லது என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ?

என் கண் துயில் கொள்ளுமே – பதிக மகுடம்
அகத்துறைப்பாடல்

1601. பண்ணி னைப்பவ ளத்திரள் மாமணி
அண்ண லையம ரர்தொழு மாதியைச்
சுண்ண வெண்பொடி யான்றிரு வீரட்டம்
நண்ணி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 2

பண் வடிவானவரும், பவளத்தொகுதி போன்ற மாமணி மேனியுடைய அண்ணலும், தேவர்கள் தொழும் முதல்வரும், திருநீற்றுப்பொடி யணிந்தவரும் ஆகிய பெருமான் உறையும் திருவதிகை வீரட்டத்தை நண்ணினாலல்லது என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ?

1602. உற்ற வர்தம் உறுநோய் களைபவர்
பெற்ற மேறும் பிறங்கு சடையினர்
சுற்றும் பாய்புனல் சூழ்திரு வீரட்டம்
கற்கி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 3

தம்மைப் பற்றுக்கோடாக அடைந்தவரது மிக்க துயரங்களைக் களைபவரும், இடபம் ஏறுபவரும், விளங்கும் சடையுடையவரும் ஆகிய பெருமான் உறைகின்ற பாயும் கெடில நீர்சுற்றிச் சூழ்கின்ற திருவதிகை வீரட்டத்தைக் கற்ற பின்னல்லது என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ?

1603. முற்றா வெண்மதி சூடும் முதல்வனார்
செற்றார் வாழுந் திரிபுரந் தீயெழ
விற்றான் கொண்டெயி லெய்தவர் வீரட்டம்
கற்றா லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 4

முதிராத வெள்ளிய பிறையினைச் சூடும் முதல்வரும், சினக்கப்பட்டார் வாழும் மூன்று புரங்கள் தீயெழுமாறு மேருமலையாகிய வில்லைத் தாம் கொண்டு எய்தவரும் ஆகிய பெருமான் உறையும் திருவதிகை வீரட்டத்தைக் கற்றால் அல்லது என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ?

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **1604.** பல்லா ரும்பல தேவர் பணிபவர்<br>நல்லா ருந்நயந் தேத்தப் படுபவன்<br>வில்லால் மூவெயி லெய்தவன் வீரட்டம்<br>கல்லே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 5 | பலவகைப்பட்ட தேவர்களாலும் பணியப் படுபவரும், நல்லார்களாலும் விரும்பிப் பரவப்படுபவரும், வில்லால் மூவெயில்களை எய்தவரும் ஆகிய பெருமான் உறையும் திருவதிகை வீரட்டத்தைக் கல்லேனாகில் என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ? |
| **1605.** வண்டார் கொன்றையும் மத்தம் வளர்சடைக்<br>கொண்டான் கோல மதியோ டரவமும்<br>விண்டார் மும்மதி லெய்தவன் வீரட்டம்<br>கண்டா லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 6 | வண்டுகள் பொருந்திய கொன்றையும், ஊமத்த மலரும், பிறையும், அரவமும் அழகு வளரும் தம் சடையிற் கொண்டவரும், பகைவரது மும்மதில்களை எய்தவரும் ஆகிய பெருமான் உறையும் திருவதிகை வீரட்டத்தைக் கண்டபின்னல்லது என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ? |
| **1606.** அரையார் கோவண ஆடைய னாறெலாந்<br>திரையா ரொண்புனல் பாய்கெடி லக்கரை<br>விரையார் நீற்றன் விளங்குவீ ரட்டன்பால்<br>கரையே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 7<br><br>அரையார் – இடுப்பிலே பொருந்திய<br>திரையார் – அலைகளோடு கூடிய<br>விரையார் – மணம் பொருந்திய<br>கரையேனாகில் – என் குறைகளைச் சொல்லேனாகில் | இடுப்பிற் பொருந்திய கோவண ஆடையரும், வழியெல்லாம் அலையெறியும் ஒள்ளிய நீர் பாய்கின்ற கெடிலக் கரையில் விளங்கும் நறுமணமுடைய திருநீற்றுப்பூச்சினரும் ஆகிய பெருமான் உறையும் **திருவதிகை வீரட்டத்தைப்** பாடேனாயின் என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ? |
| **1607.** நீறு டைத்தடந் தோளுடை நின்மலன்<br>ஆறு டைப்புனல் பாய்கெடி லக்கரை<br>ஏறு டைக்கொடி யான்திரு வீரட்டம்<br>கூறி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 8 | திருநீறு அணிந்த பெருந்தோளராகிய மலமற்றவரும், இடபக் கொடியுடையாரும் ஆகிய பெருமான் உறைவதும் புனல் பாய்கின்ற கெடில ஆற்றினுடைய கரையில் உள்ளதுமாகிய **திருவதிகை வீரட்டத்தைக்** கூறினாலல்லது என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ? |
| **1608.** செங்கண் மால்விடை யேறிய செல்வனார்<br>பைங்க ணானையி னீருரி போர்த்தவர்<br>அங்கண் ஞாலம தாகிய வீரட்டம்<br>கங்கு லாகவென் கண்துயில் கொள்ளுமே. 9<br><br>ஈருரி – உரித்த தோல்.<br>இரவுப் பொழுதாயினும் வீரட்டத்தை அடைதல் அல்லாது வேறு நோக்கமில்லை என்பது கருத்து | சிவந்தகண்ணை உடைய திருமாலாகிய விடையேறிய திருவருட்செல்வரும், பசிய கண்ணை உடைய ஆனையின் பச்சைத் தோலை உரித்துப் போர்த்தருளியவரும், அழகிய இடமகன்ற உலகமுழுதானவருமாகிய பெருமான் உறையும் **திருவதிகை வீரட்டத்தைக்** (காணேனாயின்) என் கண்கள் இரவாயினும் ஆக, உறக்கம் கொள்ளுமோ ? |

**1609.** பூணா ணாரம் பொருந்த வுடையவர்
நாணா கவ்வரை வில்லிடை யம்பினால்
பேணார் மும்மதி லெய்தவன் வீரட்டம்
காணே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 10

பூண், நாண், மாலை முதலியவற்றைப் பொருந்த உடையவரும், அழகிய மேருமலையாகிய வில்லிடை நாணுடன் கூடிய அம்பினால், பகைவர் மும்மதில்களை எய்தவர் உறையும் **திருவதிகை வீரட்டத்தைக்** காணேனாகில் என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ?

பூண் – அணிகலன்
நாண் – பூணநூல் முதலிய கயிறுகள்
ஆரம் – மலர் மாலைகள்
நாகநாண் வரை வில்லிடை – இமயவில்லின் வாசுகிப் பாம்பாகிய நாணில்

**1610.** வரையார்ந் தவயி ரத்திரள் மாணிக்கம்
திரையார்ந் தபுனல் பாய்கெடி லக்கரை
விரையார் நீற்றன் விளங்கிய வீரட்டம்
உரையே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 11

மலைகளில் நிறைந்த வயிரத்தின் தொகுதியும், மாணிக்கமும் ஆகியவற்றைக் கொண்டு அலையார்ந்த புனல் பாய்கின்ற கெடிலக் கரையில் உள்ளதும், நறுமணமிக்க திருநீற்றினையணிந்த இறைவன் விளங்குவதுமாகிய திருவதிகை வீரட்டத்தை உரையேனாகில் என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ?

**1611.** உலந்தார் வெண்தலை உண்கல னாகவே
வலந்தான் மிக்கவவ் வாளரக் கன்றனைச்
சிலம்பார் சேவடி யூன்றினான் வீரட்டம்
புலம்பே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 12

இறந்தவர்களது (வாழ்நாள் உலந்தார்) வெள்ளிய தலைகளை உண்கலனாகக் கொண்டு, வெற்றிமிக்க அவ்வாளரக்கனாகிய இராவணனைச் சிலம்பணிந்த திருவடி விரலால் ஊன்றிய பெருமான் உறையும் திருவதிகை வீரட்டத்தைப் புலம்பிப் பாடேனாயின் என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ ?

இறைவர் தம் வலது திருவடியில் வீரக்கழலும், இடது திருவடியில் சிலம்பும் அணிந்திருப்பார். வலம் – வெற்றி; புலம்புதல் – மனங்கரைந்து பல காலம் சொல்லிப் புகழ்தல்



## 54. திருஅதிகைவீரட்டம்

எட்டு நாண்மலர் எனப்படும் அட்டபுட்பத்தால் அருச்சிப்பதன் சிறப்பை இப்பதிகம் விளக்குகிறது.

| | | |
|---|---|---|
| நாண்மலர் | – | அன்றலர்ந்த மலர் |
| எட்டு நாண்மலர் | – | புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, குவளை, அலரி, செந்தாமரை |
| மட்டுஅலர் | – | தேன்நிறைந்த மலர். "வேற்றாகி, விண்ணாகி" போன்ற போற்றித் திருப்பாடல்களைப் பாடி ஒவ்வொரு போற்றிக்கும் ஒரு மலரென்று அவரவர் வசதி வாய்ப்புகளுக்கேற்ப தினமும் 108 அல்லது 1008 மலர்களால் அருச்சனை செய்ய வேண்டும். |

"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" – திருமந்திரம்.

**அகப்பூசைக்குரிய அட்டபுட்பங்கள்** – கொல்லாமை, ஐம்பொறியடக்கம், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் நலஞ்சிறந்தார் மனத்தகத்து மலர்கள் எட்டும். இதனைத் தண்டகம் என்பர்.

**அட்டபுட்பமவை கொளுமாறு கொண்டு** – பூக்களை எடுக்கும் விதிமுறைப்படி எடுத்து, கொய்யும் முறைப்படி கொய்து.

ப.தொ.எண் : 167 | பதிக எண் : 54

| பாடல் | | உரை |
|---|---|---|
| **1612.** எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி<br>மட்ட லரிடு வார்வினை மாயுமால்<br>கட்டித் தேன்கலந் தன்ன கெடிலவீ<br>ரட்ட னாரடி சேரு மவருக்கே. | 1 | கன்னற்கட்டியும் தேனும் கலந்ததைப் போன்று இனிக்கும் கெடிலவீரட்டனார் சேவடி சேர்பவராய், எட்டுவகைப்பட்ட நாண்மலர்களாகிய தேனவிழும் மலர்களை இட்டு வழிபடுவார் வினைகள் மாயும். |
| **1613.** நீள மாநினைந் தெண்மல ரிட்டவர்<br>கோள வல்வினை யுங்குறை விப்பரால்<br>வாள மாலிழி யுங்கெடி லக்கரை<br>வேளி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. | 2 | வட்டமாகவும், பெரிதாகவும் ஓடுகின்ற கெடில நதிக்கரை வேலிபோல் சூழ்ந்த வீரட்டத் திறைவர், தம்மை இடைவிடாது நினைந்த எண்வகை மலர்களால் வழிபடுபவர்களின் கொடிய வல்வினையை நீக்குவர். |
| **1614.** கள்ளி னாண்மல ரோரிரு நான்குகொண்டு<br>உள்கு வாரவர் வல்வினை யோட்டுவார்<br>தெள்ளு நீர்வயல் பாய்கெடி லக்கரை<br>வெள்ளை நீறணி மேனிவீ ரட்டரே. | 3 | தெள்ளிய நீர்வயலிற் பாய்கின்ற கெடிலக் கரையில் உள்ள திருவதிகைவீரட்டத்தில் எழுந்தருளியிருப்பவராகிய வெண்ணீறணிந்த திருமேனி உடைய பெருமான், தேன் ஒழுகுகின்ற புதிய எட்டு மலர்களைக் கொண்டு அருச்சித்துத் தம்மை உள்குவார்களுடைய வல்வினைகளை ஓட்டுவார். |
| **1615.** பூங்கொத் தாயின மூன்றொடோ ரைந்திட்டு<br>வாங்கி நின்றவர் வல்வினை யோட்டுவார்<br>வீங்கு தண்புனல் பாய்கெடி லக்கரை<br>வேங்கைத் தோலுடை யாடைவீ ரட்டரே. | 4 | செறிந்த குளிர்நீர் பாய்கின்ற கெடிலக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளி யிருப்பவராகிய, புலித்தோலை ஆடையாக உடுத்த பெருமானே, எட்டுவகைப்பட்ட பூங்கொத்துக்களை இட்டு வணங்கிநிற்கும் அடியார்களுடைய வல்வினைகளை ஓட்டுவார். |
| **1616.** தேனப் போதுகள் மூன்றொடோ ரைந்துடன்<br>தானப் போதிடு வார்வினை தீர்ப்பவர்<br>மீனத் தண்புனல் பாய்கெடி லக்கரை<br>வேன லானை யுரித்தவீ ரட்டரே.<br><br>வேனலானை – கோபமுடையானை | 5 | மீன்களை உடைய குளிர்புனல் பாய்கின்ற கெடிலக் கரையில் உள்ள திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளியிருப்பவரும், ஆனை உரித்தவருமாகிய பெருமான், தேன் உடைய – அழகிய போதுகளாகிய எட்டு வகைப்பட்ட மணமலர்களை இட்டு வணங்குவார் வினைகளைத் தீர்ப்பவர் ஆவர். |

| பாடல் | உரை |
| --- | --- |
| **1617.** ஏழித் தொன்மலர் கொண்டு பணிந்தவர்<br>ஊழித் தொல்வினை யோட அகற்றுவார்<br>பாழித் தண்புனல் பாய்கெடி லக்கரை<br>வேழத் தின்னுரி போர்த்தவீ ரட்டரே. 6<br><br>ஏழி – ஏழை முன்னாக உடையது எட்டு<br>ஊழி – பல பிறப்புக்கள்<br>பாழி – வலிமை | வன்மை உடையதாகிய குளிர்புனல் பாய்கின்ற கெடிலக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளியிருப்பவரும், வேழத்தின் உரியைப் போர்த்தவருமாகிய பெருமானே, இதழி (ஏழி)யாகிய கொன்றை மலர்களைக் கொண்டு பணிந்த, அடியார்களுடைய ஊழியாகத் தொடர்ந்து வரும் பழைய வினைகள் ஓடும்படி நீக்குவார். |
| **1618.** **உரைசெய் நூல்வழி** யொண்மல ரெட்டிடத்<br>திரைகள் போல்வரு வல்வினை தீர்ப்பரால்<br>வரைகள் வந்திழி யுங்கெடி லக்கரை<br>விரைகள் சூழ்ந்தழ காயவீ ரட்டரே. 7<br><br>வரைகள் – மலைகள்<br>விரைகள் – மணப்பொருள்கள்<br>திரைகள் – அலைகள் | மலைகளினின்று வந்து இழிவதாகிய கெடில நதியின் கரையில் உள்ளதும், நறுமணஞ் சூழ்ந்து எழில் பெற்றதுமாகிய திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானே, ஆகம நூல்கள் உரைக்கின்ற நெறியின்படி, எட்டு வகைப்பட்ட ஒளியுடைய மலர்களை இட்டு வணங்கும் அடியார்களின் அலைகள்போல் வருகின்ற வல்வினைகளைத் தீர்ப்பவர் ஆவர். |
| **1619.** ஒலி வண்டறை யொண்மல ரெட்டினால்<br>காலை யேத்த வினையைக் கழிப்பரால்<br>ஆலி வந்திழி யுங்கெடி லக்கரை<br>வேலி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. 8<br><br>ஆலி – ஒலித்து | மழைநீர் வந்து இழிகின்ற கெடில நதியின் கரையில் உள்ளதும், வேலிகள் சூழ்ந்து எழில் உடையதுமாகிய திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானே, ஓலமிடும் வண்டுகள் ஒலிக்கும் எட்டுவகைப்பட்ட மலர்களால் தம்மைக் காலத்தேவந்து வழிபடுவார்களின் வினையைத் தீர்ப்பவர். |
| **1620.** தாரித் துள்ளித் தடமல ரெட்டினால்<br>பாரித் தேத்தவல் லார்வினை பாற்றுவார்<br>மூரித் தெண்திரை பாய்கெடி லக்கரை<br>வேரிச் செஞ்சடை வேய்ந்தவீ ரட்டரே. 9<br><br>தரித்து என்பது தாரித்து என நீண்டது<br>தரித்தல் – மனத்திற் கொள்ளல்<br>தடமலர் – பெரிதாகிய மலர்<br>பாரித்து – மிகுந்து; பாற்றுவார் – அகற்றுவார்<br>மூரி – பெரிய; வேரி – தேன் பொருந்திய மலர் | வலிமை உடையதாய், தெளிந்துவரும் அலைகளை உடையதாய், பாய்கின்ற கெடிலநதியின் கரையின்கண் உள்ள வீரட்டத்தில் எழுந்தருளியுள்ள மணம் வீசும் செஞ்சடையை நன்கு கட்டிய பெருமான், மனத்தே இறைவன் திருவுருவைத் தாங்கிச் சிந்தித்து எட்டு வகைப்பட்ட மலர்களால் ஏத்தும் வல்லமை உடைய அடியார்களின் வினைகளைக் கெடுப்பார். |

| | |
|---|---|
| 1621. அட்ட புட்ப மவைகொளு மாறுகொண்<br>டட்ட மூர்த்தி அனாதிதன் பாலணைந்<br>தட்டு மாறுசெய் கிற்பவ திகைவீ<br>ரட்ட னாரடி சேரு மவர்களே. 10 | திருவதிகைவீரட்டனார், திருவடி சேரும் அடியார்கள், அட்ட புட்பங்களை விதிமுறைப்படி கொண்டு அட்டமூர்த்தியும், ஆதியற்றவரும் ஆகிய பெருமானின்பால் அணைந்து பொருந்துமாறு வழிபாடு செய்யும் திறம் உடையவர் ஆவர். |

## புட்ப விதி

நமது முன்னோர்கள் கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ எனப் பூக்களை நான்கு வகைகளாகப் பிரித்துள்ளார்கள்.

### 1. கோட்டுப் பூவகை

வன்னி பலா எலுமிச்சை நாரத்தை கோங்கு
மந்தாரை ஊமத்தை மாவிலிங்கை நொச்சி
பன்னியகில் சந்துமகிழ் மாதுளைமா வசோகு
பாதிரிவெள் ளெருக்கிலந்தை பலாசுநுணா நறவம்
புன்னைவிளா மருதுகொன்றை நெல்லிகுரா செருந்தி
பொன்னினாவிரை கிளுவை குருந்துவில்வ நாவல்
மன்னுதா தகிகுளஞ்சி யலரிவெட்சி பவள
மல்லிகைசண் பகஞாழல் கோட்டுப்பூ வகையே.

(1. வன்னி, 2. பலா, 3. எலுமிச்சை 4. நாரத்தை 5. கோங்கு 6. மந்தாரை, 7. கருஊமத்தை 8. மாவிலிங்கை 9. நொச்சி 10. பன்னீர் 11. அகில் 12. மாதுளை 13. மா 14. அசோகு 15. பாதிரி 16. வெள்ளெருக்கு 17. இலந்தை 18. பலாசு 19. நுணா 20. நறவம் 21. புன்னை 22. விளா 23. மருது 24. கொன்றை 25. நெல்லி 26. குரா 27. செருந்தி 28. பொன்னாவரை 29. கிளுவை 30. குருந்து 31. வில்வம் 32. நாவல்)

### 2. கொடிப் பூவகை

மருவாரும் காந்தள் காட்டு மல்லிகை முல்லை மௌவல்
கருவார்வெற் றிலையே தாளி கருமுகை கருங்காக் கொன்றை
முருகாரும் வெண்காக் கொன்றை குருக்கத்தி முதலாயுள்ள
விருவாட்சி கொகுடி பிச்சி யிவையெலாம் கொடிப்பூவாமே.

(1. காந்தள் 2. காட்டுமல்லிகை 3. முல்லை 4. மௌவல் 5. வெற்றிலை 6. தாளி 7. கருங்காக்கொன்றை 8. வெண்காக்கொன்றை 9. குருக்கத்தி 10. இருவாட்சி 11. கொகுடி 12. பிச்சி)

### 3. நீர்ப் பூவகை

செய்ய தாமரை சேர்ந்தபொற் றாமரை
துய்ய தாமரை சொல்லிரண் டுற்பலம்
மைய செம்மைய வெண்மைய வாகிய
நெய்தல் மற்றிவை நீரின் மலர்களே.

(1. செந்தாமரை 2. அதிக இதழில்லாத தாமரை 3. வெண்தாமரை 4. செங்கழுநீர் 5. நீலோற்பலம் 6. கருநெய்தல் 7. செந்நெய்தல் 8. வெண்நெய்தல்)

**4. நிலப்பூ வகை**

பட்டிநா யுருவி பூளை பச்சைசெவ் வந்தி தும்பை
வெட்டிவேர் மருக்கொழுந்து கரந்தையே விஷ்ணு காந்தி
மட்டவிழ் துழாய்செங் கீரை மத்தைசெம் பரத்தை வங்க
மிட்டகொக் கிறக னிச்சம் வலம்புரி யிவைநிலப் பூவே.

(1. பட்டி 2. நாயுருவி 3. கண்ணுப்பூ 4. பச்சை 5. செவந்தி 6. தும்பை 7. வெட்டிவேர் 8. மருக்கொழுந்து 9. சிவகரந்தை 10. விஷ்ணுகாந்தி 11. துளசி 12. செங்கீரை 13. கருஊமத்தை 14. செம்பரத்தை 15. கொக்கிறகு 16. அனிச்சம் 17. நந்தியாவட்டை

**5. வில்வம் எடுக்காத காலம்**

தவமுறு மாதமுன் சதுர்த்தி யட்டமி
நவமியே சதுர்த்தசி நவின்ற நல்லுவா
வவமுறு சோமவா ரத்து மன்பர்கள்
சிவனருச் சனைசெயும் வில்வம் தீண்டார்.

(மாதப்பிறப்பு, சதுர்த்தி, அட்டமி, நவமி, சதுர்த்தசி, அமாவாசை, பௌர்ணமி, திங்கள் கிழமை ஆகிய நாட்களில் எடுக்கலாகாது)

**6. பஞ்ச வில்வம்**

மெச்சியே படியவர் வியந்து சாத்திடு
நொச்சியே நறுவிளா நுவன்ற கூவிளம்
வைச்சிடும் கிளுவையே மாவி லிங்கையின்
பச்சிலை யென்றிவை பஞ்ச வில்வமே.

(1. நொச்சி 2. விளா 3. வில்வம் 4. கிளுவை 5. மாவிலிங்கம்)

**7. மாத புட்பம்**

மெத்திய பலாசு புன்னை வெள்ளெருக் கலரிப் போது
கொத்தலர் சண்பகப்பூக் கொன்றையே தும்பை செய்ய
கத்தரி பட்டிகஞ்ச காவிமல் லிகையீ ராறும்
சித்திரை முதலாக் கொள்க சிறந்திடு மாத புட்பம்.

(1. சித்திரை – பலாசு, 2. வைகாசி – புன்னை 3. ஆனி – வெள்ளெருக்கு 4. ஆடி – அரளி 5. ஆவணி – சண்பகம் 6. புரட்டாசி – கொன்றை 7. ஐப்பசி – தும்பை 8. கார்த்திகை – கத்திரி 9. மார்கழி – பட்டி 10. தை – தாமரை 11. மாசி – நீலோற்பலம் 12. பங்குனி – மல்லிகை)

**8. நிர்மாலியம் ஆகியும் பூசைக்குப் பயன்படும் பத்திர புட்பங்கள்**

செழித்திடும் துளபமும் சிறந்த வில்வமும்
வழுத்துபொன் மத்தமு மலரு நீலமும்
மழுத்துசெம் பொன்மல ரதனைப் போலவே
கழித்தநிர் மால்யமும் கழுவிச் சாத்தலாம்.

(ஒருமுறை அர்ச்சித்த துளசி, வில்வம், கருஊமத்தை, நீலோத்பலம் ஆகியவைகளைப் பொன்மலரைப் போலவே கழுவிச் சாத்தலாம்)

**9. மலர்கள் பூசைக்குப் பயன்படும் கால அளவு**

அம்புயம் ஏழுநாள் அலரி மூன் றுநாள்
வம்பவிர் குடலையில் வைத்துச் சாத்தலாம்
நம்பிடு நறுமலர் நண்ணி டாவிடின்
தம்பழுப் பரும்பிலை தளிரும் சாத்தலாம்

(தாமரைப்பூவை ஏழுநாளும் அரளிப்பூவை மூன்று நாளும் குடலையில் வைத்திருந்து சாத்தலாம். வாசனைப் புஷ்பங்கள் அகப்படாத போது பழுப்பிலை தளிர்களையும் சாத்தலாம்). "யாவர்க்குமாம் இறைவர்க்கு ஒரு பச்சிலை" திருமந்திரம்.

**10. ஆகாத புட்பங்கள்**

எடுத்துவைத்தே அலர்ந்தமலர் பழம்பூக்கள் மற்ற
வெருக்கிலையா மணக்கிலை யினிற்பொதிந்த பூக்கள்
உடுத்தபுடை வையிற்கரத்தி னமைத்தநறும் பூக்கள்
உதிர்ந்திடுபூ வரையின்கீ ழுற்றவிரைப் பூக்கள்
அடுத்தபுழுக் கடியெச்சம் சிலந்திமயிர் உறுதல்
அங்கையில்வைத் தங்கைகுவித் திடுதல் கங்குறனிலே
எடுத்தமலர் நீரமிழ்த்தல் புறங்காட்டி லெய்தல்
எச்சில்குளி யாதெடுத்தல் இழிபெனுமா கமமே.

(எடுத்தபின் மலர்ந்தபூ, பழம்பூக்கள், எருக்கிலையிலும், ஆமணக்கிலையிலும் கட்டிவைத்த பூக்கள், கட்டிய ஆடையிலும் கையிலும் வைத்த பூக்கள், கீழே உதிர்ந்த பூக்கள், இடுப்பிற்குக் கீழேயுள்ள உறுப்புகளில் பட்ட பூக்கள், புழுக்கடிப் பூக்கள், சிலந்தியும் பறவைகளின் எச்சமும் பட்ட பூக்கள், மயிர்ப்பட்ட பூக்கள், கையில்வைத்துக் குவித்திடும் பூக்கள், இரவில் எடுத்த பூக்கள், நீரில் மூழ்கிய பூக்கள் இடுகாட்டில் எடுத்த பூக்கள், குளியாமல் எடுத்த பூக்கள் ஆகியவை ஆகாவாம்).

**11. அ) மாத அபிடேகம்**

கொழுந்து சந்தனம் கூறிய முப்பழம்
அருந்து பால்சர்க் கரைபணி யாரமே
தழைந்த வன்னம் தழனெய் யொழுகுதேன்
விழைந்த நெய்பொதி கம்பளம் வெண்டயிர்

(சித்திரை மாதத்தில் தளிராலும், வைகாசியில் சந்தனத்தாலும், ஆனியில் மா, பலா, வாழை என்ற முப்பழத்தாலும், ஆடியில் பாலாலும், ஆவணியில் சர்க்கரையாலும், புரட்டாசியில் பணியாரத்தாலும், ஐப்பசியில் அன்னத்தாலும், கார்த்திகையில் நெய்யாலும், மார்கழியில் தேனாலும், தையில் நெய்யாலும், மாசியில் கம்பளத்தாலும், பங்குனியில் தயிராலும் அபிஷேகம் செய்யலாம்).

**ஆ) அன்றாட அபிடேகம் –** ஆன்மார்த்த படிகலிங்க மூர்த்திக்கு அவரவர் நேரம், இடம், வசதிக்கேற்ப மேற்கண்ட பொருள்களை ஒன்றாகவோ, பலவாகவோ கொண்டு அபிடேகம் செய்யலாம். மஞ்சள், நெல்லிப்பொடி, அரிசி மாப்பொடி, திருமஞ்சனப்பொடி, ஆனஞ்சு, தேனஞ்சு (பஞ்சாமிர்தம்), நெய், தேன், பசும்பால், பால் + தேன், தயிர், சுத்தஅன்னம், இளநீர், எலுமிச்சை (கனிகள்), திருநீறு, சங்குநீர், ஸ்வர்ணநீர், கங்கை, சந்தனம், பன்னீர் என்ற வரிசையில் பதிப்பாசிரியரும், அவர் துணைவியாரும் தத்தம் மூர்த்திக்கு அபிடேகம் செய்து மகிழ்கிறார்கள்.

**12. வாரபுட்பம்**

பங்கய மலர்ந்தவெள் ளாம்பல் பாசடை
செங்கழு நீர்மலர் தகரச் செம்மலர்
தங்கிய குவலயம் ததைவெண் டாமரை
மங்கைகேள் நீலமேழ் வார புட்பமே

(ஞாயிறு – தாமரை, திங்கள் – வெள்ளை அல்லி, செவ்வாய் – செங்கழு நீர், புதன் – தகரப்பூ, வியாழன் – குவலய மலர், வெள்ளி – வெண்தாமரை, சனி – நீலோற்பலம்).

## தொழுதகை நந்தவனங்கள்

நாயன்மார்களைப் பற்றிச் சொல்லும் பொழுதெல்லாம் சேக்கிழார் சுவாமிகள் நாட்டு, நகரச் சிறப்புகளையும் எடுத்தியம்புவார்கள். ஆனால் மூவரும் தில்லைக்கு வருகை புரிந்ததைப் பாடும்போது மூவர் வரலாற்றிலும் தில்லையில் நந்தவனங்களின் பெருமைகளைக் கூறுகிறார். தில்லை நந்தவனங்களுக்கு மட்டும் அவ்வளவு பெருமைகளா? மற்றெவ்வூர் நந்தவனங்களுக்கும் இல்லாத சிறப்பு, தில்லை நந்தவனங்களுக்குண்டு. ஏனென்றால் அது வியாக்கிர பாதர் வாழ்ந்த ஊர். இறைவனின் திருநடனம் காணவேண்டுமென்ற ஒரே காரணத்துக்காக தில்லைக்கு வந்து அதற்காகவே தினமும் ஆடல் வல்லானுக்குப் பூவும் புனலும் கொண்டு பூசைகள் புரிந்து வந்தார். மரங்கள் ஏறி மலர் பறிப்பதற்காகவே கைநகங்களில் கண்களையும், புலிக்காலையும் விரும்பிப் பெற்றவர். அந்த மண்ணுக்கு அவர் அளித்த மண் வாசனைதான் பூவாசனை. எனவேதான் நந்தவனச் சிறப்பைச் சேக்கிழார் இவ்வாறு விவரிக்கிறார்.

## மூவர் தொழுத தில்லை நந்தவனங்கள்

வன்னி கொன்றைவழை சண்பக மார மலர்ப்ப லாசொடு செருந்திமந்தாரங்
கன்னி காரங்குர வங்கமிழ் புன்னை கற்பு பாடலங் கூவிள மோங்கித்
துன்னு சாதிமரு மாலதி மௌவல் துதைந்த நந்திகர வீரமிடைந்த
பன்ம லர்ப்புனித நந்தன வனங்கள் பணிந்து சென்றனன் மணங்கமிழ் தாரான்

வன்னி, கொன்றை முதலிய பூ மரங்கள் ஓங்கியும், சாதி முதலிய பூக்கொடிகள் நிரம்பியும் நந்தியாவட்டம் முதலிய பூச்செடிகள் நெருங்கியும் உள்ள தில்லையின் எல்லையில் உள்ள தூய நத்தவனங்களைப் பணிந்து கொண்டு **வன்றொண்டர்** ஆனந்தக் கூத்தைத் தரிசிக்கச் சென்றார் என்று மேற்காண் பாடலில் சேக்கிழார் பெருமான் தடுத்தாட் கொண்ட புராணத்தில் **(240)** கூறுகிறார்.

அறிவிற் பெரியவர் அயல்நெற் பணைவயல் அவைபிற் படும்வகை அணைகின்றார்
பிறவிப் பகைநெறி விடுவீர் இருவினைபெருகித் தொடர்பிணி யுறுபாசம்,
பறிவுற் றிடவணை யுமின் என்றிரு புடைபயில்சூழ் சினைமிசை குயிற்கூவும்

செறிவிற் பலதரு நிலையிற் பொலிவுறு திருநந்தவன மெதிர் கண்டார் – 1424

அவர்முன் பணிவொடு தொழுதங் கணைவுற.... 1425

**திருநாவுக்கரசு சுவாமிகள்** தில்லையின் எல்லையில் அவ்வாறே நந்தவனங்களைத் தொழுததாகச் சேக்கிழார் சுவாமிகள் மேற்காண் பாடலில் பதிவு செய்கிறார்.

கரும்பு செந்நெல்பைங் கமுகொடு கலந்துயர் கழனியம் பணைநீங்கி

அரும்பு மென்மலர் தளிர்பல மூலமென் றனைத்தினா கரமான
மருங்கி னந்தன வனம்பணிந் தணைந்தனர் மாடமா ளிகை யோங்கி
நெருங்கு தில்லைசூழ் நெடுமதில் தென்திரு வாயினே ரணித்தாக

அரும்புகளும், மெல்லிய மலர்களும், தளிர்களும், பழங்களும், வேர்களும் என்றிவை முதலாகிய எல்லாவற்றுக்கும் பிறப்பிடமாகிய பக்கத்தில் உள்ள நந்தவனங்களைப் பணிந்து தில்லைக்கூத்தனின் தென்திருவாயிலை அடைந்தார் **திருஞானசம்பந்தர்** என்று சேக்கிழார் சுவாமிகள் 2050 ஆம் பாட்டில் கூறுகிறார்.

இறைவர் திருமேனியில் சாத்தவும், நேரே திருவமுதமாக உண்பிக்கவும் உரிய பொருள்கள் உண்டாகும் இடமாதலாலும் **சிவபுண்ணியத்திற்காகவே பிறப்பு எடுத்த உயிர்களே இங்கு தாவரங்களாக வரும் தன்மையாலும் நந்தவனம் பணியப்படும் தகுதியுடையதாம்** என்பதை மூவர் பணிந்ததன் மூலம் நாமெல்லாம் உணர வேண்டும்.

மேற்காண் பாடல்களில் வன்னி – கொன்றை – வழை (சுரபுன்னை) – சண்பகம் – ஆரம் (சந்தனம் – ஆத்தி), மலர்ப் பசாசு (முறுக்கு) – செருந்தி (மஞ்சள் மலர்), கன்னிகாரம் (கோங்கு) – குரவம் – குரா – பாடலம் – பாதிரி – கூவிளம் (வில்வம்) என்ற இவை பூவும் இலையும் தரும் மரங்கள். கூவிளம் – வன்னி – ஆரம் இவற்றின் இலைகள் பூசைக்குரியன. ஆத்தியும் குராவும் நீர்ச்செறிவுள்ள புறவங்களில் வளர்வன. ஆத்தியின் மலரும், தளிரும் சிவபூசைக்காகும். கற்பு – கற்பகம் (பாரி சாதம்).

துன்னு – மருமாலதி – மௌவல் – இவை சாதி, கரவீரம் – அலரி நிலப்பூச் செடிகள்

நாளிகே ரஞ்செ ருந்தி நறுமலர் நரந்தம் எங்கும்
கோளிசா லந்த மாலம் குளிர்மலர்க குரவம் எங்கும்
தாளிரும் போந்து சந்து தண்மலர் நாகம் எங்கும்
நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்கம் எங்கும்

சூதபா டலங்கள் எங்கும் சூழ்வழை ஞாழல் எங்கும்
சாதிமா லதிகள் எங்கும் தண்தளிர் நறவம் எங்கும்
மாதவி சரளம் எங்கும் வகுளசண் பகங்கள் எங்கும்
போதவிழ் கைதை எங்கும் பூசு புன் னாகம் எங்கும்

என்று பல பாடல்களில் சேக்கிழார் சுவாமிகள் மனிதரின் முயற்சியின்றி தாமே நீர்ப்பெருக்குள்ள இடங்களில் முளைத்து வளர்ந்து செறிந்து காணப்படுவன – மனிதர் முயன்று பயிற்சி செய்து ஆக்குவன –

மரத்தொகுதிகள் தனியாக, செடிகள் தனியாகக் கொடிகள் தனியாக விளங்குவன என்று காட்டுகிறார். பள்ளித்தாமம் எனப்படும் சிவபூசைக்குரிய பூ – இலை – வேர்களைக் கொடுக்கும் மரம், செடி, கொடிகள், புண்ணியப் பொருள்கள். ஆதலின் அவற்றை வணங்க வேண்டி தகுதி காட்டப் பெற்றது. மிகப் புனிதமாகிய உயிர்களே, தவ விசேடத்தில் சிவபூசைக்குரிய பூ, மரம், செடி, கொடி காய்களாக இருப்பவையாம். இவ்வகையான பிறப்பைத் தனக்குத் தருமாறு ஒரு முனிவர் வரம் பெற்றதாக சிவரகசியத்தில் சொல்லப்பட்டுள்ளது.

ஆக நந்தவனத்தை நிறுவுதலும், அதைப் பராமரிப்பதும் வாழ்நாளின் முக்கியமான தொண்டாகும். நல்ல மண்வளம், நீர்வளம் உள்ள நிலத்தைத் தேர்ந்தெடுத்து உழுது, இயற்கை மண் உரமிட்டு வானுற உயரும் மரங்களை வெளிப்பக்கச் சுற்றில் வைக்கவேண்டும். அதாவது இறுதி / நிறைவுச் சுற்றாக மரங்கள் இருக்க வேண்டும். அதில் கோட்டுப்பூக்கள் பறிக்கலாம். நடு ஆவரணத்தில் / சுற்றில் செடிப்பூ தரும் செடிகளைப் பயிரிட வேண்டும். உள்சுற்றில் அதிகக்காற்று வராத இடத்தில் கொடிவகைப் பூக்களைத் தரும் கொடிகளைப் பயிரிடவேண்டும்.

வடகிழக்கு மூலையில் நீர்நிலை ஏற்படுத்தி, அதில் நீர்ப்பூக்கள் பயிரிட வேண்டும். தென்மேற்கு மூலையில் மேல்நிலைத்தொட்டி அமைக்கப்பட்டு வடகிழக்கில் வடக்காகவும், தென்கிழக்கில் தெற்காகவும் வாஸ்து சாத்திர முறையில் வழிகள் அமைக்கப்பட்டு நந்தவனம் அமைக்கப்பட வேண்டும்.

உடல் ஒத்துழைப்புத்தரும் வரை அடியார் பெருமக்கள் ஒரு நாளைக்கு ஒரு மணிநேரம் நந்தவனங்களைக் காத்து வந்தால் மருத்துவரிடம் செல்ல வேண்டியதில்லை.

மரங்களைச் சுற்றிப் புதர், களை வளராமல் கொத்துவானைக் கொண்டு புற்களைக் களைய வேண்டும்..

பனி, புயல், புகை, நெருப்பு, சிலந்தி இவற்றிலிருந்து மரங்களைக் காப்பாற்ற வேண்டும்.

மரங்களுக்குத் தோஷம் ஏற்படாமலிருக்க வெண்கடுகு, மஞ்சள், மருதமலர், வாயுவிளங்கத்தையும் சேர்த்துப் புகைமூட்டம் போட வேண்டும்.

எள்ளுப் பிண்ணாக்கும் வாயுவிளங்கமும் கலந்த கலவை ஒரு சிறந்த பூச்சிக்கொல்லி. பாலையும், நீரையும் கலந்து திரவமாகத் தெளிக்கலாம். நெய் ஊற்றி வளர்க்கும் ஓமப்புகையைப் பரப்பினால் உத்தமம்.



நந்தவனம்
வ
வழி
வெண் நாவல்
நொச்சி
விளா
வில்வம்
கிளுவை
மாவி லிங்கம்
கரு ஊமத்தை
நெல்லி
சோகு
நாக லிங்கம்
பாடலம்
நாகம்
தேவதாரு
ஆரம்
குருக்கத்தி
மாதுளம்
மருது
குரா
கொன்றை
புலி நகக் கொன்றை
சரக் கொன்றை
வெற்றிலை
வெள் ளெருக்கு
நீர்நிலை நீர்ப்பூக்கள் வளர்க்கும் இடம்
இலந்தை
ஆத்தி
வெட்டி வேர்
சாதி
மல்லிகை
முல்லை
அனிச்சம்
தாமரை, நீலோற்பலம்
வன்னி
செருந்தி
அரசு
தாழை
புன்னை
மந்தாரம்
குங்குமப்பூ பாரிசாதம்
கடம்பு
பசாசு
கூதம்
நந்தியா வட்டம்
கரவீரம்
நாரத்தை
சந்தனம்
உரம் தயாரிக்குமிடம்
காஞ்சி
வன்னி
ரோஜா
ஆரம்
சண்பகம்
அலரி
வஞ்சி
வாழை
கோங்கு
பனை
நாளி கேரம்
மகிழமரம்
கூவிளம்
அரசு

நந்தவனத்தில் வெளிச்சுற்றில் பெரிய மரங்களை வைக்க வேண்டும். அவை பெருங்காற்று நந்தவனத்தின் உள்ளே வராவண்ணம் காக்கும்.

உள்ளே செடிகளையும், கொடிகளையும் பயிரிட வேண்டும்.

மூலமாகிய கருப்பொருள் நன்றாக இருந்தால்தான் உற்பத்தியாகும் பொருளும் நன்றாக இருக்கும். வித்து எப்படியோ, அப்படித்தான் விளைபொருளும். எனவே நந்தவனம் நன்றாக இருந்தால் தான் நல்ல மலர்கள் கிடைக்கும். நல்ல மலர்களால் பூசித்தால்தான் நல்ல பலன் கிடைக்கும்.

சண்டேச நாயனார் புராணத்தில் சேக்கிழார் சண்டேச நாயனார் எப்படிப் பசும்புல் தரைகளை நன்றாக வளர்த்து அவற்றில் பசுக்களை மேயவிட்டு நல்ல பசும்பாலினால் ஆனைந்தாட்டினார் என்று பதிவு செய்துள்ளார். தரக்குறைவான இடங்களில் அவர் ஆநிரைகளை மேயவே விட மாட்டார். இன்றைய நாகரீக காலத்துப் பசுக்கள் நகரங்களில் சுவரொட்டிகளை மேய்வதைப் பார்த்தால் இரத்தக் கண்ணீர் விடுவார்.

தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்களுக்கு – தரத்துக்கு இன்று மேலைநாட்டினர் மிகுந்த முக்கியவத்துவம் கொடுக்கிறார்கள். பத்துலட்சம் பொருள்கள் ஒரே மாதிரி உற்பத்தி செய்யும் ஒரு இடத்தில் ஒரு பொருள் கூட தரக்குறைவாக இருக்கக்கூடாது என்று தரக்கட்டுப்பாடு விதித்துள்ளார்கள். குழந்தைத் தொழிலாளி உற்பத்தி செய்யும் பொருளை வாங்கக்கூடாது என்று கூடத் தடை விதித்துள்ளார்கள்.

மூலம் முக்கியமாக – நன்றாக இருக்க வேண்டுமென்ற கருத்தை நிலைநாட்டுகிறார்கள்.

## 55. திருநாரையூர்

ப.தொ.எண் : 168 பதிக எண் : 55

**1622.** வீறு தானுடை வெற்பன் மடந்தையோர்
கூற னாகிலுங் கூன்பிறை சூடிலும்
நாறு பூம்பொழில் நாரையூர் நம்பனுக்
காறு சூடலும் அம்ம அழகிதே. 1

"அம்ம அழகிதே" – பதிக மகுடம்

மணம் வீசுகின்ற பூம்பொழில்களை உடைய நாரையூரின்கண் எழுந்தருளியுள்ள நம் இறைவர், பிறிதொன்றற்கில்லாத பெருஞ் சிறப்புடைய திருக்கயிலாயத்தை உடையவர். உமையம்மையை ஒருபங்கில் உடையவர்; வளைந்த பிறை சூடியவர், ஆயினும் கங்கையாற்றினைச் சடையிற் சூடல், மிக்க அழகும் வியப்பும் உடையதே.

**1623.** புள்ளி கொண்ட புலியுரி யாடையும்
வெள்ளி கொண்ட வெண் பூதிமெய் யாடலும்
நள்ளி தெண்டிரை நாரையூ ரான்நஞ்சை
அள்ளி யுண்டலு மம்ம வழகிதே. 2

தெளிந்த நீர்வளம் உடைய நாரையூரின்கண் விரும்பி எழுந்தருளியுள்ள பெருமான், புள்ளிகளை உடைய புலித்தோலாடையும், வெள்ளி போன்ற நிறம் கொண்ட திருநீற்றுச் பூச்சுடைய திருமேனியும் உடையவராயினும், நஞ்சை அள்ளி உண்டல் மிக்க அழகும் வியப்பும் உடையதேயாகும்.

**1624.** வேடு தங்கிய வேடமும் வெண்தலை
ஓடு தங்கிய வுண்பலி கொள்கையும்
நாடு தங்கிய நாரையூ ரான்நடம்
ஆடு பைங்கழ லம்ம வழகிதே. 3

நாட்டின்கண் தங்கிய புகழை உடைய நாரையூரில் எழுந்தருளியுள்ள பெருமான், வேடத்தன்மை தங்கிய திருவேடமும், வெண்தலை ஓட்டில் தங்கிய உணவை உண்ணும் கொள்கையும் உடையவராயினும், நடம் ஆடுகின்ற பைங்கழல் சேவடி, மிக்க அழகும் வியப்பும் உடையதேயாகும்.

| | | |
|---|---|---|
| **1625.** கொக்கின் தூவலுங் கூவிளங் கண்ணியும்<br>மிக்க வெண்டலை மாலை விரிசடை<br>நக்க னாகிலும் நாரையூர் நம்பனுக்<br>**கக்கி னா**ரமு மம்ம வழகிதே.<br><br>அக்கம் – உருத்திராக்கம் | 4 | திருநாரையூரில் எழுந்தருளியுள்ள நம் பெருமான், கொக்கு வடிவாய் நின்ற அசுரனின் இறகும், வில்வ மாலையாகிய தலைக்கண்ணியும், மிகுந்த வெண்தலை மாலையும், விரிந்த சடையும் உடைய திகம்பரனேயாயினும் உருத்திராக்க மாலை அணிந்திருத்தல், மிக்க வியப்பும் அழகும் உடையதேயாகும். |
| **1626.** வடிகொள் வெண்மழு மான்அமர் கைகளும்<br>பொடிகொள் செம்பவ ளம்புரை மேனியும்<br>நடிகொள் நன்மயில் சேர்திரு நாரையூர்<br>அடிகள் தம்வடி வம்ம வழகிதே. | 5 | வடித்தலைக்கொண்ட ஒளியால் வெள்ளிய மழுப்படையும் மானும் விரும்புகின்ற கரங்களும், திருநீற்று வெண்பொடி பூசிய செம்பவளம் ஒத்த மேனியும், ஒருபங்கில் இருக்கும் நடித்தலைக் கொண்ட நன்மயில் போன்ற உமாதேவியும் உடைய திருநாரையூர்ப் பெருமானது வடிவு, மிக்க வியப்பும் அழகும் உடையதேயாகும். |
| **1627.** சூலம் மல்கிய கையுஞ் சுடரொடு<br>பாலும் நெய்தயி ராடிய பான்மையும்<br>ஞாலம் மல்கிய நாரையூர் நம்பனுக்கு<br>ஆல நீழலு மம்ம வழகிதே. | 6 | உலகத்தில் புகழ் நிறைந்த திருநாரையூர், நம் பெருமான் சுடரொடு நிறைந்த சூலம் பொருந்திய கையும், பால், நெய், தயிர் முதலிய பஞ்சகவ்வியம் ஆடிய தன்மையும் உடையவராயினும், ஆலநிழலில் இருந்து அறம் உரைத்தல், மிக்க வியப்பும் அழகும் உடையதேயாகும். |
| **1628.** பண்ணி னால்மறை பாடலோ டாடலும்<br>எண்ணி லார்புர மூன்றெரி செய்ததும்<br>நண்ணி னார்துயர் தீர்த்தலும் நாரையூர்<br>அண்ண லார்செய்கை யம்ம வழகிதே. | 7 | இசையொடு பொருந்திய நான்மறைகளைப் பாடுதலும், ஆடுதலும், நல்ல எண்ணமில்லாத தீயோர்களது முப்புரங்களை எரித்தலும், தம்மைப் பொருந்தியவரது துயரங்களைத் தீர்த்தலும் ஆகிய திருநாரையூர் அண்ணலார் செய்கைகள் அனைத்தும், மிக்க வியப்பும் அழகும் உடையனவேயாம். |
| **1629.** என்பு பூண்டெரு தேறி யிளம்பிறை<br>மின்பு ரிந்த சடைமேல் விளங்கவே<br>நன்ப கற்பலி தேரினும் நாரையூர்<br>அன்ப னுக்கது வம்ம வழகிதே. | 8 | எலும்புகளைப் பூண்டு, எருதின்மேல் ஏறி, இளம் பிறையினை மின்னலை முறுக்கினாலொத்த ஒளிச்சடையின் மேல் விளங்கச் சூடி, நல்ல பகலிலும் பலிதேர்வராயினும், திருநாரையூரில் உள்ள அன்பு வடிவாய சிவபெருமானுக்கு, அது மிக்க வியப்பும் அழகும் உடையதே. |

| | |
|---|---|
| 1630. முரலுங் கின்னர மொந்தை முழங்கவே<br>இரவி னின்றெரி யாடலு நீடுலாம்<br>நரலும் வாரிநன் னாரையூர் நம்பனுக்<br>கரவும் பூணுத லம்ம வழகிதே. 9<br><br>மொந்தை – தோற்பறை<br>நரலும் – ஆரவாரிக்கும்<br>வாரி – கடலால் சூழப்பட்ட | இனிய ஓசையோடு ஒலிக்கின்ற வாத்தியமும், தோற்பறையும் முழங்க, நீண்டு நிகழும் இரவில் இடுகாட்டில் நின்று எரித்து ஆடுதலும், அரவினைப் பூணுதலும் ஆகியவை கடல் ஒலிக்கும் திருநாரையூர் நம் பெருமானுக்கு, மிக்க வியப்பும் அழகும் உடையதேயாகும். |
| 1631. கடுக்கை யஞ்சடை யன்கயி லைம்மலை<br>எடுத்த வாளரக் கன்தலை யீரைஞ்சும்<br>நடுக்கம் வந்திற நாரையூ ரான்விரல்<br>அடுத்த தன்மையு மம்ம வழகிதே. 10<br><br>கடுக்கை – கொன்றை | கொன்றையினை உடைய அழகார்ந்த சடையனுக்குரிய திருக்கயிலாயத் திருமலையை எடுக்கலுற்ற வாளினை உடைய இராவணனது பத்துத் தலைகளும் நடுங்கி நெரியும் வண்ணம் திருநாரையூர்ப் பெருமான் திருவிரல் இயக்கிய தன்மை வியப்பும் அழகும் உடையதேயாகும். |

## 56. திருக்கோளிலி

ப.தொ.எண் : 169 பதிக எண் : 56

| | |
|---|---|
| 1632. மைக்கொள் கண்ணுமை பங்கினன் மான்மழுத்<br>தொக்க கையினன் செய்யதோர் சோதியன்<br>கொக்க மர்பொழில் சூழ்தரு கோளிலி<br>நக்க னைத்தொழ நம்வினை நாசமே. 1<br><br>வினையாகிய காரணம் அழியும் | மையணிந்த கண்களையுடைய உமையை ஒரு பங்கில் உடையவனும், மானும் மழுவும் பொருந்திய கைகளை உடையவனும், செவ்விதாகிய ஒப்பற்ற ஒளி வடிவினனும், மாமரங்கள் பொருந்திய பொழில் சூழ்ந்த **திருக்கோளிலி**யில் உறையும் பேரருள் கொண்ட பெருமானைத் தொழ நம் வினைகள் நாசமாம். |
| 1633. முத்தி னைமுத லாகிய மூர்த்தியை<br>வித்தி னைவிளை வாய விகிர்தனைக்<br>கொத்த லர்பொழில் சூழ்தரு கோளிலி<br>அத்த னைத்தொழ நீங்கும்நம் அல்லலே. 2<br><br>வினையின் காரியமாகிய துன்பம் கெடும் | முத்தினைப் போல்வானும், உலக முதலாக உள்ள திருவுரு உடையோனும், வித்தும் விளைவும் ஆகிய மேலானவனும், பூங்கொத்துக்களை உடைய பொழில்கள் சூழ்ந்த கோளிலியில் உறையும் அத்தனும் ஆகிய பெருமானைத் தொழ நம் அல்லல்கள் நீங்கும். |

| | |
|---|---|
| **1634.** வெண்டி ரைப்பர வைவிட முண்டதோர்<br>கண்ட னைக்கலந் தார்தமக் கன்பனைக்<br>கொண்ட லம்பொழிற் கோளிலி மேவிய<br>அண்ட னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. 3<br><br>வெண்டிரைப் பரவை – வெள்ளிய அலைகளோடு கூடிய கடல் | வெள்ளிய அலைகளை உடைய கடல் விடம் உண்ட ஒப்பற்ற திருநீலகண்டனும், நெஞ்சு கலந்து தொழுமவர்க்கு அன்பே வடிவாய் அருள்புரிபவனும், மேகங்கள் பொருந்துகின்ற அழகிய சோலைகளை உடைய கோளிலியில் விரும்பி உறையும் தேவனுமாகிய பெருமானைத் தொழுவார்க்கு அல்லல் இல்லை. |
| **1635.** பலவும் வல்வினை பாறும் பரிசினால்<br>உலவுங் கங்கையுந் திங்களு மொண்சடை<br>குலவி னான்குளி ரும்பொழிற் கோளிலி<br>நிலவி னான்றனை நித்தல் நினைமினே. 4 | வலிய வினைகள் பலவும் கெடும் தன்மையினால், கங்கையும் மதியும் உலவும் ஒள்ளிய சடை பொருந்தியவனும், குளிரும் பொழில்களை உடைய கோளிலியில் நிலவியவனுமாகிய பெருமானை நாடோறும் நினைந்து தொழுவீராக! 'தொழுவார்க்கன்றி வினை நீங்கா' என்பது கருத்து. |
| **1636.** அல்ல லாயின தீரு மழகிய<br>முல்லை வெண்முறு வல்லுமை யஞ்சவே<br>கொல்லை யானை யுரித்தவன் கோளிலிச்<br>செல்வன் சேவடி சென்று தொழுமினே. 5 | அழகிய முல்லையைப் போன்ற, வெள்ளிய முறுவலை உடைய உமாதேவியார் அஞ்சுமாறு குறிஞ்சியில் வாழும் யானையை உரித்தவனும், **கோளிலி**யில் உறையும் திருவருட் செல்வனுமாகிய பெருமான் சேவடிகளைச் சென்று தொழுவீர்களாக; உம் அல்லலாயின அனைத்தும் தீரும். 'அல்லல் நீங்கும் என்பதற்குக் கயாசுரனை அழித்துத் தேவர்களைக் காத்தமை சான்று' என்றபடி. |
| **1637.** ஆவின் பால்கண் டளவி லருந்தவப்<br>பாலன் வேண்டலுஞ் செல்லென்று பாற்கடல்<br>கூவி னான்குளி ரும்பொழிற் கோளிலி<br>மேவி னானைத் தொழவினை வீடுமே. 6 | பசுவின் பாலை முன் உண்டமையால், மிக்க அருந்தவம் உடைய பாலனாகிய உபமன்யு அப்பால் வேண்டலும், 'செல்க' என்று பாற்கடலைக் கூவி அருளியவனும், குளிர் பொழில்களையுடைய **கோளிலி**யில் விரும்பி உறைபவனுமாகிய பெருமானைத் தொழ நம் வினைகள் வீடும். 'பெருமானது அளவில் ஆற்றலும் பேரருளுடைமையும்' குறித்தபடி. |
| **1638.** சீர்த்த நன்மனை யாளுஞ் சிறுவரும்<br>ஆர்த்த சுற்றமும் பற்றிலை யாதலால்<br>கூத்த னாருறை யுந்திருக் கோளிலி<br>ஏத்தி நீர்தொழு மின்னிடர் தீருமே. 7 | பெருமைமிக்க நல்ல மனைவியும், பெற்ற பிள்ளைகளும், பொருந்திய சுற்றத்தாரும் நிலைத்த சார்பு ஆதல் இல்லையாதலால் ஆடும் பெருமான் உறையும் **திருக்கோளிலி**யை ஏத்தி, நீர் தொழுவீர்களாக; நும் இடர்கள் தீரும். 'இறைவனே இருமைக்கும் நீங்காத்துணை' என்றபடி. |

| | | |
|---|---|---|
| **1639.** மால தாகி மயங்கும் மனிதர்காள்<br>காலம் வந்து கடைமுடி யாமுனம்<br>கோல வார்பொழிற் கோளிலி மேவிய<br>நீல கண்டனை நின்று நினைமினே. | 8 | 'மயக்கத்தை உடையவராகி மயங்கும் மனிதர்களே! உமக்குரிய காலம் வந்து இறுதியுறுவதற்கு முன்னம், அழகுடைய நீண்ட பொழில்களை உடைய **கோளிலி**யில் விரும்பி உறைகின்ற நீல கண்டனை ஒன்றி நின்று நினைப்பீராக!' **யாக்கை நிலையாமையைக் கருதிப் பேரருளாளனை நினைந்து உய்க! என்றபடி.** |
| **1640.** கேடு மூடிக் கிடந்துண்ணு நாடது<br>தேடி நீர்திரி யாதே சிவகதி<br>கூட லாந்திருக் கோளிலி யீசனைப்<br>பாடு மின்னிர வோடு பகலுமே. | 9 | கேடுகள் சூழ்ந்து மூடிக்கிடந்து செய்வதொன்றின்றி துயர் என்னும் கேட்டினைத் தேடி, நீர் திரியாது, **திருக்கோளிலி** ஈசனை இரவும் பகலும் பாடுவீர்களாக; பாடுவீர்களாயின் சிவகதியே கூடலாம். |
| **1641.** மடுத்து மாமலை யேந்தலுற் றான்றனை<br>அடர்த்துப் பின்னு மிரங்கி யவற்கருள்<br>கொடுத்த வன்னுறை கோளிலி யேதொழ<br>விடுத்து நீங்கிடும் மேலை வினைகளே. | 10 | செருக்கை உட்கொண்டு திருக்கயிலாயப் பெருமலையை எடுக்கலுற்றானாகிய இராவணனை நெருக்கிப் பின்னும் இரக்கமுற்று அவனுக்கு அருள்கொடுத்த பெருமான் உறைகின்ற **கோளிலி**யைத் தொழப் பழைய பிறவிகளிற் செய்த வினைத் துன்பங்கள் விடுத்து நீங்கும். 'பிழைத்தாரையும் பின்னர் இரங்கி வந்தடையில் முதல்வன் காத்தருள்வான்' என்பது குறிப்பு. |

## 57. திருக்கோளிலி

ப.தொ.எண் : 170 | பதிக எண் : 57

1642. முன்ன மேநினை யாதொழிந் தேனுனை
இன்னம் நானுன சேவடி யேத்திலேன்
செந்நெல் ஆர்வயல் சூழ்திருக் கோளிலி
மன்ன னேயடி யேனை மறவலே. 1

செந்நெல் பொருந்திய வயல்கள் சூழ்ந்த **திருக்கோளிலி**யில் எழுந்தருளியுள்ள மன்னனே! (தியாகராசனே!) உன்னை அடியேன் முன்பே நினையாதொழிந்தேன்; இன்னமும் நான் உன் சேவடிகளை நன்கு ஏத்தவில்லை; ஆயினும் அடியேனை மறவாதே; என்னை நினைந்தருள்வாயாக! அவனை நாம் நினைக்கில் அவனும் நம்மை நினைப்பான் என்றபடி.

1643. விண்ணு ளார்தொழு தேத்தும் விளக்கினை
மண்ணு ளார்வினை தீர்க்கும் மருந்தினைப்
பண்ணு ளார்பயி லுந்திருக் கோளிலி
அண்ண லாரடி யேதொழு துய்ம்மினே. 2

விண்ணிலுள்ள தேவர்கள் தொழுது வணங்கும் விளக்கும், மண்ணுலகிலுள்ளவர் வினைகள் தீர்க்கும் மருந்தும் ஆகிய பண்ணுள்ளவர்கள் பயில்கின்ற **திருக்கோளிலி**யில் எழுந்தருளியுள்ள அண்ணலார் அடிகளையே தொழுது உய்வீர்களாக!

1644. நாளும் நம்முடை நாள்க ளறிகிலோம்
ஆளும் நோய்களோ ரைம்பதோ டாறெட்டும்
ஏழை மைப்பட் டிருந்துநீர் நையாதே
கோளிலி யரன் பாதமே கூறுமே. 3

நம்முடைய வாழ்நாள்களின் வரையறையை நாளும் அறியும் ஆற்றல் இல்லை; நம்மை ஆளும் நோய்களோ தொண்ணூற்றெட்டுக்கு மேலாகும். அறிவின்மையின்கண் பொருந்தியிருந்து நீர் வருந்தாமல் **கோளிலிச்** சிவபெருமான் பாதமே கூறுவீராக.

1645. விழவி னோசை யொலியறாத் தண்பொழில்
பழகி னார்வினை தீர்க்கும் பழம்பதி
அழல்கை யானம ருந்திருக் கோளிலிக்
குழக னார்திருப் பாதமே கூறுமே. 4

ஓசை – பொருளற்ற சத்தம்
ஒலி – பொருளுடைய சத்தம்

விழாக்களின் ஓசையும் ஒலியும் விட்டு நீங்காத குளிர் பொழில்களை உடையதும், தன்னிடம் பழகி வாழ்வார்களது வினைகளைத் தீர்க்கும் தொல்பதியும், அழலைக் கையில் ஏந்திய பெருமான் அமர்ந்திருப்பதும் ஆகிய **திருக்கோளிலி**யில் குழகன் திருப்பாதத்தையே கூறுவீராக.

1646. மூல மாகிய மூவர்க்கும் மூர்த்தியைக்
கால னாகிய காலற்குங் காலனைக்
கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலிச்
சூல பாணிதன் பாதந் தொழுமினே. 5

மும்மூர்த்திகளுக்கும் மூலமூர்த்தியும், காலகாலனும், அழகுமிக்க பொழில் சூழும் **திருக்கோளிலி**யில் உள்ள சூலத்தைக் கையிலே உடையானுமாகிய பெருமானின் பாதங்களைத் தொழுவீராக.

| | |
|---|---|
| **1647.** காற்ற னைக்கடல் நஞ்சமு துண்டவெண்<br>நீற்ற னைநிமிர் புன்சடை யண்ணலை<br>ஆற்ற னையம ருந்திருக் கோளிலி<br>ஏற்ற னாரடி யேதொழு தேத்துமே. 6<br><br>"நின்னிற் சிறந்த நின்தாள் இணையவை" – பரிபாடல். | காற்று வடிவாயவனும், கடல் விடம் உண்டவனும், வெண்ணீறணிந்தவனும், நிமிர்ந்த புன்சடை உடைய அண்ணலும், சடையிற் கங்கையாற்றினை உடையவனும் ஆகிய **திருக்கோளிலி**யில் அமரும் இடபத்தை உடையானை, அவன்றன் திருவடிகளையே தொழுது ஏத்துவீராக. |
| **1648.** வேத மாயவிண் ணோர்கள் தலைவனை<br>ஓதி மன்னுயி ரேத்து மொருவனைக்<br>கோதி வண்டறை யுந்திருக் கோளிலி<br>வேத நாயகன் பாதம் விரும்புமே. 7 | வைதிகத் தேரின் உறுப்புக்களாய் நின்ற விண்ணோர்களுக்குத் தலைவனும், நிலைபெற்ற உயிர்கள் ஓதி ஏத்தும் ஒப்பற்றவனும், வண்டுகள் கோதி ஒலிக்கும் மலர்களின் வளமுடைய **திருக்கோளிலி**யில் வேதநாயகனுமாகிய பெருமானின் பாதங்களை விரும்புவீராக. |
| **1649.** நீதி யாற்றொழு வார்கள் தலைவனை<br>வாதை யான விடுக்கும் மணியினைக்<br>கோதி வண்டறை யுந்திருக் கோளிலி<br>வேத நாயகன் பாதம் விரும்புமே. 8<br><br>7, 8 ஆவது பாடல்களில் பின்னிரண்டு அடிகள் ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. | முறையாகத் தொழுவார்களது தலைவனும், துன்பங்களாயினவற்றை நீக்கும் செம்மணி போல்வானும், வண்டுகள் கிண்டியொலிக்கும் மலர் வனம் உடைய **திருக்கோளிலி**யில் வேத நாயகனுமாகிய பெருமானின் பாதங்களை விரும்புவீராக. |
| **1650.** மாலும் நான்முக னாலு மறிவொணாப்<br>பாலின் மென்மொழி யாளொரு பங்கனைக்<br>கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலி<br>நீல கண்டனை நித்தல் நினைமினே. 9 | மாலும் பிரமனும் அறியவியலாத, பாலனைய மென்மொழியுடைய உமையொரு கூறனாகிய அழகுடைய பொழில் சூழும் **திருக்கோளிலி**யில் உள்ள நீலகண்டனை நாள் தோறும் நினைந்து தொழுவீராக. |
| **1651.** அரக்க னாய இலங்கையர் மன்னனை<br>நெருக்கி யம்முடி பத்திறுத் தானவற்<br>கிரக்க மாகிய வன்றிருக் கோளிலி<br>அருத்தி யாயடி யேதொழு துய்ம்மினே. 10 | அரக்கனாகிய இலங்கையர் மன்னன் இராவணனை நெருக்கி, அம்முடிகள் பத்தினையும் இறுத்தவனும், பின் அவனுக்கு இரங்கியவனும் ஆகிய பெருமான் உறையும் **திருக்கோளிலி**க்கு விருப்பமாகி, அவன் அடிகளே தொழுது உய்வீராக. |



திருப்பழையாறைவடதளி:
அப்பரடிகள் அமுது செய்யாதிருந்து பழையாறையில் பரமனைக் காணுதல்

## 58. திருப்பழையாறை வடதளி

பழையாறை, சோழர்களின் 5 தலைநகரங்களில் ஒன்றாகும். சோழர்கள் பல்லவர்களுக்கு அடங்கி இருந்த காலங்களில் வசித்த ஊரான பழையாறை, பின்நாளில் சோழர்கள் தலை எடுத்தபின் அவர்களின் 2வது தலைநகராக மாறியது. சோழ அரசர்கள் முடிசூடும் ஐந்து நகரங்களில் ஒன்று.

ஆறை, பழைசை, மழபாடி, பழையாறு என்ற பெயர்களெல்லாம் பழையாறை என்ற பெருநகரத்திற்குரிய பண்டைய பெயர்களாகும். காவிரிப்பூம்பட்டினம் கி.பி. 4 ஆம் நூற்றாண்டின் இறுதியில் கடல் கோளால் அழிந்தது. பின்பு உறையூரைச் சோழர்கள் அரசியல் தலைநகராகக் கொண்டாலும், தங்கள் வாழ்விடமாகத் தேர்வு செய்த பெருநகரம்தான் பழையாறை. இன்றைக்கு 1500 ஆண்டுகளுக்கு முன்பு நிறுவப்பெற்ற அவ்வூர் சோழப்பேரரசர்கள் ஆட்சி செய்த 430 ஆண்டு காலம் தமிழக வரலாற்றில் மிக முக்கியத்துவம் பெற்ற பெருநகரமாக விளங்கியது. மாமன்னன் முதலாம் இராஜராஜ சோழன் காலம் வரை பழையாறை என்றழைக்கப்பட்ட இக்கோநகரம் இராஜேந்திர சோழன் காலம் முதல் 'முடிகொண்ட சோழபுரம்' என்ற சிறப்புப் பெயரினைப் பெற்றது. அமர்நீதி நாயனார் இவ்வூரில் பிறந்தார்.

கி.பி. 840இல் விஜயாலய சோழன் பழையாறையில் தான் வசித்து வந்தான். பின்னர் பாண்டியருக்கும், பல்லவருக்கும் ஏற்பட்ட போரில் பல்லவருக்குத் துணையாக, விஜயாலய சோழன் பாண்டியனுக்கு எதிராக சண்டையிட்டார். அந்த போரில் பல்லவர்கள் பெற்ற வெற்றியின் பலனாக சோழர்களுக்குத் தஞ்சையும், அதை சுற்றி உள்ள பகுதிகளும் விஜயாலய சோழனுக்குப் பரிசாக வழங்கப்பட்டது. அது முதல் சோழர்களின்

பொற்காலம் தொடங்கிற்று. பின்னர் சுந்தர சோழன் காலத்தில் தஞ்சைக்குத் தலைநகர் மாற்றப்படும் வரை பழையாறை சோழர்களுக்குத் தலைநகராக விளங்கியது.

பழையாறை ஊர், நான்கு சிறு பிரிவுகளாக இருந்தது. வடதளி, மேற்றளி, கீழ்த்தளி மற்றும் தென்தளி ஆகிய பிரிவுகளாக இருந்தன. அவற்றில் இன்று வடதளி தர்மபுரீஸ்வரர் கோவிலும், கீழ்த்தளி சோமேஸ்வரர் கோவிலும் உள்ளன. இவ்வூருக்கு தெற்கில் முடிகொண்டான் ஆறும், வடக்கில் திருமலைராயன் ஆறும் ஓடுகின்றன. முடிகொண்டான் ஆறு முற்காலத்தில் பழையாறு எனப்பட்டதால் அதன் கரையிலுள்ள ஊர் பழையாறை எனப்பட்டது. அதன் வடகரையில் உள்ள ஊர் பழையாறை வடதளி எனப்பட்டது. தென்கரையில் தென்தளி உள்ளது.

"மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை" என்று திருஞான சம்பந்தரால் போற்றப்படும் சோழநாட்டு இளவரசி – பாண்டியனின் பட்டத்தரசிக்குப் பழையாறை கீழ்த்தளி சோமேஸ்வரர் கோயிலில் சிலை உள்ளது. வரலாற்றுப் புகழ் மிக்கதாக ஒரு காலத்தில் விளங்கிய இவ்வூர், தற்போது சிற்றூராகப் பட்டீச்சரத்திற்கு நேர்கிழக்கில் 1 கல் தொலைவில் அமைந்துள்ளது. தளி என்றால் கோயில். இந்தச் சிற்றூரில் வடதளி, தென்தளி, மேற்றளி, கீற்றளி என்று நான்கு கோயில்கள் உள்ளன. வடக்கேயுள்ளது வடதளி. வடதளியிலே சுவாமி சந்நிதியைச் சமணர் மறைத்தனர். அதனையறிந்த அப்பர் சுவாமிகள், 'சுவாமியை நேரே வெளிப்படத் தரிசித்தாலன்றி அவ்விடம் விட்டு அகல்வதில்லை' என்று உண்ணா நோன்பிருந்தனர். உண்ணாநோன்பு என்பது நமது நாட்டின் பழைய கோட்பாடு. இறைவரின் ஆணையின்படி அரசன் அடையாளங்கண்டு சமணர் செய்திருந்த மறைப்புகளை நீக்கிச் சுவாமியின் திருவுருவத்தை வெளிப்படுத்தி, அப்பர் சுவாமிகளைத் தரிசனம் செய்வித்து நிலைமையைச் சீராக்கினான். மிக அற்புதமாக மிகப்பெரிய சிவலிங்கம் உள்ள தலம். காமதேனுவின் புத்திரி விமலி பூசித்தமையால் அம்மையார் விமலநாயகி எனப்படுவார். காமதேனுவின் மற்றொரு புத்திரி சபளி பூசித்தமையால் அந்த அம்மை சபள நாயகி. வடதளிக்கோயில் மாடக் கோயில் போன்ற தோற்றமளிக்கும். வடதளி, தென்தளி (பரசுராமலிங்கம்) இரண்டும், நமது அறக்கட்டளையும், திருச்சி தாயுமான சுவாமிகள் உழவாரப் பணி மன்றமும் இணைந்து திருப்பணி, குடமுழுக்குப் பணிகளை நிறைவு செய்தமையால் புதுப்பொலிவுடன் விளங்குகின்றன.

**ப.தொ.எண் : 171** **பதிக எண் : 58**

**1652.** தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலையி னான்மறைத் தான்மறைக் கொண்ணுமே
அலையி னார்பொழி லாறை வடதளி
நிலையி னானடி யேநினைந் துய்ம்மினே. **1**

தலைமயிரெல்லாவற்றையும் பறிக்கின்ற சமண் ஒழுக்கம் உடையவர்கள் உள்ளத்து நிலையினால் மறைத்தால் மறைக்கவியலுமோ? அலைநீரின் மருங்கிலுள்ள பொழில்கள் சூழ்ந்த **பழையாறைவடதளி**யின்கண் நிலைபெற்றவன் திருவடிகளையே நினைந்து உய்வீர்களாக.

## மறைத்தான் மறைக்கொண்ணுமோ

சமணர்கள் பழையாறை வடதளித் திருக்கோயிலிலிருந்த பெருமானை மறைத்து வைத்திருந்த காலையில், அங்கு சென்ற அப்பர், பெருமானைக் காணாது உண்ணா நோன்பு கொண்டு, பின்பு இறைவன் காட்சிதரப் பாடியதாதலின் இப்பாடலில் மறைத்தால் மறைக்கவொண்ணுமோ என்றார்கள்.

தலைமயிரைப் பறித்தல் சமணர் இழிவழக்கு. கையர் – வஞ்சனை உடையவர்கள்.

இப்பதிகம் முழுவதும் சமணர்களைப் பற்றிப் பாடுகிறார்.

**1653.** மூக்கி னால்முரன் றோதியக் குண்டிகை
தூக்கி னார்குலந் தூரறுத் தேதனக்
காக்கி னானணி யாறை வடதளி
நோக்கி னார்க்கில்லை யால்அரு நோய்களே. 2

மூக்கினால் ஒலிக்குமாறு தம் மந்திரங்களை ஓதி, அக்குண்டிகை தூக்கினாராகிய சமணர்கள் குலத்தை அடியோடு வேரறுத்துத் தனக்கு **அணியாறை வடதளி**யை ஆக்கிக் கொண்டானாகிய பெருமானை நோக்கினார்க்கு அருநோய்கள் இல்லை.

சமணர்களின் மந்திரங்கள் மெல்லெழுத்தே மிக்கு மூக்கொலியால் ஓதத் தக்கன. ஆதலின் முரன்றோதி என்றார்.

தூரறுத்தே தனக்காக்கினான் – சமணர் கூட்டங்களை வேரோடு களைந்து சமணர் மறைத்த கோயிலைத் தன்னதாகக் காட்டியவன். நீர்க்குண்டிகைகள் மூன்றை ஒரு சிறு உறியில் தூக்கித் திரிதல் சமணர் வழக்கு.

**1654.** குண்ட ரைக்குண மில்லரைக் கூறையில்
மிண்ட ரைத்துரந் தவிம லன்றனை
அண்ட ரைப்பழை யாறை வடதளி
கண்ட ரைத்தொழு துய்ந்தன கைகளே. 3

குண்டர்களும், நற்குணமில்லாதவர்களும் உடையணியாத வலியர்களுமாகிய சமணர்களைத் துரத்திய விமலனும், தேவதேவனும் ஆகிய **பழையாறை வடதளி**யில் உள்ள திருநீலகண்டரைத் தொழுது அடியேனின் கரங்கள் உய்ந்தன.

**1655.** முடைய ரைத்தலை முண்டிக்கும் மொட்டரைக்
கடைய ரைக்கடிந் தார்கனல் வெண்மழுப்
படைய ரைப்பழை யாறை வடதளி
உடைய ரைக்குளிர்ந் துள்குமென் னுள்ளமே. 4

முடையர் – உடல் கழுவாமை, பல் விளக்காமை முதலியவற்றால் முடைநாற்றமுடையர்.
மொட்டர் – மொட்டையர்.

முடைநாற்றம் உடையோரும், தலையை மழித்த மொட்டையர்களும், கீழானவர்களுமாகிய சமணர்களை நீக்கியவரும், கனலையும் வெண்மழுப் படையினையும் உடையவரும் ஆகிய **பழையாறை வடதளி**க்குடையவரை என் உள்ளம் குளிர்ந்து நினைகின்றது.

**1656.** ஒள்ள ரிக்கணார் முன்னமண் நின்றுணும்
கள்ள ரைக்கடிந் தகருப் பூறலை
அள்ள லம்புன லாறை வடதளி
வள்ள லைப்புக ழத்துயர் வாடுமே. 5

ஒளியும் அரியும் உடைய கண்ணை உடைய பெண்டிர்க்கு முன்னும் உடையற்றவராய் நின்றுண்ணும் கள்ளர்களாகிய சமணரைக் கடிந்தவரும், கரும்பின் ஊறும் சாறு பாய்ந்தோடிச் சேறாகிய நீர்வளம் உடைய **பழையாறை வடதளி**யில் உள்ள வள்ளலும் ஆகிய பெருமானைப் புகழத் துயரங்கள் வாடும்.

**1657.** நீதி யைக்கெட நின்றம ணேயுணும்
சாதி யைக்கெடு மாசெய்த சங்கரன்
ஆதி யைப்பழை யாறை வடதளிச்
சோதி யைத்தொழு வார்துயர் தீருமே. 6

முறைமை கெட நின்று ஆடையற்றவராய், உண்ணும் சாதியாகிய சமணரைக் கெடுமாறு செய்தருளிய சங்கரனும், ஆதியும் ஆகிய **பழையாறைவடதளி**யில் உள்ள சோதியைத் தொழுவாருடைய துயர் தீரும்.

| | |
|---|---|
| **1658.** திரட்டி ரைக்க வளந்திணிக் குஞ்சமண்<br>பிரட்ட ரைப்பிரித் தபெரு மான்றனை<br>அருட்டி றத்தணி யாறை வடதளி<br>தெருட்ட ரைத்தொழத் தீவினை தீருமே. 7 | திரட்டிய இரையாகிய சோற்றுக் கவளத்தையே மிகத் திணிக்கும் சமண் பொய்யர்களை அங்கிருந்தும் பிரித்த பெருமானை, அருள் திறத்தை உடைய அழகுபொருந்திய **பழையாறை வடதளி**யில் தெளிவிக்கும் பிரானைத் தொழத் தீவினைகள் யாவும் தீரும். |
| **1659.** ஓதி னத்தெழுத் தஞ்சுண ராச்சமண்<br>வேதி னைப்படுத் தானைவெங் கூற்றுதை<br>பாத னைப்பழை யாறை வடதளி<br>நாத னைத்தொழ நம்வினை நாசமே. 8 | அடியார் இனத்தே ஓதப்படும் திருவஞ் செழுத்தை உணராத சமணர்களை வேதனைப் படுத்தியவனும், வெங்கூற்றுவனை உதைத்த பாதம் உடையவனும் ஆகிய **பழையாறை வடதளி**யில் உறையும் நாதனைத் தொழ நம் வினைகள் நாசமாம். |
| **1660. வாயி ருந்தமி ழேபடித் தாளுறா**<br>ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினான்<br>பாயி ரும்புன லாறை வடதளி<br>மேய வன்னென வல்வினை வீடுமே. 9 | மெய்ம்மையும் பெருமையும் உடைய தெய்வத் தமிழையே பயின்று ஆளாக உறாத ஆயிரஞ் சமணரையும் அழிவின்கட்படுத்தவனும், பாய்கின்ற பெருந்தண்ணீர் வளம் உடைய **பழையாறை வடதளி**யில் மேவியவனும் ஆகிய பெருமான் என்று சொல்லுமளவிலேயே வல்வினைகள் கெடும். |

## இருந்தமிழே படித்தாளுறா

பெருமையுடைய தமிழ் மொழியைப் படித்தும், அம்மொழியின் பயனாய் விளங்கும் இறைவனை உணர்ந்தும் அவனுக்கு ஆளாகாதது சமணர் கூட்டம். வேற்று மொழிக்கில்லாத் தனிச்சிறப்புடைய, ஞாலம் அளந்த மேன்மை தெய்வத்தமிழ் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டுமென்று அப்பர் சுவாமிகள் இப்பாடலைப் பாடியுள்ளார். ஒருவர் தம் கருத்தை மற்றவருக்கு உணர்த்துவதும், மற்றவர் கருத்தைத் தாம் உணர்ந்து கொள்வதுமாகிய கருத்துப் பரிமாற்றத்துக்கு உதவும் அரிய கருவியே மொழி. நாகரிகம், பண்பாடு, வாழ்க்கை முறை, குறிக்கோள், கொடை போன்றவற்றை வெளிப்படுத்தி, பேணிக்காக்க ஒரு ஒலி, வரி வடிவமான கருவியாக மொழியைக் கொள்ளலாம். இந்தியாவில் 1500க்கும் மேற்பட்ட மொழிகள் இருப்பதாகக் கருதப்படுகிறது. அவற்றுள் பெரும்பாலானவற்றுக்கு பேச்சுவடிவம் மட்டும்தான் உள்ளது. சில ஏட்டில் மட்டுமே உள்ளன. ஒரு சில மொழிகளுக்கே சிறப்பான பேச்சு, எழுத்து வடிவங்கள் பல்லாயிரம் ஆண்டுகளாக இன்றுவரை உள்ளன. அவற்றுள் தமிழும் ஒன்று.

நமது தாய் மொழியாகிய தமிழ் உலக மொழிகளுள் தொன்மையான மொழியாகும். தமிழ் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே இலெமூரியாக் கண்டத்தில் பேசும் மொழியாக தோன்றியது என்கின்றனர் மொழி ஆய்வாளர்கள். இம்மொழியில் ஏராளமான இலக்கியம் படைக்கப்பட்டும், இலக்கணம் வகுக்கப்பட்டும் சிறந்திருந்ததைக் காணமுடிகிறது. பண்டைத் தமிழகம் கடலால் கொள்ளப்பட்டும் என்றும் நிலைத்த மொழியாகத் தமிழ் வளர்ந்து வந்துள்ளது.

# தொன்மைத் தமிழ்

## தமிழென்னும் பெயர்

இம்மொழி தன்பாலுள்ள உயிர், வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற நால்வகை எழுத்துக்களால் ஆக்கப்பெற்றது. இயற்பெயரைக் கொண்டு இனிமை என்று பொருளுணர்த்துவதாயுள்ளது. "தமிழ்" என்ற சொல் வேறு மொழியிலிருந்து வந்ததன்று.

"தமிழ்" மொழிக்கு பரமாசாரியர் பரமசிவன்

"ஆதியிற் றமிழ்நூ லகத்தியற் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போத மெய்ஞ்ஞான நலம் பெறற் பொருட்டே" – பழம்பாட்டு

தழற்பொலி விழிக்கடவு டந்ததமிழ் – கம்பஇராமாயணம்

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர் (காஞ்சிப்புராணம்)

"அற்றன்றி யந்தண் மதுரைத் தொகை யாக்கினானும்
பெற்றொன்று யர்த்த பெருமான் பெருமானுமன்றே" – திருஞானசம்பந்தர்

என்பவற்றாலும் வேறுள்ள ஆதாரங்களாலும் தமிழ் மொழிக்குப் பரமாசாரியர் பரமசிவனென்று தெரிகிறது.

பரமசிவனுடைய கூறாகிய முருகக் கடவுளை அகத்திய முனிவருக்குச் செந்தமிழ் அறிவுறுத்திய ஆசிரியராகவும் சில சான்றோர் கூறியிருக்கின்றனர்.

"குறுமுனிக்குந் தமிழுரைக்குங் குமர" (திருப்புகழ்)
"சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழவிரு
செவிகுளிர வினிய தமிழ் பகர் வோனே" (திருப்புகழ்)
"அகத்தியனார்க்குத் தமிழை யறிவுறுத்த செந்தமிழ்ப்
பரமாசாரியனாகிய அறுமுகக்கடவுள்" (தொல் – பாயிர விருத்தி)

## சங்கம்

சங்கமென்பதற்குப் புலவர் கூட்டமென்பது பொருளாகும். தமிழ்நாட்டிலுள்ள சில ஊர்களில் தமிழ்ப் புலவர்கள் கூட்டங்கள் இப்பெயரோடு பண்டைக் காலத்தில் இருந்தனவென்று தெரிந்தாலும், மதுரையிலிருந்த கூட்டத்திற்கே இயற்பெயராக இது அமைந்திருந்தது. சிவபெருமான், முருகக்கடவுள், தெய்வத்தன்மை வாய்ந்த பாண்டிய அரசர்களாலும் மிகச் செம்மையாகப் பரிபாலிக்கப்பட்டு வந்துள்ளது.

முதல், இடை, கடை யென்ற தமிழ்ச் சங்கங்கள் மூன்று இருந்தன என்பது இறையனார் அகப்பொருள் உரை, சிலப்பதிகார உரை முதலிய பல நூல்களால் தெரிந்து கொள்ளலாம். முதற்சங்கம் பத்தாயிரமாண்டுகளுக்கு முற்பட்டது.

முதலிரண்டு சங்கங்களிலும் அகத்திய முனிவர் இருந்து தமிழ் ஆராய்ந்தாரென்று தெரிகிறது. அவர் வடக்கேயிருந்து தென்னாட்டிற்கு வரும்போது, தென்னாடு பழந்தமிழ் வழங்கும் தேச மானமையின்

அங்கே உள்ளவர்களோடு பழகுமாறு எனக்குத் தமிழ் இலக்கணத்தைக் கற்பித்தருள வேண்டும் என்று வேண்டிப் பரமசிவன் பால் இலக்கணச் சிறு குப்பி பெற்று இந்நாட்டிற்கு வந்து இங்கேயுள்ள பழக்கவழக்கம் முதலியவற்றையறிந்து இலக்கணம் இயற்றினார்.

அகத்திய முனிவர் செய்த இலக்கணம் அகத்தியம். அஃது இயல், இசை, நாடகம் மென்றும் மூன்றிலக்கணங்களையுடையது. அது மூன்று சங்கத்தாருக்கும் இலக்கணமாயமைந்து, பல புலவர்களால் பெரிதும் போற்றப்பட்டு முதநூலாகவும் மதிக்கப்பட்டு வந்தது. இது "வினையினீங்கி" (தொல்காப்பியம் மரபியல் சூத்திரம் 94) என்னும் சூத்திர உரையாலும்,

வீங்கு கடலுபடுத்த வியனகண் ஞாலத்துத்
தாங்கள் நல்லிசைத் தமிழுக்கு விளக்கென
வானோரேத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் பெருமை அகத்திய னென்னும்
அருந்தவ முனிவ னாக்கிய முதனூல்

என்னும் பன்னிரு படலப் பாயிரத்தாலும் புலனாகின்றது. அகத்திய முனிவரிடம் முத்தமிழ் பயின்ற மாணாக்கர்களில் இயற்றமிழிலக்கண மியற்றினவர்கள், தொல்காப்பியர் முதலிய பன்னிருவரென்பர்.

மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
தன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல் காப்பியன் முதற்
பன்னிரு புலவரும் (சிறப்புப் பாயிரம்)

என்பது புறப்பொருள் வெண்பாமாலை.

இசைத்தமிழுக்குச் சிகண்டி முதலியோரும், நாடகத் தமிழுக்கு முறுவல், சயந்தம் முதலியோரும் உருவாக்கப்பட்டனர்.

சிவபெருமானும் சங்கப் புலவர்களில் ஒருவராய் இருந்தார். சங்கப் புலவர்களின் மேம்பாட்டை அறிந்து சோமசுந்தரக் கடவுளும் இடையிடையே சென்று தாமும் ஒரு புலவராக இருந்து தமிழாராய்ந்து வந்தனரென்றும் தெரிகிறது.

**சங்க மண்டபம்**

சங்க காலப் புலவர்கள் இருந்து தமிழாராய்ச்சி செய்வதற்கு மிக வசதியாக ஒரு மண்டபம் அக்காலத்துப் பாண்டிய மன்னர்களால் கட்டிக் கொடுக்கப்பட்டிருந்தது. அம்மண்டபத்திற்கு பட்டிமண்டபம் என்பது பெயர்.

"பட்டிமன் தென்னன்" என்ற தேவாரத்தாலும், "பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை" என்ற திருவாசகத்தாலும், "பட்டி மண்டபத்துப் பாங்கறிந்தேறுமின்" என்ற மணிமேகலையாலும் இதை அறியலாம்.

**சங்கப் பலகை**

சங்கப் புலவர்களின் வேண்டுகோளின்படி சங்கப் பலகை சோமசுந்தரக் கடவுளால் அருளப்பட்டது. இப்பலகை தெய்வத் தன்மை வாய்ந்ததாகும். இந்தப் பலகை எந்தப் புலவருக்கு இடங்கொடுக்குமோ அவரே சிறந்த புலவர். அவர் கல்வி இலக்கிய இலக்கணங்களில் சிறந்தவர். அவர் இயற்றும் செய்யுட்களில் வழுக்கள் இருக்காது. பிறர் தீமையைச் சொல்ல நலத்தவர்களான மூத்த புலவர்களுக்கு தகுதி குறைவான புலவர்களின் கல்விக் குறையையும், அவர்களுடைய செய்யுட்களில் இருந்த வழுக்களையும் எடுத்துக்கூற இச்சங்கப் பலகை மிகவும் உதவியது.

**நமது தமிழ் மொழியின் சிறப்பியல்புகள்**

1. தற்காலத்தில் பேச்சு வழக்கில் இருக்கின்ற உலக மொழிகளில் மிகவும் தொன்மையான மொழி தமிழ் என்பதில் ஐயமில்லை. மேலை நாடுகளில் தோன்றிய இலத்தீன், கிரேக்கம், எபிரேயம் போன்ற மொழிகளுக்குத் தற்போது பேச்சு வழக்கு இல்லை.

2. உலகில் மிகத் தொன்மையான ஏழு மொழிகளில் மிகப் பழமையானதும் அதிக அளவில் இலக்கிய வளமுடையதுமாகிய மொழி தமிழ் மட்டுமே ஆகும்.

3. இது திராவிட மொழிக் குடும்பத்தின் மூத்த மொழியாகவும் தனித்தன்மையோடு விளங்கும் மூல மொழியாகவும் அமைந்துள்ளது.

4. "தமிழ் கிரேக்கத்தைவிடப் பண்பட்டது. இலத்தீனை விட அழகானது. ஆங்கிலம், செர்மனியை விட ஆற்றலுடையது" என்று வின்ஸ்லோ என்ற மொழி ஆய்வாளர் கூறியுள்ளார். **நஞ்சுண்ட கிரேக்க அறிஞர் சாக்ரடீஸை கிரேக்கமொழி காப்பாற்றவில்லை. ஆனால் நஞ்சுண்ட திருநாவுக்கரசர் தமிழ் பாடி உய்வெய்தினார். உலகிலேயே இறந்தவர்களை எழுப்பும் மந்திர ஆற்றல் தமிழ்மொழிக்குத் தான் உண்டு.**

5. சித்தர்களால் கண்டுணரப்பட்ட மந்திர ஆற்றல் இம்மொழியின் வாயிலாக வெளிப்படுத்தப்பட்ட சிறப்பு உண்டு.

6. நமது மொழியில் ஏழு இலட்சத்துக்கும் மேல் சொற்கள் உள்ளன.

7. இலங்கை, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் தேசிய அளவில் ஆட்சி மொழியாக உள்ளது. மலேஷியா, மொரீஷியஸ் ஆகிய நாடுகளில் அங்கீகாரம் பெற்ற மொழியாக உள்ளது.

8. வடமொழி எனப்படும் சமஸ்கிருதமும், தமிழும் தான் இந்தியத் துணைக் கண்டத்தின் தொன்மையான மொழிகள். ஆனாலும் சமஸ்கிருதம் இப்போது பேச்சு வழக்கில் இல்லை. இந்தி இப்போது வந்த மொழியாகும்.

9. வணிகத்தின் மொழி – ஆங்கிலம்
   தூதின் மொழி – பிரெஞ்சு
   தத்துவத்தின் மொழி – ஜெர்மனி
   காதலின் மொழி – இத்தாலி
   பக்தியின் மொழி – தமிழ்

   என்று தனிநாயக அடிகள் குறிப்பிடுகின்றார்.

சமயத்தால் தமிழும், தமிழால் சமயமும் வளர்ந்தன என்றால் மிகையாகாது. அந்த அளவிற்கு பக்தி உணர்வை வெளிப்படுத்துவதற்கு ஏற்ற மொழியாக அடியார்கள் அனுபவித்த மொழியாகத் தமிழ் அமைந்துள்ளது.

இத்தகைய சிறப்புக்கள் பெற்ற பக்தி மொழியாகிய தமிழ், இந்திய அரசால் செம்மொழி என ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ச்சியாக பேசப்பட்டு, மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு உலகளவில் செவ்வியல் மொழி என்று பேசப்படும் தகுதியைப் பெற்றிருக்கிற ஒரே மொழி தமிழ் மட்டுமே ஆகும். அத்தகைய மொழியைத் தாய்மொழியாகப் பெற நாம் என்ன புண்ணியம் செய்திருக்க வேண்டும்? நமக்கு எல்லா உயர்வுகளையும் தந்து கொண்டிருக்கும் தங்கத் தமிழுக்கு நாம் செய்ய வேண்டிய கைம்மாறு என்ன? "ஞாலம் நின் புகழே மிக வேண்டும்" என்ற சம்பந்தர் வாக்குக்கேற்ப, உலகம் முழுவதும், தமிழ் மொழியையும் அதன் பயனாய் விளங்கும் சிவபெருமானது புகழையும் பரப்பவேண்டும். அந்த மொழியில் புதைந்து கிடக்கும் ஆழமான கருத்துக்களை உலகத்தார்க்குக் கொண்டு சேர்க்கவேண்டும். அதன் பயனை இந்த ஞாலம் அனுபவிக்கவேண்டும்.

ஒரு மொழி செம்மொழி என்று எப்போது சொல்லப்படுகிறது? அது செம்மொழி ஆவதற்கு என்ன தகுதிகள் வேண்டும் என்று ஆய்ந்தபோது கீழ்க்கண்ட கருத்துக்கள் புலப்பட்டன.

1. அது மிகவும் தொன்மையானதாக இருக்க வேண்டும்.

2. மூலமொழியாக இருக்க வேண்டும். எந்த மொழியிலிருந்தும் தோன்றியோ, பிரிந்தோ வராமல் தனிப்பட்ட மரபுடன் விளங்க வேண்டும்.

3. பழமையும், மூலமும் மட்டுமின்றி பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே இலக்கணம் காணப்பட்டிருக்க வேண்டும்.

4. "இலக்கியம் கண்டதற்கிலக்கணமியம்பலின்" என்ற நன்னூல் சூத்திரப்படி – இலக்கணம் காண வேண்டுமானால் அதற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே தகுதி வாய்ந்த இலக்கியங்கள் இயற்றப்பட்டிருக்க வேண்டும். அவற்றை இயற்றிய சான்றோர்கள் சிறந்த நாகரிக வாழ்க்கை வாழ்ந்திருக்க வேண்டும்.

   "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்பதற்கேற்ப அறிவு வளரத் தாய்மொழிப் பயிற்சி அவசியம். அந்த அறிவைக் கொடுக்கவல்ல இலக்கியங்கள் அறநூல்கள். **அறத்துடன் வாழ்ந்து, பொருளீட்டி, வரம்பில் இன்பம் துய்த்து, வீடுபேறடைய உதவும் உயர்ந்த தத்துவங்கள்** உள்ளடக்கிய இலக்கிய நூல்கள் வேண்டும்.

5. முழுவதும் மானுட அனுபவங்கள் / விழுமியங்கள்.

   நடப்பியல், புனைவியல், குறிக்கோளியல், செவ்வியல் ஆகிய வாழ்வியல் கூறுகளைப் பெற்றிருக்க வேண்டும். அகம், புறம் என்பது போல மிக விரிவாகப் பிரித்து வாழ்வைப் புரிந்து ஆய்வு செய்திருக்க வேண்டும்.

6. இயல், இசை, நாடகம் என்று பெரும் பகுதிகளாகப் பகுத்து ஆய்வு செய்வது, பெரும்புலவர் பெருமக்களையும், சங்க அமைப்புகளையும் கொண்டிருப்பது, சங்கம் போன்ற அமைப்பை வைத்து மொழியை வளர்ப்பது, ஆண்டி முதல், அரசன் வரை அனைவரும் அதை வளர்ப்பது.

7. உலகில் உள்ள பிற மொழிகளில் ஒப்பிட முடியாத அளவு திருக்குறள் போன்ற அறநூல்கள், தேவாரம், திருவாசகம் போன்ற பக்தி இலக்கியங்கள், பிரபந்த வகைகள், சித்தாந்தக் கோட்பாடுகள், தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்கள், முப்பொருளுண்மைகள், பழமொழிகள், ஆயகலைகள், கால, பொருள் ஆய்வுகளை அடக்கியிருப்பது.

8. முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாய் – பின்னைப் புதுமைக்கும் பெயர்த்தும் அப் பெற்றியதாய் விளங்க வேண்டும். 2000 ஆண்டுகட்கு முன்பு எழுதப்பட்ட செய்யுளின் பொருள் இன்றும் நடைமுறைக்கேற்ற நிலைப்பேற்றுத் தன்மையுடையதாகவும் எளிமையாகவும் அமைந்துள்ளபடியாக இருக்க வேண்டும்.

9. சிறப்பு "ழ"கரம் போன்ற பிற மொழிகளில் இல்லாத அரிய வரி வடிவங்கள், ஒலி அமைப்புகள், பல வகையான பாக்கள் அம்மொழியில் அமைந்திருப்பது சிறப்புக்குரியது.

**1661.** செருத்த னைச்செயுஞ் சேணரக் கன்னுடல்
எருத்தி றவிர லாலிறை யூன்றிய
அருத்த னைப்பழை யாறை வடதளித்
திருத்த னைத்தொழு வார்வினை தேயுமே. 10

செருத்தனை – போரை; சேண் – புகழால் நீண்ட எருத்து – பிடரி; இற – நொறுங்க; இறை – சிறிதே அருத்தன் – பொருள் வடிவானவன்; திருத்தன் – அழகியவன்

போரினைச் செய்யும் சேண் புகழ் உடைய இராவணனின் உடலும், பிடரியும் இறும்படித் திருவிரலால் சிறிதே ஊன்றிய சொற்பொருள் வடிவானவனாகிய **பழையாறை வடதளி**யின் அழகிய பெருமானைத் தொழுவார் வினைகள் தேயும்.

## 59. திருமாற்பேறு

**(திருமால் வழிபட்ட தலம்)**

**ப.தொ.எண் : 172** **பதிக எண் : 59**

**1662.** பொருமாற் றின்படை வேண்டிநற் பூம்புனல்
வருமாற் றின்மலர் கொண்டு வழிபடும்
கருமாற் கின்னருள் செய்தவன் காண்தகு
திருமாற் பேறு தொழவினை தேயுமே. 1

பாடல்தோறும் பயன் சொல்கிறார்.

போரிடுகின்ற நெறியிற் படைக்கலம் வேண்டி நல்ல பூம்புனல் பாய்ந்துவரும் ஆற்றில் மூழ்கி, மலர் கொண்டு வழிபடுவோனாகிய கருநிறத்துத் திருமாலுக்கு இனிய அருள் செய்தவனுக்குரிய காணத்தக்க திருமாற்பேறு தொழ வினைகள் தேயும்.

| | |
|---|---|
| **1663.** ஆலத் தார்நிழ லில்லற நால்வர்க்குக்<br>கோலத் தாலுரை செய்தவன் குற்றமில்<br>மாலுக் காரருள் செய்தவன் மாற்பேறு<br>ஏலத் தான்தொழு வார்க்கிட ரில்லையே. 2 | கல் ஆலமரத்தின் பொருந்திய நிழலில் நால்வர்க்கு அறம் அழகுபட உரைத்தவனும், குற்றமற்ற திருமாலுக்கு நிறைந்த பேரருள் செய்தவனும் ஆகிய பெருமான் உறையும் திருமாற்பேற்றைப் பொருந்தத் தாம் தொழுவார்க்கு இடர்கள் இல்லை. |

**கோலத்தால் உரை செய்தவன்** – வாக்கினால் சொல்லாது, வீற்றிருந்த நிலையும், காட்டிய ஞான முத்திரையுமாகிய கோலத்தால் விளங்கச் செய்வது. ஞானநிலையில் பாடம் எடுக்க கரும்பலகை, எழுதுகோல், வாய் வாக்கு இவை தேவையில்லை.

| | |
|---|---|
| **1664.** துணிவண் ணச்சுட ராழிகொள் வானெண்ணி<br>அணிவண் ணத்தலர் கொண்டடி யர்ச்சித்த<br>மணிவண் ணற்கருள் செய்தவன் மாற்பேறு<br>பணிவண் ணத்தவர்க் கில்லையாம் பாவமே. 3<br><br>துணிவண்ணம் – பகைவரைத் துணிக்கின்ற தன்மை<br>அணிவண்ணம் – அழகிய செந்நிறத்து<br>மணிவண்ணன் – நீலமணி போன்ற கரிய நிறத்தையுடைய திருமால்<br>பணிவண்ணத்தர் – பணியும் தன்மையுடையார்க்கு | தீவினை செய்தாரைத் துணிக்கின்ற வண்ணத்தையும், ஒளியையும் உடைய சக்கரப் படையினைக் கொள்வதற்காக எண்ணி, அழகு வண்ணம் உடைய மலர்களைக் கொண்டு திருவடிகளை அருச்சித்த நீலமணிபோலும் நிறமுடையானாகிய திருமாலுக்கு அருள் செய்தவன் உறையும் திருமாற்பேற்றைப் பணிகின்ற இயல்புடையார்க்குப் பாவங்கள் இல்லையாம். |
| **1665.** தீதவை செய்து தீவினை வீழாதே<br>காதல் செய்து கருத்தினில் நின்றநன்<br>மாத வர்பயில் மாற்பேறு கைதொழப்<br>போது மின்வினை யாயின போகுமே. 4 | தீயவற்றையே செய்து தீவினையில் பின்னும் வீழாது, கருத்தினில் நிலைபெறுமாற்றை உடைய காதல் புரிந்தோராகிய நல்ல மாதவர் பயில்கின்ற மாற்பேற்றைக் கைதொழப் போதுவீராக; உம் வினையாயின போகும். |
| **1666.** வார்கொள் மென்முலை மங்கையொர் பங்கினன்<br>வார்கொள் நன்முர சம்மறை யவ்வறை<br>வார்கொள் பைம்பொழில் மாற்பேறு கைதொழு<br>வார்கள் மன்னுவர் பொன்னுல கத்திலே. 5 | கச்சினைக் கொண்ட மென்முலை உடைய உமையொரு பங்கினன் உறைவதும், இழுத்துக் கட்டப் பெற்ற நல்ல முரசுகளும், நான்மறைகளும் அழகுற ஒலிக்கப்பெறுவதும், நெடிய பசும்பொழில்களை உடையதுமாகிய திருமாற்பேற்றைக் கைதொழும் அடியார்கள் பொன்னுலகத்தில் நிலைபெற வீற்றிருப்பர். |
| **1667.** பண்டை வல்வினை பற்றறுக் கும்வகை<br>உண்டு சொல்லுவன் கேண்மி னொளிகிளர்<br>வண்டு சேர்பொழில் சூழ்திரு மாற்பேறு<br>கண்டு கைதொழத் தீருங் கவலையே. 6 | **பழையவல்வினைகளது பற்று அறுக்கும் வகை ஒன்று உண்டு; அதனைச் சொல்லுவேன் கேட்பீராக;** ஒளிகிளர்கின்றதும், வண்டுகள் சேரும் பொழில்கள் சூழ்ந்ததுமாகிய திருமாற்பேறு கண்டு கைதொழக் கவலைகள் தீரும். |

| | |
|---|---|
| **1668.** மழுவ லான்திரு நாமம் மகிழ்ந்துரைத்<br>தழவ லார்களுக் கன்புசெய் தின்பொடும்<br>வழுவி லாவருள் செய்தவன் மாற்பேறு<br>தொழவ லார்தமக் கில்லை துயரமே. 7 | மழுவினை ஏந்திய வெற்றி உடையானது திருநாமத்தை மகிழ்ந்துரைத்து அழவல்ல அடியார்களுக்கு அன்பு செய்து இன்பமொடும் வழுவில்லாத அருள் செய்தவன் உறையும் திருமாற்பேறு தொழவல்ல அடியார்களுக்குத் துயரங்கள் இல்லை. |
| **1669.** முன்ன வன்னுல குக்கு முழுமணிப்<br>பொன்ன வன்திகழ் முத்தொடு போகமாம்<br>மன்ன வன்திரு மாற்பேறு கைதொழும்<br>அன்ன வரெமை யாளுடை யார்களே. 8 | உலகினுக்கு முன்னே தோன்றியவனும், முழு மணியும், பொன்னும் விளங்கும் முத்தும், போகங்களும் ஆக விளங்கும் மன்னவனும் ஆகிய திருமாற்பேற்றில் உறையும் இறைவனைக் கைதொழும் அத்தன்மையவர் எம்மை ஆளுடையார்கள். |
| **1670.** வேட னாய்விச யன்னொடும் எய்துவெம்<br>காடு நீடுகந் தாடிய கண்ணுதல்<br>மாட நீடிய ருந்திரு மாற்பேறு<br>பாடு வார்பெறு வார்பர லோகமே. 9 | அருச்சுனனோடும் வேடனாய் வந்து அம்பு எய்து, வெவ்விய சுடுகாட்டை நீண்டு உகந்து ஆடிய கண்ணுதற் பெருமான் உறைவதும், மாடங்கள் நீண்டு உயருஞ் சிறப்புடையதுமாகிய திருமாற்பேறு பாடுவார்கள் பரலோகம் அடையப் பெறுவார்கள். |
| **1671.** கருத்த னாய்க்கயி லாய மலைதனைத்<br>தருக்கி னாலெடுத் தானைத் தகரவே<br>வருத்தி யாரருள் செய்தவன் மாற்பேறு<br>அருத்தி யால்தொழு வார்க்கில்லை யல்லலே. 10 | கயிலாயமலையை எடுக்கும் கருத்து உடையவனாய்ச் செருக்கினோடு எடுக்கலுற்ற இராவணனைச் சிதையும் வண்ணம் வருத்திப் பின் நிறைந்த அருள் செய்தவன் உறையும் **திருமாற்பேற்றை விருப்பத்தினோடு தொழுவார்க்கு அல்லல் இல்லை.** |

## 60. திருமாற்பேறு

**ப.தொ.எண் : 173** **(உபதேசம்)** **பதிக எண் : 60**

| | |
|---|---|
| **1672.** ஏது மொன்று மறிவில ராயினும்<br>ஓதி யஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்<br>பேத மின்றி யவரவ ருள்ளத்தே<br>மாதுந் தாமும் மகிழ்வர்மாற் பேறரே. 1 | திருமாற்பேற்றில் எழுந்தருளியிருக்கும் இறைவர் ஏதொன்றும் அறியாதவர்கள் ஆனாலும், திருவஞ்செழுத்தை ஓதி உணர்வார்கட்கு வேற்றுமையின்றி அவரவர் உள்ளத்தே தாமும் அம்பிகையுமாய் மகிழ்ந்து வீற்றிருப்பர். |

1673. அச்ச மில்லைநெஞ் சேயரன் நாமங்கள்
நிச்ச லுந்நினை யாய்வினை போயறக்
கச்ச மாவிட முண்டகண் டாவென
**வைச்ச மாநிதி யாவர்மாற் பேறரே.** 2

நெஞ்சே! அரன் திருநாமங்களை வினைகள் விட்டு நீங்குவதற்காக, நித்தமும் நினைவாயாக; உனக்கு அச்சமில்லை. திருமாற்பேற்று இறைவர், கசந்த ஆலகால விடத்தை உண்ட திருநீலகண்டர் என்று அன்பொடுகூற, சேமித்து வைத்த மாநிதிபோலப் பயன்படுவர்.

1674. சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்தி ரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்
பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்தி ரைக்கு ளருளுமாற் பேறரே. 3

சாத்திரங்கள் பலவற்றைப் பேசும் தீயவர்களே! கோத்திரம், குலம் முதலியவற்றைக் கொண்டு என்ன செய்வீர்! பணிதற்குரிய பொருள் சிவபரம்பொருளே என்று கொண்டு பணிவீராயின், திருமாற்பேற்று இறைவர் ஒரு மாத்திரைப் பொழுதுக்குள் அருளுவர்.

சாத்திரம் – சமய இலக்கண வரம்பு
சழக்கர் – அறிவற்றோர்; கோத்திரம் – சிறந்தார் ஒருவரின் பரம்பரையைச் சுட்டியுரைப்பது. குலம் – சாதி. பாத்திரம் – வணங்கப்படுதற்குரியவர்.
பிறப்பு – வாரிசு என்ற முறையிலும், குரு – மாணாக்கன் என்ற முறையிலும் ஒருவர் கோத்திரப் பெயர் பெறுகிறார்.

1675. இருந்து சொல்லுவன் கேண்மின்க ளேழைகாள்
அருந்த வந்தரும் அஞ்செழுத் தோதினால்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே. 4

அறிவில்லாதவர்களே! சிந்தித்திருந்து சொல்லுவேன்; கேட்பீர்களாக! அரிய தவத்தினாலாய பயனைத் தரும் திருவஞ்செழுத்தை ஓதினால் திருமாற்பேற்று இறைவர் உம்மைப் பொருந்தியுள்ள நோய்களாகிய பிணிகள் போகும்படி துரத்துவதாகும் ஒப்பற்ற மருந்தும் ஆவர்.

1676. சாற்றிச் சொல்லுவன் கேண்மின் தரணியீர்
ஏற்றின் மேல்வரு வான்கழ லேத்தினால்
கூற்றை நீக்கிக் குறைவறுத் தாள்வதோர்
மாற்றி லாச்செம்பொ னாவர்மாற் பேறரே. 5

உலகில் உள்ளவர்களே! எல்லோரும் அறியச் சொல்லுவேன் கேட்பீர்களாக; இடபத்தின் மேல் வருவாராகிய திருமாற்பேற்று இறைவர் திருவடிகளை ஏத்தினால், உம்மைக் கொல்லவரும் கூற்றுவனை நீக்கி, குறைகளை அறுத்து, ஆள்கின்ற மாற்றில்லாத செம்பொன்னை ஒப்பர்.

மாற்றிலா – உரைத்து மாற்றுக் காணுதற்கரிய, மிக உயர்ந்த. சாற்றிச் சொல்லுவன் – பலருமறியக் கூறுவன்

| | |
|---|---|
| **1677.** ஈட்டும் மாநிதி சால இழக்கினும்<br>வீட்டுங் காலன் விரைய அழைக்கினுங்<br>காட்டில் மாநட மாடுவாய் காவெனில்<br>வாட்டந் தீர்க்கவும் வல்லர்மாற்பேறரே. 6 | வருந்திச் சேர்த்த பெருஞ்செல்வத்தை மிகுதியாக இழந்தாலும், அழிக்கும் காலன் விரையவந்து அழைத்தாலும், சுடுகாட்டில் பெரிய நடனம் ஆடுகின்ற பெருமானே! காப்பாற்றுவாயாக! என்றழைத்தால், திருமாற்பேற்று இறைவர் வாட்டம் தீர்க்கவும் வல்லவராவர். |
| **1678.** ஐய னேயர னேயென் றரற்றினால்<br>உய்ய லாமுல கத்தவர் பேணுவர்<br>செய்ய பாத மிரண்டும் நினையவே<br>வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே. 7<br><br>x x x x x x x x x x x x x 8, 9 | தலைவனே! சிவபெருமானே! என்று வாய்விட்டு அரற்றினால் உய்தி அடையலாம்; அதுவன்றியும் உலகத்திலுள்ளவர் பேணி மதிப்புச் செய்வர்; அப்பெருமானின் இரண்டு சிவந்த திருப்பாதங்களை நினைத்தால் திருமாற்பேற்று இறைவர் உலகத்தை ஆளவும் வைப்பர். |
| **1679.** உந்திச் சென்று மலையை யெடுத்தவன்<br>சந்து தோளொடு தாளிற வூன்றினான்<br>மந்தி பாய்பொழில் சூழுமாற் பேறென<br>அந்த மில்லாதோ ரின்பம் அணுகுமே. 10 | செருக்கு தன்னை உந்தித் தள்ளுதலால் சென்று திருக்கயிலாயத்தை எடுத்தவனாகிய இராவணனது சந்தனம் பூசிய தோளும் தாள்களும் இறுமாறு திருவிரலால் ஊன்றிய பெருமானுக்குரியதும், பெண்குரங்குகள் பாயும் பொழில் சூழ்வதுமாகிய **திருமாற்பேறு என்று கூறினால் முடிவில்லாத ஒப்பற்ற இன்பம் அணுகும்.** |

## 61. திருவரிசிற்கரைப்புத்தூர்

**ப.தொ.எண் : 174** **பதிக எண் : 61**

| | |
|---|---|
| **1680.** முத்தூ ரும்புனல் மொய்யரி சிற்கரைப்<br>புத்தூ ரன்னடி போற்றியென் பாரெலாம்<br>பொய்த்தூ ரும்புல னைந்தொடு புல்கிய<br>மைத்தூ ரும்வினை மாற்றவும் வல்லரே. 1 | மொய்க்கின்ற முத்துக்கள் ஊர்ந்து வரும் தண்ணீரை உடைய அரிசிலாற்றின் கரையில் உள்ள 'புத்தூரில் உறையும் பெருமான் திருவடி போற்றி' என்று கூறுவோரெல்லாம், பொய்யுடையதாகி ஊர்கின்ற ஐந்து புலன்களோடு, பொருந்திய வன்மை உடைய தாய் ஊர்கின்ற வினைகளையும் மாற்றும் வல்லமை உடையவர்கள். |

| | |
|---|---|
| 1681. பிறைக்க ணிச்சடை யெம்பெரு மானென்று<br>கறைக்க ணித்தவர் கண்ட வணக்கத்தாய்<br>உறக்க ணித்துரு காமனத் தார்களைப்<br>புறக்க ணித்திடும் புத்தூர்ப் புனிதரே. 2 | வெண்பிறையாகிய தலைக் கண்ணியணிந்த சடையுடைய எம்பெருமானே என்று கூறி, தம்முடைய குற்றங்களை எண்ணி உணர்ந்த நல்லடியார்கள் கண்ட வணக்கத்துக்குரியவரே! மிகுதியாகக் கருத்தில் எண்ணி உருகாத மனத்தை உடையவர்களைப் புறக்கணித் திடுகின்ற புத்தூரில் எழுந்தருளியுள்ள புனிதரே! (எம்மையாண்டருள்க). |
| 1682. அரிசி லின்கரை மேலணி யார்தரு<br>புரிசை நந்திருப் புத்தூர்ப் புனிதனைப்<br>பரிசொ டும்பர விப்பணி வார்க்கெலாம்<br>துரிசில் நன்னெறி தோன்றிடுங் காண்மினே. 3<br>புரிசை – மதில்கள்<br>துரிசில் – குற்றமற்ற | அரிசிலாற்றுக்கரையின்மேல் உள்ள அழகு நிறைந்த மதிலை உடைய நம் திருப்புத்தூர்ப் புனிதரை, வணங்க வேண்டிய முறைமைப்படிப் பரவிப் பணிவார்க்கெல்லாம குற்றமற்ற நன்னெறி தோன்றும்; காண்பீராக. |
| 1683. வேத னைமிகு வீணையில் மேவிய<br>கீத னைக்கிள ருந்நறுங் கொன்றையம்<br>போத னைப்புனல் சூழ்ந்தபுத் தூரனை<br>நாத னைநினைந் தென்மனம் நையுமே. 4 | வேதங்கள் ஓதுபவனை, வீணையில் மிகுகின்ற கீதங்கள் உடையவனை, மணம் வீசுகின்ற கொன்றையாகிய அழகிய போதினை அணிந்தவனை, அரிசிற் புனல் சூழ்ந்த புத்தூரில் உள்ள நாதனை, என் மனம் நினைந்து நெகிழ்கின்றது. |
| 1684. அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்<br>விருப்புச் சேர்நிலை விட்டுநல் லிட்டமாய்த்<br>திருப்புத் தூரனைச் சிந்தை செயச்செயக்<br>கருப்புச் சாற்றிலும் அண்ணிக்குங் காண்மினே.5 | கோங்கின் அரும்புபோன்ற முலையுடைய பெண்களோடு கூடித் துன்பங்கள் மிகுந்த வாழ்க்கையின்மேல் விருப்பம் சேர்கின்ற நிலையைவிட்டு நீங்கி, நல்ல பக்தி கொண்டு, திருப்புத்தூரில் உள்ள இறைவனைச் சிந்திக்கச் சிந்திக்கக் கரும்புச் சாற்றைவிடத் தித்திக்கும்; காண்பீராக. |
| 1685. பாம்பொ டுமதி யும்படர் புன்சடைப்<br>பூம்புன லும்பொ திந்தபுத் தூருளான்<br>நாம்ப ணிந்தடி போற்றிட நாள்தொறும்<br>சாம்ப லென்பு தனக்கணி யாகுமே. 6 | பாம்பும், பிறையும், பொலிவுள்ள கங்கைநதியும் படர்ந்த செஞ்சடையின்கண் பொதிந்த புத்தூரில் உள்ள புனிதர், நாள்தொறும் நாம் பணிந்து, தன் திருவடியைப் போற்றிட, தான் சாம்பலையும், எலும்பையும் தமக்கு அணியாகக் கொண்டவர் நமக்கு அண்மை ஆவார். |

| | |
|---|---|
| **1686.** கனல்அங் கைதனி லேந்திவெங் காட்டிடை<br>அனலங் கெய்திநின் றாடுவர் பாடுவர்<br>பினலஞ் செஞ்சடை மேற்பிறை யுந்தரு<br>புனலுஞ் சூடுவர் போலும்புத் தூரரே. 7<br><br>அனல் – தீ, நெருப்பு, வெப்பம்<br>கனல் – எரிதல், கொதித்தல், சினத்தல் | புத்தூரில் எழுந்தருளியுள்ள இறைவர் தம் அழகிய கையினில் தீயையேந்தி, வெவ்விய காட்டிடை நெருப்புப் பொருந்திய இடத்திடை எய்தி நின்று ஆடும் இயல்பினர். பாடும் இயல்பினர்; பின்னுதற்குரிய அழகிய செஞ்சடை மேல் பிறையும் கங்கையும் சூடும் இயல்பினர். |
| **1687.** காற்றி னுங்கடி தாகி நடப்பதோர்<br>ஏற்றி னும்மிசைந் தேறுவ ரென்பொடு<br>நீற்றி னையணி வர்நினை வாய்த்தமைப்<br>போற்றி யென்பவர்க் கன்பர்புத் தூரரே. 8 | புத்தூரில் எழுந்தருளியுள்ள இறைவர், காற்றைவிட விரைந்து நடப்பதாகிய ஒப்பற்ற இடபத்தினும் மனம் ஒத்து ஏறுவர்; எலும்பும் திருநீறும் அணிவர்; 'தம்மையே நினைவாகிப் போற்றி' என்று வழிபடுவார்க்கு அன்பர் ஆவர். |
| **1688.** முன்னும் முப்புரஞ் செற்றன ராயினும்<br>அன்ன மொப்பர் அலந்தடைந் தார்க்கெலாம்<br>மின்னு மொப்பர் விரிசடை மேனிசெம்<br>பொன்னு மொப்பர்புத் தூரெம் புனிதரே. 9 | புத்தூரில் எழுந்தருளியுள்ள இறைவர், முன்னும் மூன்று புரங்களைச் சினந்தவராயினும், வருந்தித் தம்மையடைந்தவர்க்கெல்லாம் அன்னம் போல்வர்; விரிந்த சடைஒளி விளங்கும் மின்னலென உடையவர்; திருமேனி செம்பொன்னென உடையவர் ஆவர். |
| **1689.** செருத்த னால்தன தேர்செல வுய்த்திடும்<br>கருத்த னாய்க்கயி லையெடுத் தானுடல்<br>பருத்த தோள்கெடப் பாதத் தொருவிரல்<br>பொருத்தி னார்பொழி லார்ந்தபுத் தூரரே. 10 | பொழில்கள் நிறைந்த புத்தூர்த் தலத்திறைவர், பொருதற்குத் தன்னுடைய தேர் செல்லுமாறு செலுத்துகின்ற கருத்தொடு கூடியவனாகிய இராவணன் திருக்கயிலையை எடுக்கலுற்ற போது, அவன் உடலும் பருத்த தோள்களும் சிதைந்து கெடும் படியாகத் தம் திருப்பாதத்து ஒரு திருவிரலைப் பொருத்தியவர் ஆவர். |

## 62. திருக்கடுவாய்க்கரைப் புத்தூர்

ப.தொ.எண் : 175 பதிக எண் : 62

| | |
|---|---|
| **1690.** ஒருத்த னைமூ வுலகொடு தேவர்க்கும்<br>அருத்த னையடி யேன்மனத் துள்ளமர்<br>கருத்த னைக்கடு வாய்ப்புன லாடிய<br>திருத்த னைப்புத்தூர்ச் சென்றுகண் டுய்ந்தெனே. 1 | ஒப்பற்றவனும், மூன்றுலகங்களுக்கும் தேவர்க்கும் பொருளாய் உள்ளவனும், அடியேன் மனத்துள் அமர்கின்ற கருத்தனும், தீயாடிய திருத்தமுற்றவனுமாகிய பெருமானைப் புத்தூரிற் சென்று, கண்டு, உய்ந்தேன். |

| | |
|---|---|
| **1691.** யாவ ருமறி தற்கரி யான்றனை<br>மூவ ரின்முத லாகிய மூர்த்தியை<br>நாவி னல்லுரை யாகிய நாதனைத்<br>தேவனைப் புத்தூர்ச் சென்றுகண் டுய்ந்தெனே. 2 | எல்லோரானும் அறிதற்கு அருமை உடையவனும், மும்மூர்த்திகளுக்கும் முதலாகிய கடவுளும், நாவில் நல்ல உரையாகி அருளும் நாதனும், தேவனுமாகிய பெருமானைப் புத்தூரிலே சென்று கண்டு உய்ந்தேன். |
| **1692.** அன்ப னையடி யாரிடர் நீக்கியைச்<br>செம்பொ னைத்திக ழுந்திருக் கச்சியே<br>கம்ப னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்<br>நம்ப னைக்கண்டு நானுய்யப் பெற்றெனே. 3 | அன்பே வடிவானவனும், அடியார்கள் துன்பங்களை நீக்குபவனும், செம்பொன் மேனியனும் விளங்கும் திருக்கச்சி யேகம்பத்தில் வீற்றிருப்பவனும் ஆகிய கடுவாய்க் கரைத் தென்புத்தூரில் உள்ள மேலானவனை கண்டு நான் உய்யப் பெற்றேன். |
| **1693.** மாதனத்தைமா தேவனை மாறிலாக்<br>கோத னத்திலைந் தாடியை வெண்குழைக்<br>காத னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்<br>நாத னைக்கண்டு நானுய்யப் பெற்றெனே. 4 | பெருஞ்செல்வமாகிய அருட்செல்வம் உடையானும், மகாதேவனும், மாறுபாடில்லாத பஞ்சகவ்வியத் திருமுழுக்குக் கொள்பவனும், சங்கவெண்குழையணிந்த காதுடையவனும் ஆகிய கடுவாய்க்கரைத் தென்புத்தூரின் நாதனைக் கண்டு நான் உய்யப்பெற்றேன். |
| **1694.** குண்டு பட்டகுற் றந்தவிர்த் தென்னையாட்<br>கொண்டு நற்றிறங் காட்டிய கூத்தனைக்<br>கண்ட னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்<br>அண்ட னைக்கண் டருவினை யற்றெனே. 5 | மிகுந்த பல குற்றத்தை நீக்கி என்னை ஆட்கொண்டு நல்ல அருள் திறம் காட்டிய கூத்தனும், திருநீலகண்டனும் ஆகிய கடுவாய்க்கரைத் தென்புத்தூரில் பொருந்தி யிருக்கும் பெருமானைக் கண்டு அருவினைகள் அற்றேன். |
| **1695.** பந்த பாச மறுத்தென்னை யாட்கொண்ட<br>மைந்த னைம்மண வாளனை மாமலர்க்<br>கந்த நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்<br>எந்தை யீசனைக் கண்டினி தாயிற்றே. 6 | பாசமாகிய கட்டினை அறுத்து, என்னை ஆட்கொண்ட பெருவீரனும், மணவாளக்கோலம் உடையானும், பெரிய மலர்களின் நறுமணம் மிக்க நீரை உடைய கடுவாய்க் கரையிலுள்ள தென்புத்தூரில் உள்ள எந்தையும் ஆகிய ஈசனைக் கண்டதனால் அடியேற்கு இனிதாயிற்று. |

**1696.** உம்ப ரானை யுருத்திர மூர்த்தியை
அம்ப ரானை யமலனை யாதியைக்
கம்பு நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எம்பி ரானைக்கண் டின்பம தாயிற்றே. 7

தேவர் உலகத்துக்கும் அப்பால் உள்ளவனும், உருத்திரமூர்த்தியும், அம்பர்த்தலத்து எழுந்தருளியிருப்பவனும், மலம் அற்றவனும், ஆதியானவனும், சங்குகளையுடைய நீர்பாயும் கடுவாய்க்கரைக்கண் தென்புத்தூரில் உள்ளவனும் ஆகிய எம்பெருமானைக் கண்டதனால் அடியேற்கு இன்பம் ஆயிற்று.

**1697.** மாசார் பாச மயக்கறு வித்தெனுள்
நேச மாகிய நித்த மணாளனைப்
பூச நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
ஈச னேயென இன்பம தாயிற்றே. 8

திருவிடைமருதூரிலும் பூசத்திருநாள் சிறப்புகளைக் குறிப்பிடுகிறார். 1205 ஆவது பாடல் பார்க்க.

குற்றம் நிறைந்த பாசமாகிய மயக்கத்தை அறுமாறு செய்து என்னுள்ளத்துக்குள் நேசம் ஆகிய **நித்தமணாளன்** என்ற திருப்பேர் கொண்டவனும், பூசத்திருநாளில் ஆடற்குரிய கடுவாய்க் கரைத்தென்புத்தூரின்கண் உள்ளவனும் ஆகிய ஈசனே என்று கூற அடியேற்கு இன்பமாயிற்று.

**1698.** இடுவா ரிட்ட கவளங் கவர்ந்திரு
கடுவா யிட்டவர் கட்டுரை கொள்ளாதே
கடுவாய்த் தென்கரைப் புத்தூ ரடிகட்காட்
படவே பெற்றுநான் பாக்கியஞ் செய்தெனே. 9

பிச்சையிடுவார் இட்ட சோற்றுருண்டையினைப் பெற்றுத் தம் பெரிய கொடிய வாயில் இடும் சமணர்களது கட்டியுரைக்கும் பேச்சைக் கொள்ளாமல், கடுவாய்த்தென்கரைப் புத்தூரின்கண் எழுந்தருளியுள்ள அடிகட்கு ஆட்படப் பெற்று நான் பெரும் பாக்கியம் செய்தவன் ஆயினேன்.

**1699.** அரக்க னாற்ற லழித்தவன் பாடல்கேட்
டிரக்க மாகி யருள்புரி யீசனைத்
திரைக்கொள் நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
இருக்கு நாதனைக் காணப்பெற் றுய்ந்தெனே. 10

இராவணனது ஆற்றலை அழித்து அவன் பாடல் கேட்டுப் பின்னர் இரங்கி அருள்புரியும் ஈசனாகிய, அலைகளைக் கொண்ட **கடுவாய்க் கரைத் தென்புத்தூரில் இருக்கும் நாதனைக் காணப்பெற்று உய்ந்தேன்.**

## 63. திருத்தென்குரங்காடுதுறை

ப.தொ.எண் : 176 பதிக எண் : 63

**1700.** இரங்கா வன்மனத் தார்க எியங்குமுப்
புரங்கா வல்அழி யப்பொடி யாக்கினான்
தரங்கா டுந்தட நீர்ப்பொன்னித் தென்கரைக்
குரங்காடு துறைக் கோலக்க பாலியே. 1

அலைகள் ஆடுகின்ற கரை புரண்டோடும் நீரினை உடைய காவிரியின் தென்கரையில் உள்ள **குரங்காடுதுறை**யில் வீற்றிருக்கும் அழகிய கபாலம் கைக்கொண்ட பெருமான், இரங்காத வலிய மனத்தவர்களாகிய அரக்கர்கள் இயங்குகின்ற முப்புரங்காவல் அழியுமாறு பொடியாக்கியவன் ஆவன்.

| பாடல் | பொருள் |
|---|---|
| **1701.** முத்தி னைமணி யைப்பவ ளத்தொளிர்<br>தொத்தி னைச்சுடர்ச் சோதியைச் சோலைசூழ்<br>கொத்த லர்குரங் காடு துறையுறை<br>அத்த னென்னஅண் ணித்திட்டிருந்ததே. 2<br><br>தொத்து – பூங்கொத்து; திரள் | முத்தும், மணியும், பவளத்தொடு ஒளிர்கின்ற கொத்தும், சுடர்விடும் சோதியும், சோலைகள் சூழ்ந்த பூங்கொத்துக்கள் மலர்கின்ற **குரங்காடுதுறை** உறையும் அத்தனும் என்று கூற உள்ளத்தில் தித்தித்திருந்தனன் அப்பெருமான். |
| **1702.** குளிர்பு னற்குரங் காடு றையனைத்<br>தளிர்நி றத்தையல் பங்கனைத் தண்மதி<br>ஒளிய னைந்நினைந் தேனுக்கென் னுள்ளமும்<br>தெளிவி னைத்தெளி யத்தெளிந் திட்டதே. 3 | குளிர்கின்ற நீர் சூழ்ந்த **குரங்காடுதுறை**யில் இருப்பவனும், மாந்தளிரைப் போன்ற நிறம் உடைய மேனியினளாகிய உமாதேவியைப் பங்கிற்கொண்டவனும் தண்ணியமதி ஒளியனும் ஆகிய பெருமானை நினைந்த அடியேனுக்கு என் உள்ளமும் தெளிவுறும்படித் தெளிவினைத் தெளிந்தது. |
| **1703.** மணவன் காண்மலை யாள்நெடு மங்கலக்<br>கணவன் காண்கலை ஞானிகள் காதலெண்<br>குணவன் காண்குரங் காடுதுறைதனில்<br>அணவன் காண்அன்பு செய்யு மடியர்க்கே. 4<br><br>எண் குணங்கள் – தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்குதல், இயற்கை உணர்வினனாதல், பேரருளுடைமை, முடிவில் ஆற்றலுடைமை, வரம்பலின்பமுடைமை, முற்றுமுணர்தல், அணவன் – அணுகியிருப்பவன். | அன்புசெய்யும் அடியார்க்கு மணவாளக் கோலம் உடையவனும், மலைமகளாகிய உமாதேவிக்கு மங்கலக்கணவனும், கலைஞானிகளாற் காதலிக்கப்பெறுவானும், எண் குணத்தானும், **குரங்காடுதுறை**யில் அண்ணியவனும் ஆவன். |
| **1704.** ஞாலத் தார்தொழு தேத்திய நன்மையன்<br>காலத் தான்உயிர் போக்கிய காலினன்<br>நீலத் தார்மிடற் றான்வெள்ளை நீறணி<br>கோலத் தான்குரங் காடு துறையனே. 5 | **குரங்காடுதுறை**யில் வீற்றிருக்கும் இறைவன் உலகத்தாராற் றொழுதேத்தப்பட்ட நன்மை உடையவனும், காலன் உயிர்போகச் செய்த திருக்காலை உடையவனும், நீலநிறம் நிறைந்த திருமிடற்றை உடையவனும், வெண்ணீறணிந்த கோலத்தை உடையவனும் ஆவன். |
| **1705.** ஆட்டி னான்முன் அமணரோ டென்றனைப்<br>பாட்டி னான்றன் பொன்னடிக் கின்னிசை<br>வீட்டி னான்வினை மெய்யடி யாரொடும்<br>கூட்டி னான்குரங் காடு துறையனே. 6<br><br>நாயனார் தம் வரலாறு கூறுவதாக அமைந்துள்ளது. | **குரங்காடுதுறை**யில் வீற்றிருக்கும் இறைவன், முன்னர் என்னை அமணர்களோடு ஆட்டுவித்தவனும், பின்னர்த் தன் பொன்னார் திருவடிகளுக்கு இனிய பண்ணிசையை என்னைப் பாட்டுவித்தவனும், வினையை வீட்டியவனும், மெய்யடியார்களோடு என்னைக் கூட்டுவித்தவனும் ஆவன். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1706.** மாத்தன் தான்மறை யார்முறை யான்மறை<br>ஒத்தன் தாரகன் றன்னுயி ருண்டபெண்<br>போத்தன் தானவன் பொங்கு சினந்தணி<br>கூத்தன் தான்குரங் காடு துறையனே. 7<br><br>போத்தன் தானவன் – வீரத்துடன் வந்த முயலகன் | வேதங்களில் கூறிய முறையால் மாற்றுயர்ந்த பொன் போன்றவனும், வேதசாகைகளை அருளிச் செய்தவனும், தாரகனை அடக்கிய காளியைவென்ற வீரனும், முயலகனது சினத்தைத் தணித்த கூத்தனுமாய் விளங்குபவன் **குரங்காடுதுறை** இறைவன். |
| **1707.** நாடி நந்தம ராயின தொண்டர்காள்<br>**ஆடு மின்அழு மின்தொழு மின்னடி**<br>**பாடு மின்பர மன்பயி லும்மிடம்**<br>**கூடு மின்**குரங் காடு துறையையே. 8 | நம் தமராகிய தொண்டர்களே! பரமன் பயிலும் இடமாகிய **குரங்காடுதுறை**யையே மனத்தால் நாடி ஆடுவீர்களாக; அழுவீர்களாக; தொழுவீர்களாக; அவன் அடியே பாடுவீர்களாக; அத்தலத்தையே கூடுவீர்களாக. |
| **1708.** தென்றல் நன்னெடுந் தேருடை யானுடல்<br>பொன்ற வெங்கனல் பொங்க விழித்தவன்<br>அன்ற வந்தக னைஅயிற் சூலத்தால்<br>கொன்ற வன்குரங் காடு துறையனே. 9 | **குரங்காடுதுறை**யில் வீற்றிருக்கும் இறைவன், தென்றலாகிய நல்ல நீண்டுயர்ந்த தேரை உடையானாகிய காமன் உடல் அழியுமாறு வெவ்விய அனல் பொங்க விழித்தவனும், அன்று காலனைக் கூரிய சூலத்தாற் கொன்றவனும் ஆவன். |
| **1709.** நற்ற வம்செய்த நால்வர்க்கு நல்லறம்<br>உற்ற நன்மொழி யாலருள் செய்தநல்<br>கொற்ற வன்குரங் காடு துறைதொழப்<br>பற்றுந் தீவினை யாயின பாறுமே. 10 | நல்ல தவம் புரிந்தவர்களாகிய சனகர் முதலிய நான்கு முனிவர்களுக்கும் நல் அறம் மிகுந்த நன்மொழியால் அருள் செய்தவனாகிய நல்ல கொற்றவனுறைகின்ற **குரங்காடுதுறை**யைத் தொழுதால் பற்றுகின்ற தீவினையாகியவை கெடும். |
| **1710.** கடுத்த தோரரக் கன்கயி லைம்மலை<br>எடுத்த தோள்தலை யிற்றல றவ்விரல்<br>அடுத்த லும்மவ னின்னிசை கேட்டருள்<br>கொடுத்த வன்குரங் காடு துறையனே. 11 | **குரங்காடுதுறை**யில் வீற்றிருக்கும் இறைவன், சினந்த தேரை உடைய இராவணனது திருக்கயிலையை எடுக்கலுற்ற தோள்களும் தலையும் இற்று, அவன் அலறும்படியாகத் திருவிரலை அடுத்தவன்; பின் அவன் இன்னிசை கேட்டு அருள்கொடுத்தவன் ஆவன். |

## 64. திருக்கோழம்பம்

ப.தொ.எண் : 177 பதிக எண் : 64

1711. வேழம் பத்தைவர் வேண்டிற்று வேண்டிப்போய்
ஆழம் பற்றிவீழ் வார்பல வாதர்கள்
கோழம் பத்துறை கூத்தன் குரைகழல்
தாழும் பத்தர்கள் சாலச் சதுரரே. 1

வேழம்பம் – கூத்து, ஏளனம், பரிகாசம்
வேழம்பத்து ஐவர் – உயிருக்கு ஏளனத்தைத் தரும் ஐம்பொறிகள்
ஆதர் – குருடர், அறிவிலார்

வேழம்பம் என்னும் விளையாட்டைப் புரிகின்ற ஐந்து புலன்களாகியவர்கள் விரும்பினவற்றையே தாமும் விரும்பிச் சென்று உலகியல் ஆழங்காற்பட்டுப் பல அறிவற்றவர்கள் வீழ்வர்; கோழம்பத்தில் உறைகின்ற கூத்தன் ஒலிக்கும் கழல் அணிந்த திருவடிகளை வணங்கும் பக்தர்களே மிகவும் திறம் உடையவர்கள்.

1712. கயிலை நன்மலை யாளுங் கபாலியை
மயிலி யல்மலை மாதின் மணாளனைக்
குயில்ப யில்பொழிற் கோழம்பம் மேயவென்
உயிரி னைநினைந் துள்ளம் உருகுமே. 2

திருக்கயிலாயத் திருமலையினை ஆள்கின்ற கபாலியும், மயிலியலை உடைய மலைமங்கையின் மணவாளனும் ஆகிய குயில் பயில்கின்ற பொழில்கள் உடைய கோழம்பத்தைப் பொருந்திய என் உயிர் போல்வானாகிய இறைவனை நினைந்து உள்ளம் உருகுகின்றது.

1713. வாழும் பான்மைய ராகிய வான்செல்வம்
தாழும் பான்மைய ராகித்தம் வாயினால்
தாழம் பூமணம் நாறிய தாழ்பொழில்
கோழம் பாவெனக் கூடிய செல்வமே. 3

வாழும் பான்மையராகி – பிறவியெடுத்த பயனை அடையும் குறிக்கோளோடு வாழும் தன்மையை உடையவராகி.

வணங்கும் தன்மையோடு கூடியவராகித் தம் வாயினால், தாழம்பூக்களின் மணம் வீசுகின்ற பொழிலை உடைய 'கோழம்பத்தலத்து இறைவா!' என்று கூறியதனால் கூடும் செல்வமே, வாழும் தன்மையராகிப் பெற்ற உயர்ந்த செல்வம் ஆகும்.

1714. பாட லாக்கிடும் பண்ணொடு பெண்ணிவள்
கூட லாக்கிடுங் குன்றின் மணற்கொடு
கோடல் பூத்தலர் கோழம்பத் துள்மகிழ்ந்
தாடுங் கூத்தனுக் கன்புபட் டாளன்றே. 4

வெண்கோடலும் செங்கோடலும் ஆகிய மலர்கள் பூத்து விளங்கும் கோழம்பத்துள் மகிழ்ந்து ஆடும் கூத்தனாகிய இறைவனுக்கு இப்பெண் அன்றே அன்புபட்டாள் ஆதலின், பண்ணொடு கூடிய பாடல் ஆக்குவாள்; மணற்குன்றில் மணலினைக் கொண்டு கூடல் இழைப்பாள்.

| | |
|---|---|
| **1715.** தளிர்கொள் மேனியள் தான்மிக அஞ்சவோர்<br>பிளிறு வாரணத் தீருரி போர்த்தவன்<br>குளிர்கொள் நீர்வயற் கோழம்பம் மேவினான்<br>நளிர்கொள் நீர்சடை மேலு நயந்ததே. **5** | மாந்தளிரின் வண்ணம் கொண்ட மேனியளாகிய உமாதேவி மிக அஞ்சுமாறு ஒப்பற்ற பிளிறிவரும் யானையின் பச்சைத்தோலைப் போர்த்தவனாகிய, குளிர்ச்சி கொண்ட நீண்ட வயல்களையுடைய கோழம்பத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் செறிவினைக் கொண்ட கங்கையினைச் சடைமேலும் நயந்தது வியப்புக்குரியதே. |
| **1716.** நாத ராவர் நமக்கும் பிறர்க்குந்தாம்<br>வேத நாவர் விடைக்கொடி யார்வெற்பில்<br>கோதை மாதொடுங் கோழம்பங் கோயில்கொண்<br>டாதி பாத மடையவல் லார்களே. **6** | வேதங்களை ஓதிய நாவை உடையவரும், இடபக் கொடியினரும், மலைமங்கையாகிய உமாதேவியோடும் கோழம்பத்திற் கோயில் கொண்ட ஆதியுமாகிய பெருமானின் பாதங்களை அடையவல்லவர்கள் தாம் நமக்கும் பிறர்க்கும் தலைவர் என்று மதிக்கத்தக்கவர்கள். |
| **1717.** முன்னை நான்செய்த பாவ முதலறப்<br>பின்னை நான்பெரி தும்மருள் பெற்றது<br>அன்ன மார்வயற் கோழம்பத் துள்ளமர்<br>பின்னல் வார்சடை யானைப் பிதற்றியே. **7** | அன்னம் பொருந்திய வயலை உடைய கோழம்பத்துள் அமர்ந்திருக்கின்ற பின்னிய நீண்ட சடையானைப் பல காலம் போற்றிச் சொல்லியே , முன்பு நான் செய்த பாவம் முதல் அறும்படிப் பின்பு நான் பெரிதும் அருள்பெற்றது. |
| முற்பிறப்பில் செய்த பாவங் காரணமாக நான் சமண சமயம் சார்ந்தும், பின்னர் அதனின் நீங்கிப் பெருமான் திருவருள் பெற்றதும் எல்லாம், அவன் திருப்பெயரைப் பலகாலம் ஓதிய காரணத்தால் ஆயின என்றார். | |
| **1718.** ஏழை மாரிடம் நின்றிரு கைக்கொடுண்<br>கோழை மாரொடுங் கூடிய குற்றமாங்<br>கூழை பாய்வயற் கோழம்பத் தானடி<br>ஏழை யேன்முன் மறந்தங் கிருந்ததே. **8**<br><br>கூழை – மீன்கள் | ஏழையேனாகிய அடியேன் கூழைமீன்கள் பாய்கின்ற வயல்களை உடைய கோழம்பத்தான் அடியை மறந்து அவர்பால் இருந்தது, பெண்களிடம் நின்று இரண்டு கைகளாலும் அவர்கள் இடும் உணவைக்கொண்டு உண்ணும் கோழைகளோடு கூடிய குற்றமாம். |
| **1719.** அரவ ணைப்பயில் மாலயன் வந்தடி<br>பரவ னைப்பர மாம்பரஞ் சோதியைக்<br>குரவ னைக்குர வார்பொழிற் கோழம்பத்<br>துரவ னையொரு வர்க்குணர் வொண்ணுமே. **9** | பாம்பாகிய படுக்கையில் பயிலும் திருமாலும், பிரமனும் வந்து அடிபரவப் பெறுவானும், பரம்பொருளாகிய உயர்ந்த சோதியும், பரமாசாரியனும் ஆகிய குரவமரங்கள் செறிந்த கோழம்பத்தின்கண் அறிவு வடிவானவனை நீங்குபவர்க்கு உணர்தல் இயலுமோ ? |

| | |
|---|---|
| 1720. சமர சூரபன் மாவைத் தடிந்தவேற்<br>குமரன் தாதைநற் கோழம்பம் மேவிய<br>அமரர் கோவினுக் கன்புடைத் தொண்டர்கள்<br>அமர லோகம தாளுடை யார்களே. 10 | போரெதிர்ந்துவந்த சூரபன்மனைக் கொன்ற வேற்படையை உடைய முருகவேளுக்குத் தந்தையும், நல்ல கோழம்பம் மேவிய தேவர் தலைவனும் ஆகிய பெருமானுக்கு அன்புடைய தொண்டர்கள், அமரலோகத்தை ஆளும் உரிமையுடையவராவர். |

ஓதுவார்கள் தேவாரத்திலிருந்து முருகப்பெருமான் பாடல் ஓதவேண்டும் போது இப்பாடலைப் பாடுவார்கள்.

| | |
|---|---|
| 1721. துட்ட னாகி மலையெடுத் தஃதின்கீழ்ப்<br>பட்டு வீழ்ந்து படர்ந்துய்யப் போயினான்<br>கொட்டம் நாறிய கோழம்பத் தீசனென்<br>றிட்ட கீத மிசைத்த அரக்கனே. 11 | வாசப்பொருள் நறுமணம் வீசுகின்ற கோழம்பத்து இறைவன் என்று விருப்பத்திற் குரிய கீதம் இசைத்த அரக்கன் துட்டனாகித் திருக்கயிலையை எடுக்கலுற்று, அம்மலையின் கீழ்ப்பட்டு விழுந்து படர்ந்து பின் உய்ந்தான். |

## 65. திருப்பூவனூர்

ப.தொ.எண் : 178 பதிக எண் : 65

| | |
|---|---|
| 1722. பூவ னூர்ப்புனி தன்திரு நாமந்தான்<br>நாவில் நூறுநூ றாயிரம் நண்ணினார்<br>பாவ மாயின பாறிப் பறையவே<br>தேவர் கோவினுஞ் செல்வர்க ளாவரே. 1 | பூவனூரில் எழுந்தருளியுள்ள இறைவன் திருநாமத்தைத் தம் நாவில் நூறுநூறாயிரம் கூறிப் பரவியவர், தம் பாவங்கள் சிதைந்து கெட்டுத் தேவர் தலைவனாகிய இந்திரனைவிட மிகப் பெருஞ் செல்வர்கள் ஆவர். |

(100 x 1000) நூறாயிரம் –இலட்சார்ச்சனை. ஒரு லட்சம் முறை போற்றி சொல்லிப் பூசிப்பது. நூறு அடியார்கள் சிவாலயத்தில் அமர்ந்து ஒவ்வொருவரும் 1008 போற்றி 1 மணி நேரத்தில் சொன்னால் அது இலட்சார்ச்சனை ஆகும். 10 அடியார்கள் போற்றி செய்தால் 10 மணி நேரத்தில் இலட்சார்ச்சனை நிறைவு செய்யலாம். நூறு நூறாயிரம் – கோடி. பாறி – அழிந்து. பறைய – நீங்க.

| | |
|---|---|
| 1723. என்ன னென்மனை யெந்தையெ னாருயிர்<br>தன்னன் தன்னடி யேன்தன மாகிய<br>பொன்னன் பூவனூர் மேவிய புண்ணியன்<br>இன்ன னென்றறி வொண்ணா னியற்கையே. 2 | பூவனூர் மேவிய இறைவன் என்னை உடையவன்; என் மனையாளாகவும் உள்ளவன்; என் தந்தை; என் உயிர்; தனக்குத்தானே உவமையானவன்; தன்னடியேனுக்குச் செல்வமாக உள்ள பொன்னன்; தன் இயல்பினால் இன்னதன்மையன் என்று அறிய வியலாதவன் ஆவன். |
| 1724. குற்றங் கூடிக் குணம்பல கூடாதீர்<br>மற்றுந் தீவினை செய்தன மாய்க்கலாம்<br>புற்ற ராவினன் பூவனூ ரீசன்பேர்<br>கற்று வாழ்த்துங் கழிவதன் முன்னமே. 3 | குற்றங்களே மிகப் பெருகிக் குணம்பல கூடாதவர்களே! புற்றிற்பொருந்திய பாம்பினைச் சூடியவனாகிய பூவனூர் இறைவன் திருநாமத்தை நீர் மடிவதன் முன்பே கற்று வாழ்த்துவீராக; அங்ஙனம் வாழ்த்தினால் நீர் செய்த வினைகளை மாய்க்கலாம். |

| | | | |
|---|---|---|---|
| 1725. | ஆவின் மேவிய ஐந்தமர்ந் தாடுவான்<br>தூவெண் ணீறு துதைந்தசெம் மேனியான்<br>மேவ நூல்விரி வெண்ணியின் தென்கரைப்<br>பூவ னூர்புகு வார்வினை போகுமே. | 4 | பஞ்சகவ்வியங்களை விரும்பித் திருமுழுக்குக் கொள்வானும், தூய வெண்ணீறு செறிந்த செம்மேனியனும், விரிகின்ற பூணூல் மேவியவனும் ஆகிய பெருமானுக்குரியதும் வெண்ணியின் தென்கரைக் கண்ணதுமாகிய பூவனூரின்கண் புக்குத்தொழும் அடியவர்களின் வினை அவரை விட்டு நீங்கும். |
| 1726. | புல்லம் ஊர்தியூர் பூவனூர் பூம்புனல்<br>நல்ல மூர்திநல் லூர்நனி பள்ளியூர்<br>தில்லை யூர்திரு வாரூர்சீர் காழிநல்<br>வல்ல மூரென வல்வினை மாயுமே. | 5 | எருது ஊர்தியூரும், பூவனூரும், புனல் வளம் உடைய நல்லமும், ஊர்திநல்லூரும், நனி பள்ளியூரும், தில்லையூரும், திருவாரூரும், சீர்காழியும், நல்லவல்லமும் ஆகியவற்றைக் கூறியவளவிலேயே வல்வினை நீங்கும். |
| 1727. | அனுச யப்பட் டதுவிது வென்னாதே<br>கனிம னத்தொடு கண்களும் நீர்மல்கிப்<br>புனித னைப்பூவ னூரனைப் போற்றுவார்<br>மனித ரில்தலை யான மனிதரே. | 6 | கனிந்த மனத்தொடு கண்கள் நீர் நிறைந்து, ஐயப்பட்ட பொருளன்று இது; தெளிந்தது என்று கருதிப் பூவனூர்ப் புனிதனைப் போற்றும் மனிதர்களே எல்லா மனிதர்களிலும் தலையான மனிதராவர். |
| | அனுசயப்பட்டு – ஒருவரோடு ஒருவர் பகைமையுற்று.<br>அதுஇது என்னாதே – அது நன்று; இது தீது. இது நன்று; அது தீது என்று மாறுபடாமல் | | |
| 1728. | ஆதி நாதன் அமரர்க ளர்ச்சிதன்<br>வேத நாவன்வெற் பின்மடப் பாவையோர்<br>பாதி யானான் பரந்த பெரும்படைப்<br>பூத நாதன்தென் பூவனூர் நாதனே. | 7 | அழகிய பூவனூர் இறைவன், ஆதியில், முதல்வனாகத் தோன்றியவன். தேவர்களால் அருச்சித்துத் தொழப்படுபவன். வேதம் ஓதுகின்ற நாவினன். மலைமங்கை பாகன். பெரும் படைக்கலங்களையும் உடைய பூதநாதனும் ஆவன். |
| 1729. | பூவ னூர்தண் புறம்பயம் பூம்பொழில்<br>நாவ லூர்நள் ளாறொடு நன்னிலங்<br>கோவ லூர்குட வாயில் கொடுமுடி<br>மூவ லூருமுக் கண்ணனூர் காண்மினே. | 8 | பூவனூரும், குளிர்ந்த புறம்பயமும் பூம்பொழில் சூழ்ந்த நாவலூரும், நள்ளாறும், நன்னிலமும், கோவலூரும், குடவாயிலும், கொடுமுடியும், மூவலூரும் ஆகிய அனைத்தும் முக்கண்ணன் ஊர்கள்; காண்பீர்களாக. மூவலூர் வைப்புத்தலம். மயிலாடுதுறை அருகில் உள்ளது. |

| | | |
|---|---|---|
| **1730.** ஏவம் ஏது மிலாஅம ணேதலர்<br>பாவ காரிகள் சொல்வலைப் பட்டுநான்<br>தேவ தேவன் திருநெறி யாகிய<br>பூவ னூர்புகு தப்பெற்ற நாளின்றே. | 9 | விதிவிலக்குகள் ஏதும் இல்லாத அமணர்களாகிய குற்றமுடையோரும்; பாவகாரிகளுமாகியோர் சொல் வலையிற் பட்டு நான் தேவதேவனாம் சிவபெருமானின் திருநெறியாகிய பூவனூர் புகப்பெற்ற நாள் இன்றேயாகும். |
| **1731.** நார ணன்னொடு நான்முக னிந்திரன்<br>வார ணன்கும ரன்வணங் குங்கழற்<br>பூர ணன்திருப் பூவனூர் மேவிய<br>கார ணன்னெனை யாளுடைக் காளையே. | 10 | திருமாலும், பிரமனும், இந்திரனும், விநாயகரும், முருகனும் வணங்கும் கழலை உடைய நிறைவானவனும், திருப்பூவனூரில் பொருந்திய உலககாரணனுமாகிய பெருமானே, என்னை ஆளுடைய காளை போல்வான். |
| **1732.** மைக்க டுத்த நிறத்தரக் கன்வரை<br>புக்கெ டுத்தலும் பூவனூ ரன்னடி<br>மிக்க டுத்த விரல்சிறி தூன்றலும்<br>பக்க டுத்தபின் பாடியுய்ந் தானன்றே. | 11 | மேகத்தையொத்த நிறத்தை உடைய இராவணன் திருக்கயிலையைப் புகுந்தெடுத்தலும், பூவனூர் இறைவன் திரு வடியில் மற்ற விரல்களினும் சிறப்புமிக்குள்ள பெருவிரலைச் சற்று ஊன்றுதலும், தன் உறுப்பெல்லாம் பிளந்து வருந்தியபிறகு பாடி அருள்பெற்று உய்ந்தான். |

## 66. திருவலஞ்சுழி

**(அரனடிமைத்திறம், அடியாரடிமைத்திறம் இரண்டும் போற்றப்பட்ட பதிகம்)**

**ப.தொ.எண் : 179** **பதிக எண் : 66**

| | | |
|---|---|---|
| **1733.** ஓத மார்கட லின்விட முண்டவன்<br>பூத நாயகன் பொற்கயி லைக்கிறை<br>மாதொர் பாகன் வலஞ்சுழி யீசனைப்<br>பாத மேத்தப் பறையும்நம் பாவமே. | 1 | அலைகளை உடைய பாற்கடலினின்றெழுந்த ஆலகாலவிடத்தை உண்டவனும், பூதங்களுக்கு நாயகனும், பொன் வடிவாகிய திருக்கயிலைக்கு இறைவனும், உமையொரு பங்கனும் ஆகிய **திருவலஞ்சுழி** இறைவனின் திருவடியை ஏத்தித்தொழுதால் நம் பாவங்கள் கெடும். |
| **1734.** கயிலை நாதன் கறுத்தவர் முப்புரம்<br>எயில்கள் தீயெழ வெல்வல வித்தகன்<br>மயில்க ளாலும் வலஞ்சுழி யீசனைப்<br>பயில்கி லார்சிலர் பாவித் தொழும்பரே.<br><br>பயிலுதல் – பல காலம் பல வகையால் போற்றுதல் | 2 | திருக்கயிலைத் தலைவனும், சினந்த பகைவருடைய முப்புரங்களும் மதில்களுடன் தீயெழுமாறு வெல்ல வல்ல திறம் உடையவனும் ஆகிய மயில்கள் ஆரவாரிக்கும் **திருவலஞ்சுழி** இறைவனைப் பயின்று தொழார் சில பாவிகளாகிய அடிமைகள். |

| | |
|---|---|
| **1735.** இளைய காலமெம் மானை யடைகிலாத் **துளையி லாச்செவித் தொண்டர்காள்** நும்முடல் வளையுங் காலம் வலஞ்சுழி யீசனைக் களைக ணாகக் கருதிநீ ரும்மினே. 3 | இளமைப்பருவத்தேயே எம் பெருமானை அடைந்து வழிபடாத துளையற்ற செவிகளை உடைய தொண்டர்களே! நும் உடல் வளைந்து முதுமைக்காலம் வந்தவிடத்து **திருவலஞ்சுழி** இறைவனையே உமக்குத் துன்பம் களையும் துணையாகக் கருதி உய்வீராக. |
| சிவன் புகழ் கேட்கப் பெறாத செவிகள் கேள்விப் பொறியில்லாதவை. களைகண் – ஆதரவு | |
| **1736.** நறைகொள் பூம்புனல் கொண்டெழு மாணிக்காய்க் குறைவி லாக்கொடுங் கூற்றுதைத் திட்டவன் மறைகொள் நாவன் வலஞ்சுழி மேவிய இறைவ னையினி யென்றுகொல் காண்பதே. 4 | தேனைக்கொண்ட பூக்கள் நிரம்பிய நீர்கொண்டு திருமுழுக்காட்ட எழுந்த மார்க்கண்டேயனுக்காக வேறொன்றும் குறைவில்லாத கொடிய கூற்றுவனை உதைத்திட்டவனும், வேதங்களை ஓதுதலைக் கொண்ட நாவினனும் ஆகிய **திருவலஞ்சுழியிற்** பொருந்திய இறைவனை இனிக்காண்பது என்றுகொல்? |
| **1737.** விண்ட வர்புர மூன்று மெரிகொளத் திண்தி றற்சிலை யாலெரி செய்தவன் வண்டு பண்முர லுந்தண் வலஞ்சுழி அண்ட னுக்கடி மைத்திறத் தாவனே. 5 | அறத்தின் நீங்கியவர் புரங்கள் மூன்றையும் எரிதல் கொள்ள மிக்க திண்ணிய வில்லினால் எரித்தவனாகிய, வண்டுகள் இசையென ஒலிக்கின்ற குளிர்ச்சி உடைய **திருவலஞ்சுழி**யில் வீற்றிருக்கும் தேவதேவனுக்கு அடிமை செய்யும் திறத்து யான் ஆவன். |
| **1738.** படங்கொள் பாம்பொடு பான்மதி யஞ்சடை அடங்க வாழவல் லானும்பர் தம்பிரான் மடந்தை பாகன் **வலஞ்சுழி யானடி அடைந்த வர்க்கடி மைத்திறத் தாவனே.** 6 | படத்தைக்கொண்ட பாம்பினோடு நிலா தரும் மதியத்தையும் சடையில் அடங்குமாறு வைத்து வாழ வல்லானும், தேவர் தலைவனும், மங்கை பங்கனும் ஆகிய **திருவலஞ்சுழி** இறைவன் திருவடியை அடைந்தவர்க்கு அடிமைசெய்யும் திறத்து யான் ஆவன். |
| அடியார் பணி | |
| **1739.** நாக்கொண் டுபர வும்மடி யார்வினை போக்க வல்ல புரிசடைப் புண்ணியன் மாக்கொள் சோலை வலஞ்சுழி யீசன்றன் ஏக்கொ ளப்புர மூன்றெரி யானவே. 7 | நாவினைக்கொண்டு இசை பாடித்தொழும் அடியார்களின் வினைகளைப் போக்கவல்ல முறுக்கமைந்த சடையையுடைய புண்ணிய னாகிய மாமரங்களை கொண்ட நீண்ட சோலை சூழ்ந்த **திருவலஞ்சுழி** இறைவன் தன் ஓர் அம்பு கொள்ளவும் முப்புரங்களும் எரிக்கப்பட்டன. |
| ஏகொள – அம்பு தொட்ட அளவால். | |

| | |
|---|---|
| **1740.** தேடு வார்பிர மன்திரு மாலவர்<br>ஆடு பாதம் அவரு மறிகிலார்<br>மாட வீதி வலஞ்சுழி யீசனைத்<br>தேடு வானுறு கின்றதென் சிந்தையே. 8 | பிரமனும், திருமாலும் தேடுவாராகி இறைவனின் ஆடும் திருவடியை அறியும் ஆற்றல் இலராகவும், மாடங்கள் நெடிதுயர்ந்த வீதிகளை உடைய **திருவலஞ்சுழி** ஈசனை என் சிந்தை தேடுவதற்காக உறுகின்றது! |
| **1741.** கண்ப னிக்குங்கை கூப்புங்கண் மூன்றுடை<br>நண்ப னுக்**கெனை நான்கொடுப் பேனெனும்**<br>வண்பொன் னித்தென் வலஞ்சுழி மேவிய<br>பண்ப னிப்பொனைச் செய்த பரிசிதே. 9<br><br>தோழி கூற்று | கண்ணீர் ததும்புகின்றாள்; கைகூப்பித் தொழுகின்றாள்; முக்கண்ணுடைய நண்பனுக்கு என்னை நான் கொடுப்பேன் என்று சொல்கின்றாள்; வளவிய பொன்னித் தென்கரையில் உள்ள திருவலஞ்சுழி மேவிய பண்பனாகிய பெருமான் இந்தப் பொன்னனைய தலைவிக்குச் செய்த தன்மை இதுவாகும். |
| **1742.** இலங்கை வேந்த னிருபது தோளிற<br>நலங்கொள் பாதத் தொருவிர லூன்றினான்<br>மலங்கு பாய்வயல் சூழ்ந்த வலஞ்சுழி<br>வலங்கொள் வாரடி யென்றலை மேலவே. 10 | இலங்கை வேந்தனாம் இராவணனது இருபது தோளும் இறும்படியாக நன்மைமிக்க திருவடியில் ஒரு விரலால் ஊன்றினானுக்குரிய, மலங்கு மீன்கள் பாய்கின்ற வயல் சூழ்ந்த **திருவலஞ்சுழி**யை வலம் கொள்வார் திருவடிகள் என் தலையின் மேலன. |

## 67. திருவாஞ்சியம்

ப.தொ.எண் : 180 பதிக எண் : 67

| | |
|---|---|
| **1743.** படையும் பூதமும் பாம்பும்புல் வாயதள்<br>உடையுந் தாங்கிய உத்தம னார்க்கிடம்<br>புடைநி லாவிய பூம்பொழில் வாஞ்சியம்<br>அடைய வல்லவர்க் கல்லலொன் றில்லையே. 1<br><br>புல்வாய் – மான்;<br>புடை நிலாவிய – ஊர்ப்புறங்களில் விளங்கிய. | படைக்கலங்களும், பூதமும், பாம்பும், மான் தோல் உடையும் தாங்கிய உத்தமராகிய பெருமானுக்கு இடமாகிய, பக்கமெலாம் பொருந்திய பூம்பொழில் சூழ்ந்த திருவாஞ்சியத்தை அடையவல்லவர்களுக்கு ஒரு துன்பமும் இல்லை. |
| **1744.** பறப்பை யும்பசு வும்படுத் துப்பல<br>திறத்த வும்முடை யோர்திக ழும்பதி<br>கறைப்பி றைச்சடைக் கண்ணுதல் சேர்தரு<br>சிறப்பு டைத்திரு வாஞ்சியஞ் சேர்மினே. 2<br><br>பல வேள்விக் கூறுபாடுகளைச் செய்வோர் வாழும் பதி. "பறப்பைப் படுத்தெங்கும் பசு வேட்டெரியோம்பும் சிறப்பர் வாழ் தில்லை" – சம்பந்தர். | கருட பறவை வடிவாகிய தீபதம்பம் நட்டு, பசு நெய்யில் ஓமம் செய்து கோபூசையுடன் வேள்வி செய்து மற்றும் பல திறத்தை உடைய மறையவர்கள் வாழும் பதியாகியதும், களங்கமுடைய பிறையைச் சடையின்கண் வைத்த நெற்றிக் கண்ணராகிய சிவபிரான் சேரும் சிறப்புடையதுமாகிய திருவாஞ்சியம் சேர்வீராக. |

| | |
|---|---|
| **1745.** புற்றில் ஆடர வோடு புனல்மதி<br>தெற்று செஞ்சடைத் தேவர்பி ரான்பதி<br>சுற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்<br>பற்றிப் பாடுவார்க் குப்பாவ மில்லையே. **3**<br><br>ஆடரவு – ஆடுகின்ற பாம்பு. | புற்றில் ஆடும் இயல்புடைய பாம்பினோடு கங்கையும், பிறையும் பொருந்திய செஞ்சடையுடைய தேவர் தலைவன் திருப்பதியாகியதும், சுற்றிலும் மாடங்கள் சூழ்ந்ததுமாகிய திருவாஞ்சியத்தைப் பற்றிப் பாடுபவர்களுக்குப் பாவங்கள் இல்லை. |
| **1746.** அங்க மாறும் அருமறை நான்குடன்<br>தங்கு வேள்வியர் தாம்பயி லுந்நகர்<br>செங்கண் மாலிட மார்திரு வாஞ்சியம்<br>தங்கு வார்நம் அமரர்க் கமரரே. **4** | நம் தேவதேவராகிய இறைவர், ஆறங்கங்களும் நால்வேதங்களும் தங்குகின்ற வேள்வியுடைய அந்தணர்கள் பயிலும் நகராகிய திருவாஞ்சியத்தில், சிவந்த கண்ணையுடைய திருமாலை இடப்பாற்கொண்டு தங்குவார். |
| **1747.** நீறு பூசி நிமிர்சடை மேற்பிறை<br>ஆறு சூடும் அடிக ளுறைபதி<br>மாறு தானொருங் கும்வயல் வாஞ்சியம்<br>தேறி வாழ்பவர்க் குச்செல்வ மாகுமே. **5** | திருநீறு பூசி நிமிர்ந்த சடையின்மேல் பிறையும் கங்கையும் சூடும் பெருமான் உறையும் பதியாகியதும், களைகளாகிய பிரம்பு முதலியவை ஒருங்கும் வயல்வளமுடைய திருவாஞ்சியத்தைத் தெளிந்து வாழ்பவர்க்குச் செல்வம் பெருகும். |
| **1748.** அற்றுப் பற்றின்றி யாரையு மில்லவர்க்<br>குற்ற நற்றுணை யாவா னுறைபதி<br>தெற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்<br>கற்றுச் சேர்பவர்க் குக்கருத் தாவதே. **6**<br><br>x x x x x x x x x x x x x **7, 8, 9** | பாசக்கட்டுகள் நீங்கிப் பற்று என்பதொன்றும் இன்றி யாரையும் இல்லாதவர்க்குப் பொருந்திய நல்ல துணைவனாகிய பெருமான் உறையும் பதியாகியதும், விண்ணைத் தெற்றுகின்ற மாடங்கள் சூழ்வதுமாகிய திருவாஞ்சியத்தைக் கற்றுச் சேரும் அடியார்களுடைய கருத்தாவான் இறைவன். |
| **1749.** அருக்க னங்கி யமனொடு தேவர்கள்<br>திருத்துஞ் சேவடி யான்றிக ழுந்நகர்<br>ஒருத்தி பாக முகந்தவன் வாஞ்சியம்<br>அருத்தி யாலடை வார்க்கில்லை யல்லலே. **10**<br><br>அருத்தி – ஆசை, விருப்பம். | சூரியனும், அக்கினியும், யமனும், பிற தேவர்களும் திருத்தி அணிசெய்கின்ற சேவடியான் திகழும் நகரமாகியதும், மங்கையை ஒருபங்கிற் கொண்டு மகிழ்ந்தவனுடையது மாகிய திருவாஞ்சியத்தை விருப்பத்தினால் அடைவார்க்கு அல்லல் இல்லை. |

## 68. திருநள்ளாறு

ப.தொ.எண் : 181 பதிக எண் : 68

1750. **உள்ளா றாததோர்** புண்டரி கத்திரள்
தெள்ளா றாச்சிவ சோதித் திரளினைக்
கள்ளா றாதபொற் கொன்றை கமழ்சடை
நள்ளா றாவென நம்வினை நாசமே. 1

உள்ளே தன்நிறம் கெடாததாகிய ஒப்பற்ற தாமரைத் தொகுதியின் தெளிவு நீங்காத தாகிய சிவ ஒளிப் பிழம்பினை, தேன் நீங்காத பொன்போன்ற கொன்றைகமழும் சடையினை உடைய 'நள்ளாறா!' என்று கூற நம் வினைகள் நாசமாகும்.

உள் அறாத ஓர் புண்டரிகத்திரள் – ஏனைத் தாமரைகள் போல நீர்க் கீழ்ச்சேற்றில் கிழங்கு முதலாகத் தோன்றாது,

பீசம் முதலாகத் தோன்றி முளைத்த ஒப்பற்ற வெண்டாமரை

ஊறு மருவி யுயர்வரை யுச்சிமேல்
ஆறின்றிப் பாயு மருங்குள மொன்றுண்டு
சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்
பூவின்றிச் சூடான் புரிசடையானே – 8 – 414 திருமந்திரம்.

ஆறாத – ஆறாக – வழியாக – கொள்ளாத
புண்டரிகத் திரள் – தாமரையின் தன்மைகள் எல்லாம் திரட்டித் தன்னுட் கொண்டது.
தெள் – தெளிந்த ஞானம் – ஞானத்தெளிவு
தெள்ளறாச் சிவச்சோதித்திரள் – தெளிந்த சிவஞானத்தின் வழிக்காணும் சிவமாகிய பேரொளிப் பிழம்பு

1751. ஆர ணப்பொரு ளாமரு ளாளனார்
வார ணத்துரி போர்த்தம ணாளனார்
நார ணன்நண்ணி யேத்துநள் ளாறனார்
கார ணக்கலை ஞானக் கடவுளே. 2

ஆரணம் – வேதங்களின் தொகுதி

திருமால் பொருந்தி ஏத்துகின்ற நள்ளாற்று இறைவர், வேதத்தின் பொருளாக விளங்கும் அருளை ஆள்பவர்; யானையின் தோலைப் போர்த்த மணவாளர்; எல்லாவற்றுக்கும் மூல காரணமாகிய கலைஞானக் கடவுள் ஆவர்.

1752. மேகம் பூண்டதோர் மேருவிற் கொண்டெயில்
சோகம் பூண்டழல் சோரத்தொட் டான்அவன்
பாகம் பூண்டமால் பங்கயத் தானொடு
நாகம் பூண்டுகூத் தாடுநள் ளாறனே. 3

மேகத்தினைத் தன் உச்சியிற் கொண்டதாகிய மேருமாமலையாகிய வில்லைக்கொண்டு, முப்புரங்களும் சோகம் பூணுமாறு கனல் சோரத் தொட்டவனாகிய அவன், தன்னொரு பாகத்திற்கொண்ட திருமாலும், நான்முகனும் வழிபடுமாறு நாகம் பூண்டு கூத்தாடும் நள்ளாற்று இறைவன்.

1753. மலியுஞ் செஞ்சடை வாளர வம்மொடு
பொலியும் பூம்புனல் வைத்த புனிதனார்
நலியுங் கூற்றை நலிந்தநள் ளாறர்தம்
வலியுங் கண்டிறு மாந்து மகிழ்வனே. 4

செஞ்சடையில் மலிந்த பாம்பினோடு பொலிகின்ற கங்கையை வைத்த புனிதனாராகிய கூற்றுவனை நலிந்த நள்ளாறரது அருளாற்றலையும் கண்டு இறுமாந்து மகிழ்வேன்.

| | | |
|---|---|---|
| **1754.** | உறவ னாய்நிறைந் துள்ளங் குளிர்ப்பவன்<br>இறைவ னாகிநின் றெண்ணிறைந் தானவன்<br>நறவ நாறும் பொழிற்றிரு நள்ளாறன்<br>**மறவ னாய்ப்பன்றிப் பின்சென்ற மாயமே.** 5 | தேன்மணக்கும் பொழிலை உடைய திருநள்ளாற்றுப் பெருமான் உற்றுப் பொருந்தியவனாய் நிறைந்து உள்ளத்தைக் குளிர்விப்பவன்; இறைவனாகிநின்று எண்ணத்தில் நிறைந்தவன்; மறம் உடையவனாய் அருச்சுனனின் பொருட்டுப் பன்றியின்பின் சென்ற திருவிளையாடல் என்னையோ ? |
| **1755.** | செக்க ரங்கழி செஞ்சுடர்ச் சோதியார்<br>நக்க ரங்கர வார்த்தநள் ளாறனார்<br>வக்க ரன்னுயிர் வவ்விய மாயற்குச்<br>சக்க ரம்மருள் செய்த சதுரரே. 6 | சிவந்த வானமும் அழகிற்குத்தோற்று உள்ள மழிதற்குக் காரணமாகிய செஞ்சுடர் வீசும் சோதியரும், திகம்பரருமாகிய பாம்பினை ஆர்த்துக் கட்டிய நள்ளாற்றிறைவர் வக்கராசுரன் உயிர் போக்கியவராகிய திருமாலுக்குச் சக்கரப் படையை அருள் செய்த திறம் உடையவர். |
| **1756.** | வஞ்ச நஞ்சிற் பொலிகின்ற கண்டத்தர்<br>விஞ்சை யிற்செல்வப் பாவைக்கு வேந்தனார்<br>வஞ்ச நெஞ்சத் தவர்க்கு வழிகொடார்<br>நஞ்ச நெஞ்சர்க் கருளுநள் ளாறரே. 7 | நைந்த உள்ளம் உடையவர்களுக்கு அருளும் நள்ளாற்று இறைவர் வஞ்சனைமிக்க நஞ்சினாற் பொலிகின்ற திருக்கழுத்தினர்; தெய்வச் செல்வப்பாவையாகிய உமாதேவிக்கு வேந்தர்; வஞ்சனை உடைய நெஞ்சத்தவர்களுக்கு வழி கொடாதவர். |
| **1757.** | அல்ல னென்று மலர்க்கரு ளாயின<br>சொல்ல னென்றுசொல் லாமறைச் சோதியான்<br>வல்ல னென்றும்வல் லார்வளம் மிக்கவர்<br>நல்ல னென்றும்நல் லார்க்குநள் ளாறனே. 8 | அலர்க்கு அல்லன் என்றும், அருளாயின சொல்லன் என்றும், சொல்லாமறைச் சோதியானாகிய வல்லன் என்றும் துதிக்க வல்லவர் வளம் மிக்கவராவர். அத்தகைய நல்லார்க்கு நள்ளாறன் என்றும் நல்லன். |
| **1758.** | பாம்ப ணைப்பள்ளி கொண்ட பரமனும்<br>பூம்ப ணைப்பொலி கின்ற புராணனும்<br>தாம்ப ணிந்தளப் பொண்ணாத் தனித்தழல்<br>நாம்ப ணிந்தடி போற்றுநள் ளாறனே. 9 | நாம் பணிந்து அடிபோற்றும் நள்ளாற்று இறைவன், பாம்பாகிய அணையத்தக்க பள்ளியினைக் கொண்ட திருமாலும், பூவாகிய பணைத்த பள்ளியிற் பொலிகின்ற புராணனாகிய நான்முகனும், தாம் பணிந்து அளக்க இயலாத ஒப்பற்ற தனித்தழகாக உள்ளவன். |
| **1759.** | இலங்கை மன்ன னிருபது தோளிற<br>மலங்க மால்வரை மேல்விரல் வைத்தவர்<br>நலங்கொள் நீற்றர்நள் ளாறரை நாடொறும்<br>வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. 10 | இலங்கை மன்னனாகிய இராவணனது இருபது தோள்களும் இற்று மனஞ் சுழலும்படியாகத் திருக்கயிலாயப் பெருவரையின் மேல் திருவிரல் ஊன்றியவரும், நன்மை மிகுந்த திருநீற்றருமாகிய நள்ளாறரை நாள்தோறும் வலம் வந்து வணங்குவார் வினைகள் மாயும். |

## 69. திருக்கருவிலிக்கொட்டிட்டை

ப.தொ.எண் : 182 (உபதேசம்) பதிக எண் : 69

| | |
|---|---|
| 1760. மட்டிட் டகுழ லார்சுழ லில்வலைப்<br>பட்டிட் டுமயங் கிப்பரி யாதுநீர்<br>கட்டிட் டவினை போகக் கருவிலிக்<br>கொட்டிட் டையுறை வான்கழல் கூடுமே. 1 | தேனையுடைய மலர்களைவைத்துச் சூடிய கூந்தலை உடைய பெண்களாகிய சுழலின் வலைப்பட்டு மனம் மயங்கிப் பின் இரங்காமல், நீர் உம்மைக் கட்டிய வினைகள் போக. கருவிலிக் கொட்டிட்டை உறையும் பெருமான் திருவடிகளைக் கூடுவீராக. |
| 1761. ஞாலம் மல்கு மனிதர்காள் நாடொறும்<br>ஏல மாமல ரோடிலை கொண்டுநீர்<br>கால னார்வரு தன்முன் கருவிலிக்<br>கோல வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 2 | உலகில் நிறைந்த மனிதர்களே! நாள்தோறும் சிறந்த மலர்களோடு பச்சிலைகளையும் பொருந்துமாறு கொண்டு நீர் உமக்குக் கூற்றுவன் வருவதன் முன்பே அழகு மிக்க நெடிய பொழில்கள் சூழ்ந்த கருவிலிக் கொட்டிட்டையைச் சேர்வீராக. |
| 1762. பங்க மாயின பேசப் பறைந்துநீர்<br>மங்கு மாநினை யாதே மலர்கொடு<br>கங்கை சேர்சடை யான்றன் கருவிலிக்<br>கொங்கு வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 3 | குற்றமுடையவற்றைப் பேசுதலால், நீர், மங்குமாற்றை நினையாமல் மலர்களைக் கொண்டு, கங்கை சேர்ந்த சடையானுக்குரிய மணம் மிக்க நெடிய பொழில்களை உடைய கருவிலிக் கொட்டிட்டையைச் சேர்வீராக. |
| 1763. வாடி நீர்வருந் தாதே மனிதர்காள்<br>வேட னாய்விச யற்கருள் செய்தவெண்<br>காட னாருறை கின்ற கருவிலிக்<br>கோடு நீள்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 4 | மனிதர்களே! நீர் துன்பங்களால் வாடி வருந்தாமல் அருச்சுனனுக்கு வேடனாய் வந்து அருள்செய்த திருவெண்காடனார் உறைகின்ற கிளைகள் நீண்ட பொழிலை உடைய கருவிலிக் கொட்டிட்டையைச் சேர்வீராக. |
| 1764. உய்யு மாறிது கேண்மி னுலகத்தீர்<br>பைகொள் பாம்பரை யான்படை யார்மழுக்<br>கையி னானுறை கின்ற கருவிலிக்<br>கொய்கொள் பூம்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 5 | உலகத்தில் உள்ளவர்களே! இதுவே உய்யும்வழி; கேட்பீராக; படம்கொண்ட பாம்பை அரையின்கண் அணிந்தவனும், மழுப்படை பொருந்திய கையை உடையவனும் ஆகிய பெருமான் உறைகின்ற, கொய்து கொள்ளத்தக்க பூக்களை உடைய பொழில் சூழ்ந்த கருவிலிக் கொட்டிட்டையைச் சேர்வீராக. |

| | |
|---|---|
| **1765.** ஆற்ற வும்அவ லத்தழுந் தாதுநீர்<br>தோற்றுந் தீயொடு நீர்நிலந் தூவெளி<br>காற்று மாகிநின் றான்றன் கருவிலிக்<br>கூற்றங் காய்ந்தவன் கொட்டிட்டை சேர்மினே. 6 | நீர், மிகவும் துன்பத்தில் அழுந்தாமல், தோற்றுகின்ற தீ, நீர், நிலம், விசும்பு, காற்று ஆகி நின்றவனும், கூற்றுவனைக் காய்ந்தவனும் ஆகிய பெருமானுக்குரிய கருவிலிக் கொட்டிட்டையைச் சேர்வீராக. |
| **1766.** நில்லா வாழ்வு நிலைபெறு மென்றெண்ணிப்<br>பொல்லா வாறு செயப்புரி யாதுநீர்<br>கல்லா ரும்மதில் சூழ்தண் கருவிலிக்<br>கொல்லே றூர்பவன் கொட்டிட்டை சேர்மினே. 7 | நில்லாத வாழ்வு நிலைபெறும் என்று எண்ணிப் பொல்லா நெறியின்கண் வினைகளைச் செய விரும்பாது, நீர், கல்லால் நிறைந்த மதில் சூழ்ந்து தண்ணியதும் கொல்லேறாகிய இடபத்தினை ஊர்வானுக்குரியதும் ஆகிய கருவிலிக் கொட்டிட்டையைச் சேர்வீராக. |
| **1767.** பிணித்த நோய்ப்பிற விப்பிரி வெய்துமா<br>றுணர்த்த லாமிது கேண்மி னுருத்திர<br>கணத்தி னார்தொழு தேத்துங் கருவிலிக்<br>குணத்தி னானுறை கொட்டிட்டை சேர்மினே. 8<br><br>சிவபெருமானைச் சேர்வீராயின் நீங்கள் பிறவி நோயில் நீங்குதல் மட்டுமின்றிப் பிறர்க்கும் பிறவியை நீக்கும் ஆசாரியத்தன்மை / தலைமை பெறுவீர்கள் என்றபடி. | உம்மைப் பிணித்துள்ள துன்பம் நிறைந்த பிறவிப் பிரிவெய்தும் நெறியை உணர்த்தலாகின்ற இதனைக் கேட்பீராக! உருத்திரகணத்தினார் தொழுதேத்துவதும், எண்குணத்தினான் உறைவதும் ஆகிய கருவிலிக் கொட்டிட்டையைச் சேர்வீராக. |
| **1768.** நம்பு வீரிது கேண்மின்கள் நாடொறும்<br>எம்பி ரானென் றிமையவ ரேத்துமே<br>கம்ப னாருறை கின்ற கருவிலிக்<br>கொம்ப னார்பயில் கொட்டிட்டை சேர்மினே. 9 | மனிதர்களே! நான் சொல்லும் இதனை நம்பிக் கேட்பீராக; நாள்தோறும் தேவர்கள், 'எம்பெருமான்!' என்று ஏத்தும் ஏகம்பத்து இறைவனார் உறைகின்றதும், பூங்கொம்பு போன்ற பெண்கள் பயில்வதும் ஆகிய கருவிலிக் கொட்டிட்டையைச் சேர்வீராக. |
| **1769.** பாரு ளீரிது கேண்மின் பருவரை<br>பேரு மாறெடுத் தானை யடர்த்தவன்<br>கார்கொள் நீர்வயல் சூழ்தண் கருவிலிக்<br>கூர்கொள் வேலினன் கொட்டிட்டை சேர்மினே. 10 | உலகிலுள்ளவர்களே! இது கேட்பீராக! பெரிய திருக்கயிலாய மலையைப் பெயரும்படி எடுக்கலுற்ற இராவணனை அடர்த்தவனும் கூர்மைகொண்ட வேலை உடையவனும் ஆகிய பெருமான் உறைகின்ற கருமையைக் கொண்ட நீர் நிறைந்த வயல் சூழ்ந்த குளிர்ந்த கருவிலிக் கொட்டிட்டையைச் சேர்வீராக. |

## 70. திருக்கொண்டீச்சுரம்

ப.தொ.எண் : 183 பதிக எண் : 70

**1770.** கண்ட பேச்சினிற் காளையர் தங்கள்பால்
மண்டி யேச்சுணும் மாதரைச் சேராதே
சண்டி யீச்சுர வர்க்கருள் செய்தவக்
கொண்டி யீச்சுர வன்கழல் கூறுமே. 1

காளை போன்ற ஆடவரிடத்துப் பொருந்திக் கண்டவாறு பேசும் பேச்சாகிய ஏச்சுண்ணும் பெண்களைச் சேராது, சண்டீச்சுரர்க்கு அருள் செய்த கொண்டீச்சுரத்து இறைவன் திருவடியைக் கூறுவீராக.

**1771.** சுற்ற முந்துணை நன்மட வாளொடு
பெற்ற மக்களும் பேண லொழிந்தனர்
குற்ற மில்புகழ்க் கொண்டீச் சுரவனார்
பற்ற லாலொரு பற்றுமற் றில்லையே. 2

சுற்றத்தாரும், வாழ்க்கைத் துணையாகிய நல்ல மனைவியோடு பெற்ற பிள்ளைகளும் பேணுதலை ஒழிந்தனராதலால், குற்றமற்ற புகழை உடைய கொண்டீச்சரத்து இறைவரையன்றி ஒரு பற்றுமற்று இல்லை.

**1772.** மாடு தானது வில்லெனின் மாநுடர்
பாடு தான்செல்வா ரில்லைபன் மாலையாற்
கூட நீர்சென்று கொண்டீச் சுரவனைப்
பாடு மின்பர லோகத் திருத்துமே. 3

செல்வம் இல்லையென்றால், மாநுடர் பெருமையோடு சூழச் செல்வாரில்லை. ஆதலால், பல மாலைகளாற் கூட, நீர் சென்று கொண்டீச்சரத்து இறைவனைப் பாடுவீராக; அவ்விறைவன் பரலோகத்து இருக்கவைக்கும்.

**1773.** தந்தை தாயொடு தார மெனுந்தளைப்
பந்தம் ஆங்கறுத் துப்பயில் வெய்திய
கொந்த விழ்பொழிற் கொண்டீச் சுரவனைச்
சிந்தை செய்மின் அவனடி சேரவே. 4

தந்தையும் தாயும் தாரமுமாகிய கட்டாகிய தளையை அறுத்துப் பூங்கொத்துக்கள் பெருகி மலர்கின்ற பொழில்களை உடைய கொண்டீச்சுரத்து இறைவனைச் சேவடி சேர்வதன் பொருட்டுச் சிந்தை செய்வீர்களாக.

**1774.** கேளு மின்இள மைய்யது கேடுவந்
தீளை யோடிரு மல்லது எய்தன்முன்
கோள ராவணி கொண்டீச் சுரவனை
நாளு மேத்தித் தொழுமின் நன்காகுமே. 5

மனிதர்களே! கேட்பீர்களாக; இளமைக்குக் கேடு வந்து சளியோடு கூடிய இருமல் வந்தெய்துவதற்குமுன் கொள்ளுகின்ற பாம்பினை அணிகின்ற கொண்டீச்சுரத்து இறைவனை நாளும் ஏத்தித் தொழுவீராக; உமக்கு நல்லனவே ஆகும்.

**1775.** வெம்பு நோயும் இடரும் வெறுமையும்
துன்ப முந்துய ரும்மெனுஞ் சூழ்வினை
கொம்ப னார்பயில் கொண்டீச் சுரவனை
எம்பி ரானென வல்லவர்க் கில்லையே. 6

பூங்கொம்பைப் போன்ற பெண்கள் பயில்கின்ற கொண்டீச்சுரத்து இறைவனை 'எம்பிரான்' என்று ஏத்தவல்லவர்க்கு, வெம்புதற்குக் காரணமாகிய நோயும், துன்பமும், வறுமையும் முதலிய சூழ்தற்குரிய வினைகள் இல்லை.

---

இடர் – பிறவித்துன்பம்
துன்பம் – உடல் துன்பம். துயர் – உயிர்த்துன்பம்

| | |
|---|---|
| 1776. அல்ல லோடரு நோயி லழுந்திநீர்<br>செல்லு மாநினை யாதே கனைகுரல்<br>கொல்லை யேறுடைக் கொண்டீச் சுரவனை<br>வல்ல வாறு தொழவினை மாயுமே. 7 | துன்பத்தோடு அருநோய்களில் அழுந்திச் செல்லும் நெறி எது என்று நினையாமல் நீர், கனைத்த குரலை உடைய முல்லை நிலத்துக்குரிய இடபவாகனத்தை ஊர்ந்தவனாகிய கொண்டீச்சுரத்து இறைவனை வல்லவாறு தொழுவீரேயாயின் வினைகள் மாயும். |
| 1777. நாறு சாந்தணி நன்முலை மென்மொழி<br>மாறி லாமலை மங்கையொர் பாகமாக்<br>கூற னாருறை கொண்டீச் சுரநினைந்<br>தூறு வார்தமக் கூனமொன் றில்லையே. 8 | நறுமணம் வீசும் கலவைச் சாந்தணிந்த நல்ல தனங்களையும் மெல்லிய மொழிகளையும் உடைய மாறுபாடற்ற உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட கூற்றை உடையவராகிய – பெருமான் உறைகின்ற கொண்டீச்சுரத்தை நினைத்து நெஞ்சில் மேலும் மேலும் எண்ணுபவர்களுக்குக் குற்றம் ஒன்றும் இல்லை. |
| 1778. அயிலார் அம்பெரி மேருவில் லாகவே<br>எயிலா ரும்பொடி யாய்விழ எய்தவன்<br>குயிலா ரும்பொழிற் கொண்டீச் சுரவனைப்<br>பயில்வா ரும்பெரு மைபெறும் பாலரே. 9<br><br>அயிலார் அம்பு – அக்கினிதேவனே அம்பாக, மேருவே வில்லாக, திருமால் நாணாக. | மேருமலையை வில்லாகக் கொண்டு கூர்மையையுடைய ஓரம்பினால் முப்புரங்கள் தூளாகுமாறு விழ எரியால் எய்தவனாகிய குயில்களை உடைய பொழில் சூழ்ந்த கொண்டீச்சுரத்து இறைவனைப் பயில்கின்ற அடியவர்கள் பெருமை பெறும் பகுதியை உடையவராவர். |
| 1779. நிலையி னார்வரை நின்றெடுத் தான்றனை<br>மலையி னாலடர்த் துவிறல் வாட்டினான்<br>குலையி னார்பொழில் கொண்டீச் சுரவனைத்<br>தலையி னால்வணங் கத்தவ மாகுமே. 10 | நிலையினைப் பொருந்திய திருக்கயிலையை ஆணவத்தோடு நின்று எடுத்த இராவணனை மலையினால் வருத்தி அவன் ஆற்றலை வாட்டியவனாகிய, குலைகள் பொருந்திய சோலையையுடைய பொழில்கள் சூழ்ந்த கொண்டீச்சுரத்து இறைவனைத் தலையினால் வணங்கலே தவம் ஆகும். |

## 71. திருவிசயமங்கை

ப.தொ.எண் : 184 பதிக எண் : 71

| | |
|---|---|
| 1780. குசையும் அங்கையிற் கோசமுங் கொண்டவவ்<br>வசையின் மங்கல வாசகர் வாழ்த்தவே<br>இசைய மங்கையுந் தானுமொன் றாயினான்<br>விசைய மங்கையுள் வேதியன் காண்மினே. 1<br><br>குசை – தருப்பை; கோசம் – புத்தகம் | விசயமங்கையுள் வீற்றிருக்கும் வேதியனாகிய பெருமான், தம் அங்கையில் தருப்பையும், புத்தகமும் கொண்ட அழகிய, குற்றமற்ற மங்கலவாசகம் உரைப்போர் வாழ்த்தும்படி பொருந்த உமையும் தானும் ஒரு திருமேனி உருவில் நின்றான். |

| | |
|---|---|
| **1781.** ஆதி நாத னடல்விடை மேலமர்<br>பூத நாதன் புலியத ளாடையன்<br>வேத நாதன் விசயமங் கையுளான்<br>பாத மோதவல் லார்க்கில்லை பாவமே. 2 | ஆதிக்கண் தோன்றியநாதனும், வலியுடைய இடபத்தின்மேல் அமரும் பூதநாதனும், புலித்தோலாடையனும், வேதநாதனும் ஆகிய பெருமான் விசயமங்கையில் உள்ளான்; அவன் திருவடிகளைப் புகழ்ந்து உரைக்க வல்லார்க்குப் பாவம் இல்லை. |
| **1782.** கொள்ளி டக்கரைக் கோவந்த புத்தூரில்<br>வெள்வி டைக்கருள் செய்விச யமங்கை<br>உள்ளி டத்துறை கின்ற வுருத்திரன்<br>கிள்ளி டத்தலை யற்ற தயனுக்கே. 3 | கொள்ளிடக்கரைக் கோவந்தபுத்தூரில் வெள்ளிய இடபம் பூசிக்க அதற்கு அருள் செய்தவனும், விசயமங்கையுள் இடமாகக் கொண்டு உறைகின்றவனும் ஆகிய உருத்திரன், கிள்ளியவிடத்துப் பிரமனுக்குத் தலை ஒன்று அற்றது. |

கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள கோவிந்தப்புத்தூர் என்ற ஊரில் உள்ள தலத்தின் பெயர் விசயமங்கை. பல கல்வெட்டுகள் நிரம்பிய தொன்மையான தலம். பல ஆண்டுகளுக்குப் பிறகு நமது அறக்கட்டளை திருப்பணி குடமுழுக்கை நிறைவேற்றியது. கொள்ளிடத்தின் நேர் தென்கரையில் திருப்புறம்பயம் அமைந்துள்ளது.

| | |
|---|---|
| **1783.** **திசையு மெங்குங் குலுங்கத்** திரிபுரம்<br>அசைய அங்கெய்திட் டாரழ லூட்டினான்<br>விசைய மங்கை விருத்தன் புறத்தடி<br>விசையின் மங்கி விழுந்தனன் காலனே. 4<br><br>சிவபரத்துவத்தை விளக்கும் பாடல் | விசயமங்கையில் உள்ள மிகப் பழையவனாகிய பெருமான், திசைகள் எங்கும் குலுங்குமாறு திரிபுரங்கள் அசையும்படிப் பொருந்திய அழலூட்டியவன்; அப்பெருமான் திருவடிப்புறத்து விரைந்து மயங்கி விழுந்தனன் கூற்றுவன். |
| **1784.** பொள்ள லாக்கை யகத்திலைம் பூதங்கள்<br>கள்ள மாக்கிக் கலக்கிய காரிருள்<br>விள்ள லாக்கி விசயமங் கைப்பிரான்<br>உள்ளல் நோக்கியென் னுள்ளுள் உறையுமே. 5 | ஓட்டைகளை உடைய உடம்பினகத்து ஐம்பூதங்கள் கள்ளத்தனம் உடையவாக்கிக் கலக்கிய கரிய இருளிலே, அவ்விருளை விலக்குதல் புரிந்த விசயமங்கைப் பெருமான் தன் திருவுள்ளத்தே நினைந்தருளலை நோக்கி என் உள்ளத்துள்ளே உறைவான். |
| **1785.** கொல்லை யேற்றுக் கொடியொடு பொன்மலை<br>வில்லை யேற்றுடை யான்விச யமங்கைச்<br>**செல்வ போற்றியென் பாருக்குத்** தென்திசை<br>எல்லை யேற்றலு மின்சொலு மாகுமே. 6 | முல்லை நிலத்துக்குரிய இடபக் கொடியையும், மேருமலையாகிய வில்லையும் பொருந்த உடையவனாகிய விசய மங்கையின் அருட்செல்வ! போற்றி! என்று உரைப்பார்க்குத் தென் திசையில் உளதாகிய எமனுலக எல்லையில், காலன் வந்து வரவேற்று இன்சொல் கூறுதல் நடக்கும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1786.** கண்பல் உக்க கபாலம்அங் கைக்கொண்டு<br>உண்ப லிக்குழ லுத்தம னுள்ளொளி<br>வெண்பி றைக்கண்ணி யான்விச யமங்கை<br>நண்ப னைத்தொழப் பெற்றது நன்மையே. 7 | கண்ணும் பல்லும் சிந்திவிட்ட கபாலத்தைத் தம் அழகிய கைக்கொண்டு உண்ணுகின்ற பலிக்கு எங்கும் திரிகின்ற உத்தமனும், வெண்பிறையைக் கண்ணியாக உடையானுமாகிய விசயமங்கையின் நண்புக்குரிய கடவுளைத் தொழப்பெற்றது நன்மையேயாகும். |
| **1787.** பாண்டு வின்மகன் பார்த்தன் பணிசெய்து<br>வேண்டும் நல்வரங் கொள்விச யமங்கை<br>ஆண்ட வன்னடி யேநினைந் தாசையால்<br>**காண்ட லேகருத் தாகி** யிருப்பனே. 8<br><br>காண்டலே கருத்தாகி – அப்பர் சுவாமிகளுக்கு மிகவும் பிடித்தமான சொற்றொடர் | பாண்டுவின் மகனாகிய பார்த்தன் (அருச்சுனன்) பணிகள் செய்து தான் விரும்பிய நல்வரத்தைக் கொண்ட விசய மங்கையில் உறையும் ஆண்டவன் திருவடியே நினைந்து ஆசையால் அவனைக் காணுதலே கருத்தாக இருப்பன் அடியேன். |
| **1788.** வந்து கேண்மின் மயல்தீர் மனிதர்காள்<br>வெந்த நீற்றன் விசயமங் கைப்பிரான்<br>சிந்தை யால்நினை வார்களைச் சிக்கெனப்<br>பந்து வாக்கி உய்யக்கொளுங் காண்மினே. 9 | மயக்கந் தீர்தற்குரிய மனிதர்களே! அடியேன் கூறுவதை வந்து கேட்பீராக; வெந்த திருநீற்றை அணிந்தவனாகிய விசயமங்கைப் பெருமான் தன்னைச் சிந்தையால் நினைவார்களைச் சிக்கெனத் தன் உறவுடையவராக்கி உய்யக் கொள்வான்; காண்பீராக. |
| **1789.** இலங்கை வேந்த னிருபது தோளிற<br>விலங்கல் சேர்விர லான்விச யமங்கை<br>**வலஞ்செய் வார்களும் வாழ்த்திசைப் பார்களும்**<br>நலஞ்செய் வாரவர் நன்னெறி நாடியே. 10 | இலங்கைக்கரசனாகிய இராவணனது இருபது தோள்களும் இற்று விழும்படியாகத் திருக்கயிலையை ஊன்றிய திருவிரலை உடையவனாகிய பெருமானுக்குரிய விசய மங்கையை வலம் வந்து வணங்குபவர்களும், வாழ்த்து இசைப்பவர்களும் நன்னெறி நாடித் தமக்கு நலம் செய்வாராவர். |

## 72. திருநீலக்குடி

**ப.தொ.எண் : 185** — **பதிக எண் : 72**

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1790.** வைத்த மாடும் மனைவியும் மக்கள்நீர்<br>செத்த போது செறியார் பிரிவதே<br>நித்த நீலக் குடியர னைந்நினை<br>சித்த மாகிற் சிவகதி சேர்திரே. 1 | தேடிவைத்த செல்வமும், மனைவியும், மக்களும் நீர் செத்தபோது உம்மைச் செறியார்; பிரிவதே இயல்பாம்; நாள்தோறும் நீலக்குடியரனை நினையும் சித்தம் ஆகின், சிவகதி சேர்வீர். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **1791.** செய்ய மேனியன் தேனொடு பால்தயிர்<br>நெய்ய தாடிய நீலக் குடியரன்<br>மைய லாய்மற வாமனத் தார்க்கெலாம்<br>கையி லாமல கக்கனி யொக்குமே. 2<br><br>ஆமலகக்கனி – நெல்லிக்கனி | சிவந்த திருமேனியனாய்த் தேனும், பாலும், தயிரும், நெய்யும் கொண்டு திருமுழுக்காடும் நீலக்குடி அரனின்மேல் காதல் கொண்ட, மறவாத மனத்தினர்க்கெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனி போல அப்பெருமான் புலப்பட்டு அருள்புரிவான். |
| **1792.** ஆற்ற நீள்சடை ஆயிழை யாளொரு<br>கூற்றன் மேனியிற் கோலமு தாகிய<br>நீற்றன் நீலக் குடியுடை யானடி<br>போற்றி னாரிடர் போக்கும் புனிதனே. 3 | நீலக்குடி உடைய பெருமான், கங்கையாற்றுடன் கூடிய நீண்ட சடையையுடையவன். உமாதேவியை ஒரு கூற்றிற்கொண்ட இயல்பினன். திருமேனிக்கு அழகு தருவதாகிய திருநீற்றை உடையவன். திருவடி போற்றினார் இடர்களைப் போக்கும் புனிதன். |
| **1793.** நாலு வேதியர்க் கின்னருள் நன்னிழல்<br>ஆலன் ஆலநஞ் சுண்டகண் டத்தமர்<br>நீலன் நீலக் குடியுறை நின்மலன்<br>கால னாருயிர் போக்கிய காலனே. 4 | நான்கு முனிவர்களுக்கு இன்னருள் புரிய ஆலமரத்தின் நன்னிழலின் கீழ் இருந்தோன்; ஆலகால நஞ்சு உண்ட கண்டத்துடன் பொருந்திய நீலநிறம் உடையவன். நீலக்குடி உறையும் மலமற்றவன்; காலன் உயிர் போக்கிய கடவுள். |
| **1794.** நேச நீலக் குடியர னேயெனா<br>நீச ராய்நெடு **மால்செய்த மாயத்தால்**<br>ஈச னோர்சரம் எய்ய எரிந்துபோய்<br>நாச மானார் திரிபுர நாதரே. 5 | நேசத்துக்குரிய நீலக்குடி அரனே! என்னாத கீழ்மை உடையவராய் நெடுமால் செய்த மாயத்தால் திரிபுரத்து அசுரர்கள் ஈசன் ஓரம்பு எய்ய எரிந்து சாம்பலாய்ப் போய் நாசமாயினர். |

## மால் செய்த மாயம் - நீலக்குடி அரனை நேசிக்கும் சிவபூசை மகிமை

தாரகாசுரனின் புதல்வர்களாகிய தாரகாட்சன், கமலாட்சன், வித்துவன் மாலி என்ற மூவரும் சிவபெருமானை நோக்கிப் பலகாலம் தவமிருந்து, பறக்கும் மூன்று கோட்டைகளைப் பெற்றுப் பல நகரங்களை அழித்து வந்தனர். அவர்களுடைய சிவபூசைகளின் தவ வலிமையால் தேவர் கூட்டத்தால் அவர்களை ஒன்றும் செய்ய முடியவில்லை. இவர்களுடைய சிவபூசையைத் தடைபடச் செய்தால் தான் வெற்றியடைய முடியும் என்றுணர்ந்த திருமால், புத்த வேடத்தில் நாரதரை அனுப்பி அவ்மூவருக்கும் புறமதத்தை உபதேசித்து அவர்கள் பெருமானிடம் வைத்திருந்த அன்புக்கு, பத்திக்கு ஊறு விளைவிக்கச் செய்து, திரியும் புரங்களான திரிபுரத்தைப் பெருமானால் தகனம் செய்வித்தனர். நாம் அன்றாடம் செய்து கொண்டிருக்கும் சிவ பூசைக்கும் அதுபோலத் தடைகள் வரலாம். பூதம் ஐந்துநிலையிற் கலங்கினும் நாம் பூசையை நிறுத்துவதில்லை என்ற உறுதிமொழி எடுத்துக் கொண்டால் அல்லல்கள் வாரா. கணநேரங்கூடத் தவறாமல் சிவபூசையையோ, ஐந்தெழுத்து செபத்தையோ செய்து கொண்டேயிருந்தால் எந்தக் கோளரக்கர்களாலும் நமக்கு இடையூறு செய்ய முடியாது.

**1795.** கொன்றை சூடியைக் குன்ற மகளொடும்
நின்ற நீலக் குடியர னேயெனீர்
என்றும் வாழ்வுகந் தேயிறு மாக்குநீர்
பொன்றும் போது நுமக்கறி வொண்ணுமே. 6

என்றும் பொய்யாகிய உலக வாழ்வை உகந்து இறுமாப்பு அடைகின்ற நீர் இறக்கும்போது நுமக்கு அறியவொண்ணுமோ? ஒண்ணா தாதலால் கொன்றை சூடும் கடவுளுமாகிய மலை மகளோடும் நின்ற **நீலக்குடி** அரனே என்று உரைப்பீர்களாக!

பொன்றும் போதும் – இறக்கும் போதும். அறிவொண்ணும் – அவனை அறிதல் உண்டாகும் இப்பிறப்பில் வாழ்வு சிறக்கும். இறக்கும் போதும் அவன் நினைப்பு உண்டானால் மறுபிறப்பும் இல்லையாகும்படிச் செய்யும்.

---

**1796.** கல்லி னோடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை **நீர்புக நூக்க**வென் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
**நல்ல நாமம் நவிற்றி** உய்ந் தேனன்றே. 7

நீர்புகநூக்க – கடலின் கண்ணே அழுந்தும்படி தள்ளிவிட. அப்பர் சுவாமிகள் தமது வரலாற்றைக் கூறுமிடம்.

கல்லினோடு என்னைச் சேர்த்துக்கட்டி அமண் ஒழுக்கமுடையவர்கள் விரைந்து கடல் நீரிற் புக – நூக்கிவிட என் வாக்கினால் நெல்வளம் உடைய நீண்ட வயல் சூழ்ந்த நீலக்குடி அரனுடைய நல்ல நாமத்தைச் சொல்லி நன்றே உய்ந்தேன்.

---

**1797.** அழகி யோமிளை யோமெனு மாசையால்
ஒழுகி ஆவி யுடல்விடு முன்னமே
நிழல தார்பொழில் நீலக் குடியரன்
கழல்கொள் சேவடி கைதொழு துய்ம்மினே. 8

'யாம் அழகியவர்கள்; இளையவர்கள்' எனும் ஆசையால் ஒழுகி, உயிர் உடலைவிட்டுப் பிரிந்துபோவதற்கு முன்பே, நிழல் உடையதாய்ச் செறிந்த பொழில்களையுடைய **நீலக்குடி** அரனுடைய கழலணிந்த சேவடிகளைக் கைகளால் தொழுது உய்வீர்களாக.

---

**1798.** கற்றைச் செஞ்சடைக் காய்கதிர் வெண்திங்கள்
பற்றிப் பாம்புடன் வைத்த பராபரன்
நெற்றிக் கண்ணுடை நீலக் குடியரன்
சுற்றித் தேவர் தொழுங்கழற் சோதியே. 9

கற்றை – பலவற்றின் தொகுதி; காய்கதிர் – கிரணங்களை வெளிவிடும் சூரியன். பராபரன் – மேலானவற்றிற்கெல்லாம் மேலானவன்.

கற்றையாகிய செஞ்சடையில், குளிர்ந்த கதிர்களை வீசும் வெண்திங்களைப் பற்றிப் பாம்புடன் வைத்த கடவுளாகிய நெற்றிக் கண்ணுடைய **நீலக்குடி** அரன், தேவர் சுற்றிவந்து தொழும் கழலணிந்த சோதி வடிவினன் ஆவன்.

---

**1799.** தருக்கி வெற்பது தாங்கிய வீங்குதோள்
அரக்க னாருட லாங்கொர் விரலினால்
நெரித்து நீலக் குடியரன் பின்னையும்
இரக்க மாயருள் செய்தன னென்பரே. 10

**நீலக்குடி** அரன், தருக்கடைந்து திருக் கயிலையைத் தாங்கிய செறிந்த தோளை உடைய இராவணன் உடலை ஓர் திருவிரலால் நெரித்துப் பின்னையும் இரக்கமாகி அருள் புரிந்த கருணைத் திறம் உடையவன் என்பர்.

## 73. திருமங்கலக்குடி

ப.தொ.எண் : 186 பதிக எண் : 73

**1800.** தங்க லப்பிய தக்கன் பெருவேள்வி
அங்க லக்கழித் தாரருள் செய்தவன்
கொங்க லர்க்குழல் கொம்பனை யாளொடு
மங்க லக்குடி மேய மணாளனே. 1

மணம் உடைய மலரைச் சூடிய கூந்தலை உடைய பூங்கொம்பு போன்ற உமாதேவியோடு மங்கலக்குடியில் மேவிய மணவாளன், தம்மைக் கலக்குதற்காகத் தக்கன் செய்த பெருவேள்வியை அங்கு அலைக்கழித்துப் பின் நிறைந்த அருள் புரிந்தவன்.

**1801.** காவி ரியின்வ டகரைக் காண்தகு
மாவி ரியும்பொ ழில்மங் கலக்குடித்
தேவ ரியும்பி ரமனுந் தேடொணாத்
தூவெ ரிச்சுடர்ச் சோதியுட் சோதியே. 2

தேவரி – தெய்வத்தன்மை பொருந்தியவராகிய திருமால். தூஎரி – தூயநெருப்பு. தன் கண் அழுக்கு இன்றி இருப்பது, பிறிதில்லை ஆகலின் தூஎரி என்றார்.

காவிரியின் வடகரையில் காணத்தக்க மாமரங்கள் விரிகின்ற பொழில் சூழ்ந்த மங்கலக்குடியில், திருமாலாகிய தேவும், பிரமனும் தேடி அறியவியலாத தூய எரிவிடும் சுடரை உடைய சோதியுள் சோதியாக வீற்றிருக்கிறான் இறைவன்.

**1802.** மங்க லக்குடி யீசனை மாகாளி
வெங்க திர்ச்செல்வன் விண்ணொடு மண்ணும்நேர்
சங்கு சக்கர தாரி சதுர்முகன்
அங்க கத்திய னும்மர்ச்சித் தாரன்றே. 3

மங்கலக்குடி இறைவனை, மாகாளியும், சூரியனும், விண்ணும் மண்ணும் நிகராய, சங்கு சக்கரதாரியாகிய திருமாலும், பிரமனும், அகத்தியனும் அருச்சித்தார்கள்.

### விண்ணுலகத்தோர் சிவபூசை செய்யும் மண்ணுலகம்

பூமியில் பிறப்பதற்கும், சிவ பூசை செய்வதற்கும் நாம் புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

மங்கலக்குடி ஈசனை மாகாளி
வெங்கதிர்ச்செல்வன் விண்ணொடு மண்ணும் நேர்
சங்கு சக்கரதாரி சதுர்முகன்
அங்கு அகத்தியனும் அர்ச்சித்தாரன்றே. 5–73–3

மேற்காண் பாடலில் அப்பர் சுவாமிகள், பெருமைக்குரியவளாகிய காளிதேவி, சூரியன், சங்கு சக்கரதாரியாகிய திருமால், நான்முகன், அகத்தியர் ஆகியோர் சிவபெருமானை அர்ச்சித்ததாகப் பாடுகிறார். விண்ணுலகத்தேவர் என்று சொல்லப்படும் இப்பெருமக்களுக்கு அவர்கள் தம் தேவலோகத்தில் சிவன் கோயில்கள் இல்லையா ? ஏன் பூமிக்கு வந்து சிவபூசை செய்ததாகப் பல நாயன்மார்கள் பாடியிருக்கிறார்கள். தேவலோகத்தில் சிவாலயமிருந்தால் அதைவிட்டு விட்டு இங்கேவந்து ஏன் பூசிக்க வேண்டும் ? கோயிலில்லா ஊரில் குடியிருக்கலாமா ? சிவாலயம் இல்லாத தேவலோகத்தில் அவர்கள் குடியிருக்கக் கூடாதல்லவா ?

"புவனியிற் போய் பிறவாமையில் நாள்நாம்
போக்குகின் றோம் அவமே இந்தப்பூமி சிவனுய்யக் கொள்கின்றவாறு"

என்று மாணிக்கவாசக சுவாமிகள் திருப்பள்ளி எழுச்சியின் நிறைவில் பாடி மகிழ்கிறார். பூமியில்தான் இருவினைப் பயன்களையும் ஒருங்கே அனுபவிக்க முடியும். மற்ற உலகங்களில் இன்பம் அல்லது துன்பம் மட்டுமே அனுபவிக்க முடியும்.

ஆதித்த னங்கி சோம னயனொடு மால் புத(ன்)னும்
போதித்து நின்று லகிற் போற்றிசைத்தாரி வர்கள்
சோதித்தா ரேழுல குஞ் சோதியுட் சோதியாகிப்
பாதிப் பெண் ணுருவ மானார் பழனத்தெம்பரமனாரே. 4–36–7

**முழுமுதற்கடவுளான மகாருத்திரனாகிய சிவபெருமானால் படைக்கப்பட்டு அவரால் பல பணிகளுக்காக நியமிக்கப்பட்டுள்ள தேவர்களும் அவர்கள் பூசித்தச் சிவாலயங்களும்**

| வ.எண் | பூசித்த தேவர் | பூசித்த சிவாலயம் |
|---|---|---|
| 1. | உருத்திரன் (குணி) | திருக்கோடிக்கா, உருத்திரகோடி, காளத்தி |
| 2. | காளி துர்க்கை | பட்டீச்சரம், தில்லை |
| 3. | திருமால் | பழுவூர், காஞ்சி, திருமங்கலக்குடி, திருமாற்பேறு, இராமேச்சரம், அரித்துவாரமங்கலம், இராமனதீச்சரம், திருவீழிமிழலை, காசி, ஒற்றியூர், கடவூர், நள்ளாறு |
| 4. | இலக்குமி | திருநின்றவூர், வைகல், வாஞ்சியம், ஆரூர், தில்லை, சிராப்பள்ளி, நாகை |
| 5. | பிரமன் | நள்ளாறு, பிரமபுரம், திருமங்கலக்குடி, செம்பொன்பள்ளி, கடவூர், மயானம், ஒற்றியூர், சிராப்பள்ளி |
| 6. | சரசுவதி | கூத்தனூர், கோகர்ணம், உடுப்பி, வீழிமிழலை |

**7. அ) நவக்கிரகங்கள் ஒன்றாயிருந்து பூசித்தத் தலம் – சூரியனார் கோயில்**
**ஆ) நவக்கிரகங்கள் தனித்தனியாகப் பூசித்தச் சிவத்தலங்கள்**

| | |
|---|---|
| சூரியன் | சூரியனார் கோயில், இன்னம்பர், கேதாரம், கோலக்கா, வெண்காடு, துருத்தி, சாயாவனம், வாய்மூர், வாஞ்சியம் |
| சந்திரன் | திங்களூர், கேதாரம், அச்சுதமங்கலம், சோமநாதம், வான்மியூர், பாசூர் |
| செவ்வாய் | வைத்தீசுவரன் கோயில், அத்திப்புலியூர், இலந்துறை, கேதாரம் |
| புதன் | திருவெண்காடு, கச்சித்திருநெறிக் காரைக்காடு, காழி, குருகாவூர் |

| | |
|---|---|
| குரு | ஆலங்குடி, தென்குடித்திட்டை, காஞ்சி, பெருஞ்சேரி, மாங்குடி |
| சுக்கிரன் | கஞ்சனூர், கேதாரம், கோடிக்கா, கரையபுரம் |
| சனி | திருநள்ளாறு, கொள்ளிக்காடு, வழுவூர், கேதாரம், மறைக்காடு |
| இராகு | நாகேச்சரம், பாம்புரம், காளத்தி, கேதாரம், காழி |
| கேது | மேலப்பெரும்பள்ளம், பாம்புரம், செம்பங்குடி, கேதீச்சரம் |
| **8. அட்டதிக்குப் பாலகர் பூசித்தத் தலங்கள்** | |
| இந்திரன் (கிழக்கு) | மதுரை, சீகாழி, ஆரூர், மகேந்திரப்பள்ளி, நன்னிலம், பராய்த்துறை, சிராப்பள்ளி, செம்பொன்பள்ளி, அண்ணாமலை. |
| அக்கினி (தென்கிழக்கு) | திருக்காட்டுப்பள்ளி, கோட்டூர், புகலூர், கஞ்சனூர், வாஞ்சியம் |
| எமன் (தெற்கு) | வாஞ்சியம், ஆரூர், தருமபுரம், செங்காட்டங்குடி, பைஞ்ஞீலி, அண்ணாமலை. |
| நைருதி (தென்மேற்கு) | கரையபுரம், திருச்சி, கோகரணம், அண்ணாமலை. |
| ஈசானர் (வடகிழக்கு) | கோடிக்கா, வெண்காடு, அண்ணாமலை. |
| வருணன் (மேற்கு) | தில்லை, கோகர்ணம், அண்ணாமலை. |
| வாயு (வடமேற்கு) | காளத்தி, கேதாரம், ரிஷிவந்தியம், குணபதீச்சரம், திருவாதவூர், அண்ணாமலை |
| குபேரன் (வடக்கு) | பட்டூர், செட்டிகுளம், கேதாரம், அச்சுதமங்கலம், மானாமதுரை, பராய்த்துறை, அண்ணாமலை. |
| **9. மற்ற தெய்வங்கள் பூசித்தத் தலங்கள்** | |
| ஆதிசேடன் | திருவேடகம், நாகை, பாம்புரம், நாகேச்சரம், வலஞ்சுழி |
| தர்மதேவதை | திருவாவடுதுறை, தருமபுரம் |
| மன்மதன், ரதி | இஞ்சிக்குடி, காமரசவல்லி, செம்பொன்பள்ளி |
| இடி | கழுக்குன்றம், வாட்போக்கி |
| சப்தமாதாக்கள் | மதுரை, திருப்பத்தூர், ஐயாறு, ஆனைக்கா, கடவூர் |
| நவதுர்க்கைகள் | பருப்பதம், குறுக்கை, துக்காச்சி, வாஞ்சியம், கீழகரம், கடவூர் |
| நாககன்னியர் | பராய்த்துறை |
| ஐந்தருக்கள் | வான்மியூர் |
| வசுக்கள் | நள்ளாறு |
| மூதேவி | பழையாறை, ஆரூர், மயிலை |

| 10. வாரங்கள் பூசித்தச் சிவாலயங்கள் | |
|---|---|
| ஞாயிறு | நாகேச்சரம், வாஞ்சியம், சாயாவனம் |
| திங்கள் | திருக்கடையூர், சிவபுரம், ஆலவாய், காசி, சிவபுரம் |
| செவ்வாய் | புள்ளிருக்குவேளூர், அத்திப்புலியூர் |
| புதன் | வெண்காடு |
| வியாழன் | பெருஞ்சேரி, கொண்டீச்சரம், கச்சி, கழுக்குன்றம் |
| வெள்ளி | காஞ்சி |
| சனி | நள்ளாறு, ஆரூர் |

| 11. நட்சத்திரங்கள் பூசித்தச் சிவத்தலங்கள்<br>27 நட்சத்திரங்கள் ஒன்றாகப் பூசித்த தலம் திருவிடைமருதூர் | |
|---|---|
| அசுவதி | திருக்கடையூர் |
| பரணி | திருவாஞ்சியம் |
| கார்த்திகை | அண்ணாமலை, காசி, சரவணப் பொய்கை |
| ரோகிணி | ஆனைக்கா |
| மிருகசீரிடம், திருவாதிரை | தில்லை, சிவகெங்கை |
| புனர்பூசம் | இராமேசுவரம் |
| பூசம் | ஆவடுதுறை |
| கேட்டை | எலந்துறை |
| ஆயில்யம் | வழுவூர், மாகாளம் |
| மகம் | ஆலங்காடு |
| பூரம் | தலைச்சங்காடு, நாலூர் |
| உத்திரம், அஸ்தம் | ஆரூர் |
| சித்திரை | திருமாற்பேறு, திருவக்கரை |
| சுவாதி | கேதாரம் |
| விசாகம் | நின்றியூர், நத்தம் |
| அனுசம், கேட்டை | நெல்வேலி |
| மூலம் | மதுரை |
| உத்திராடம் | சங்கரநாராயணர் கோயில் |
| திருவோணம் | எருக்கத்தம்புலியூர் |

| அவிட்டம், சதயம் | காளத்தி, கோகர்ணம் |
|---|---|
| பூரட்டாதி, உத்திரட்டாதி | ஆரூர் |
| ரேவதி | திருக்கடையூர் |

**12. திதிகள் பூசித்தச் சிவத்தலங்கள்**

| பிரதமை | காஞ்சி |
|---|---|
| துவிதியை | கருவிலி, தாராசுரம், செங்காட்டங்குடி |
| திருதியை | கேதாரம் |
| சதுர்த்தி | செங்காட்டங்குடி, வலஞ்சுழி |
| பஞ்சமி | தவத்துறை (இலால்குடி), ஏழுமுனிவரும் பூசித்த ரிஷி பஞ்சமி |
| ஷஷ்டி | திருமுருகத்தலங்கள், வெண்காடு |
| சப்தமி | ஆவடுதுறை, மீயச்சூர், தில்லை, ஒற்றியூர் |
| அட்டமி | பருப்பதம், காசி, ஐயாறு, ஆலவாய் |
| நவமி | காஞ்சி, தில்லை, மிழலை |
| தசமி | ஆரூர் |
| ஏகாதசி | தில்லை |
| துவாதசி | ஆனைக்கா |
| திரயோதசி | கோகர்ணம் |

**13. பெருமுனிவர்கள் பூசித்தச் சிவத்தலங்கள்**

| சப்தரிஷிகள் | திருத்தவத்துறை (இலால்குடி), நல்லூர் |
|---|---|
| அகத்தியர் | நள்ளாறு, கடவூர், மறைக்காடு, ஒற்றியூர், அகத்தியான்பள்ளி |
| காசிபர் | நள்ளாறு |
| வான்மீகி<br>உரோமசமுனி | வான்மியூர்<br>ஒற்றியூர் |
| வியாக்கிரபாதர் | தில்லை, பெரும்புலியூர், ஓமாம்புலியூர் |
| பதஞ்சலி | தில்லை, திருப்பட்டூர் |
| உபமன்யு | தில்லை |
| புண்டரிகமாமுனி | நாகை |

| | |
|---|---|
| ஏரண்டமுனி | வலஞ்சுழி, வலம்புரம் |
| ஜம்பு | ஆனைக்கா |
| நைமிசாரண்யமுனிவர்கள் | எறும்பியூர் |
| **14. வேதங்கள்** | திருமறைக்காடு, கழுக்குன்றம், தேரழுந்தூர், வேதிகுடி |
| 15. ஆகமங்கள் | திருமுதுகுன்றம் |

ஒவ்வொருவரும் அவரவர்க்கு இயன்ற அளவில், பல்வேறு வடிவங்களில், மானுடக் கண்களுக்குப் புலப்படாத உருவங்களில் வந்து வழிபட்டுச் சென்றுள்ளார்கள். மதுரைக் கோயில் இன்றிருக்குமிடம் முன்னாளய கடம்பவனம். அந்தக்கடம்ப வனத்தில் சிவலிங்கத்தை நான்கு கைகளுடன் அதிகாலை வேளையில் இந்திரன் பூசித்ததை ஒரு வணிகன் பார்க்கும் பேறு பெற்று, தான் கண்டவாறே மன்னனிடம் சொல்ல, மன்னனும் ஆலவாய்க் கோயில் அமைத்த வரலாறு கடம்பவன புராணத்திலும், திருவிளையாடற் புராணத்திலும் சொல்லப்பட்டுள்ளன. சிவபூசை சிறப்பாகச் செய்யும் பூலோக அடியார்கள் இவர்கள் எல்லாரையும்விட உயர்ந்த நிலையில் உள்ளார்கள். மேற்கண்ட எந்தப் பதவி கிடைத்தாலும் அவர்கள் விரும்பமாட்டார்கள். தேவர்களை விடப் பல மடங்கு உயர்ந்த நிலையில் இருக்கிறோம். 1458 ஆம் பாடலை நினைவு கூர்வோம்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1803.** மஞ்சன் வார்கடல் சூழ்மங் கலக்குடி<br>நஞ்ச மாரமு தாக நயந்துகொண்<br>டஞ்சு மாட லமர்ந்தடி யேனுடை<br>நெஞ்ச மாலய மாக்கொண்டு நின்றதே. 4 | நீண்ட கடல் சூழ்ந்த மங்கலக்குடியில் வீற்றிருக்கும் மைந்தனாகிய (பெருவீரனாகிய) பெருமான், ஆலகால விடத்தைச் செறிந்த அமுதமாக விரும்பி உட்கொண்டு, பஞ்சகவ்வியம் ஆடலை விரும்பி அடியேனுடைய நெஞ்சத்தை ஆலயமாகக் கொண்டு நிலைபெற்றான். |
| **1804.** செல்வம் மல்கு திருமங் கலக்குடி<br>செல்வம் மல்கு சிவநிய மத்தராய்ச்<br>செல்வம் மல்கு செழுமறை யோர்தொழச்<br>செல்வன் தேவியொ டுந்திகழ் கோயிலே. 5 | செல்வம் நிறைந்த திருமங்கலக்குடியில், அருட்செல்வம் நிறைந்த சிவ ஒழுக்கம் உடையவராய்ச் செல்வம் மல்கும் செழித்த மறையோர் தொழத் திருவருட் செல்வனாகிய பெருமான் உமாதேவியோடும் திகழ்வது திருக்கோயிலிலாகும். |
| **1805.** மன்னு சீர்மங் கலக்குடி மன்னிய<br>பின்னு வார்சடைப் பிஞ்ஞகன் தன்பெயர்<br>உன்னு வாரு முரைக்கவல் லார்களும்<br>துன்னு வார்நன் னெறிதொடர் வெய்தவே. 6 | நிலைபெற்ற புகழை உடைய மங்கலக்குடியில் நிலைபெற்ற பின்னுதல் உடைய நீண்ட சடையையுடைய பிஞ்ஞகன் திருநாமத்தை எண்ணுவாரும், சொல்லும் வல்லமை உடையாரும், நன்னெறித் தொடர்பு எய்தத் துன்னுவார் ஆவர். |
| **1806.** மாத ரார்மரு வும்மங் கலக்குடி<br>ஆதி நாயகன் அண்டர்கள் நாயகன்<br>வேத நாயகன் வேதியர் நாயகன்<br>பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே. 7 | பெண்கள் பொருந்துகின்ற மங்கலக்குடியின் ஆதிநாயகன், தேவர்கள் தலைவன்; வேதநாயகன்; வேதியர்நாயகன்; பூதநாயகன்; புண்ணியமூர்த்தி ஆவன். |

| | |
|---|---|
| 1807. வண்டு சேர்பொழில் சூழ்மங் கலக்குடி<br>விண்ட தாதையைத் தாளற வீசிய<br>சண்ட நாயக னுக்கருள் செய்தவன்<br>துண்ட மாமதி சூடிய சோதியே. 8 | வண்டுகள் சேரும் பொழில் சூழ்ந்த மங்கலக் குடியில் இளம் பிறை சூடிய சோதியாகிய பெருமான், மனம் மாறுபட்ட தந்தையைக் கால் ஒடியுமாறு செய்த சண்டேசுரர்க்கு அருள் புரிந்த இறைவன் ஆவன். |
| 1808. கூசு வாரலர் குண்டர் குணமிலர்<br>நேச மேது மிலாதவர் நீசர்கள்<br>மாசர் பால்மங் கலக்குடி மேவிய<br>ஈசன் வேறு படுக்கவுய்ந் தேனன்றே. 9 | மங்கலக்குடி இறைவன், தம் சிறுமை நோக்கிக் கூசாதவர்களும், குண்டர்களும், நற்குணமில்லாதவர்களும், அன்பு சிறிதும் இல்லாதவர்களும், கீழானவர்களும், குற்றம் உடையவர்களுமாகிய சமணரோடு என்னை வேறுபடுக்க, உய்ந்தேன். |
| 1809. மங்க லக்குடி யான்கயி லைம்மலை<br>அங்க லைத்தெடுக் குற்ற அரக்கர்கோன்<br>தன்க ரத்தொடு தாள்தலை தோள்தகர்ந்<br>தங்க லைத்தழு துய்ந்தனன் தானன்றே. 10 | மங்கலக்குடியானுக்குரிய கயிலை மலையினை அலைத்து எடுக்கலுற்ற இராவணன் தன் கரங்களோடு தாளும், தலையும் சிதைந்து அலைக்கப்பெற்றுப் பின் அழுது அருள்பெற்று நன்றே உய்ந்தான். |

## 74. திருவெறும்பியூர்

ப.தொ.எண் : 187 பதிக எண் : 74

| | |
|---|---|
| 1810. விரும்பி யூறு விடேல்மட நெஞ்சமே<br>கரும்பி னூறல்கண் டாய்கலந் தார்க்கவன்<br>இரும்பி னூறல றாததோர் வெண்தலை<br>எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 1<br><br>கரும்பின் ஊறல் – கருப்பஞ்சாறு | அறியாமை கொண்ட நெஞ்சமே! வெண்தலையோட்டினைக் கையில் உடையவனும், எறும்பியூர் மலையானுமாகிய எங்கள் ஈசன், தன்னை நாடி வருகின்ற அடியவர்களுக்கு, கரும்பின் ஊறல் போல் இனிப்பான். அவனை, இடைவிடாது பற்றி உய்க. |
| 1811. பிறங்கு செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணுசீர்க்<br>கறங்கு பூத கணமுடைக் கண்ணுதல்<br>**நறுங்கு ழல்மட வாளொடு** நாடொறும்<br>எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 2<br><br>நறுங்குழன் மடவாள் – தலத்து அம்மை | எங்கள் இறைவன், விளங்கும் செஞ்சடையை யுடைய பிஞ்ஞகனும், பேணுகின்ற புகழை உடைய சுழன்றாடும் இயல்புடைய பூதகணங்களை உடையவனும், நெற்றிக்கண்ணனும் ஆகி, மணம் வீசும் கூந்தலை உடைய உமாதேவியோடு நாள்தோறும் விளங்கும் எறும்பியூர் மலையினன் ஆவன். |

| | | |
|---|---|---|
| 1812. | மருந்து வானவர் தானவர்க் கின்சுவை<br>புரிந்த புன்சடைப் புண்ணியன் கண்ணுதல்<br>பொருந்து பூண்முலை மங்கைநல் லாளொடும்<br>எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 3 | எங்கள் இறைவன் வானவர்க்கு மருந்தாகவும், தானவர்க்கு இன்சுவையாகவும், முறுக்குண்ட புன்சடையை உடைய புண்ணியனாகவும், நெற்றிக்கண்ணனாகவும், பூண்கள் பொருந்தும் முலையையுடைய மங்கை நல்லாளொடும் மேவும் எறும்பியூர் மலையினன் ஆவன். |
| 1813. | நிறங்கொள் கண்டத்து நின்மலன் எம்மிறை<br>மறங்கொள் வேல்கண்ணி வாள்நுதல் பாகமாய்<br>அறம்பு ரிந்தருள் செய்தவெம் அங்கணன்<br>எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 4 | எம் இறைவன் நீலநிறம் கொண்ட கண்டத்தை உடைய நின்மலனும், மறம் கொண்ட வேல் போன்ற கண்ணையும், ஒளியுடைய நுதலையும் உடைய மங்கை ஒருபாகமாகி அறம் புரிந்து அருள் செய்த எம் அண்ணலும் ஆகிய எறும்பியூர் மலையினன் ஆவன். |
| 1814. | நறும்பொன் நாண்மலர்க் கொன்றையும் நாகமும்<br>துறும்பு செஞ்சடைத் தூமதி வைத்துவான்<br>உறும்பொன் மால்வரைப் பேதையோ டூர்தொறும்<br>எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 5 | நறுமணமும் பொன்போன்ற நிறமும் உடைய கொன்றையின் புதிய பூக்களும், நாகமும் சுரும்புகள் அடர்ந்தது போன்ற சிவந்த சடையின்கண் தூயமதியோடு வைத்து, விண்ணை உறும் பொன்மலையாகிய இமவான் மகளாகிய உமாதேவியோடு ஊர் தோறும் வீற்றிருக்கும் எங்கள் இறைவன், எறும்பியூர் மலையினன். |
| 1815. | கறும்பி யூர்வன ஐந்துள காயத்தில்<br>திறம்பி யூர்வன மற்றும் பலவுள<br>குறும்பி யூர்வதோர் கூட்டகத் திட்டெனை<br>எறும்பி யூரரன் செய்த இயற்கையே. 6 | சினந்து ஊர்வனவாகிய ஐம்பொறிகள் உள்ள உடம்பில், மனத்தோடு மாறுபட்டு ஊர்வன மற்றும் பல உள்ளன; அழுக்கு ஊர்வதாகிய கூடு போன்ற அவ்வுடம்பின்கண் இட்டு என்னை எறும்பியூர் அரன் செய்த இயற்கை இது. |
| 1816. | மறந்து மற்றிது பேரிடர் நாடொறும்<br>திறம்பி நீநினை யேல்மட நெஞ்சமே<br>புறஞ்செய் **கோலக் குரம்பையி** லிட்டெனை<br>எறும்பி யூரரன் செய்த வியற்கையே. 7<br><br>கோலக்குரம்பை – அழகிய உடலாகிய வீடு | அறிவற்ற நெஞ்சமே! பெருந்துன்பங்களால் நாள்தோறும் மற்று இதனை மறந்து மாறுபட்டு நீ நினையாதே; புறத்தே கோலம் செய்யப் பெற்ற இக்குடிசையில் என்னை இட்டு எறும்பியூர் அரன் செய்த இயற்கை இது. |

| | | |
|---|---|---|
| **1817.** இன்ப மும்பிறப் பும்மிறப் பின்னொடு<br>துன்ப மும்முட னேவைத்த சோதியான்<br>அன்ப னேயர னேயென் றரற்றுவார்க்<br>கின்ப னாகு மெறும்பியூ ரீசனே. | 8 | எறும்பியூர் இறைவன் இன்பமும் பிறப்பும், துன்பமும் இறப்பும் உடன் வைத்த சோதி வடிவினனும், 'அன்பனே! அரனே!' என்று வாய்விட்டு அரற்றுவார்க்கு இன்பமளிப்பவனும் ஆவன். |

இவ்வுலகில் பிறப்பிறப்பும், இன்பமும், துன்பமும் ஆகிய இருவினைப் பயனும் உடனே வைத்தார். வேறுலகங்களில் இன்ப மாத்திரமும், துன்ப மாத்திரமும் வைத்தார்.

| | | |
|---|---|---|
| **1818.** கண்நி றைந்த கனபவ ளத்திரள்<br>விண்நி றைந்த விரிசுடர்ச் சோதியான்<br>உள்நி றைந்துரு வாயுயி ராயவன்<br>எண்நி றைந்த வெறும்பியூ ரீசனே. | 9 | எண்ணமெங்கும் நிறைந்த எறும்பியூர் இறைவன், கண்ணுக்கு நிறைந்த பெருமைமிக்க பவளத்திரளும், விண்ணில் நிறைந்த சுடர் விரிகின்ற சோதி வடிவானவனும், உள்ளத்துள் நிறைந்து உருவாகி உயிராகியவனும் ஆவன். |
| **1819.** நிறங்கொள் மால்வரை ஊன்றி யெடுத்தலும்<br>நறுங்கு ழல்மட வாள்நடுக் கெய்திட<br>மறங்கொள் வாளரக் கன்வலி வாட்டினான்<br>எறும்பி யூர்மலை யெம்மிறை காண்மினே. | 10 | எறும்பியூர் மலைக்குரிய எம்மிறைவன், நறுமணம் வீசும் கூந்தலையும் இளமையையும் உடைய உமாதேவி நடுக்கம் எய்திட வெண்ணிறம் கொண்ட திருக்கயிலைப் பெருமலையை வீரம் கொண்ட வாளை உடைய இராவணன் ஊன்றி எடுத்தலும், அவன் ஆற்றலை வாடுமாறு செய்தான். |

## 75. திருக்குரக்குக்கா

ப.தொ.எண் : 188 பதிக எண் : 75

| | | |
|---|---|---|
| **1820.** மரக்கொக் காமென வாய்விட் டலறிநீர்<br>சரக்குக் காவித் திரிந்தய ராதுகால்<br>பரக்குங் காவிரி நீரலைக் குங்கரைக்<br>குரக்குக் காவடை யக்கெடுங் குற்றமே. | 1 | மரத்தின்கண் இருக்கும் கொக்கைப்போல வாய்விட்டுக் கூவி, தீயகுணங்களாகிய பொருள்களையே சுமந்து திரிந்து வருந்தாமல், கால்வாய்கள் வழியாகப் பரந்து பாயும் காவிரி நீர் அலைக்கின்ற கரையில் உள்ளதாகிய **குரக்குக்கா**வை அடைய, குற்றங்கள் கெடும். |
| **1821.** கட்டா றேகழி காவிரி பாய்வயல்<br>கொட்டா றேபுன லூறு குரக்குக்கா<br>முட்டா றாஅடி யேத்த முயல்பவர்க்<br>கிட்டா றாஇட ரோட எடுக்குமே. | 2 | கட்டப்பட்ட கரைக்குள்ளடங்கிய நெறியின் வழியே கழிகின்ற காவிரி பாய்கின்ற வயல்களில் கொட்டும் நெறியெல்லாம் புனல் ஊறுகின்ற **குரக்குக்கா**வினை முட்டாத நெறியே திருவடியேத்த முயலும் அடியவர்களுக்குப் பொருந்தும் நெறியாய துன்பங்கள் ஓடுமாறு அருள் புரிவான் இறைவன். |

| | | |
|---|---|---|
| **1822.** கைய னைத்துங் கலந்தெழு காவிரி<br>செய்ய னைத்திலுஞ் சென்றிடுஞ் செம்புனல்<br>கொய்ய னைத்துங் கொணருங் குரக்குக்கா<br>ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. | 3 | பக்கமெங்கும் கலந்து எழுகின்ற காவிரியின் வயல்களனைத்தினும் சென்றிடும் செம்புனல் வெள்ளம் கொய்மீன்களைக் கொணரும் **குரக்குக்கா**வில் உள்ள ஐயனைத்தொழும் அடியார்களுக்கு அல்லல் இல்லை. |
| **1823.** மிக்க னைத்துத் திசையும் அருவிகள்<br>புக்குக் காவிரி போந்த புனற்கரைக்<br>கொக்கி னம்பயில் சோலைக் குரக்குக்கா<br>நக்க னைநவில் வார்வினை நாசமே. | 4 | அனைத்துத் திக்குகளும் மிகுந்து அருவிகள் புகுந்து பெருகுதலால் காவிரி போந்த புனற்கரையின் கண் கொக்குச் சாதிகள் பயிலும் சோலையை உடைய **குரக்குக்கா**வின்கண் திகம்பரனாய பெருமானைப் போற்றிப் புகழ்வார் வினை நாசமாகும். |
| **1824.** விட்டு வெள்ளம் விரிந்தெழு காவிரி<br>இட்ட நீர்வய லெங்கும் பரந்திடக்<br>கொட்ட மாமுழ வோங்கு குரக்குக்கா<br>இட்ட மாயிருப் பார்க்கிட ரில்லையே. | 5 | வெள்ளம் பொருந்தி விரிந்தெழுங் காவிரி இட்ட நீரானது வயல் எங்கும் பரந்திடுதலால் சிறந்து, மாமுழவுகள் கொட்ட ஓங்கும் **குரக்குக்கா**வின் விருப்பமாய் இருப்பவர்களுக்கு இடர்கள் இல்லை. |
| **1825.** மேலை வானவ ரோடு விரிகடல்<br>மாலும் நான்முக னாலும் அளப்பொணாக்<br>கோல மாளிகைக் கோயில் குரக்குக்காப்<br>பால ராய்த்திரி வார்க்கில்லை பாவமே. | 6 | மேல் உலகத்திலுள்ள தேவர்களோடு விரிந்த கடலில் துயிலும் திருமாலும், நான்முகனும் ஆகியவராலும் அளக்கவியலாத பெருமான் உறைவதும், அழகுமிக்க மாளிகையாகிய கோயிலை உடையதுமாகிய **குரக்குக்கா**வின் பால் வாழ்வோராய்த் திரிவோர்க்குப் பாவம் இல்லை. |
| **1826.** ஆல நீழ லமர்ந்த அழகனார்<br>கால னையுதை கொண்ட கருத்தனார்<br>கோல மஞ்ஞைக ளாலுங் குரக்குக்காப்<br>பால ருக்கருள் செய்வர் பரிவொடே. | 7 | கல்லால நிழற்கீழ் அமர்ந்த அழகரும், காலனை உதைத்தலைக் கொண்ட கருத்தருமாகிய பெருமான் உறைகின்ற அழகு மிக்க மயில்கள் ஆர்க்கின்ற **குரக்குக்கா**வின்பால் வாழ்வோர்க்குப் பரிவொடு அருள்செய்வர். |
| **1827.** செக்க ரங்கெழு செஞ்சுடர்ச் சோதியார்<br>அக்க ரையரெம் மாதி புராணனார்<br>கொக்கி னம்வயல் சேருங் குரக்குக்கா<br>நக்க னைத்தொழ நம்வினை நாசமே. | 8 | செவ்வானத்தைப் போன்றெழுகின்ற சிவந்த சுடர் வீசும் சோதியாரும், அக்கு மணியை இடுப்பில் அணிந்துள்ளவரும், ஆதியிலே தோன்றிய பழமை உடையவரும், கொக்குச் சாதிகள் வயலில் சேர்கின்ற **குரக்குக்கா**வின் திகம்பரனுமாய பெருமானைத் தொழ நம்வினை நாசமாம். |

| | |
|---|---|
| 1828. உருகி யூன்குழைந் தேத்தி யெழுமின்நீர்<br>கரிய கண்டன் கழலடி தன்னையே<br>குரவ னஞ்செழுங் கோயில் குரக்குக்கா<br>**இரவு மெல்லியு** மேத்தித் தொழுமினே. 9 | திருநீலகண்டன் கழலணிந்த பாதங்களை நீர் உருகி, உடல் குழைந்து ஏத்தி எழுவீராக. நம் செழுங்கோயிலாகிய **குரக்குக்கா**வில் வீற்றிருக்கும் பரமாசாரியனாகிய அப்பெருமானையே இரவும் பகலும் ஏத்தித் தொழுவீர்களாக. |

## எல்லை – எல்லி – எல்லு

1828 ஆம் பாடலில் இரவும் எல்லியும் என்று பாடிய நாவரசர்
1835 ஆம் பாடலில் எல்லியும் பகலும் என்றும்
1893 ஆம் பாடலில் எல்லி மாநடமாடும் என்றும் பாடுகிறார்

'எல்' என்ற சொல், ஒளி, பகல், கதிரவன் என்ற பொருளில் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. பழந்தமிழர், 'எல்' என்ற இச்சொல்லை வேர்ச் சொல்லாகக் கொண்டு, நாளின் முப்பொழுதுகளுக்கும் பெயர்களை வழங்கியுள்ளனர். பகற்பொழுதைக் குறிக்க 'எல்லை' என்ற சொல்லைப் பயன்படுத்தியமையை,

எல்லை சென்றபின் மலருங் கூம்பின (நற். 385.1)

எல்லை கழிய முல்லை மலரக் (குறு. 387.1)

எல்லையு மிரவு மென்னாது கல்லென (அக. 20.14)

எல்லையு மிரவு மிருமுறை கழிப்பி (பெரு. 279)

என இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது.

'எல்லி' என்ற சொல் இரவுப்பொழுதின் ஒரு கூறான அதாவது, கதிரவன் மறைந்து இருள் சூழத் தொடங்கிய பொழுதைக் குறிக்க மட்டுமே பயன்படுத்தப் பெற்றுள்ளதை,

"எல்லிவிட் டன்று வேந்தெனச் சொல்லுபு
பரியல் வாழி நெஞ்சே (நற். 121.6) என நற்றிணைச் செய்யுளில்,

தேர்ப்பாகன் தலைவனிடம் உரைத்த கூற்று பதிவாகியுள்ளது. அதாவது, 'வேந்தன் எல்லிப் பொழுதில் தலைவனை அவன் ஊருக்குச் செல்லுமாறு விடுத்தமையால், கதிரவன் மறையும் பொழுது சாய்ந்த அவ் எல்லிப் பொழுதிற் பின்தம் ஊருக்குச் செல்வதுவும் தலைவியைக் காண்பதுவும் இயலக்கூடியது அன்று' எனத் தலைவன் வருந்தி நின்றான். அவன் நிலையைக் கண்ட தோழனான தேர்ப்பாகன் குதிரைகளைக் கான்யாற்றங்கரை வழி மிக விரைவாகச் செலுத்தி, எவ்விருந்து (உயர்ந்த விருந்து) அயரும் தலைவியிடம் இரவே கொண்டு சேர்ப்பேன் என ஆறுதல் கூறுகிறான். 'எல்லி' என்பது இருள் சூழத் தொடங்கியபொழுது என்பதை இவ்வடிகள் உணர்த்துகிறது.

மேலும், வேறு ஒரு நற்றிணைச் செய்யுள், 'எல்லியு மிரவு மென்னாது கல்லெனக்' எனக் குறிப்பிட்டு, எல்லியும் இரவும் வெவ்வேறு பொழுதுகள் என்ற செய்தியை உணர்த்துகிறது.

"எல்லி மலர்ந்த பைங்கொடி யதிரல் (அ.க 157.5)

பல்யாட் டினநிரை யெல்லினிர் புகினே (மலை. 416)

என்னும் செய்யுளடிகளும் 'எல்லி' என்பது கதிரவன் சாய்ந்த பொழுது என்பதைக் காட்டுகின்றன. அவ்வாறெனில் தமிழர் இரவுப்பொழுதைக் குறிக்க எச்சொல்லைப் பயன்படுத்தினர்? எல் என்னும் சொல் இரவு எனும் பொருளில் எங்கேனும் கையாளப்பெற்றுள்ளதா? ஆம்.

எல்லுமுய லெறிந்த வேட்டுவ னஞ்சுவல (நற். 59.3)

எல்லுத் தொழின் மடுத்த வல்வினைப் பரதவர் (அக. 340.19)

எல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கம் (புற. 16.7)

என்னும் பாடலடிகள் மூலம் இரவுப்பொழுதைக் குறிக்கப் பழந்தமிழர், எல்லு என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளமையை அறிய முடிகிறது. வேட்டுவன் இரவில் முயல் வேட்டைக்குச் சென்ற நிகழ்வையும், பரதவர், இரவில் மீன் வேட்டைக்குக் கடலுக்குச் சென்ற நிகழ்வையும் கூறும் சொற்றொடர்களும், வேந்தன் பகை நாட்டைத் தீயிட்டுக் கொளுத்தியமையால் இரவின் இருள் கெடுமாறு சுடுதீ விளக்கம் காணப்பெற்ற நிகழ்வைக் கூறும் செய்யுளடியும் எல்லு என்ற சொல் இரவுப்பொழுதுக்கான பழந்தமிழ்ப் பெயரீடு என்பதையும் முறையே காட்டுகின்றன.

மேலும், இரவு நேரங்களில், கடைத்தெருக்களில் விளக்குகள் பல ஒளிபரப்பிய காட்சியானது 'எல் உமிழ் ஆவணத் தன்ன' என அகநானூற்றில் (227.21) பதிவு செய்யப்பெற்றுள்ளது. எல் எனும் சொல்லை இரவு விளக்குகள் உமிழ்ந்த ஒளியைக் குறிக்கவும், பழந்தமிழர் பயன்படுத்தியுள்ளமையை இவ்வடி தெரிவிக்கிறது. ஊரே துயில்கொள்ளும் நள்ளிரவு வேளையில், எவ்வித விளக்கு ஒளியும் இன்றி ஊரடங்கிக் காணப்பெற்ற நிலையை 'எல்லும் எல் இன்று' என்ற தொடரால் பல இடங்களில் புலவர்கள் விளக்கியுள்ளனர். அவற்றுள் சில அடிகள்.

எல்லும் எல்லின்று ஞமலியு மிளைத்தன (குறு. 179.2)

எல்லும் எல்லின்று பாடுங் கேளாய் (குறு. 390.1)

எல்லும் எல்லின்று அசைவுமிகவுடையேன் (அக. 110.10)

ஆக, பழந்தமிழகத்தில் பகற்பொழுதைக் குறிக்க எல்லை என்ற சொல்லும், கதிரவன் மறைந்து இருள்சூழத் தொடங்கிய பொழுதைக் குறிக்க எல்லி என்ற சொல்லையும், இரவுப்பொழுதைக் குறிக்க எல்லு என்ற சொல்லும் பயன்படுத்தப் பெற்றுள்ளன என்பதை அறிய முடிகிறது.

**– தினமணியில் முனைவர் வாணி அறிவாளன் எழுதிய கட்டுரை**

1829. இரக்க மின்றி மலையெடுத் தான்முடி
உரத்தை யொல்க அடர்த்தா னுறைவிடம்
குரக்கி னங்குதி கொள்ளுங் குரக்குக்கா
வரத்த னைப்பெற வானுல காள்வரே. 10

மலையெடுக்கலுற்ற இராவணன் முடிகளையும் ஆற்றலையும் சுருங்கும்படியாக இரக்கம் இல்லாமல் வருத்தியவனுக்கு இடமாகிய, குரங்குச்சாதி குதித்தலைக் கொள்ளும் **குரக்குக்கா**வில் வரம் அருளும் அப்பெருமானைப் பெற வானுலகு ஆள்வர்.

## 76. திருக்கானூர்

ப.தொ.எண் : 189 | பதிக எண் : 76

**1830.** திருவின் நாதனுஞ் செம்மலர் மேலுறை
உருவ னாயுல கத்தி னுயிர்க்கெலாம்
கருவ னாகி முளைத்தவன் கானூரில்
பரம னாய பரஞ்சுடர் காண்மினே. 1

இத்தலத்துச் சுவாமியின் பெயர் முளை. "கன்றாப்பூர் நடுதறி" என்பது போலாகும்.

கானூரில் தெய்வச்சுடராகிய இறைவன் திருமகள் கணவனாகிய திருமாலும், சிவந்த தாமரை மலர்மேல் உறைகின்ற அழகுடையவனாகிய பிரமனும் ஆகி உலகத்தின் எல்லா உயிர்களுக்கும் கருவிலேயே உற்றுக் காப்பவனாகி முளைத்தவன் ஆவன். அந்தப் பரமனைக் கண்டு உய்வீர்களாக!

**1831.** பண்டிர் மக்கள் பெருந்துணை நன்னிதி
உண்டின் றேயென்று கவன்மி னேழைகாள்
கண்டு கொண்மின்நீர் கானூர் **முளை**யினைப்
புண்ட ரீகப் பொதும்பி லொதுங்கியே. 2

உலகங்கள் யாவும் முளைத்ததற்குக் காரணமானவர்.

அறிவற்றவர்களே! பெண்டிர், மக்கள் பெருந்துணையாகவுள்ள நல்ல செல்வம் இன்று உண்டு என்று மகிழாதீர்; தாமரையாகிய பொதும்பில் ஒதுங்கியே, கானூர் முளையாகிய கடவுளை நீர் கண்டுகொள்வீராக; (அவரே பெருந்துணையாவார்). பொதும்பு – நிழற்காடு

**1832.** தாயத் தார்தமர் நல்நிதி யென்னுமிம்
மாயத் தேகிடந் திட்டு மயங்கிடேல்
காயத் தேயுளன் கானூர் **முளை**யினை
வாயத் தால்வணங் கீர்வினை மாயவே. 3

பங்காளியர், தம் சுற்றத்தார், நல்ல செல்வம் என்னும் இம்மாயத்திலே கிடந்து மயங்க வேண்டா; உம் உடலுக்குள்ளேயே உள்ளவனாகிய கானூர் முளையாகிய பெருமானை உங்கள் வினைகள்கெட வாயாற் கூறிப் பரவி வணங்குவீராக.

**1833.** குறியில் நின்றுண்டு கூறையி லாச்சமண்
நெறியை விட்டு நிறைகழல் பற்றினேன்
அறிய லுற்றிரேல் கானூர் **முளை**யவன்
செறிவு செய்திட் டிருப்பதென் சிந்தையே. 4

நாயனார் வரலாற்றுக்கு அகச்சான்று

இரத்தற் குறிப்பொடு நின்று ஏற்று உண்ணும் ஆடையற்ற அமண்நெறியைவிட்டு நீங்கி எம்பிரான் அருள்நிறையும் கழலைப் பற்றினேன்; அதற்குக் காரணம் அறியலுறுவீரேல், கானூர் முளையாகிய கடவுள் என் சிந்தையில் செறிவு செய்திட்டிருப்பதே ஆகும்.

**1834.** பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை
மெய்த்த னென்று வியந்திட லேழைகாள்
சித்தர் பத்தர்கள் சேர்திருக் கானூரில்
அத்தன் பாதம் அடைதல் கருமமே. 5

அறிவற்றவர்களே! பொத்தலை உடையதும், மண்சுவர் உடையதுமாகிய இழிந்த இக்குடிசையைத் தன்மெய் என்று ஒவ்வொருவரும் வியந்திடல் வேண்டா. சித்தர்களும் பத்தர்களும் சேர்கின்ற திருக்கானூரில் இறைவன் பாதம் அடைதலே உமக்குக் கருமம் ஆகும்.

| | | |
|---|---|---|
| **1835.** கல்வி ஞானக் கலைப்பொரு ளாயவன்<br>செல்வம் மல்கு திருக்கானூ ரீசனை<br>எல்லி யும்பக லும்மிசை வானவா<br>சொல்லி டீர்நுந் துயரங் கள்தீரவே. | 6 | கல்வியும், ஞானமும், கலையும் ஆகியவற்றின் பொருளாயிருப்பவனும், செல்வம் மல்கும் திருக்கானூரில் இருப்பவனும் ஆகிய ஈசன் இரவும் பகலும் இசைந்து அருள்புரிய ஆனவாற்றை உம் துயரங்கள் தீரச் சொல்லுவீராக. |
| **1836.** நீரும் பாரும் நெருப்பும் அருக்கனும்<br>காரும் மாருதங் கானூர் **முளைத்**தவன்<br>சேர்வு மொன்றறி யாது திசைதிசை<br>ஓர்வு மொன்றில ரோடித் திரிவரே. | 7 | நீரும், மண்ணும், தீயும், வெயிலும், முகிலும், காற்றும் ஆகிய அனைத்துமாகிக் கானூரில் முளைத்த கடவுளைச் சேர்தும் என்ற ஒன்றை அறியாது திசைதோறும் திசைதோறும் உணர்ச்சி சிறிதும் இலராய் ஓடித் திரிவர் உலகத்தவர். |
| **1837.** ஓமத் தோடயன் மாலறி யாவணம்<br>வீமப் பேரொளி யாய விழுப்பொருள்<br>காமற் காய்ந்தவன் கானூர் **முளைத்**தவன்<br>சேமத் தாலிருப் பாவதென் சிந்தையே.<br><br>x x x x x x x x x  x x x  x x x | 8<br><br><br><br>9 | வேள்விகளாலும், திருமாலும், பிரமனும் அறியாதவண்ணம் இடுகாட்டகத்தே பேரொளியாகிய உயர்ந்த பொருளும், காமனைக் காய்ந்தவனும் ஆகிய கானூர் முளைத்த கடவுள் என் சிந்தையே பாதுகாவலுக்குரிய இருப்பாகக் கொள்வன். |
| **1838.** வன்னி கொன்றை யெருக்கணிந் தான்மலை<br>உன்னி யேசென் றெடுத்தவ னொண்திறல்<br>தன்னை வீழத் தனிவிரல் வைத்தவன்<br>கன்னி மாமதிற் கானூர்க் கருத்தனே. | 10 | இளமையுடைய மாமதில் சூழ்ந்த கானூர்க் கருத்தன், வன்னியும், கொன்றையும், எருக்கும் அணிந்த தனக்குரிய மலையைப் பெயர்த்தெடுக்க உன்னிச்சென்று எடுத்தவனாகிய இராவணனின் ஒண்திறல் தன்னை வீழும்படியாகத் தனி விரல் ஒன்றினால் வைத்து அடர்த்தவனாவன். |

## 77. திருச்சேறை

ப.தொ.எண் : 190 | பதிக எண் : 77

| | | |
|---|---|---|
| **1839.** பூரி யாவரும் புண்ணியம் பொய்கெடும்<br>கூரி தாய அறிவுகை கூடிடும்<br>சீரி யார்பயில் சேறையுட் செந்நெறி<br>நாரி பாகன்றன் நாம நவிலவே. | 1 | சீர்மை உடையவர்கள் பயிலும் திருச்சேறையுட் செந்நெறியில் வீற்றிருக்கும் உமையொரு பாகனுடைய நாமம் நவின்றால் புண்ணியம் பூரித்துவரும்; பொய்கெடும்; கூர்மை உடையதாகிய அறிவு கைகூடும். |

நாரிபாகன் – உமையொருபாகன்

பூரித்தல் – நிறைத்தல். கூரிதாய அறிவு – நன்மையிற் செல்வது. தீமையில் சென்றால் கூர்ந்த அறிவாகாது.

**1840.** என்ன மாதவஞ் செய்தனை நெஞ்சமே
மின்னு வார்சடை வேத விழுப்பொருள்
செந்நெ லார்வயற் சேறையுட் செந்நெறி
மன்னு சோதிநம் பால்வந்து வைகவே. 2

நெஞ்சமே! மின்னுகின்ற நீண்ட சடையையுடையவனும், வேதவிழுப்பொருளும், செந்நெல் பொருந்திய வயல் உடைய திருச்சேறையுட் செந்நெறியில் நிலைபெற்ற சோதியுமாகிய பெருமான் எம்மிடம் வந்து தங்க, நீ என்ன மாதவம் செய்தாய்!

செந்நெறி – சேறையின் திருக்கோயிலின் பெயர்.
"என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே"
– தி.ஞா.ச. வலஞ்சுழி தேவாரம்

---

**1841.** பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்திடும்
சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே. 3

திருச்சேறையுட் செந்நெறியில் வீற்றிருக்கும் சிறப்பை உடைய பெருமான் கழலார் திருவடிகளை மறப்பு இன்றி மனத்துள் வைத்தால், பிறப்பு, மூப்பு, மிக்கபசி, மிக்கபிணி, இறப்பு ஆகியவை நீங்கி இம்மையிலேயே இன்பம் வந்து எய்தும்.

---

**1842.** மாடு தேடி மயக்கினில் வீழ்ந்துநீர்
ஓடி யெய்த்தும் பயனிலை ஊமர்காள்
சேடர் வாழ்சேறைச் செந்நெறி மேவிய
ஆட லான்தன் அடியடைந் துய்ம்மினே. 4

ஊமைகளே! செல்வத்தைத் தேடி மயக்கத்தில் விழுந்து நீர் ஓடி இளைத்தும் பயன் இல்லை; உயர்ந்தவர்கள் வாழ்கின்ற சேறைச் செந்நெறி மேவிய கூத்தப்பிரான் திருவடிகளை அடைந்து உய்வீர்களாக.

ஊமர் – சொல்லுங்கருவியிருந்தும் சொல்லாதவர், திருவடியை அடைவதற்கு எல்லாக் கருவிகளும் கொடுக்கப்பட்டும் பயன்படுத்தாதவர் ஊமர்.

---

**1843.** எண்ணி நாளும் எரியயிற் கூற்றுவன்
துண்ணென் தோன்றிற் துரக்கும் வழிகண்டேன்
திண்ணன் சேறைத் திருச்செந் நெறியுறை
அண்ண லாருளர் அஞ்சுவ தென்னுக்கே. 5

நாள்தோறும் எண்ணி எரியும் வேலும் உடைய கூற்றுவன் நடுக்கம் உண்டாகும்படி என்முன் தோன்றினால், அவனைத் துரத்தும் வழி ஒன்று கண்டேன்; திண்மை உடையவரும், சேறையுட் செந்நெறி உறையும் அண்ணலாருமாகிய இறைவர் உள்ளார்; அஞ்சுவது பின்னை எதற்கு?

---

**1844.** தப்பி வானந் தரணிகம் பிக்கிலென்
ஒப்பில் வேந்தர் ஒருங்குடன் சீறிலென்
செப்ப மாஞ்சேறைச் செந்நெறி மேவிய
அப்ப னாருளர் அஞ்சுவ தென்னுக்கே. 6

வானம் முறை தவறி (வறண்டு) உலகம் நடுங்கினால் என்ன? ஒப்பற்ற அரசர்கள் ஒருங்கு உடன் சீறிச் சினந்தால் என்ன? செப்பம் பொருந்திய சேறையுட் செந்நெறி மேவிய அப்பனார் உள்ளார்; அஞ்சுவது பின்னை எதற்கு?

| | |
|---|---|
| **1845.** வைத்த மாடும் மடந்தைநல் லார்களும்<br>ஒத்தொவ் வாதவுற் றார்களு மென்செய்வார்<br>சித்தர் சேறைத் திருச்செந் நெறியுறை<br>அத்தர் தாமுள ரஞ்சுவ தென்னுக்கே. 7 | தேடிவைத்த செல்வமும், பெண்களும், ஒத்தும் ஒவ்வாதும் உள்ள சுற்றத்தார் பிறரும் என்ன செய்வார்? சித்தரும், சேறையுட் செந்நெறி மேவிய அத்தருமாகிய இறைவர் உள்ளார்; அஞ்சுவது பின்னை எதற்கு? |
| **1846.** குலங்க ளென்செய்வ குற்றங்க ளென்செய்வ<br>துலங்கி நீநின்று சோர்ந்திடல் நெஞ்சமே<br>இலங்கு சேறையிற் செந்நெறி மேவிய<br>அலங்க னாருள ரஞ்சுவ தென்னுக்கே. 8 | நெஞ்சமே! குலங்கள் என்ன செய்யும் திறத்தன? குற்றங்கள் என்ன செய்யும் திறத்தன? மனம் அசைந்து நீ நின்று சோராதே; விளங்கும் திருச்சேறையில் செந்நெறி மேவிய கொன்றை மாலையணிந்த இறைவர் உள்ளார்; அஞ்சுவது பின்னை எற்றுக்காக? |
| **1847.** பழகி னால்வரும் பண்டுள சுற்றமும்<br>விழவி டாவிடில் வேண்டிய எய்தொணா<br>திகழ்கொள் சேறையிற் செந்நெறி மேவிய<br>அழக னாருள ரஞ்சுவ தென்னுக்கே. 9 | பழகினால் வருகின்ற பழமையாய் உள்ள சுற்றத்தாரும் உண்மையானதல்ல என்றறிந்து அவர்கள் நம்மை நீங்கும்படி விட்டுவிடவில்லை யானால் வேண்டியதை எய்தவொண்ணாது; விளங்குதலைக் கொண்ட சேறையிற் செந்நெறி மேவிய அழகராகிய இறைவர் உள்ளார்; அஞ்சுவது பின்னை எற்றுக்கு? |
| **1848.** பொருந்து நீண்மலை யைப்பிடித் தேந்தினான்<br>வருந்த வூன்றி மலரடி வாங்கினான்<br>திருந்து சேறையிற் செந்நெறி மேவியங்<br>கிருந்த சோதியென் பார்க்கிட ரில்லையே. 10 | பொருந்திய உயர்ந்த திருக்கயிலைத் திருமலையைப் பிடித்து ஏந்தலுற்ற இராவணன் வருந்துமாறு ஊன்றி மலரடியினைச் சற்று வளைத்தவனும், திருந்திய சேறையிற் செந்நெறி மேவி அங்கு இருந்த சோதியும் ஆகிய இறைவனை உரைப்பார்க்குத் துன்பங்கள் இல்லை. |

## 78. திருக்கோடிகா

ப.தொ.எண் : 191 பதிக எண் : 78

| | |
|---|---|
| **1849.** சங்கு லாமுன்கைத் தையலோர் பாகத்தன்<br>வெங்கு லாமத வேழம் வெகுண்டவன்<br>கொங்கு லாம்பொழிற் **கோடிகா வாவென**<br>எங்கி லாததோ ரின்பம்வந் தெய்துமே. 1<br><br>"கோடிகாவா" என்று போற்றினால் இணையற்ற இன்பம் வந்தெய்தும். போற்றாவிடில் பாடிகாவலிற் பட்டுக்கழிதிர். ஏத்தினால் ஊனமில்லை. ஏதங்கள் தீரும். | சங்கு வளையல்கள் பொருந்திய முன்கையை உடைய உமாதேவியை ஒரு பாகத்திலுடைய வனும், சினவெம்மை பொருந்திய மதம் பொழியும் யானையினை வெகுண்டவனும், மணம் உலாவும் பொழிலை உடைய **கோடிகாவில்** உள்ளவனுமாகிய இறைவா! என்று கூற, எங்கும் இல்லாததோர் இன்பம் வந்து எய்தும். |

| பாடல் | பொருள் |
|---|---|
| **1850.** வாடி வாழ்வதென் னாவது மாதர்பால்<br>ஓடி வாழ்வினை யுள்கிநீர் **நாடொறும்**<br>**கோடி காவனைக் கூறீரேற்** கூறினேன்<br>பாடி காவலிற் பட்டுக் கழிதிரே. **2** | நாள்தோறும் நீர் மாதர்பால் ஓடி, வாழ்வினையே நினைந்து வாடி வாழ்வது என் ஆவது? **கோடிகா** இறைவனைக் கூறீரேல், ஊர்க்காவலிற்பட்டுக் கழிவீர்; கூறினேன். |

பாடி காவல் – அரசநீதி பிழைத்தாரை வழக்கு நாடி அரசன் நிறுத்தும் தண்டத் தொழில்.

| பாடல் | பொருள் |
|---|---|
| **1851.** முல்லை நன்முறு வல்லுமை பங்கனார்<br>தில்லை யம்பலத் தில்லுறை செல்வனார்<br>கொல்லை யேற்றினர் கோடிகா வாவென்றங்<br>கொல்லை யேத்துவார்க் கூனமொன் றில்லையே. **3** | முல்லையையொத்த நல்ல சிரிப்புடைய உமை ஒரு பங்கில் உடையவரும், தில்லைத் திருச் சிற்றம்பலத்தில் உறையும் அருட்செல்வரும், முல்லை நிலத்து ஏற்றினை வாகனமாக உடையவரும் ஆகிய **கோடிகா** இறைவரே என்று விரைந்து ஏத்துவார்க்குக் குற்றம் ஒன்றும் இல்லை. |
| **1852.** நாவ ளம்பெறு மாறும னன்நன்னுதல்<br>ஆம ளஞ்சொலி யன்புசெ யின்னலால்<br>கோம ளஞ்சடைக் கோடிகா வாவென<br>ஏவ ளின்றெனை யேசுமவ் வேழையே. **4** | நாவானது வளம் பெறுமாறு அழகிய நுதலை உடைய தலைவி இயன்ற அளவு அழகிய சடையையுடைய **கோடிகா** இறைவனே என்று அவன் திருப்புகழ் சொல்லி அன்பு செய்தால் பெறலாமேயன்றி அவனை இசைபாடும் வாயால் என்னை வசைபாடுகின்றாளே இந்நங்கை. |
| **1853.** வீறு தான்பெறு வார்சில ராகிலும்<br>நாறு பூங்கொன்றை தான்மிக நல்கானேல்<br>கூறு வேன்கோடி காவுளா யென்றுமால்<br>ஏறு வேன்நும்மா லேசப் படுவனோ. **5** | **கோடிகா**வில் உள்ள இறைவனே! பெருமை பெறுவோர் சிலர் ஆயினும் நறுமணம் வீசும் கொன்றையை மிக அருளாதவனானால் கூறுவேன்; என்றும் காமத்துயர் மயக்கம் ஏறுவேன்; நும்மால் ஏசப்படுவனோ? |
| **1854.** நாடி நாரணன் நான்முகன் வானவர்<br>தேடி யேசற வுந்தெரி யாததோர்<br>கோடி காவனைக் கூறாத நாளெலாம்<br>பாடி காவலிற் பட்டுக் கழியுமே. **6**<br>x x x x x x x x x x x x x x x **7,8,9** | திருமாலும் நான்முகனும் தேவர்களும் ஆராய முற்பட்டுத் தேடித் துயர் உறவும் தெரியாத இயல்பை உடைய ஒப்பற்ற **கோடிகா**வுறையும் இறைவனைக் கூறாத நாட்களெல்லாம் ஊர்க்காவலிற்பட்டுக் கழியும். |
| **1855.** வரங்க ளால்வரை யையெடுத் தான்றனை<br>அரங்க வூன்றி யருள்செய்த அப்பனூர்<br>குரங்கு சேர்பொழிற் கோடிகா வாவென<br>இரங்கு வேன்மனத் தேதங்கள் தீரவே. **10** | வரங்களாற் பெற்ற பலத்தால் திருக்கயிலையை எடுத்த இராவணனை அழிய ஊன்றி அருள்செய்த அப்பன் ஊராகிய குரங்குகள் சேரும் பொழிலை உடைய **கோடிகா** இறைவனே என்று என் மனத்துக் குற்றங்கள் தீர இரங்குவேன். |

## 79. திருப்புள்ளிருக்கு வேளூர்

ப.தொ.எண் : 192 | பதிக எண் : 79

| | | |
|---|---|---|
| 1856. | வெள்ளெ ருக்கர வம்விர வுஞ்சடைப்<br>புள்ளி ருக்குவே ளூரரன் பொற்கழல்<br>**உள்ளி ருக்கு முணர்ச்சியில் லாதவர்**<br>நள்ளி ருப்பர் நரகக் குழியிலே. 1 | வெள்ளெருக்கும், பாம்பும் விரவிய சடையொடு கூடிய புள்ளிருக்கு வேளூர்ச் சிவபெருமானின் பொன்னார் திருவடிகள் உள்ளத்துள் இருக்கும் உணர்ச்சி இல்லாதவர்கள் நரகக்குழியில் செறிந்திருப்பர். |
| 1857. | மாற்ற மொன்றறி யீர்மனை வாழ்க்கைபோய்க்<br>கூற்றம் வந்துமைக் கொள்வதன் முன்னமே<br>போற்ற வல்லீரேற் புள்ளிருக்கு வேளூர்<br>சீற்ற மாயின தேய்ந்தறுங் காண்மினே. 2 | விடைசொல்லும் தெளிவில்லாதவராய் மனையில் வாழும் வாழ்க்கைபோய், கூற்றுவன் வந்து உம்மைக் கொள்ளுவதற்கு முன்பே புள்ளிருக்கு வேளூரைப் போற்றும் வல்லமை உடையீரேல் சீறுதற்குரிய தீக்குணங்கள் தேய்ந்து அறும்; காண்பீராக. |
| 1858. | அரும றையனை ஆணொடு பெண்ணனைக்<br>கருவி டம்மிக வுண்டவெங் கண்டனைப்<br>புரிவெண் நூலனைப் புள்ளிருக்கு வேளூர்<br>உருகி நைபவ ருள்ளங் குளிருமே. 3 | அரிய வேதங்களை உடையவனும், ஆணொடு பெண்ணாகியவனும், கரிய ஆலகாலவிடம் மிக உண்ட விருப்பத்திற்குரிய திருநீலகண்டனும், வெள்ளியமுப்புரி நூலனும் ஆகிய பெருமானைப் புள்ளிருக்குவேளூரில் உருகி நையும் அடியார்களின் உள்ளம் குளிரும். |
| 1859. | தன்னு ருவை யொருவர்க் கறிவொணா<br>மின்னு ருவனை மேனிவெண் நீற்றனைப்<br>பொன்னு ருவனைப் புள்ளிருக்கு வேளூர்<br>என்ன வல்லவர்க் கில்லை யிடர்களே. 4 | தன் உருவத்தை ஒருவர்க்கும் அறிய வொண்ணாத ஒளி உருவனும், மேனியில் பூசிய வெண்ணீற்றனும், பொன்னார் மேனியனுமாகிய இறைவன் உறையும் புள்ளிருக்கு வேளூர் என்று கூறவல்லவர்க்கு இடர்கள் இல்லை. |
| 1860. | செங்கண் மால்பிர மற்கும் அறிவொணா<br>அங்கி யின்னுரு வாகி யழல்வதோர்<br>பொங்க ரவனைப் புள்ளிருக்கு வேளூர்<br>மங்கை பாகனை வாழ்த்த வருமின்பே. 5 | சிவந்த கண்ணை உடைய திருமாலுக்கும் பிரமனுக்கும் அறியவொண்ணாத அக்கினியின் உருவாகிக் கனலுகின்ற ஒப்பற்ற, பொங்கியெழும் அரவம் அணிந்த இறைவனாகிய புள்ளிருக்குவேளூரில் உமையொருபாகனை வாழ்த்த இன்பம் வரும். |
| 1861. | குற்ற மில்லியைக் கோலச் சிலையினால்<br>செற்ற வர்புரஞ் செந்தழ லாக்கியைப்<br>புற்ற ரவனைப் புள்ளிருக்கு வேளூர்<br>பற்ற வல்லவர் பாவம் பறையுமே. 6 | குற்றங்கள் இல்லாதவனும், அழகுமிக்க மேரு மலையாகிய வில்லினால் சினந்தவர் முப்புரங்களைச் செந்தழலாக்கியவனும், புற்றரவம் கொண்டவனுமாகிய இறைவன் உறையும் புள்ளிருக்குவேளூரைப் பற்றும் வல்லமை உடையவர்களது பாவங்கள் கெடும். |



திருப்புள்ளிருக்குவேளூர்:
பொருப்பனாருறை புள்ளிருக்கு வேளூர்

| | | | |
|---|---|---|---|
| **1862.** | கையி னோடுகால் கட்டி யுமரெலாம்<br>ஐயன் வீடின னென்பதன் முன்னம்நீர்<br>பொய்யி லாஅரன் புள்ளிருக்கு வேளூர்<br>மையு லாவிய கண்டனை வாழ்த்துமே. | 7 | கைகளோடு கால்களையும் கட்டி உம்மைச் சேர்ந்தவரெல்லாம் எங்கள் ஐயன் இறந்தனன் என்று கூறுவதன்முன்பே, நீர், பொய்யில்லாத சிவபிரானும், புள்ளிருக்குவேளூர்த் திருநீல கண்டனுமாகிய பெருமானை வாழ்த்துவீராக. |
| **1863.** | உள்ள முள்கி யுகந்து சிவனென்று<br>மெள்ள வுள்க வினைகெடு மெய்ம்மையே<br>புள்ளி னார்பணி புள்ளிருக்கு வேளூர்<br>வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே. | 8 | உள்ளத்தால் உள்ளி, உவப்புற்று **'சிவன்'** என்று மெல்ல உள்கினால் வினைகள் கெடுதல் மெய்மையே; சம்பாதி, சடாயு ஆகிய புள்ளினார் பணிகின்ற புள்ளிருக்குவேளூர் வள்ளல் பாதம் வணங்கித் தொழுவீராக. |
| | x x x x x x x x x x x x x x x x | 9 | |
| **1864.** | அரக்க னார்தலை பத்து மழிதர<br>நெருக்கி மாமலர்ப் பாதம் நிறுவிய<br>பொருப்ப னாருறை புள்ளிருக்கு வேளூர்<br>விருப்பி னால்தொழு வார்வினை வீடுமே. | 10 | இராவணனது தலைபத்தும் அழியும்படி நெருக்கிப் பெருமைமிக்க திருவடி மலர்களை நிறுவிய திருக்கயிலாயமலைத் தலைவர் உறைகின்ற புள்ளிருக்குவேளூரை விருப்பத்தினால் தொழுவார் வினை கெடும். |

## 80. திருவன்பிலாலந்துறை

ப.தொ.எண் : 193 | பதிக எண் : 80

| பாடல் | | விளக்கம் |
|---|---|---|
| **1865.** வானஞ் சேர்மதி சூடிய மைந்தனை<br>நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை<br>ஆனஞ் சாடியை யன்பிலா லந்துறைக்<br>கோன்எஞ் செல்வனைக் கூறிட கிற்றியே. | 1 | நெஞ்சே! வானத்தைச் சேர்ந்த பிறை மதியைச் சூடிய மைந்தனாகிய சிவபெருமானை நினையும் வல்லமை உடையை இல்லை; நீ கெடுவாய், பஞ்சகவ்வியத் திருவபிசேகம் கொள்வானாகிய **திருஅன்பில் ஆலந்துறைக்** கோனாம் எம் செல்வனைக் கூறிடும் வல்லமை பெறுவாயாக. |
| **1866.** கார ணத்தர் கருத்தர் கபாலியார்<br>வார ணத்துரி போர்த்த மணாளனார்<br>ஆர ணப்பொரு ளன்பிலா லந்துறை<br>நார ணற்கரி யானொரு நம்பியே. | 2 | **திருஅன்பில் ஆலந்துறை**யில் திருமாலுக்கும் அரியாராகிய ஒப்பற்ற நம்பி, உலககாரணரும், கருத்தில் உள்ளவரும், பிரமகபாலம் கொண்ட கையினரும், யானை உரிபோர்த்த மணாளரும், வேதப்பொருள் ஆயவரும் ஆவர். |
| **1867.** அன்பின் ஆனஞ்ச மைந்துட னாடிய<br>என்பின் ஆனை யுரித்துக் களைந்தவன்<br>அன்பி லானையம் மானையள் ளூறிய<br>அன்பி னால்நினைந் தாரறிந் தார்களே. | 3 | அன்பினால் பஞ்சகவ்வியம் ஐந்துடன் திரு முழுக்குக் கொண்டவனும், எலும்புடைய யானையின் உரியை உரித்துக் களைந்தவனும் ஆகிய, **அன்பில் ஆலந்துறை**யில் உள்ள அம்மானை, நெஞ்சில் அள்ளூறி அன்பினால் நினைந்தவர்களே அறிந்தவர்கள். |
| **1868.** சங்கை யுள்ளதுஞ் சாவது மெய்யுமை<br>பங்க னாரடி பாவியேன் நானுய்ய<br>அங்க ணனெந்தை யன்பிலா லந்துறைச்<br>செங்க ணாரடிச் சேரவும் வல்லனே. | 4 | உள்ளதும் ஐயம்; சாவதேமெய்; ஆதலால் உமை பங்கரும், அழகிய கண்ணை உடையவரும், எந்தையும், **அன்பில் ஆலந்துறை**யில் சிவந்த கண்ணை உடையவருமாகிய பெருமான் அடிகளைப் பாவியேன் நான் உய்யச் சேரவும் வல்லனே! |
| **1869.** கொக்கி றகர் குளிர்மதிச் சென்னியர்<br>மிக்க ரக்கர் புரமெரி செய்தவர்<br>அக்க ரையின ரன்பிலா லந்துறை<br>நக்கு ருவரும் நம்மை யறிவரே. | 5 | கொக்கிறகை உடையவரும், குளிர் மதிப் பிறையினைச் சடையிற் கொண்டவரும், சினம்மிக்கு அரக்கர் முப்புரங்களை எரித்தல் செய்தவரும், அக்கினை அரைக்கசைத்த வருமாகிய **அன்பில் ஆலந்துறை**யில் திகம்பர உருவினராம் இறைவர் நம்மை அறிவர். |

| | | |
|---|---|---|
| 1870. | வெள்ள முள்ள விரிசடை நந்தியைக்<br>கள்ள முள்ள மனத்தவர் காண்கிலார்<br>அள்ள லார்வய லன்பிலா லந்துறை<br>உள்ள வாறறி யார்சில ரூமரே. 6 | கங்கையாகிய வெள்ளம் உள்ள விரிசடையோடு கூடிய நந்தியாகிய பெருமானைக் கள்ளமுள்ள மனத்தவர் காணும் திறமை இல்லாதவர்கள்; சேறு நிறைந்த வயலை உடைய **அன்பில் ஆலந்துறை**யின்கண் உள்ளவாறு சில ஊமையர் அறியார். |
| 1871. | பிறவி மாயப் பிணக்கி லழுந்தினும்<br>உறவெ லாஞ்சிந்தித் துன்னி உகவாதே<br>அறவ னெம்பிரா னன்பிலா லந்துறை<br>மறவா தேதொழு தேத்தி வணங்குமே. 7 | பிறவியாகிய பொய்ப்பிணக்கில் அழுந்தினாலும் உறவெல்லாவற்றையும் சிந்தித்து எண்ணி மகிழாமல், அறவடிவாகிய எம்பெருமானது **அன்பில்ஆலந்துறை**யை மறவாது தொழுது ஏத்தி வணங்குவீராக. |
| 1872. | நுணங்கு நூலயன் மாலு மிருவரும்<br>பிணங்கி யெங்குந் திரிந்தெய்த்துங் காண்கிலா<br>அணங்க னெம்பிரா னன்பிலா லந்துறை<br>வணங்கும் நும்வினை மாய்ந்தறும் வண்ணமே. 8 | நுண்ணிய நூல் பல கற்ற பிரமனும் திருமாலுமாகிய இருவரும் மாறுபட்டும், எங்கும் திரிந்தும், இளைத்தும் காணும் திறமையற்றனர்; அணங்கினை ஒருபாகம் உடைய இறைவனின் **அன்பில் ஆலந்துறை**யை நும் வினைகள் மாய்ந்து அறும் வண்ணம் வணங்குவீராக. |
| 1873. | பொய்யெ லாமுரைக் குஞ்சமண் சாக்கியக்<br>கையன் மாருரை கேளா தெழுமினோ<br>ஐய னெம்பிரா னன்பிலா லந்துறை<br>மெய்யன் சேவடி யேத்துவார் மெய்யரே. 9 | எல்லாப் பொய்யும் உரைக்கும் சமணரும், சாக்கியருமாகிய சிறுமை உடையவர்கள் பேச்சைக் கேளாது எழுமின்; ஐயனும் எம்பெருமானும் **அன்பில் ஆலந்துறை**யில் எழுந்தருளியுள்ள மெய்யனுமாகிய இறைவன் சேவடி ஏத்துவார் மெய்யர் ஆவர். |
| 1874. | இலங்கை வேந்த னிருபது தோளிற்று<br>மலங்க மாமலை மேல்விரல் வைத்தவன்<br>அலங்க லெம்பிரா னன்பிலா லந்துறை<br>**வலங்கொள் வாரைவா னோர்வலங்<br>கொள்வரே.** 10 | இலங்கை அரசனாம் இராவணன் இருபது தோள்களும் இற்றுச் சுழலும்படியாகத் திருக்கயிலைமாமலை மேல் திருவிரலை ஊன்றியவன் ஆகிய கொன்றைமாலையணிந்த பெருமானுடைய **அன்பில்ஆலந்துறை**யை வலங்கொண்டு வழிபடுவாரைத் தேவர்கள் வலம் கொண்டு வணங்கிப் போற்றுவர். |

## 81. திருப்பாண்டிக்கொடுமுடி

ப.தொ.எண் : 194 பதிக எண் : 81

| பாடல் | உரை |
|---|---|
| 1875. சிட்ட னைச்சிவ னைச்செழுஞ் சோதியை<br>அட்ட மூர்த்தியை ஆல நிழலமர்<br>பட்ட னைத்திருப் பாண்டிக் கொடுமுடி<br>நட்ட னைத்தொழ நம்வினை நாசமே. 1 | உயர்ந்தவனை, சிவனை, செழுஞ்சோதி வடிவானவனை, எட்டு மூர்த்தியை, கல்லால நிழற்கீழ் அமரும் ஆசாரியனை, திருப்பாண்டிக் கொடுமுடிக் கூத்தனைத் தொழுதால் நம்வினை நாசமாம். |
| 1876. பிரமன் மாலறி யாத பெருமையன்<br>தரும மாகிய தத்துவ னெம்பிரான்<br>பரம னாருறை பாண்டிக் கொடுமுடி<br>கரும மாகத் தொழுமட நெஞ்சமே. 2 | அறிவற்ற நெஞ்சமே! பிரமனும் மாலும் அறியாத பெருமையனும், தரும வடிவாகிய தத்துவ வடிவினனும், எம்பிரானும், பரமனும் ஆகிய பெருமான் உறைகின்ற திருப்பாண்டிக் கொடு முடியைத் தொழுவதே கருமமாகக் கொண்டு பணிவாயாக. |
| 1877. ஊச லாளல்லள் ஒண்கழ லாளல்லள்<br>தேச மாந்திருப் பாண்டிக் கொடுமுடி<br>ஈசனே யெனு மித்தனை யல்லது<br>பேசு மாறறி யாளொரு பேதையே. 3 | ஒரு பெண் ஊசல் விளையாட்டும் கொண்டிலள்; ஒள்ளிய கழல் அணிவாளுமல்லள்; தேசமாம் திருப்பாண்டிக் கொடுமுடி ஈசனே என்னும் இத்தனையேயல்லது வேறு பேசுமாறு ஒன்றும் அறியாதவள் ஆயினள். |
| 1878. தூண்டி யசுடர் போலொக்குஞ் சோதியான்<br>காண்ட லுமெளி யன்னடி யார்கட்குப்<br>பாண்டிக் கொடுமுடி மேய பரமனைக்<br>காண்டு மென்பவர்க் கேதுங் கருத்தொணான். 4 | தூண்டிய சுடர்போல் ஒக்கின்ற சோதி வடிவினனாகிய பெருமான் அடியார்களுக்குக் காண்டல் எளியவன்; பாண்டிக் கொடுமுடி மேவிய பரமனைக் காண்போம் என்று கூறுவார்க்கு ஏதும் கருதவொண்ணா இயல்பினோம். |
| 1879. நெருக்கி யம்முடி நின்றிசை வானவர்<br>இருக்கொ டும்பணிந் தேத்த விருந்தவன்<br>**திருக்கொ டும்முடி யென்றலுந் தீவினைக்**<br>**கருக்கெ டும்மிது கைகண்ட யோகமே.** 5<br><br>x x x x x x x x x x x x x x 6,7,8,9,10 | புகழை உடைய வானவர், ஒருவர் முடியோடு மற்றொருவர் முடி நெருக்கும் கூட்டமாக நின்று, இருக்கு வேதம் உரைத்து, பணிந்து ஏத்த இருந்தவனுடைய ஊர், **திருக்கொடுமுடி என்றலும் தீவினையின் கருக் கெடும்; இது கைகண்ட யோக நெறியாகும்.** |



## 82. திருவான்மியூர்

ப.தொ.எண் : 195 (உபதேசம்) பதிக எண் : 82

1880. விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்டர் நாயகன் தன்னடி சூழ்மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் பறைந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே. 1

வான்மியூரீசனே என்பது பதிக மகுடம்

விரிந்த மாமலர்களைக் கொண்டு விரைந்து நீர், தேவர்நாயகனும், வண்டுசேர் பொழில்களை உடைய **வான்மியூர்** ஈசனுமாகிய இறைவன் சேவடியைச் சூழ்வீர்களாக; முன்பு செய்த பாவங்கள் கெடும்.

1881. பொருளுஞ் சுற்றமும் பொய்ம்மையும் விட்டுநீர்
மருளும் மாந்தரை மாற்றி மயக்கறுத்
தருளு மாவல்ல ஆதியா யென்றலும்
மருள றுத்திடும் வான்மியூ ரீசனே. 2

தேவர்கள் – கடல் கடைந்து பெற்ற அமுதத்தால் சிவலிங்கம் தாபித்துப் பூசைசெய்த தலமாதலின் இறைவன் மருந்தீசர் எனப்பட்டார்.

பொருளும், சுற்றத்தாருமாகிய பொய்ம்மையை விட்டு நீர் மருளுதற்குரிய மாந்தரை மாற்றி மயக்கம் நீக்கி அருளுமாறுவல்ல ஆதியாய்! என்று கூறியதும் **வான்மியூர்** ஈசன் மயக்கம் நீக்குவன்.

1882. மந்த மாகிய சிந்தை மயக்கறுத்
தந்த மில்குணத் தானை யடைந்துநின்
றெந்தை யீசனென் றேத்திட வல்லிரேல்
வந்து நின்றிடும் வான்மியூ ரீசனே. 3

வான்மீக மகா இருடிக்கு அருள் செய்த தலமாதலின் வான்மியூர்

மந்தமாகிய சிந்தையின் மயக்கத்தை அறுத்து முடிவற்ற குணத்தை உடையவனாகிய பெருமானை அடைந்துநின்று எந்தையே! ஈசனே! என்று வழிபடவல்லமை உடையீரேயாயின் **வான்மியூர்** ஈசன் வந்து நின்றிடும்.

1883. உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலால்
கள்ள முள்ள வழிக்கசி வானலன்
வெள்ள மும்மர வும்விர வுஞ்சடை
வள்ள லாகிய வான்மியூ ரீசனே. 4

கங்கையும், பாம்பும் கலக்கும் சடையோடு கூடிய வள்ளலாகிய **வான்மியூர்** ஈசன், உள்ளம் கலந்து ஏத்த வல்லவர்க்கு அல்லால் கள்ளம் உள்ளவழிக் கசிவான் அல்லன்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1884.** படங்கொள் பாம்பரைப் பால்மதி சூடியை<br>வடங்கொள் மென்முலை மாதொரு கூறனைத்<br>தொடர்ந்து நின்று தொழுதெழு வார்வினை<br>மடங்க நின்றிடும் வான்மியூ ரீசனே. 5<br><br>மருந்து, நோயும், மயக்கமும் தீர்ப்பது; சாவாமை தருவது; ஆதலின் அமுதம் மருந்தெனப்படும். | படம் கொண்ட பாம்பு உடையவனும், பால் மதி சூடியவனும், மாலைகள் கொண்ட மென்முலை மாதாகிய உமையொரு கூறனுமான **வான்மியூர்** ஈசன், தொடர்ந்து நின்று தொழுது எழுவார் வினைகள் மடங்க முன்னே வந்து நின்று அருளுவான். |
| **1885.** நெஞ்சி லைவர் நினைக்க நினைக்குறார்<br>பஞ்சின் மெல்லடி யாளுமை பங்கவென்<br>றஞ்சி நாண்மலர் தூவி யழுதிரேல்<br>வஞ்சந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 6 | நெஞ்சில் நினைக்க ஐம்புலக் கள்வர் நினைக்கவையார்; பஞ்சனைய மெல்லடியாளாகிய உமைபங்கனே! என்று அஞ்சிப் புதிய மலர்கள் தூவி அழுதீரேல் **வான்மியூர்** ஈசன் உம் வஞ்சனையைத் தீர்ப்பர். |
| **1886.** நுணங்கு நூலயன் மாலு மறிகிலாக்<br>குணங்கள் தான்பர விக்குறைந் துக்கவர்<br>சுணங்கு பூண்முலைத் தூமொழி யாரவர்<br>வணங்க நின்றிடும் வான்மியூ ரீசனே. 7 | நுண்ணிய நூல் பல உணர்ந்த பிரமனும் திருமாலும் அறியும்வல்லமை இல்லாத பேரருட் குணங்களைப் பரவி சுணங்கு படர்ந்த பூண்களை உடைய முலையையும் தூய மொழியையும் உடைய பெண்கள் வணங்க **வான்மியூர்** ஈசன் நின்றிடுவான். |
| **1887.** ஆதி யும்மர னாயயன் மாலுமாய்ப்<br>பாதி பெண்ணுரு வாய பரமனென்<br>றோதி யுள்குழைந் தேத்தவல் லாரவர்<br>வாதை தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 8 | **வான்மியூர்** ஈசன் முதலாகிய மூர்த்தி அரனும் அயனும் திருமாலும் ஆயவன். பாதி பெண்ணுருவுமாகிய பரமன் என்று ஓதி உள்ளம் குழைந்து ஏத்த வல்லமை உடையவர்களின் துன்பங்களைத் தீர்த்திடுவான். |
| **1888.** ஓட்டை மாடத்தி லொன்பது வாசலும்<br>காட்டில் வேவதன் முன்னங் கழலடி<br>நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயில்<br>வாட்டந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 9 | ஓட்டை மாடமாகிய உடம்பில் உள்ள ஒன்பது வாயில்களும் இடுகாட்டில் வெந்து எரிந்து சாம்பலாவதன் முன், தன் கழலடியை நெஞ்சில் நாட்டிப் புதுமலர் தூவி வலம் செய்தால் **வான்மியூர்** ஈசன் வாட்டம் தீர்ப்பான். |
| **1889.** பார மாக மலையெடுத் தான்றனைச்<br>சீர மாகத் திருவிர லூன்றினான்<br>ஆர்வ மாக அழைத்தவ னேத்தலும்<br>வார மாயினன் வான்மியூ ரீசனே. 10 | பாரமாகத் திருக்கயிலையை எடுத்த இராவணனைச் சிதையும்படி திருவிரலால் ஊன்றியவனும், ஆர்வம் பெருகி அழைத்து அவன் ஏத்தலும் அன்பு கொண்டவனும் **வான்மியூர்** ஈசன் ஆவன். |

## 83. திருநாகைக்காரோணம்

திருநாகைக் காரோணனை வலங்கொள, மனங்கொள, காண, நினைய, சொல, சிந்தைசெய, தொழ, ஏத்த, வினை அகலும் என்று, பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் பயனைச் சொல்கிறார். நாவரசரின் வினைக் கொள்கைகளை ஆராய இப்பதிகம் உதவும்.

ப.தொ.எண் : 196 பதிக எண் : 83

**1890.** பாணத் தால்மதின் மூன்று மெரித்தவன்
பூணத் தானர வாமை பொறுத்தவன்
காணத் தானினி யான்கடல் **நாகைக்கா**
**ரோணத் தானென நம்வினை யோயுமே.** 1

ஓர் அம்பினால் மூன்று மதில்களையும் எரித்தவனும், தான் அணியாகப் பூணப் பாம்பையும் ஆமையையும் தாங்கியவனும், காண இனியவனும் ஆகிய கடல் நாகைக் காரோணத்தான் என நம்வினை ஓயும்!

**1891.** வண்ட லம்பிய வார்சடை யீசனை
விண்ட லம்பணிந் தேத்தும் விகிர்தனைக்
கண்ட லங்கமழ் நாகைக்கா ரோணனைக்
**கண்ட லும்வினை யான கழலுமே.** 2

வண்டுகள் ஒலிக்கும் நீண்ட சடையையுடைய ஈசனும், விண்ணுலகம் பணிந்தேத்தும் மேலானவனும், தாழை கமழ்கின்ற நாகைக் காரோணனுமாகிய பெருமானைக் காணுதலும் வினைகள் நீங்கும்.

**1892.** புனையும் மாமலர் கொண்டு புரிசடை
நனையும் மாமலர் சூடிய நம்பனைக்
கனையும் வார்கடல் நாகைக்கா ரோணனை
**நினைய வேவினை யாயின நீங்குமே.** 3

மாமலர்களைக் கொண்டு புனையும் புரிசடை உடைய நம்பனும், கள்ளால் நனையும் மாமலரைச் சூடிய நம்பனும் ஆகிய ஒலிக்கும் நீண்ட கடல் நாகைக் காரோணனை நினைய வினைகள் நீங்கும்.

இங்கு சுந்தரர் பதிகம் பாடி பொன் பெற்றார்.

**1893.** கொல்லை மால்விடை யேறிய கோவினை
எல்லி மாநட மாடு மிறைவனைக்
கல்லி னார்மதில் நாகைக்கா ரோணனைச்
**சொல்ல வேவினை யானவை சோருமே.** 4

முல்லை நிலத்து விடையேறிய அரசனும், இரவில் மகாதாண்டவம் புரியும் இறைவனும் ஆகிய, கற்களால் கட்டப்பட்ட மதில் சூழ்ந்த நாகை காரோணனைச் சொல்ல வினைகள் சோரும்.

அதிபத்தநாயனார் அவதாரத்தலம்

**1894.** மெய்ய னைவிடை யூர்தியை வெண்மழுக்
கைய னைக்கடல் நாகைக்கா ரோணனை
மைய னுக்கிய கண்டனை வானவர்
**ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே.** 5

உண்மையே உருவானவனும், விடையை ஊர்தியாகக் கொண்டவனும், வெண்மழுவைக் கையிற்கொண்டவனும், நாகைக்காரோணனும், ஆலகால நஞ்சினை வருத்திய திருக்கழுத்தினனும் ஆகிய தேவர் தலைவனைத் தொழுவார்க்கு அல்லல் இல்லை.

மூவர் பாடல் பெற்ற முசுகுந்த விடங்கத்தலம்

| | |
|---|---|
| **1895.** அலங்கல் சேர்சடை யாதிபு ராணனை<br>விலங்கல் மெல்லியல் பாகம் விருப்பனைக்<br>கலங்கள் சேர்கடல் நாகைக்கா ரோணனை<br>வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. **6** | மாலைகள் சேர்ந்த சடையையுடைய ஆதி புராணனை, மலைமங்கையை ஒருபாகம் விரும்பிக் கொண்டவனை, கப்பல்கள் சேரும் கடல்நாகைக் காரோணனை வலம் கொண்டு வணங்குவார் வினைகள் மாயும். |
| மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அருளிய தலபுராணம் உள்ளது. | |
| **1896.** சினங்கொள் மால்கரி சீறிய ஏறினை<br>இனங்கொள் வானவ ரேத்திய வீசனைக்<br>கனங்கொள் மாமதில் நாகைக்கா ரோணனை<br>**மனங்கொள் வார்வினை யாயின மாயுமே.**<br>**7** | சினங்கொண்ட பெரிய வேழத்தைந் சினந்து பொறாத ஏறுபோல்வானும், தொகுதி கொண்ட தேவர்கள் ஏத்திய ஈசனும் ஆகிய பெருமை கொண்ட மாமதில் சூழ்ந்த நாகைக் காரோணனை உள்ளத்துக் கொள்ளுவார் வினைகள் மாயும். |
| **1897.** அந்த மில்புக ழாயிழை யார்பணிந்<br>தெந்தை யீசனென் றேத்து மிறைவனைக்<br>கந்த வார்பொழில் நாகைக்கா ரோணனைச்<br>**சிந்தை செய்யக் கெடுந்துயர் திண்ணமே.**<br>**8** | ஆயிழையார்கள் பணிந்து முடிவற்ற புகழைப் பாடி எந்தையே! 'ஈசனே' என்று வாழ்த்தும் இறைவனாகிய மணம் வீசும் நெடிய பொழில் சூழ்ந்த நாகைக் காரோணனைச் சிந்தித்தால் திண்மையாகத் துயரங்கள் கெடும். |
| **1898.** கருவ னைக்கடல் நாகைக்கா ரோணனை<br>இருவ ருக்கறி வொண்ணா இறைவனை<br>ஒருவ னையுண ரார்புர மூன்றெய்த<br>**செருவ னைத்தொழத்** தீவினை தீருமே. **9** | உலகிற்கெல்லாம் கருவாகியவனும், கடல்நாகைக் காரோணனும், பிரமன் திருமால் ஆகிய இருவருக்கறியவியலாத இறைவனும், ஒப்பற்றவனும் ஆகிய, உணராத அசுரரது முப்புரங்களை எய்த போரை உடைய பெருமானைத் தொழத் தீவினைகள் தீரும். |
| **1899.** கடல்க ழிதழி நாகைக்கா ரோணன்றன்<br>வடவ ரையெடுத் தார்த்த அரக்கனை<br>அடர வூன்றிய பாத மணைதரத்<br>தொடர அஞ்சுந் துயக்கறுங் காலனே. **10** | கடல் உப்பங்கழிகள் பொருந்திய நாகைக் காரோணன் தன் திருக்கயிலையை எடுத்து ஆர்த்த இராவணனை அடரத் திருவிரலால் ஊன்றிய பாதம் அணைந்தால் துயக்கற்ற காலன் தொடர அஞ்சுவான். |

## 84. திருக்காட்டுப்பள்ளி

ப.தொ.எண் : 197 (உபதேசம்) பதிக எண் : 84

**1900.** மாட்டுப் பள்ளி மகிழ்ந்துறை வீர்க்கெலாம்
கேட்டுப் பள்ளிகண் டீர்கெடு வீரிது
ஓட்டுப் பள்ளிவிட் டோட லுறாமுனம்
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே. 1

செல்வத்திடத்து மகிழ்ந்து உறைவீர்; கேட்டுப் பள்ளிகண்டீர். உடம்பை விட்டு உயிர் ஓடலுறுவதற்கு முன்பு காட்டுப்பள்ளியிறைவன் திருவடிகளைச் சேர்வீராக.

மாட்டுப்பள்ளி – செல்வம் நிறைந்த இருக்கைகள்
கேட்டுப்பள்ளி – கேடு தரும் இருக்கை
ஓட்டுப்பள்ளி – ஓடுகின்ற வீடு. காட்டுப்பள்ளி – ஊர்

**1901.** மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடு நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே. 2

செல்வத்தையே தேடி நீர் உமக்குள்ளே மகிழ்ந்து நாட்டிலுள்ள பொய்யெல்லாம் பேசிடும் நாணமற்றவர்களே! இந்தக் கூடாகிய உடம்பைவிட்டு உயிர் போவதற்கு முன்பே காட்டுப்பள்ளியுள்ளான் திருவடி சேர்வீராக.

**1902.** தேனை வென்றசொல் லாளொடு செல்வமும்
ஊனை விட்டுயிர் போவதன் முன்னமே
கான வேடர் கருதுங்காட் டுப்பள்ளி
ஞான நாயக னைச்சென்று நண்ணுமே. 3

தேனை வென்ற சொல்லை உடையவளாகிய மனைவியோடு செல்வமும் கெட்டு உடலைவிட்டு உயிர் போவதற்கு முன்பே காட்டு வேடர்கள் கருதும் காட்டுப்பள்ளியின் ஞான நாயகனைச் சென்று நண்ணுவீராக.

**1903.** அருத்த மும்மனை யாளொடு மக்களும்
பொருத்த மில்லைபொல் லாதது போக்கிடும்
கருத்தன் கண்ணுத லண்ணல்காட் டுப்பள்ளித்
திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே. 4

பொருளும், மனைவியோடு மக்களும் பொருத்தம் இல்லை; பொல்லாத தீமை போக்கிடும் கருத்தனும், நெற்றிக் கண்ணுடைய அண்ணலும் ஆகிய காட்டுப்பள்ளித் திருத்தன் சேவடியைச் சென்று சேர்வீராக.

**1904.** சுற்ற முந்துணை யும்மனை வாழ்க்கையும்
அற்ற போதணை யாரவ ரென்றென்றே
கற்ற வர்கள் கருதுங்காட் டுப்பள்ளிப்
பெற்ற மேறும் பிரானடி சேர்மினே. 5

சுற்றத்தாரும் துணைவியும் மனை வாழ்க்கையும், உயிர் உடலைவிட்டு நீங்கியபோது பொருந்தாதவர்கள் என்று, கற்றவர்கள் கருதுகின்ற காட்டுப்பள்ளியில் இடபம் ஏறிய பெருமான் அடி சேர்வீராக.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1905.** அடும்புங் கொன்றையும் வன்னியும் மத்தமும்<br>துடும்பல் செய்சடைத் தூமணிச் சோதியான்<br>கடம்பன் தாதை கருதுங்காட் டுப்பள்ளி<br>உடம்பி னார்க்கோர் உறுதுணை யாகுமே. 6<br><br>அடும்பு – அடம்ப மலர்<br>துடும்பல் – நிறைந்திருத்தல் | அடும்பும், கொன்றையும், வன்னியும், ஊமத்தமுமாகிய மலர்கள் சூடியிருக்கும் புனைதல் செய்யப்பட்ட சடையுடைய தூமணிச் சோதியானும், கடம்பணிந்த முருகன் தந்தையும் ஆகிய பெருமானே உடம்பை உடையவர்க் கெல்லாம் உறுதுணை ஆவான்; ஆதலின் காட்டுப்பள்ளியையே கருதுவீர்களாக. |
| **1906.** மெய்யின் மாசுடை யாருடல் மூடுவார்<br>பொய்யை மெய்யென்று புக்குடன் வீழன்மின்<br>கையின் மானுடை யான்காட்டுப் பள்ளியெம்<br>ஐயன் தன்னடி யேயடைந் துய்ம்மினே. 7 | உடம்பில் அழுக்குடையவரும், உடல் மூடுவாருமாகிய புத்தரது பொய்யை மெய்யென்று கருதிப் புகுந்து அவர்களுடன் வீழாதீர்; கையின்கண் மான் உடையான் ஆகிய காட்டுப் பள்ளியில் எம் ஐயன் திருவடிகளையே அடைந்து உய்வீராக. |
| **1907.** வேலை வென்றகண் ணாரை விரும்பிநீர்<br>சீலங் கெட்டுத் திகையன்மின் பேதைகாள்<br>காலை யேதொழுங் காட்டுப்பள் ளிய்யுறை<br>நீல கண்டனை நித்தல் நினைமினே. 8 | அறிவற்றவர்களே! வேலை, அழகால் வென்ற கண்ணை உடைய பெண்டிரை விரும்பி, நீர் ஒழுக்கம் கெட்டுத் திகையாதீர்; காட்டுப்பள்ளியில் உறையும் திருநீலகண்டனை நித்தமும் நினைந்து காலத்தே சென்று தொழுவீராக. |
| **1908.** இன்று ளார்நாளை யில்லை யெனும்பொருள்<br>ஒன்றும் ஓரா துழிதரு மூமர்காள்<br>அன்று வானவர்க் காக விடமுண்ட<br>கண்ட னார்காட்டுப் பள்ளிகண் டுய்ம்மினே. 9 | ஊமர்களே! இன்றைக்கிருப்பார் நாளைக்கில்லை எனும் பொருள் ஒன்றும் உணராது திரிதருவோரே! அன்று தேவர்களின் பொருட்டு விடமுண்ட திருக்கழுத்தினரது காட்டுப்பள்ளி கண்டு உய்வீராக. |
| **1909.** எண்ணி லாஅரக் கன்மலை யேந்திட<br>எண்ணி நீண்முடி பத்து மிறுத்தவன்<br>கண்ணு ளார்கரு துங்காட்டுப் பள்ளியை<br>நண்ணு வாரவர் தம்வினை நாசமே. 10 | நல்லெண்ணமில்லாத இராவணன் மலையை எடுக்க, அவன் திருந்துமாறு திருவுளத்து எண்ணி, அவன் நீண்ட முடிகள் பத்தையும் இறுத்தவனுக்குரிய ஞானக்கண்ணுடையவர் கருதி உணரும் **காட்டுப்பள்ளியை நண்ணுவாருடைய வினைகள் நாசம் அடையும்.** |

## 85. திருச்சிராப்பள்ளி

(திரிசிரன் பூசித்த காரணத்தால் இப்பெயர்)

ப.தொ.எண் : 198 பதிக எண் : 85

1910. மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறு மிறைவனார்
கட்டு நீத்தவர்க் கின்னரு ளேசெயும்
சிட்டர் போலுஞ் சிராப்பள்ளிச் செல்வரே. 1

மட்டுவார் குழலம்மை – தலத்து அம்பிகையின் திருப்பெயர்.

சிராப்பள்ளிச் செல்வர், தேன் ஒழுகும் நீண்ட குழலை உடைய உமாதேவியோடு பெரிய விடையினை விருப்பத்தினோடு உகந்து ஏறும் இறைவர்; பாசக்கட்டு நீத்தவர்க்கு இன்னருளே புரியும் மேலோர்.

1911. அரிய யன்தலை வெட்டிவட் டாடினார்
அரிய யன்தொழு தேத்து மரும்பொருள்
**பெரிய வன்சிராப் பள்ளியைப் பேணுவார்**
**அரிய யன்தொழ அங்கிருப் பார்களே.** 2

திருமால், அயன் ஆகியோர் தலைகளை வெட்டி வட்டுப்போல் ஆடியவரும், அவ்விருவரும் தொழுது வணங்கும் அரும்பொருளும், பெரியவரும் ஆகிய அப்பெருமானுக்குரிய சிராப்பள்ளியைச் சிந்தையுள் பேணும் அன்பர், திருமாலும் பிரமனும் தொழச் சிவலோகத்திருப்பார்கள்.

1912. அரிச்சி ராப்பக லைவரா லாட்டுண்டு
சுரிச்சி ராதுநெஞ் சேயொன்று சொல்லக்கேள்
**திருச்சி ராப்பள்ளி யென்றலுந் தீவினை**
நரிச்சி ராதுநடக்கும் நடக்குமே. 3

அரிச்சு – அரித்து சுரிச்சு – சுழித்து – சுழன்று
நரிச்சும் – ஒளிந்தும் / துன்பஞ்செய்தும்

x x x x x x x x x x x x x 4,5,6,7,8,9

நெஞ்சே! ஐம்புலக் கள்வரால் இராப் பகலாக அரிக்கப்பெற்று ஆட்டப்பெற்று வருந்தியிராமல் இருக்க, ஓர் உபாயம் சொல்லக் கேட்பாயாக! திருச்சிராப்பள்ளி என்றலும் தீவினை பொருந்தி இருக்காமல் உன்னைவிட்டு நடக்கும்; நடக்கும்!

1913. **தாயு மாயெனக்** கேதலை கண்ணுமாய்ப்
பேய னேனையும் ஆண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாய னாரென நம்வினை நாசமே. 10

தாயுமானவர் – திருத்தலத்து இறைவன் திருநாமம்.

தாயுமாகி எனக்குத் தலைகண்ணுமாகிப் பேயனேனாகிய என்னையும் ஆட்கொண்டருளிய பெருந்தகையும் தேயங்கட்கெல்லாம் நாதனும் ஆகிய பெருமானைச் **சிராப்பள்ளி மேவிய நாயனார் என்று கூறி வாழ்த்த நம்வினை நாசம் அடையும்.**

## 86. திருவாட்போக்கி

ப.தொ.எண் : 199 | பதிக எண் : 86

**1914.** கால பாசம் பிடித்தெழு தூதுவர்
பால கர்விருத் தர்பழை யாரெனார்
ஆல நீழ லமர்ந்தவாட் போக்கியார்
சீல மார்ந்தவர் செம்மையுள் நிற்பரே. 1

காலபாசம் – உயிர்களைக் கொண்டு போவதற்கு எமதூதர் வீசும் ஆயுதம்.

காலபாசத்தைப் பிடித்தெழும் யமதூதுவர்கள் இவர் பாலகர், இவர் விருத்தர், இவர் பழையவர் என்று கூறிவிட்டுச் செல்லார்; கல்லால் நிழற்கீழ் அமர்ந்த **வாட்போக்கி**யாரது சீலம் நிறைந்தவரே செம்மையுள் நின்று சிவகதி பெறுவர் என்பதால் அவர்களிடம் வரமாட்டார்கள்.

---

**1915.** விடுத்த தூதுவர் வந்து வினைக்குழிப்
படுத்த போது பயனிலை பாவிகாள்
அடுத்த கின்னரங் கேட்கும்வாட் போக்கியை
எடுத்தும் ஏத்தியும் இன்புறு மின்களே. 2

பாவிகளே! எமன் விடுத்த தூதுவர்கள் வந்து வினைக்குழியிலே படுவித்தபோது கதறிப் புலம்பிப் பயன் இல்லை; அடுத்த கின்னர இசை கேட்கும் **வாட்போக்கி**யை எடுத்தேத்தி இன்புறுவீர்களாக.

---

**1916.** வந்திவ் வாறு வளைத்தெழு தூதுவர்
உந்தி யோடி நரகத் திடாமுனம்
அந்தி யின்னொளி தாங்கும்வாட் போக்கியார்
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரே. 3

பதிகம் முழுதும் கூற்றுவன் தூதுவர் கூறு செய்யும் கொடுமையை விவரிக்கிறார்.

வந்து இவ்வாறு வளைத்தெழுகின்ற எமதூதுவர்கள் மனம் உந்துதலால் ஓடி நரகத்து இடுவதன் முன்னம் அந்தியின் செவ்வொளி தாங்கிய மேனியராகிய **வாட்போக்கி** இறைவர் தம்மைச் சிந்தித்து எழுவார்களின் வினை தீர்ப்பர்.

---

**1917.** கூற்றம் வந்து குமைத்திடும் போதினால்
தேற்றம் வந்து தெளிவுற லாகுமே
ஆற்ற வும்மருள் செய்யும்வாட் போக்கிபால்
ஏற்று மின்விளக் கையிருள் நீங்கவே. 4

எமன் வந்து அழித்திடும்போதில் முடிவு வந்து தெளிவுறல் ஆகாதன்றோ? மிகவும் அருள்செய்யும் **வாட்போக்கி** இறைவர்பால் விளக்கை இருள் நீங்க ஏற்றுவீராக.

---

**1918.** மாறு கொண்டு வளைத்தெழு தூதுவர்
வேறு வேறு படுப்பதன் முன்னமே
ஆறு செஞ்சடை வைத்தவாட் போக்கியார்க்
கூறி யூறி யுருகுமென் னுள்ளமே. 5

மாறுபாடு கொண்டு வளைத்தெழும் எமதூதுவர் உடல் வேறு உயிர் வேறு படுப்பதன் முன்பே, கங்கையைச் சிவந்த சடையில் வைத்த **வாட்போக்கி** இறைவர்க்கு என் உள்ளம் ஊறி ஊறி உருகும்.

| | | |
|---|---|---|
| **1919.** கான மோடிக் கடிதெழு தூதுவர்<br>தான மோடு தலைபிடி யாமுனம்<br>ஆனஞ்சாடி யுகந்தவாட் போக்கியார்<br>ஊன மில்லவர்க் குண்மையில் நிற்பரே. | 6 | இடுகாட்டிற்கு ஓடி, விரைந்து எழுந்து எம தூதுவர் இடத்தோடு தலையைப் பிடிப்பதற்கு முன்பே, பஞ்சகவ்வியம் ஆடுதலை உகந்த வாட்போக்கி இறைவர், குற்றமற்றவர்க்கு உண்மையில் முன்னின்றருள்வர். |
| **1920.** பார்த்துப் பாசம் பிடித்தெழு தூதுவர்<br>கூர்த்த வேலாற் குமைப்பதன் முன்னமே<br>ஆர்த்த கங்கை யடக்கும்வாட் போக்கியார்<br>கீர்த்தி மைகள் கிளர்ந்துரை மின்களே. | 7 | பார்த்துப் பாசம் பிடித்தெழுந்த எமதூதுவர் கூரிய வேலாற்குத்தி வருத்துவதன் முன்பே, ஆரவாரித்த கங்கையைச் சடையில் அடக்கும் **வாட்போக்கி** இறைவர் புகழ்த்தன்மைகளை உள்ளம் கிளர்ந்து உரைப்பீராக. |
| **1921.** நாடி வந்து நமன்தமர் நல்லிருள்<br>கூடி வந்து குமைப்பதன் முன்னமே<br>ஆடல் பாட லுகந்தவாட் போக்கியை<br>வாடி யேத்தநம் வாட்டந் தவிருமே. | 8 | எமனைச் சார்ந்தோராகிய தூதுவர் நாடிவந்து, நள்ளிருளில் தாம் பலராய்க் கூடிவந்து வருத்துவதன் முன்பே, ஆடல் பாடல் உகந்த **வாட்போக்கி** இறைவரை வாடி வழிபட நம் வாட்டம் தீரும். |
| **1922.** கட்ட றுத்துக் கடிதெழு தூதுவர்<br>பொட்ட நூக்கிப் புறப்படா முன்னமே<br>அட்ட மாமலர் சூடும்வாட் போக்கியார்க்<br>கிட்ட மாகி இணையடி யேத்துமே. | 9 | கட்டுக்களை அறுத்து விரைந்து எழுந்த எம தூதுவர்கள் புறப்படுவதற்கு முன்பே, எட்டுப் பூக்களைச் சூடும் **வாட்போக்கி** இறைவர்க்கு விருப்பம் உடையவராகித் திருவடி ஏத்துவீராக. |
| **1923.** இரக்க முன்னறி யாதெழு தூதுவர்<br>பரக்க ழித்தவர் பற்றுதன் முன்னமே<br>அரக்க னுக்கருள் செய்தவாட் போக்கியார்<br>கரப்ப துங்கரப் பாரவர் தங்கட்கே. | 10 | இரக்கமென்பதை முன்னும் அறியாது எழுந்த எமதூதுவர்கள் பரவிவந்து அழித்துப் பற்றிக் கொள்வதற்கு முன்பே, இராவணனுக்கு அருள்செய்த **வாட்போக்கி** இறைவர் அவர்கட்கு அகப்படாமல் தம்மடியாரை ஒளிக்கவும் ஒளிப்பர். |

## 87. திருமணஞ்சேரி

**ப.தொ.எண் : 200** **பதிக எண் : 87**

| | | |
|---|---|---|
| **1924.** பட்ட நெற்றியர் பாய்புலித் தோலினர்<br>நட்ட நின்று நவில்பவர் நாடொறும்<br>சிட்டர் வாழ்திரு வார்மணஞ் சேரியெம்<br>வட்ட வார்சடை யார்வண்ணம் வாழ்த்துமே. | 1 | பட்டமணிந்த நெற்றியினரும், பாயும் புலியின் தோலை உடுத்தவரும், நாள்தொறும் நட்டமாடி நின்று பாடுவோரும், உயர்ந்தவர் வாழ்கின்ற திருவுடைய மணஞ்சேரியில் வட்டமாகிய வார்சடை உடைய எமது பெருமானுமாகிய இறைவர் வண்ணத்தை வாழ்த்துவீராக. |

| பாடல் | எண் | விளக்கம் |
|---|---|---|
| **1925.** துன்னு வார்குழ லாளுமை யாளொடும்<br>பின்னு வார்சடை மேற்பிறை வைத்தவர்<br>மன்னு வார்மணஞ் சேரி மருந்தினை<br>உன்னு வார்வினை யாயின வோயுமே.<br>துன்னு – நெருங்கிய; பின்னு – ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்த; மன்னு – நிலைபெறுதல்; உன்னு – நினைத்தல் | 2 | நெருங்கிய நீண்ட கூந்தலை உடைய உமாதேவியோடு கூடியவரும், பின்னிய நீண்ட சடைமேற் பிறையை வைத்தவரும் ஆகிய நிலைபெற்ற நீண்ட புகழை உடைய திருமணஞ் சேரியில் மருந்தாம் பெருமானை உள்ளத்தே உன்னுவார்களின் வினைகள் ஓயும். |
| **1926.** புற்றி லாடர வாட்டும் புனிதனார்<br>தெற்றி னார்புரந் தீயெழச் செற்றவர்<br>சுற்றி னார்மதில் சூழ்மணஞ் சேரியார்<br>பற்றி னாரவர் பற்றவர் காண்மினே. | 3 | புற்றிற் பொருந்திய அரவினை ஆட்டும் புனிதரும், எல்லை மீறிய முப்புராதிகளின் கோட்டைகளைத் தீயெழச் சினந்தவரும், சுற்றிலும் நெருங்கிய மதில் சூழ்ந்த மணஞ்சேரி உறைபவருமாகிய இறைவரைப் பற்றினார்க்கு அவர் பற்றாவர்; காண்பீராக. |
| **1927.** மத்த மும்மதி யும்வளர் செஞ்சடை<br>முத்தர் முக்கணர் மூசர வம்மணி<br>சித்தர் தீவணர் சீர்மணஞ் சேரியெம்<br>வித்தர் தாம்விருப் பாரை விருப்பரே.<br>மூசரவம் – உடலில் மொய்க்கும் பாம்பு | 4 | ஊமத்தமலரும், பிறையும் வளருஞ் சிவந்த சடையை உடைய முத்தி நாயகரும், முக்குணங்களை உடையவரும், ஒலிக்கும் அரவம் அணிந்த சித்தரும், தீயின்வண்ணம் உடையவரும், பெருமைமிக்க மணஞ்சேரியில் வித்தாயிருப்பாருமாகிய இறைவர் தம்மை விரும்பியவரைத் தாம் விரும்புபவர் ஆவர். |
| **1928.** துள்ளு மான்மறி தூமழு வாளினர்<br>வெள்ள நீர்கரந் தார்சடை மேலவர்<br>அள்ள லார்வயல் சூழ்மணஞ் சேரியெம்<br>**வள்ள லார்கழல் வாழ்த்தல்வாழ் வாவதே.** | 5 | துள்ளும் மான்குட்டியையும், தூய மழு வாளினையும் உடையவரும், சடைமேற் கங்கையை மறைத்தவரும் ஆகிய சேறு நிறைந்த வயல் சூழ்ந்த மணஞ்சேரியில் உறையும் வள்ளலார் கழல்களை வாழ்த்தலே வாழ்வாவது. |
| **1929.** நீர்ப ரந்த நிமிர்புன் சடையின்மேல்<br>ஊர்ப ரந்த உரகம் அணிபவர்<br>சீர்ப ரந்த திருமணஞ் சேரியார்<br>ஏர்ப ரந்தங் கிலங்குசூ லத்தரே. | 6 | கங்கைநீர் பரவி நிமிர்ந்து விளங்கும் சடையின் மேல் ஊர்ந்து பரவுகின்ற பாம்பினை அணிந்தவராகிய பெருமை பரவிய திருமணஞ்சேரி இறைவர் எழில் பெருகி விளங்கும் சூலப் படையினை உடையவர். |
| **1930.** சுண்ணத் தர்சுடு நீறுகந் தாடலார்<br>விண்ணத் தம்மதி சூடிய வேதியர்<br>மண்ணத் தம்முழ வார்மணஞ் சேரியார்<br>வண்ணத் தம்முலை யாளுமை வண்ணரே. | 7 | சுண்ணம் பூசியவரும், சுட்ட வெண்ணீற்றினை உகந்து ஆடுபவரும், விண்ணின் மதியைச் சூடிய வேதியரும் ஆகிய மார்ச்சனை பொருந்திய முழவு ஆர்க்கும் மணஞ்சேரி உறையும் இறைவர், நிறம் உடைய முலையாளாகிய உமையின் வண்ணம் உடையவர் ஆவர். |

| | |
|---|---|
| 1931. துன்ன வாடையர் தூமழு வாளினர்<br>பின்னு செஞ்சடை மேற்பிறை வைத்தவர்<br>மன்னு வார்பொழில் சூழ்மணஞ் சேரியெம்<br>மன்ன னார்கழ லேதொழ வாய்க்குமே. 8 | பின்னிய நூலாடையினரும், தூயமழு வாளினரும், பின்னிய சிவந்த சடையின்மேல் பிறை வைத்தவரும் ஆகிய, நிலைபெற்ற நீண்ட பொழில்கள் சூழும் மணஞ்சேரி உறையும் மன்னனார் கழலே தொழ வாய்ப்பாவது. |
| 1932. சித்தர் தேவர்கள் மாலொடு நான்முகன்<br>புத்தர் சேரமண் கையர் புகழவே<br>மத்தர் தாமறி யார்மணஞ் சேரியெம்<br>அத்த னாரடி யார்க்கல்ல லில்லையே. 9 | சித்தர்களும், தேவர்களும், திருமாலும், நான்முகனும், புத்தரும், உடையற்றவராய சமண ஒழுக்கத்தினரும் புகழ, உலக மையலிற்பட்டவர் அறியாத மணஞ்சேரி மேவிய எம் தலைவரது அடியார்க்கு அல்லல் இல்லை. |
| 1933. கடுத்த மேனி யரக்கன் கயிலையை<br>எடுத்த வன்னெடு நீண்முடி பத்திறப்<br>படுத்த லும்மணஞ் சேரி யருளெனக்<br>கொடுத்த னன்கொற்ற வாளொடு நாமமே. 10 | ஆற்றல் மிகுந்த இராவணன் திருக்கயிலையை எடுத்தபோது அவன் நீண்ட முடிகள் பத்தும் இற்றுவிழச் செய்தலும், 'மணஞ்சேரி இறைவா! அருள்வாயாக' என்று அவன் கூவ அவனுக்கு வெற்றிதரும் வாளையும், நாமத்தையும் கொடுத்தனன் பெருமான். |

## 88. திருமருகல்

**(மருகல் என்பது வாழை வகைகளுள் ஒன்று. தலமரம் – வாழை. மாடக் கோயில்)**

**ப.தொ.எண் : 201** **பதிக எண் : 88**

| | |
|---|---|
| 1934. பெருக லாந்தவம் பேதைமை தீரலாம்<br>**திருக லாகிய சிந்தை திருத்தலாம்**<br>பருக லாம்பர மாயதோ ரானந்தம்<br>மருக லானடி வாழ்த்தி வணங்கவே. 1 | மருகல் இறைவன் திருவடி வாழ்த்தி வணங்கினால் தவம் பெருகலாம்; அறியாமை தீரலாம்; மாறுபட்டதாகிய சிந்தை திருத்தலாம்; கடவுண்மயமாகிய ஒப்பற்ற பேரானந்தத்தைப் பருகலாம். |

வன்முறையாளர்களின் மனமாற்றத்துக்கு இப்பாடலைப் பாடலாம். வணங்கவே – தவம் பெருகல் ஆ(கு)ம். சிந்தை திருத்தல் ஆ(கு)ம். பேரானந்தம் பருகல் ஆ(கு)ம் என்க.

| | |
|---|---|
| 1935. பாடங் கொள்பனு வல்திறங் கற்றுப்போய்<br>நாடங் குள்ளன தட்டிய நாணிலீர்<br>மாடஞ் சூழ்மரு கற்பெரு மான்திரு<br>வேடங் கைதொழ வீடெளி தாகுமே. 2 | பாடங்கொண்ட நூல் திறங்களையெல்லாம் கற்றுப்போய் நாட்டில் உள்ளன எல்லாம் பொருந்திய நாணமற்றீரே! மாடங்கள் சூழ்ந்த மருகற் பெருமானின் திருவேடத்தைக் கைகளால் தொழுதால் வீட்டுலகமும் உமக்கு எளிதாகும். |

பெறுதற்கரிய பேறு பெற்றும் பிரானடி பேணாதார் – நாணமற்றவர்

| | |
|---|---|
| **1936.** சினத்தி னால்வருஞ் செய்தொழி லாமவை<br>அனைத்து நீங்கிநின் றாதர வாய்மிக<br>மனத்தி னால்மரு கற்பெரு மான்திறம்<br>நினைப்பி னார்க்கில்லை நீள்நில வாழ்க்கையே. **3**<br><br>சினம் – இங்கு காமம் முதலிய எல்லாத் தீக்–குணங்களின் தொகுதி குறித்தது | கோபத்தினால் வருகின்ற செய்யப்படுவதான தொழில்களாகிய பிற தீச்செயல்கள் அனைத்தையும் நீங்கி நின்று ஆதரவாகி உள்ளத்தினால் மருகல் பெருமானாகிய இறைவன் திறத்தை நினைப்பவர்க்கு இவ்வுலக வாழ்க்கை இல்லை. |
| **1937.** ஓது பைங்கிளிக் கொண்பா லமுதூட்டிப்<br>பாது காத்துப் பலபல கற்பித்து<br>மாது தான்மரு கற்பெரு மானுக்குத்<br>தூது சொல்ல விடத்தான் தொடங்குமே. **4** | இப்பெண் சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளைக்கு ஒள்ளிய பால் அமுது ஊட்டிப் பின் அதனைப் பாதுகாத்துப் பலபல வார்த்தைகளை அதற்குக் கற்பித்து மருகற் பெருமானுக்குத் தூது சொல்லிவிடத் தொடங்குகின்றாள். |

**4** முதல் **9** வரையுள்ள திருப்பாடல்கள், மருகற் பிரானாரை நாயகனாகக் கொண்டு பிரிந்த தலைவி வருந்தும் நிலைகண்டு, நற்றாய் கவன்றுரைத்ததாக அகப்பொருள்துறையில் அமைந்துள்ளன.

| | |
|---|---|
| **1938.** இன்ன வாறென்ப துண்டறி யேனின்று<br>துன்னு கைவளை சோரக்கண் நீர்மல்கும்<br>மன்னு தென்மரு கற்பெரு மான்திறம்<br>உன்னி யொண்கொடி யுள்ள முருகுமே. **5** | நிலைபெற்ற அழகிய மருகல் இறைவன் திறமே நினைந்து இப்பெண் கொடியாகிய தலைவி உள்ளம் உருகுகின்றாள்; நெருங்கிய கைவளைகள் சோர நின்று கண்ணீர் மல்குகின்றாள். இதனைத் தீர்ப்பது இன்ன வழி உண்டு என்பது அறியேனாயினேன் யான். |
| **1939.** சங்கு சோரக் கலையுஞ் சரியவே<br>மங்கை தான்மரு கற்பெரு மான்வரும்<br>அங்க வீதி யருகணை யாநிற்கும்<br>நங்கை மீரிதற் கென்செய்கேன் நாளுமே. **6**<br><br>காதல் நோயின் மெய்ப்பாடுகள். | பெண்களே! தன் சங்கு வளையல்கள் நெகிழவும், உடை சரியவும் இம்மங்கைதான், மருகல் இறைவன் திருவீதியுலா வருகின்ற அங்க வீதியின் அருகு நாளும் அணைந்து நிற்பாள்; நான் இதற்கு என்ன செய்வேன்? |
| **1940.** காட்சி பெற்றில ளாகிலுங் காதலே<br>மீட்சி யொன்றறி யாது மிகுவதே<br>மாட்சி யார்மரு கற்பெரு மானுக்குத்<br>தாழ்ச்சி சாலவுண் டாகுமென் தையலே. **7** | என் பெண் மாட்சிகள் நிறைந்த மருகற் பெருமானுக்கு மனம் தாழும் விருப்பம் மிகவும் உண்டாயினள்; அவனைக் காணும் காட்சியைப் பெற்றிலள் ஆயினும் காதலினின்று மீளுகைக்கு ஒன்றும் அறியாதவள் ஆகி அவ்விருப்பமே மிகுந்தது. |

| | |
|---|---|
| 1941. நீடு நெஞ்சுள் நினைந்துகண் நீர்மல்கும்<br>ஓடு மாலினோ டொண்கொடி மாதராள்<br>மாடம் நீள்மரு கற்பெரு மான்வரில்<br>**கூடு நீயென்று கூட லிழைக்குமே.** 8 | நெஞ்சுக்குள் நீள நினைந்து கண்ணீர் மல்கி ஓடும் மயக்கத்தினோடு இவ்வொண் தொடியணிந்த பெண், **'மாடங்கள் நீண்டுயர்ந்த மருகல் இறைவன் வரின் நீ கூடு'** என்று கூடல் இழைத்து வருந்துவாள். |

கூடலிழைத்தல் – குறிபார்க்கும் வகைகளுள் ஒன்று. தரையில் அமர்ந்து கண்களை மூடிக் கொண்டு வட்டத்தைச் சுழிக்க ஆரம்பித்து, அது முழுவட்டமாகச் சுழித்து முடித்துவிட்டால், காரியம் நிறைவேறும் – தலைவனும் வருவான்.

| | |
|---|---|
| 1942. கந்த வார்குழல் கட்டிலள் காரிகை<br>அந்தி மால்விடை யோடுமன் பாய்மிக<br>வந்தி டாய்மரு கற்பெரு மானென்று<br>சிந்தை செய்து திகைத்திடுங் காண்மினே. 9 | மணம் வீசும் நீண்ட கூந்தலை முடியாதவளாய் இப்பெண், மால்விடையோடும் மிக்க அன்பாய்' மருகற்பெருமானே! வந்திடாய்! என்று சிந்தித்து வாராமையாற் பின்னும் திகைப்பாள்; காண்பீராக. |
| 1943. ஆதி மாமலை யன்றெடுத் தானிற்றுச்<br>சோதி யென்றலுந் தொல்லருள் செய்திடும்<br>ஆதி யான்மரு கற்பெரு மான்திறம்<br>ஓதி வாழ்பவர் உம்பர்க்கு மும்பரே. 10 | ஆதியிற்றோன்றிய திருக்கயிலாயத் திரு மலையினை அன்று எடுத்தவனாகிய இராவணன் தலை இற்றுச் 'சோதியே' என்று கூறுதலும், பழைய அருள் புரிந்திடும் ஆதியானாகிய **மருகற்பெருமான் திறத்தையே ஓதி வாழ்பவர் தேவர்க்கும் தேவராவர்.** |

இப்பதிகத்தில் 1, 2, 3, 10 பாட்டுக்கள் ஒரு கருத்தும், 4 – 9 பாட்டுக்கள் ஒரு கருத்தும் பற்றின.

## 89. பொது

**(எண்ணலங்காரமான திருக்குறுந்தொகைப் பதிகம்) (தனித்திருக் குறுந்தொகை)**

**ப.தொ.எண் : 202** **பதிக எண் : 89**

| | |
|---|---|
| 1944. ஒன்று வெண்பிறைக் கண்ணியோர் கோவணம்<br>ஒன்று கீளுமை யோடும் உடுத்தது<br>ஒன்று வெண்தலை யேந்தியெம் உள்ளத்தே<br>ஒன்றி நின்றங் குறையு மொருவனே. 1 | வெண்தலை ஒன்று ஏந்தி எம் உள்ளத்தே ஒன்றி நின்று அங்கு உறையும் ஒருவனாம் இறைவன் வெண் பிறையாகிய கண்ணி ஒன்று உடையவன்; உமையோடும் உடுத்தது ஒரு கிழிந்த கோவண உடை. |

ஒன்றி – கலந்து

| | |
|---|---|
| 1945. இரண்டு மாமவர்க் குள்ளன செய்தொழில்<br>இரண்டு மாமவர்க் குள்ளன கோலங்கள்<br>இரண்டு மில்லிள மானெமை யாளுகந்<br>திரண்டு போதுமென் சிந்தையுள் வைகுமே. 2 | பெருமான், செய்கின்ற தொழில்கள் இரண்டு; கொள்கின்ற கோலங்கள் இரண்டு. எமை ஆளாகக் கொண்டு, உகந்து, இரவும் பகலும் என் சிந்தையுள் அவை எப்பொழுதும் நிறைந்திருக்கும். |

செய்தொழில் – பந்தம், வீடு. கோலங்கள் – சிவம், சத்தி. இல்இளமான் – மங்கை, கங்கை
இரண்டு போது – நினைப்பு, மறப்பு; பெத்தம் – முத்தி; பகல் – இரவு

| | | |
|---|---|---|
| **1946.** மூன்று மூர்த்தியுள் நின்றிய லுந்தொழில்<br>மூன்று மாயின மூவிலைச் சூலத்தன்<br>மூன்று கண்ணினன் தீத்தொழின் மூன்றினன்<br>மூன்று போதுமென் சிந்தையுள் மூழ்குமே. | 3 | மும்மூர்த்திகளுள் நின்று இயலுகின்ற தொழில் மூன்றும் உடையவன்; மூவிலை வடிவாகிய சூலத்தை உடையவன்; மூன்று கண்ணினன்; தீத்தொழில் மூன்றுடையவன்; மூன்று பொழுதும் என் சிந்தையுள் மூழ்கியிருப்பான். |

"மூவிலை ஒருதாட் சூலமேந்துதல் மூவரும் யானென மொழிந்தவாறே" – ஒற்றியூர் ஒருபா ஒருபஃது

| | | |
|---|---|---|
| **1947.** நாலின் மேன்முகஞ் செற்றது மன்னிழல்<br>நாலு நன்குணர்ந் திட்டது மின்பமாம்<br>நாலு வேதஞ் சரித்தது நன்னெறி<br>நாலு போலெம் அகத்துறை நாதனே. | 4 | எம் உள்ளத்து உறையும் இறைவன் நான்கின் மேலும் ஒருமிகைமுகமாகிய பிரமனது ஐந்தாவது முகத்தைச் சினந்தவன்; நிலைபெற்ற ஆல நிழலில் நன்கு உணர்ந்திட்ட வேதங்கள் நான்கினை உடையவன்; இன்பமாகிய நான்கு வேதங்களையே குதிரைகளாகக் கொண்டவன்; நல்ல நெறி சரியை முதலிய நான்கு ஆகும். |

"ஒன்றுகொலாம்" என்ற நாவரசரின் நான்காம் திருமுறைப் பதிகத்துடனும், ஒருருவாயினை என்ற திருஞானசம்பந்தரின் முதல் திருமுறைப் பதிகத்துடனும் ஒப்பிட்டு எண்ணலங்காரத்தை அனுபவிக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| **1948.** அஞ்சு மஞ்சுமோ ராடி யரைமிசை<br>அஞ்சு போலரை யார்த்ததின் தத்துவம்<br>அஞ்சு மஞ்சுமோ ரோரஞ்சு மாயவன்<br>அஞ்சு மாமெம் அகத்துறை யாதியே. | 5 | என் அகத்து உறை ஆதி. ஆனைந்து ஆடி, ஐந்தொழில் நடனம் ஆடி இடையில் ஐந்தலை அரவார்த்தவன் அவன். தத்துவங்களாகிய ஐந்து பூதங்கள், ஐந்து தன் மாத்திரைகள், ஐந்து அறிகருவிகள், ஐந்து செயற்கருவிகள் என்றானவன். |
| **1949.** ஆறு கால்வண்டு மூசிய கொன்றையன்<br>ஆறு சூடிய அண்ட முதல்வனார்<br>ஆறு கூர்மையர்க் கச்சம யப்பொருள்<br>ஆறு போலெம் அகத்துறை யாதியே. | 6 | எம் உள்ளத்துறையும் முதல்வனாகிய பெருமான், ஆறு கால்களையுடைய வண்டு ஒலிக்கும் கொன்றையை உடையவன்; கங்கையாற்றைச் சடையிற் சூடிய அண்டங் களுக்கெல்லாம் முதல்வன்; கூரிய அறிவுடைய அறுவகைச் சமயத்தார்க்கு அச்சமயப் பொருளும் நெறியும் ஆயவன். |
| **1950.** ஏழு மாமலை யேழ்பொழில் சூழ்கடல்<br>ஏழு போற்றுமி ராவணன் கைந்நரம்<br>பேழு கேட்டருள் செய்தவன் பொற்கழல்<br>ஏழுஞ் சூழடி யேன்மனத் துள்ளவே. | 7 | ஏழுமலை ஏழுபுவனம் ஏழ்கடல் போற்றும் இராவணனது ஏழிசைகேட்டு அருள்செய்தவன். அவன் திருவடிகள் எழுபிறவிகளிலும் என்னுள்ளத்தின்கண்ணே உள்ளன. |
| **1951.** எட்டு மூர்த்தியாய் நின்றிய லுந்தொழில்<br>எட்டு வான்குணத் தீசனெம் மான்றனை<br>எட்டு மூர்த்தியு மெம்மிறை யெம்முளே<br>எட்டு மூர்த்தியு மெம்மு ளொடுங்குமே. | 8 | அட்டமூர்த்தியாய்த் தொழில் செய்பவன். எண்குணன். எம் இறைவனாயுள்ள அவ்வெட்டு மூர்த்தி என்னுள்ளத்து எட்டும் மூர்த்தியாய் ஒடுங்கியிருப்பன். ஐம்பூதம், உயிர், சூரியன், சந்திரன் ஆகிய தொகுதியே எட்டுமூர்த்தி. |

**1952.** ஒன்ப தொன்பதி யானை யொளிகளி
றொன்ப தொன்பது பல்கணஞ் சூழவே
ஒன்ப தாமவை தீத்தொழி லின்னுரை
**ஒன்ப தொத்துநின் றென்னு ளொடுங்குமே.** **9**

எண்பத்தொரு பதங்களில் பேசப்படுபவன். பதினெண் சிவகணங்கள் அல்லது எண்பத்தொரு யானைகள் சூழப் பெற்றவன். உடலிடத்துள்ள ஒன்பது வாயிலும் தீத்தொழிலிற் சேராதவாறு ஒன்பது ஒத்து எனக்குள் ஒடுங்குவான்.

ஒன்ப தொத்து நின்று என்னுள் ஒடுங்குமே – **என் பேச்சுக்கள் முதலிய எல்லாம் எவ்வளவு விரிந்து சூழினும் முடிவில் நான் என்ற அகங்கார நிலையினவாய் வந்து என்னையே சுற்றி என்னகத்தொடுங்கும் அது ஒன்பது என்னும் எண்ணினைப் போல,** இஃதெவ்வாறெனில் ஒன்பதை எதனால் எத்தனை பெருக்கினும் பெருக்கி வந்த எண்ணில் உள்ள இலக்கங்களைக் கூட்டினால் ஒன்பதே வருவதுபோல.

$$9 \times 2 = 18 = 1 + 8 = 9$$
$$9 \times 3 = 27 = 2 + 7 = 9$$
$$9 \times 4 = 36 = 3 + 6 = 9$$
$$9 \times 5 = 45 = 4 + 5 = 9$$
$$9 \times 6 = 54 = 5 + 4 = 9$$
$$9 \times 7 = 63 = 6 + 3 = 9$$
$$9 \times 8 = 72 = 7 + 2 = 9$$
$$9 \times 9 = 81 = 8 + 1 = 9$$

மேலும் $9 \times 144 = 1296 = 1 + 2 + 9 + 6 = 18 = 1 + 8 = 9$ என்றிவ்வாறு கண்டு கொள்க. ஒன்பது என்ற எண் ஒன்று இரண்டு முதலிய ஏனை எண்களைப் போலத் தனக்கென்று ஒரு தனிப் பெயரில்லாமல் பின்வரும் பத்து என்பதில் ஒன்று குறைந்தால் எதுவோ அது என்றறியப்படுமாறு பெயர் கொண்டிருத்தல் பின்வரும் பாசமாகிய உலகமும் முன்னிற்கும் பதியுமல்லாதது என்றறியப்பட்டும் தனித்து நில்லாது பதியினையோ அன்றிப் பாசத்தையோ சார்ந்து நிற்றலுமான நிலையின் உள்ள உயிரை ஒத்திருக்கின்றதென்பதும் கடிகார யந்திரங்களிலும் ஒன்பதைக் குறிக்க (IX என்ற Xல் I குறைக்க என்ற பொருள்பட) IXஎன்ற குறியீடு கொள்வதும் பிறவும் இங்குக் காணத்தக்கன என்பது சிவக்கவிமணியின் உரையாகும்.

---

**1953.** பத்து நூறவன் வெங்கண்வெள் ளேற்றண்ணல்
பத்து நூறவன் பல்சடை தோள்மிசை
பத்தி யாமில மாதலின் ஞானத்தால்
பத்தி யானிடங் கொண்டது பள்ளியே. **10**

பத்து என்றும் நூறு என்றும் கூறும் அளவற்ற பெருமையன். சிவகணங்கள் பல்லாயிரவரை உடையவன். அடியவர் உள்ளங்களையே தங்குமிடமாகக் கொண்டவன். ஆயிரமாயிரம் சடைகள் உடையவன். அடியார்களின் தசகாரியம் என்னும் செயல்களும் பத்து.

## 90. பொது

**(தனித்திருக் குறுந்தொகை)**

ப.தொ.எண் : 203 பதிக எண் : 90

**1954.** மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே. 1

இறைவனாகிய எந்தையின் திருவடி நீழல் குற்றமற்ற வீணையின் நாதமும், மாலையிலே தோன்றிய நிலவின் தண்மையும், வீசுகின்ற தென்றலின் சாயலும், செறிந்த இளவேனிலின் மாட்சியும், ஒலிக்கும் வண்டுகள் மொய்க்கும் பொய்கையின் குளிர்ச்சியும் போன்று இன்பம் பயப்பதாகும்.

| | | |
|---|---|---|
| மாசில் | – | சுர இலக்கணங்களில் சிறிதும் வழுவாது இலக்கணம் முழுதும் நிரம்பச் சொல்லை மிழற்றும் இயல்புடைய |
| மாலைமதியம் | – | மாலை நேரத்தில் தோன்றும் முழுமதி |
| வீசுதென்றல் | – | மெல்லிதாய் வீசுகின்ற தென்றல் – தெற்கிலிருந்து வீசுவது தென்றல், வடக்கிலிருந்து வீசுவது வாடை |
| வீங்கு | – | பெருகிய |
| இளவேனில் | – | சித்திரை, வைகாசி |
| மூசுவண்டு | – | மாலை நேரத்திலே மலரும் நீர்ப்பூக்களிடத்தே மொய்க்கின்ற வண்டுகள் |
| அறை | – | ஒலிக்கின்ற / பண்பாடுதல் |
| பொய்கை | – | அகழ்வாரின்றித் தானே தோன்றிய நீர்நிலை |
| ஈசன் எந்தை | – | இருபெயரொட்டு. தலைவனாகிய என் தந்தை |
| இணையடி | – | இரண்டு திருவடிகள் |

வீணை – செவி, மதியம் – கண்கள், தென்றல் – மூக்கு; வண்டு அறைபொய்கை – வாய், வேனில் – மெய். இவ்வாறு முறையே ஐந்து புலன்களுக்கும் இன்பந்தருவனவாய் இயற்கைச் சூழலை ஒத்து நீற்றறையில் திருவடி நிழலை எண்ணிய அப்பர் சுவாமிகளுக்குத் தண்மையைத் தந்தது ஆதலின், திருவடி நிழல் அளிக்கும் இன்பத்தோடு ஒப்பிட்டார். சுண்ணாம்புக் களவாயாம் நீற்றறையின் சூடு தண்மையாகி (ஏர்கண்டிசன், ஏசி என்று ஆங்கிலத்தில் சொல்வது போல) குளிர்ச்சியைத் தந்தது ஐந்தெழுத்தே என்பதை நமக்கெல்லாம் உணர்த்த அடுத்த பாடலே நமச்சிவாய என்று ஆரம்பிக்கிறார்.

**1955.** நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. 2

ஞானமும், கல்வியும், நானறிந்த வித்தையும் பஞ்சாட்சரமே; நா கூறி வழிபடுவதும், பயின்றுள்ளதும், அதனையே; வீடுபேறடை வதற்காக நன்னெறி காட்டுவதும் அத்திருமந்திரமேயாகும்.

---

ஞானம் என்பதற்குப் பல பொருள்கள் இருந்தாலும் உயர்ந்த பொருள் "ஈசன்பால் அன்பே" என்பதாகும். ஞானம் வேறு; கல்வி வேறு. கல்வி ஞானத்துக்கு ஏது. ஞானம் வீடுபேறடைய உதவும் சாதனம்.

| | |
|---|---|
| **1956.** ஆளா காரா ளானாரை யடைந் துய்யார்<br>மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நிற்கிலார்<br>தோளா தசுரை யோதொழும் பர்செவி<br>வாளா மாய்ந்துமண் ணாகிக் கழிவரே. 3<br><br>தொழும்பர் – குற்றேவல் செய்பவர்;<br>பெத்தம், முத்தி நிலைகளிலும் அடிமையாகியே இருக்கும் உயிர்.<br>மீளாஆள் – என்றும் மாறாத அடிமைத்திறம்.<br>தோளாத சுரை – துளையிடப்படாத காது. | இறைவனுக்கு ஆளாகமாட்டார்; அவ்வாறு ஆளாகிய மெய்யடியார்களைச் சார்ந்து உய்யவும் மாட்டார். மீளா ஆளாய் மெய்ம்மையுள் நிற்கும் ஆற்றல் இல்லார்; அத்தகைய இழிந்தவர் செவிகள் துளையிட்டுப் பயன்படுத்தவியலாத செவியோ ? அந்தோ ! வீணே இறந்து மண்ணாகி ஒழிவர் ! |
| **1957.** நடலை வாழ்வுகொண் டென்செய்திர் நாணிலீர்<br>சுடலை சேர்வது **சொற்பிர மாணமே**<br>கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்<br>உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே. 4<br><br>சொல்பிரமாணம் – சத்தப் பிரமாணத்தால் அறிவது ஒன்றேயன்றி காட்சி அனுபவத்தாலும் அறிவதாம்.<br>நடலை – வஞ்சனை. ஊர் முனி பண்டம் – பிணம். | நாணமற்றவர்களே ! துன்பம் மிக்க வாழ்வினைக் கொண்டு என்ன செய்வீர் ? நீர் இறுதியில் சுடுகாடு அடைவது உறுதி என்பதற்கு ஆன்றோர் சொற்களே சான்று. திருப்பாற்கடலினின்றெழுந்த ஆலகால விடத்தை உண்ட இறைவர் கைவிட்டால், உடல் கிடந்து ஊரார் வெறுக்கும் பொருளாகிவிடும். |
| **1958.** பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்<br>நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்<br>ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து<br>காக்கை கேயிரை யாகிக் கழிவரே. 5 | பூக்களைக் கையிற்கொண்டு சிவபிரானின் பொன்னார் திருவடிகளைப் போற்றுதலில்லாத வர்களும், நாவினைக் கொண்டு இறைவன் திருநாமத்தை நவிலாதவர்களும் தத்தம் உடலுக்கே உணவு தேடிச் சுழன்று இறுதியில் காக்கைக்கே தாம் இரையாகி ஒழிவர். |
| **1959.** குறிக ளும்மடை யாளமுங் கோயிலும்<br>நெறிக ளும்மவர் நின்றதோர் நேர்மையும்<br>அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்<br>பொறியி லீர்மன மென்கொல் புகாததே. 6<br><br>ஆரணம் – வேதம் | விதியற்றவர்களே ! கடவுள் திருவுருவங்களும் விடை, கொடி முதலிய அடையாளங்களும், கோயிலும், சரியையாகிய நான்கு நெறிகளும், அவ்விறைவர் நின்றதோர் நேர்மையும் அறிய ஆயிரம் வேதங்கள் கூறினும் உன் மனம் அவற்றுட் புகாதது என்னையோ ? |
| **1960.** வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்<br>தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்<br>சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே<br>வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே. 7<br><br>ஆரம்பப்பள்ளி மனப்பாடப் பாடல் | தன்னை வாழ்த்துதற்கு வாயும், தன்னை நினைக்க நெஞ்சும், தன்னை வணங்கத் தலையும் தந்த தலைவனாகிய பெருமானை வண்டுகள் சூழ்ந்த மலர்களைத் தூவித் துதிக்காமல், வினையேன் நெடுங்காலம் வீழ்த்தியவாறு என்னே ? |

**1961.** எழுது பாவைநல் லார்திறம் விட்டுநான்
தொழுது போற்றிநின் றேனையுஞ் சூழ்ந்துகொண்
டுழுத சால்வழி யேயுழு வான்பொருட்
டிழுதை நெஞ்சமி தென்படு கின்றதே. 8

எழுதிய பாவைச் சித்திரம் போன்ற அழகுடைய பெண்கள் திறத்தின் நீங்கி நான்தொழுது போற்றி நிற்க, என்னையும் ஆராய்ந்து கொண்டு பயனின்றி உழுத சால் வழியே பின்னும் உழுவதன் பொருட்டு மிக்க இழிவுடைய நெஞ்சம் செய்கின்றது தானா என்னை?

**1962.** நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே. 9

சுவாமியை நினைக்குந்தோறும் மனம் நெகிழ்கிறது.

நெகிழ்ந்து நெகிழ்ந்து நினைபவர் நெஞ்சுளே புகுந்து நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன், பொய்ம்மையாளர் பூசையிற் பூவையும் நீரையும் கண்டு அவர் தம்மை நாணிச் சிரித்து நிற்பன்.

பொக்கம் – பொய்.
நக்கு நிற்பர் – ஏளன நகை புரிவர்.

**1963.** விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே. 10

முன்பாட்டிற் சொன்னபடி இறைவன் நிற்கும் நிலையை இப்பாடல் உணர்த்துகிறது.

விறகில் தீப்போலவும், பாலிற் பொருந்திய நெய் போலவும், மாமணிச் சோதியானாகிய இறைவன் மறைய நின்றுளன்; உறவு என்னுங்கோலை நட்டு, உணர்வு என்ற கயிற்றினால் முறுக வாங்கிக் கடைந்தால் முன்னின்று அருள் வழங்குவான்.

## 91. பொது

(அடிகளின் அடிமைத்திறத்தை அனுபவித்துக் கூறும் பதிகம்)
(தனித்திருக் குறுந்தொகை)

**ப.தொ.எண் : 204** **பதிக எண் : 91**

**1964.** ஏயி லானையெ னிச்சை யகம்படிக்
கோயி லானைக் குணப்பெருங் குன்றினை
வாயி லானை மனோன்மனி யைப்பெற்ற
தாயி லானைத் தழுவுமென் ஆவியே. 1

தமக்குமேல் தலைவன் இல்லாதவன். உள்ளக் கோயிலான். குணக்குன்று. வாழ்த்துவோர் வாய் இல்லமாக உடையவன். சத்தியை ஈன்றவன். தனக்கொரு தாய் இல்லாதவன். அவனை என்னுயிர் தழுவும்.

நவந்தரு பேதங்களில் மனோன்மனி என்பது ஒரு சத்தி பேதம். "சிவம் சத்தி தன்னை ஈன்றும், சத்தி தான் சிவத்தை ஈன்றும்" – சித்தியார் சுபக்கம்.
ஏயிலான் – தமக்குமேல் தலைவன் இல்லாதவன்

| | |
|---|---|
| **1965.** முன்னை ஞான முதல்தனி வித்தினைப்<br>பின்னை ஞானப் பிறங்கு சடையனை<br>என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்<br>தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே. 2 | பழைய ஞான முதல் தனி வித்தும், பின்னை ஞானம் விளங்கு சடையனும், என்னை இருள் நீக்கி ஞானத்தால் ஆண்டவனும் ஆகிய இறைவன் தன்னை ஞானமென்னும் தளையினால் பிணித்து உள்ளத்தே வைப்பேன். |
| **1966.** ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்<br>ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்<br>ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு<br>ஞானத் தாயுனை நானுந் தொழுவனே. 3<br><br>நாவரசர் தமக்கே ஞானத்தால் தொழும் திறம் இல்லை என்று சொன்னால் நமது நிலை என்ன ? | சில ஞானிகள் நின்னை ஞானத்தால் தொழுவார்கள்; ஞானத்தால் உன்னை நான் தொழும் திறம் உடையேனல்லேன்; ஞானத்தால் தொழுகின்றவர்கள் தொழுதலைக் கண்டு, ஞானவடிவாகிய பொருளே! உன்னை நானும் தொழுவன். |
| **1967.** புழுவுக் குங்குணம் நான்கெனக் கும்மதே<br>புழுவுக் கிங்கெனக் குள்ளபொல் லாங்கில்லை<br>புழுவி னுங்கடை யேன்புனி தன்தமர்<br>குழுவுக் கெவ்விடத் தேன்சென்று கூடவே. 4<br><br>புழுக்களுக்குரிய குணங்கள் நான்காகும். அவை உணவின் பொருட்டு முயலல், உண்டல், உறங்கல், இன்பதுன்ப நுகர்ச்சி. | புழுவுக்கும் குணம் நான்கு; எனக்கும் அவ்வாறே. ஆயினும் எனக்குள்ள பொல்லாங்கு புழுவுக்கில்லையாதலின் புழுவினுங் கடையேனாகிய அடியேன் புனிதனாகிய பெருமானைச் சார்ந்த அடியார் குழுவினுக்குச் சென்றுகூட எவ்விடத்தை உடையேன் ஆவேன் ? |
| **1968.** மலையே வந்து விழினும் மனிதர்காள்<br>நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்<br>தலைவ னாகிய ஈசன் தமர்களைக்<br>கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே. 5 | மனிதர்களே! மலையே வந்து விழுந்தாலும் இறைவனின் அருள் நிலையில் நின்று கலங்காதீர்கள். அவ்வாறு கலங்குவீர்களே யானால் ஈசன் அடியார்களை ஐம்பொறிகளாகிய யானைகளே கொன்றுவிடும். |
| **1969.** கற்றுக் கொள்வன வாயுள நாவுள<br>இட்டுக் கொள்வன பூவுள நீருள<br>கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்<br>எற்றுக் கோநம னால்முனி வுண்பதே. 6 | திருவைந்தெழுத்தைக் கற்றுக் கொள்ளுவதற்கு வாயும் நாவும் உள்ளன; இட்டுக்கொள்ளப் பூவும், நீரும் உள்ளன; தொகுதியாகிய சிவந்த சடையான் உள்ளான்; நாம் உள்ளோம். இவை யெல்லாம் இருக்க எமன் கோபப்படுவது எதற்கு ? |
| **1970.** மனிதர் காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்<br>கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லிரே<br>புனிதன் பொற்கழல் ஈசனெ னுங்கனி<br>இனிது சாலவு மேசற்ற வர்கட்கே. 7 | மனிதர்களே! இங்கே வாருங்கள்; பயன் தரும் செய்தி ஒன்று சொல்லுவேன்; பழம் தந்தால் பழத்தை உண்ணவும் வல்லமை உடையீரோ ? புனிதனும் கழல்கள் அணிந்த இறைவனும் ஆகிய கனி; ஏசற்றவர்களுக்கு மிகவும் இனியது; காண்பீராக. |

| | | |
|---|---|---|
| **1971.** | என்னை யேது மறிந்தில னெம்பிரான்<br>தன்னை நானுமுன் ஏது மறிந்திலேன்<br>என்னைத் தன்னடி யானென் றறிதலும்<br>தன்னை நானும் பிரானென் றறிந்தெனே. 8<br><br>x x x x x x x x x x x x x 9 | முன் என்னையே ஏதும் அறிந்திலேன்; எம் பெருமானையும் அறிந்திலேன்; என்னைத் தன் அடியான் என்று பெருமான் அறிதலும் தன்னைக் காணும் தலைவன் என்று நானும் அறிந்து கொண்டேன். |
| **1972.** | தெள்ளத் தேறித் தெளிந்துதித் திப்பதோர்<br>உள்ளத் தேற லமுத வொளிவெளி<br>கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்<br>வெள்ளத் தேனுக்கெவ் வாறு விளைந்ததே. 10 | மிக்குத் தெளிந்து தித்திப்பதாகிய ஒப்பற்ற உள்ளத்தேன்; அமுதப்பேரொளியும் வெளியும் ஆகிய அவ் அநுபவம் கள்ளம் உடையேனும், கவலைக்கடலைக் கடியாது அவ்வெள்ளத்தே விழுந்து கிடப்பேனுமாகிய எனக்கு விளைந்தது எவ்வாறு ? |

## 92. பொது

**(கால பாசத் திருக் குறுந்தொகை)**

**ப.தொ.எண் : 205** **பதிக எண் : 92**

| | |
|---|---|
| கால பாசம் பிடித்தெழு தூதுவர்<br>பால கர்விருத் தர்பழை யாரெனார்<br>ஆல நீழ லமர்ந்தவாட் போக்கியார்<br>சீல மார்ந்தவர் செம்மையுள் நிற்பரே. 5–86–1 | காலபாசத்தைப் பிடித்தெழும் யமதூதுவர்கள் இவர் பாலகர், இவர் விருத்தர், இவர் பழையவர் என்று கூறிவிட்டுச் செல்லார்; கல்லால் நிழற்கீழ் அமர்ந்த **வாட்போக்கி**யாரது சீலம் நிறைந்தவரே செம்மையுள் நின்று சிவகதி பெறுவர் என்பதால் அவர்களிடம் வரமாட்டார்கள். |

என்று திருநாவுக்கரசர் ஐந்தாம் திருமுறையில் பாடியுள்ளார். மேலும், அதனை வலியுறுத்த, "சிவனடியார் பக்கல் செல்லாதீர்" என்று இயமன் தூதுவருக்கு ஆணையிட்டருளுவது இப்பதிகம். சிவன் நாமம் அரற்றுவார்; சங்கரன் திருவடிகளைப் போற்றுவார்; நீற்றினை நிறையப் பூசும் சந்திரசேகரரின் அடியவர். மற்ற தெய்வங்களைக் கனவில் கூட நினையாமல், பூசைப் பொருட்களால் புனைவார்; விடைகொள் ஊர்தியான் அடியார், பிட்சாடனனின் அடியவர்கள் ஆகிய இவர்கள் எதிர் செல்ல வேண்டாம் என்று சொல்லிவிட்டு, இன்னமும் சிவபெருமான் திருவடிகளை மனதிலே சுமப்போர், ஐந்தெழுத்தோதுவர் இவரையும் சார வேண்டாம் என்று சொல்லியதோடு நில்லாமல், மற்றுங்கேட்கச் சொல்கிறார். திருநீற்றோடு கோவணத்துடன் இறைவன் திருவடியன்றி வேறு பற்றில்லாதவர் பக்கம் செல்ல வேண்டாமென இயமன் தூதர்களைப் பணிக்கிறார்.

இயமனும், இயமன் தூதரும் சிவனடியாரிடம் செல்லாவிட்டால், அவர்கள் எல்லாரும் இந்நாள் வரை உயிரோடு இருக்கிறார்கள் என்று பொருளா ? அப்படியென்றால் அவர்களெல்லாம் எங்கிருக்கிறார்கள் ? அப்படிப்பட்ட வாழ்நாளை இறைவன் அடியார் உட்பட யாருக்கும் கொடுக்கவில்லை. அவர்கள் உயிரையும் வழக்கமான முறையில் உடலிலிருந்து வேறு செய்தால் அப்பர் வாக்கு பொய்யாகிவிடும். அது சைவத்தின் ஆணி வேரை அசைத்தாற் போன்றது. அப்படியானால் வாழையடி வாழையான அந்த அடியார்கள் எங்கு இருக்கிறார்கள் ? உயிருக்கு உடலைக் கொடுத்தபோதே அதன் வாழ்நாள் வரையறையையும் இறைவன்

நிர்ணயித்து விடுகிறான். ஒரு நாளைக்கு நாம் வழக்கமான வாழ்வு என்றால் 21600 தடவை மூச்சு விடுகிறோம். இவ்வளவு கோடியளவு மூச்சுவிடத் தாங்குமளவு நமது உடலின் செல்களை வடிவமைத்து விடுகிறார். ஒரு வருடத்துக்கு 78,84,000/– முறை மூச்சு விடுகிறோம். ஒருவரின் ஆயுள் 80 ஆண்டுகள் என்றால் 63,07,20,000/– முறை அவர் மூச்சு விடுகிறார்.

மூச்சைக் குறைத்தால் ஆயுள் நீளும், மூச்சை நீட்டித்தால் ஆயுள் குறையும். மூச்சின் அளவு முடிந்தால் இயமன் தூதுவர்கள் அவர்களின் உயிரைக் கவர்ந்து செல்வர். இந்த சட்டம் சாதாரண பொது ஜனத்துக்கும் செல்லும்.

சிவபெருமானின் அடியார்களுக்குக் கால எல்லை முடிந்தாலும் அப்பர் பெருமான் வாக்கிற்கேற்ப இயமன் தூதர்கள் வரமாட்டார்கள். இப்பணிக்காகச் சில சிவகணங்களை சுவாமி நியமித்துள்ளார். அவர்கள் வந்து அடியார்களை சுவர்க்கம், நரகம், எமனுலகம், தேவருலகம் போன்றவற்றுக்கு கொண்டு செல்லாமல் நேரே கயிலாயம் செல்லும் புறவழிச் சாலையில் அழைத்துச் சென்று விடுவார்கள்.

அடியார் என்று நாம் அடையாளமிட்டிருக்கும் நபர் உண்மையான அடியார் என்றால் அவர் ஊன் உயிர் வேறு செய்ய சிவ கணம் தான்வரும். காலன் வந்தானா ? இல்லை, சிவகணம் வந்ததா ? என்று எப்படித் தெரிந்து கொள்வது ?.

1973. கண்டு கொள்ளரி யானைக் கனிவித்துப்
பண்டு நான்செய்த பாழிமை கேட்டிரேல்
கொண்ட பாணி கொடுகொட்டி தாளங்கைக்
கொண்ட தொண்டரைத் துன்னிலுஞ் சூழலே. 1

பாழிமை – அடிமைத்திறத்தின் உறைப்பு

காலதூதர்களே! கண்டுகொள்ள அரியவன். உள்ளத்தைக் கனியச்செய்து முன்பு நான் செய்த அடிமைத் திறத்தைக் கேட்பீரேயானால் இறைவன் புகழை இசை பாடுவார்க்குப் பக்க வாத்தியமாகக் கொண்ட கொடு கொட்டி தாளம் என்பனவற்றைக் கைக்கொண்ட தொண்டரைச் சூழாதீர்கள்.

1974. நடுக்கத் துள்ளும் நகையுளும் நம்பர்க்குக்
கடுக்கக் கல்ல வடமிடு வார்கட்குக்
கொடுக்கக் கொள்க வெனவுரைப் பார்களை
இடுக்கண் செய்யப் பெறீரிங்கு நீங்குமே. 2

அஞ்சியும், உலகத்தவர்கள் ஏளனம் செய்து நகைத்த இடத்தும், அன்பு செய்தும் இறைவனிடத்து அன்புடையவராய் உருத்திராக்க மாலை அணிந்து, ஈகை செய்யும் அடியவரைத் துன்புறுத்தாது அகலுங்கள்.

1975. கார்கொள் கொன்றைக் கடிமலர்க் கண்ணியான்
சீர்கொள் நாமஞ் சிவனென் றரற்றுவார்
ஆர்க ளாகிலு மாக அவர்களை
நீர்கள் சாரப் பெறீரிங்கு நீங்குமே. 3

கார்காலத்திலே மலர்தலைக் கொண்ட கொன்றையின் மணமிக்க மலர்களைக் கண்ணியாக அணிந்தவனது பெருமை கொண்ட திருநாமமாகிய சிவன் என்று அரற்றுவார் ஆராயினும் ஆக; அவர்களை நீர் சாரப்பெறாதீர்; நீங்குவீராக.

| | |
|---|---|
| **1976.** சாற்றி னேன்சடை நீண்முடிச் சங்கரன்<br>சீற்றங் காமன்கண் வைத்தவன் சேவடி<br>ஆற்ற வுங்களிப் பட்ட மனத்தராய்ப்<br>போற்றி யென்றுரைப் பார்புடை போகலே. 4 | சடையோடு கூடிய நீள்முடியுடைய சங்கரனும், காமனைச் சினந்து எரிசெய்தவனுமாகிய பெருமான் சேவடியைப் போற்றி என்று மிகவும் களிப்புடைய உள்ளத்தவராய் உரைப்பார் பக்கம் நீவிர் செல்லேல். |
| **1977.** இறையென் சொல்மற வேல்நமன் தூதுவீர்<br>பிறையும் பாம்பு முடைப்பெரு மான்தமர்<br>**நறவம் நாறிய நல்நறுஞ் சாந்திலும்**<br>**நிறைய நீறணி வாரெதிர் செல்லலே.** 5 | நமன் தூதுவர்களே! என்சொல்லைச் சிறிதும் மறவாதீர்; பிறையும் பாம்பும் உடையான் தமர்களாகிய தேன் நறுமணம் வீசும் நல்ல நறுவிய சாந்தினைவிட நிறையத் திருநீறு பூசும் அடியவர் எதிர் நீவிர் செல்லேல். |
| **1978.** வாம தேவன் வளநகர் வைகலும்<br>காம மொன்றில ராய்க்கை விளக்கொடு<br>தாமம் தூபமும் தண்நறுஞ் சாந்தமும்<br>ஏம மும்புனை வாரெதிர் செல்லலே. 6<br>———<br>காமம் – சிவனடியன்றி வேறொன்றில் செல்லாத பற்று<br>ஏமம் – திருநீற்றுக்காப்பு | வாமதேவனாகிய சிவபெருமான் வளநகராந் திருக்கோயிலில் நாள்தோறும் மனத்தின்கண் வேறொரு விருப்பமும் இல்லாதவராய்க் கைவிளக்கும், தூபமும், மாலையும், தண்ணிய நறுவிய சாந்தமும், பிற வாசனைப் பொருள்களும் புனைவார் எதிர் நீவிர் செல்லேல். |
| **1979.** படையும் பாசமும் பற்றிய கையினீர்<br>அடையன் மின்நன தீச னடியரை<br>விடைகொ ளூர்தியி னானடி யார்குழாம்<br>புடைபு காதுநீர் போற்றியே போமினே. 7<br>———<br>புடை புகாது – பக்கம் செல்லாது | படைக்கலமும் பாசக்கயிறும் பற்றியகையை உடைய தூதுவர்களே! நமது ஈசன் அடியரை அடையாதீர்; இடபத்தை ஊர்தியாகக் கொண்ட இறைவன் அடியார் குழாத்தின் புடை நீர் போகாமல் அவர்களை வழிபட்டுப் போவீராக. |
| **1980.** விச்சை யாவதும் வேட்கைமை யாவதும்<br>நிச்சல் நீறணி வாரை நினைப்பதே<br>அச்ச மெய்தி யருகணை யாதுநீர்<br>பிச்சை புக்கவன் அன்பரைப் பேணுமே. 8 | வித்தையாவதும், விருப்பத்துக்குரிய தன்மையும் ஆவதும் நாள்தோறும் திருநீறணியும் மெய்யடியாரை நினைப்பதே; அச்சம் கொண்டு, பிச்சை புகும் பெருமானின் அன்பர்களை நீர் பேணுவீராக. |
| **1981.** இன்னங் கேண்மி னிளம்பிறை சூடிய<br>மன்னன் பாதம் மனத்துட னேத்துவார்<br>மன்னு மஞ்செழுத் தாகிய மந்திரம்<br>தன்னி லொன்றுவல் லாரையுஞ் சாரலே. 9 | இன்னும் கேட்பீராக; இளம் பிறையினைச் சூடிய அருளரசனாகிய சிவபெருமான் திருவடியோடு கூடிய உள்ளத்துடன் ஏத்தி வழிபடுவார் களையும் நிலைபெற்ற திருவைந்தெழுத்தாகிய மந்திரத்தில் ஒன்று வல்லவரையும் நீவிர் சாரவேண்டா. |

1982. மற்றுங் கேண்மின் மனப்பரிப் பொன்றின்றிச்
சுற்றும் பூசிய நீற்றொடு கோவணம்
ஒற்றை யேறுடை யானடி யேயலால்
பற்றொன் றில்லிகள் மேற்படை போகலே. 10

மற்றும் கேட்பீராக; மனத்திலே வேறொன்றும் தாங்குதலின்றி மேனிமுழுதும் பூசிய திருநீற்றொடு கோவணமும் கொண்டு ஒப்பற்ற தனி இடபத்தை உடைய இறைவன் திருவடிகளே அல்லால் வேறு பற்று ஒன்றும் இல்லாதவர்களாகிய அடியார்கள்மேல் படைகொண்டு போகவேண்டா.

1983. அரக்க னீரைந் தலையுமோர் தாளினால்
நெருக்கி யூன்றியிட் டான்தமர் நிற்கிலும்
சுருக்கெ னாதங்குப் பேர்மின்கண் மற்றுநீர்
சுருக்கெ னிற்சுட ரான்கழல் சூடுமே. 11

இராவணனை நெரித்த பெருமானது அடியவர்களை விட்டு அகலுங்கள்; நீங்கள் ஏதேனும் இடையூறு செய்ய முயன்றால் அவன் திருவடி சுடும்.

சுருக்கெனாது – விரைவாகப் போதலின்றி
சுருக்கெனில் – உமது தொழில்களில் ஏதேனும் செய்ய முயன்றால்
சூடும் – சுடும் என்பது நீண்டது

## 93. பொது

(மறக்கிற்பனேயென்னும் திருக்குறுந்தொகை)

ப.தொ.எண் : 206 பதிக எண் : 93

1984. காச னைக்கன லைக்கதிர் மாமணித்
தேச னைப்புக ழார்சிலர் தெண்ணர்கள்
மாசி னைக்கழித் தாட்கொள வல்லவெம்
ஈச னையினி யான்மறக் கிற்பனே. 1

காசு உடையவனும், கனல் உடையவனும், ஒளிச்சுடர்விடும் செம்மணி விளக்கம் உடையவனுமாகிய பெருமானைச் சில தெளிவற்ற மூடர்கள் புகழார். குற்றத்தினைக் கழித்து ஆட்கொள்ளவல்ல எம் இறைவனை இனி நான் மறக்கும் வல்லமை உடையேனோ?

"மறக்கும் மனத்தினை மாற்றி எம் ஆவியை வற்புறுத்தி" – தி.ஞா.ச.
"நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே" சுந்தரர்.

1985. புந்திக் குவிளக் காய புராணனைச்
சந்திக் கண்நட மாடுஞ் சதுரனை
அந்தி வண்ணனை ஆரழல் மூர்த்தியை
வந்தெ னுள்ளங்கொண் டானை மறப்பனே. 2

புத்திக்கு விளக்காக உள்ள மிகப்பழமையனும், நடம் ஆடும் சதுரப்பாடு உடையவனும், அந்திச் செவ்வண்ணம் உடையவனும், நிறைந்த அழல்கொண்ட மூர்த்தியும், வந்து என்னுள்ளம் கொண்டவனுமாகிய பெருமானை மறப்பேனோ?

புந்தி – அறிவு. புராணன் – பழையவன்

| | | |
|---|---|---|
| **1986.** ஈச னீசனென் றென்று மரற்றுவன்<br>ஈசன் தானென் மனத்திற் பிரிவிலன்<br>ஈசன் தன்னையு மென்மனத் துக்கொண்டு<br>ஈசன் தன்னையும் யான்மறக் கிற்பனே. | 3 | ஈசன் ஈசன் என்று வாய்விட்டு அரற்றுவேன்; ஈசன் என் மனத்தில் பிரிவில்லாதவனாய் உள்ளான் – ஈசனையும் என் மனத்துக் கொண்டபின், தன்னை யான் மறக்கும் வல்லமை உடையேனோ? |
| **1987.** ஈச னென்னை யறிந்த தறிந்தனன்<br>ஈசன் சேவடி யேற்றப் பெறுதலால்<br>ஈசன் சேவடி யேத்தப்பெற் றேனினி<br>ஈசன் தன்னையும் யான்மறக் கிற்பனே. | 4 | இறைவன் சேவடிகளை ஏத்தப் பெறும் இயல்பினன் ஆதலால் என்னை இறைவன் அறிந்ததை யான் அறிந்தேன்; பிறகும் அவன் சேவடியை ஏத்தப்பெற்றேன்; ஆதலின் இனி ஈசனை யான் மறக்கும் வல்லமை உடையேனோ? |
| **1988.** தேனைப் பாலினைத் திங்களை ஞாயிற்றை<br>வான வெண்மதி சூடிய மைந்தனை<br>வேனி லானை மெலிவுசெய் தீயழல்<br>ஞான மூர்த்தியை நான்மறக் கிற்பனே. | 5 | தேனும், பாலும் போல்வானும், சந்திரனும், சூரியனும் போல்வானும், வானத்தின்கண் வெண்மதியினைச் சூடிய வீரனும், இளவேனிலுக்குரியவனாகிய மன்மதனைத் தீயழலால் மெலியச் செய்தவனுமாகிய ஞானக் கடவுளை நான் மறக்கும் வல்லமை உடையேனோ? |
| **1989.** கரும்பி னைக்கட்டி யைக்கந்த மாமலர்ச்<br>சுரும்பி னைச்சுடர்ச் சோதியுட் சோதியை<br>அரும்பி னிற்பெரும் போதுகொண் டாய்மலர்<br>விரும்பு மீசனை யான்மறக் கிற்பனே. | 6 | கரும்பும் கட்டியும் போல்வானும், வண்டுகள் சூழும் நறுமண மலர்களை அணிந்த சுடர்விடும் ஒளிக்குள் ஒளி ஆகியவனும், அரும்புகளிற் பெரிய போதுகளைக் கொண்டு ஆய்மலரால் விரும்பும் இறைவனுமாகிய பெருமானை யான் மறக்கும் வல்லமை உடையேனோ? |
| **1990.** கன்ன லைக்கரும் பூறிய தேறலை<br>மின்ன னைமின் னனைய உருவனைப்<br>பொன்ன னைமணிக் குன்று பிறங்கிய<br>என்ன னையினி யான்மறக் கிற்பனே. | 7 | கன்னலும், கரும்பின் ஊறிய சாற்றுத் தெளிவு போல்வானும், ஒளியை உடையவனும், மின்னலைப் போன்ற உருவம் உடையவனும், பொன்போலும் மேனியினனும் ஆகிய மாணிக்கக் குன்றுபோல் விளங்குபவனுமாக, என்னை உடையானை, இனியான் மறக்கும் வல்லமை உடையேனோ? |
| **1991.** துஞ்சும் போதுஞ் சுடர்விடு சோதியை<br>நெஞ்சுள் நின்று நினைப்பிக்கு நீதியை<br>நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை<br>வஞ்ச னேனினி நான்மறக் கிற்பனே. | 8 | உறங்கும் போதும் சுடர்விடும் சோதியும், நெஞ்சத்துக்குள் நிலைத்து நின்று நினைக்க வைக்கும் நீதியும், ஆலகாலவிடத்தைத் திருக்கழுத்துள் அடக்கிய நம்பனுமாகிய பெருமானை வஞ்சனை உடைய யான் இனி மறக்கும் வல்லமை உடையேனோ? |

| | |
|---|---|
| 1992. புதிய பூவினை புண்ணிய நாதனை<br>நிதியை நீதியை நித்திலக் குன்றினைக்<br>கதியைக் கண்டங் கறுத்த கடவுளை<br>மதியை மைந்தனை நான் மறக் கிற்பனே. 9 | புதிய பூவும், புண்ணியநாதனும், செல்வமும், நீதியும், முத்துக்குன்றும், அடைந்தோர்க்குக் கதியும், மதியும், மைந்தனும் ஆகிய திருநீலகண்டமுடைய கடவுளை நான் மறக்கும் வல்லமை உடையேனோ? |
| 1993. கருகு கார்முகில் போல்வதொர் கண்டனை<br>உருவ நோக்கியை யூழி முதல்வனைப்<br>பருகு பாலனைப் பால்மதி சூடியை<br>மருவு மைந்தனை நான்மறக் கிற்பனே. 10 | கருமை உடைய கார்முகில் போல்வதாகிய ஒப்பற்ற திருநீலகண்டனும், அழகுடைய நோக்கு இயைந்த ஊழிக் காலத்தும் உள்ள முதல்வனும், பருகுதற்குரிய பால் போன்ற வெண்மதியைச் சூடியவனும், அன்பால் நினைவாரை மருவுகின்ற மைந்தனுமாகிய பெருமானை நான் மறக்கும் வல்லமை உடையேனோ? |

## 94. பொது

(தொழற்பாலதே என்னுந் திருக்குறுந்தொகை)

ப.தொ.எண் : 207 பதிக எண் : 94

| | |
|---|---|
| 1994. அண்டத் தானை யமரர் தொழப்படும்<br>பண்டத் தானைப் பவித்திர மார்திரு<br>முண்டத் தானைமுற் றாத இளம்பிறைத்<br>துண்டத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. 1 | அண்டத்தில் உள்ளவனும், தேவர்களால் தொழப்படும் பொருளும், பவித்திரம் உடைய நெற்றியை உடையவனும், இளம் பிறைப் பிளவினைச் சூடியவனுமாகிய பெருமானே தொழத் தக்கவன்; காண்பீராக. |

அண்டத்தான் – உலகங்களின் வடிவானவன்
பண்டத்தான் – உறுதிப் பொருள்
முண்டத்தான் – நெற்றி உடையான்; பவித்திரம் – காணிக்கைப் பாத்திரம்; தூய்மை

| | |
|---|---|
| 1995. முத்தொப் பானை முளைத்தெழு கற்பக<br>வித்தொப் பானை விளக்கிடை நேரொளி<br>ஒத்தொப் பானை யொளிபவ ளத்திரள்<br>தொத்தொப் பானைக்கண் டீர்தொழற் பாலதே. 2 | முத்து ஒப்பவனும், முளைத்தெழுகின்ற கற்பகவித்துப் போல்வானும், திருவிளக்கிடை நேர்கின்ற ஒளியை ஒத்திருப்பவனும், ஒளியையுடைய பவளத்திரளின் திரட்சியை ஒப்பவனுமாகிய பெருமானே தொழத்தக்கவன்; காண்பீராக. |

சிவபெருமான் ஒருவரையே நாம் தொழற்பாலது.

| | |
|---|---|
| 1996. பண்ணொத் தானைப் பவளந் திரண்டதோர்<br>வண்ணத் தானை வகையுணர் வான்றனை<br>எண்ணத் தானை யிளம்பிறை போல்வெள்ளைச்<br>சுண்ணத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. 3 | பண் இசை ஒத்தவனும், பவளம் திரண்டது போன்ற செவ்வண்ணம் உடையவனும், வகைகளையெல்லாம் உணர்பவனும், அடியார்கள் எண்ணத்தில் இருப்பவனும், இளம்பிறை போன்ற வெண்சுண்ணம் உடையவனுமாகிய பெருமானே தொழத் தக்கவன்; காண்பீராக. |

| | |
|---|---|
| **1997.** விடலை யானை விரைகமழ் தேன்கொன்றைப்<br>படலை யானைப் பலிதிரி வான்செலும்<br>நடலை யானை நரிபிரி யாததோர்<br>சுடலை யானைக்கண் டீர்தொழற் பாலதே. 4<br><br>விடலை – ஆண் மக்களில் சிறந்தவன்<br>படலை – மாலை; விரை – மணம்<br>நடலை – நடிப்பு | விடலைப்பருவம் உடையவனும், மணங்கமழும் கொன்றைமாலை உடையவனும், பலிபெறுதற்காகத் திரிந்துசெல்லும் துன்பம் உடையவனும், நரிகள் பிரிந்துசெல்லாத சுடுகாட்டில் இருப்பவனும் ஆகிய பெருமானே தொழத்தக்கவன்; காண்பீராக. |
| **1998.** பரிதி யானைப்பல் வேறு சமயங்கள்<br>கருதி யானைக்கண் டார்மனம் மேவிய<br>பிரிதி யானைப் பிறரறி யாததோர்<br>சுருதி யானைக்கண் டீர்தொழற் பாலதே. 5 | ஞானசூரியனாக உள்ளவனும், பல்வேறு சமயங்களாற் கருதப்பட்டவனும், கண்டார் மனத்தை விரும்பியமர்ந்தவனும், பிறர் அறியாததோர் சுருதியானும் ஆகிய பெருமானே, தொழத்தக்கவன்; காண்பீராக. |
| **1999.** ஆதி யானை அமரர் தொழப்படும்<br>நீதி யானை நியம நெறிகளை<br>ஓதி யானை உணர்தற் கரியதோர்<br>சோதி யானைக்கண் டீர்தொழற் பாலதே. 6 | முதல்வனும், தேவர்களால் தொழப்படும் நீதியானவனும், நியமநெறிகளை ஓதியவனும், உணர்தற்கு அரியதாகிய ஒப்பற்ற சோதியனும் ஆகிய பெருமானே தொழத்தக்கவன்; காண்பீராக. |
| **2000.** ஞாலத் தானைநல் லானைவல் லார்தொழும்<br>கோலத் தானைக் குணப்பெருங் குன்றினை<br>மூலத் தானை முதல்வனை மூவிலைச்<br>சூலத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. 7 | உலகமாகி உள்ளவனும், நல்லவனும், வல்லவர் தொழும் கோலத்தை உடையவனும், குணமாகிய பெருங்குன்றானவனும், மூலமாக உள்ளவனும், முதல்வனும், மூவிலை வடிவாகிய சூலத்தை உடையவனும் ஆகிய பெருமானே தொழத்தக்கவன்; காண்பீராக. |
| **2001.** ஆதிப் பாலட்ட மூர்த்தியை ஆனஞ்சும்<br>வேதிப் பானைநம் மேல்வினை வெந்தறச்<br>சாதிப் பானைத் தவத்திடை மாற்றங்கள்<br>சோதிப் பானைக்கண் டீர்தொழற் பாலதே. 8 | முதற்கண்ணே தோன்றிய அட்டமூர்த்தியும், பஞ்சகவ்வியம் அபிடேகம் கொள்பவனும், நமது மேல்வினைகள் வெந்து நீங்கும்படிக் கடைக்கண் சாதிப்பவனும், தவத்திடை தவறுகள் செய்தால் ஆராய்ந்து களைபவனுமாகிய பெருமானே தொழத் தக்கவன்; காண்பீராக. |
| **2002.** நீற்றி னானை நிகரில்வெண் கோவணக்<br>கீற்றி னானைக் கிளரொளிச் செஞ்சடை<br>ஆற்றி னானை **யமரார்த மாருயிர்**<br>**தோற்றி னானைக்**கண் டீர்தொழற் பாலதே. 9<br><br>அமரர்கள் நஞ்சுண்டு சாகாமல் தோற்றியவன். | திருநீறணிந்தவனும், ஒப்பற்ற வெள்ளிய கோவணக்கீறு உடையவனும், ஒளிகிளரும் சிவந்த சடைக்கண் கங்கையை உடையவனும் தேவர்க்கு உயிர்வழங்கினானுமாகிய பெருமானே தொழத்தக்கவன்; காண்பீராக. |

| | |
|---|---|
| 2003. விட்டிட் டானைமெய்ஞ் ஞானத்து மெய்ப்பொருள்<br>கட்டிட் டானைக் கனங்குழை பாலன்பு<br>பட்டிட் டானைப் பகைத்தவர் முப்புரஞ்<br>சுட்டிட் டானைக்கண் டீர்தொழற் பாலதே. 10 | மெய்ஞ்ஞானத்து அடியேனை விட்டவனும், மெய்ப்பொருளைக் காட்டியவனும், உமாதேவி யினிடத்து அன்பு பொருந்தியவனும், பகைத்தவராகிய திரிபுராதிகள் முப்புரங்களைச் சுட்டவனுமாகிய பெருமானே தொழத்தக்கவன்; காண்பீராக. |
| 2004. முற்றி னானை இராவணன் நீண்முடி<br>ஒற்றி னானை யொருவிர லாலுறப்<br>பற்றி னானையோர் வெண்டலைப் பாம்பரைச்<br>சுற்றி னானைக்கண் டீர்தொழற் பாலதே. 11 | எல்லாவற்றையும் சூழ்ந்திருப்பவனும், இராவணன் நீண்முடிகளை ஒற்றியபோது ஒரு விரலால் உறப்பற்றியவனும், ஒரு வெண்டலை உடையவனும், பாம்பினை அரைக்கண் சுற்றியவனும் ஆகிய பெருமானே தொழத்தக்கவன்; காண்பீராக. |

## 95. பொது

### (இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை)

ப.தொ.எண் : 208 பதிக எண் : 95

திருமாலும், பிரமனும் அன்பு பாராட்டி அடிமையாகிச் சிவபூசை செய்யாமல் தம்மாற்றலால் சிவபெருமானது அடியையும், முடியையும் காண முயன்றனர். முடியாமல் இருவரும் தவறை உணர்ந்த நிலையில் சுவாமி தாமாகவே "இங்குற்றேன்" என்று இலிங்கத்தில் எழுந்தருளினான். அடிமுடி தேடிய வரலாற்றை அப்ப மூர்த்திகள் இப்பதிகம் முழுவதும் பதிவு செய்கிறார்.

நாம் எவ்வெவற்றைச் செய்தால் அவரை இலிங்கத்தில் காணலாம்?

1. இறைவன் இருக்குமிடத்தே உள்ளே புகுந்து நெருங்கி விரும்பி மலரிட்டு வணங்க வேண்டும். (கருவறைக்குள்ளே சென்றே பூசிக்கலாம்).
2. மனமகிழ்ந்து நந்தவனம் அமைத்து மணிமலர் கொய்ய வேண்டும்.
3. பூவும் நீரும் கொண்டு அபிடேகம் ஆட்டி அறிவு தெளியப் பெற வேண்டும்.
4. திருச்சாந்திட்டு வலம்வர வேண்டும்.
5. குப்பைகளைக் கூட்டி எடுத்துவிட்டு, பசுஞ்சாணமிட்டுத் திருக்கோயிலை மெழுக வேண்டும்.
6. பூக்கள் பெய்த கூடையைப் புனைந்து சுமக்க வேண்டும்.
7. நெய்யும், பாலும் கொண்டு அபிடேகிக்க வேண்டும்.
8. பொய், வஞ்சக வார்த்தைகளற்ற புகழ்ச்சி செய்தல் வேண்டும்.
9. எருக்க பூக்கொண்டு இண்டை புனைந்து வழிபட வேண்டும்.
10. கோவணம் கிழித்து உடுத்த வேண்டும்.
11. மரங்களேறி மலர் பறிக்க வேண்டும்.

12. நிரம்ப நீர் சுமந்து அபிடேகம் ஆட்ட வேண்டும்.
13. கட்டுவாங்கம் என்னும் ஆயுதத்தையும், கபாலத்தையும் கையில் கொள்ள வேண்டும்.
14. எட்டு உறுப்புக்களும் தரையில் தொடும்படி அட்டாங்க வணக்கம் கொடி மரத்தின் முன் செய்ய வேண்டும்.
15. வெந்தநீறு விளங்க அணிய வேண்டும்.
16. மணமிக்க மலர்களால் இண்டை புனைய வேண்டும்.
17. கரிய குவளை மலர்களைப் பிளந்து இதழ்களால் பிணைத்துத் திருவடியில் இட்டு வணங்க வேண்டும்.
18. உருத்திராக்கம் அணிந்து கபாலமேந்தி வெண்சங்கு ஊத வேண்டும்.

இச்செயல்களைச் செய்தால் "இங்குற்றேன்" என்று சுவாமி இலிங்கத்தில் தோன்றி அருள் பாலிப்பார்.

## சிவலிங்க வழிபாடு

(இலிங்கம், இலிங்கோத்பவர், இலிங்கபுராணம் – முன்னுரை)

உயிர்களாகிய நாமெல்லாம் உய்வதற்காக சிவ பரம்பொருள் தனு, கரண, புவன, போகங்களை ஏற்படுத்திக் கொடுத்து வினைப் பயன்களை நுகர்ந்து வினைநிவர்த்திக்குப் பின் அவர்தம் பொன்னார் திருவடியை நாமெல்லாம் அடைய வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில் அவரை வழிபட அருவம், அருவுருவம், உருவம் என்ற மூன்று நிலைகளில் எழுந்தருளுகிறார்.

| | |
|---|---|
| அருவம் | எந்தவித உருவமுமின்றி அரூபியாக எல்லா இடங்களிலும் வியாபித்து நிற்றல் கண்ணிற்கும், கருவிகளுக்கும், கருத்துக்கும் புலனாகாதிருத்தல் |
| அருவுருவம் | உருவும், அருவுமற்ற நிலை, சிவலிங்கம் |
| உருவம் | நடராசர், சந்திரசேகர், கல்யாணசுந்தரர், தென்முகக்கடவுள் போன்ற முழுஉருவ வடிவங்கள் |

சிவலிங்க வழிபாடு, மனிதன் என்று தோன்றி, சிவத்தை உணர ஆரம்பித்தானோ (திசையெட்டும் தோன்றுவதற்கு முன்னோ பின்னோ) அன்றே, ஆரம்பமாகிவிட்டது. படைத்துக் காத்துக் கரந்து விளையாடுகின்ற சிவபரம் பொருளுக்கு நன்றி சொல்வதற்காகவும், மேல்நிலைக்குச் செல்வதற்காகவும் ஒரு அடையாளத்தை நிறுவி அதையே வழிபட ஆரம்பிக்கிறான். இன்று சிவலிங்கமென்று நாம் வழிபடும் அந்த அமைப்பு சிவத்தைக் குறிக்கும் குறி அல்லது அடையாளமென்று சொல்லலாம். இதைச் சாக்கிய நாயனார் புராணத்தில் தெய்வச் சேக்கிழார் கீழ்க்காண் பாடல் மூலம் பதிவு செய்கிறார்.

காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்
காணாது தேடிய மால் நான்முகனும் காணநடுச்
சேணாருந் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய்

பல்லாயிரமாண்டுகளுக்கு முன்பு நதிக்கரைகளில் நாகரீகங்கள் வளர்ந்த காலத்தில் கால்நடை வளர்ப்பு முக்கிய தொழிலாக வளர்ந்து கொண்டிருந்த காலத்தில் அவற்றைக் கயிற்றால் கட்டும் முளைக்குச்சி

அல்லது தறியை வணங்க ஆரம்பித்தார்கள்.

கன்றாப்பூர் நடுதறி வரலாறு சிவலிங்கப் பரிணாம வளர்ச்சிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். ஒரு சைவப் பெண் வைணவக் குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டாள். அவர் வீட்டிற்குள் சைவ வழிபாடு செய்ய முடியாத நிலையை அந்த வைணவக் குடும்பத்தார் வலுவாகச் செய்த நிலையில், அந்தப் பெண், மாட்டுத் தொழுவத்துக்குச் சென்று கன்றைக் கட்டியிருந்த முளைக்குச்சி (தறி)யையே சிவமாக வழிபட்டாள். இந்த பக்தியை என்னென்று சொல்வது? நினைத்தால் / ஆழ்ந்து யோசித்தால் கண்ணீர் வரும். நம்மில் எவ்வளவோ அன்பர்கள் பூசை செய்ய நேரமும், வாய்ப்பும் இருந்தும் செய்யாமல் நழுவிக் கொண்டிருக்கிறோம். கணவனும், குடும்பத்தாரும் அந்தத் தறியைப் பிளக்க முயற்சித்த போது இரத்தம் வெளியேறி சிவலிங்கம் நிலைநாட்டப் பெற்ற ஊர்தான் கன்றாப்பூர் நடுதறி. நாவரசுப் பெருமான் தமது திருத்தாண்டகப் பதிகத்தில் இந்நிகழ்வுகளைப் பதிவு செய்துள்ளார்.

இப்படியாக ஆரம்பித்த கட்டுத் தறி வழிபாடு கால வெள்ளத்தில் கல்வழிபாடாக மாறி சிவலிங்க பாணமென்று பெயர் பெற்றது. பின்பு சிவபெருமான் சிற்ப ஆகம அறிவை மக்களுக்கு ஊட்ட அது முழுப் பரிணாம வளர்ச்சி பெறுகிறது. தற்காலத்தில் பலவகையான சிவலிங்கங்கள் உள்ளன. சிவலிங்கம் என்று சொன்னாலே அதிலே லிங்கமாகிய நீளமான பாணம், ஆவுடையார் எனப்படும் அடிப்பகுதி, பீடம் என்ற மேற்காண் இரண்டையும் தாங்கும் பகுதி ஆகிய மூன்றும் அடங்கும்.

### 1. சுயம்புலிங்கம் (தான்தோன்றி ஈசுவரர்)

எவராலும் தோற்றுவிக்கப்படாமல் தாமே தோன்றியது. குறிப்பிட்ட எந்த வடிவமும் கொண்டிருக்காது நிலத்தை உழும் போது, தோண்டும் போது கிடைக்கப் பெற்ற நிலைபெற்ற வடிவம். இதை உணர்ந்து அவரை அப்படியே உள்ளே வைத்து கருவறை கட்டப்பட்டு இருக்கும். மையத்தில் அதன் அளவு துளையிடப்பட்டு ஆவுடையாரும், பீடமும் சொருகப்பட்டிருக்கும்.

உளியால் செதுக்கப்படாத மூர்த்தமே சுயம்பு மூர்த்தம். சுயம்பு மூர்த்தம் கிடைப்பது அரிது. கிடைத்தால்அதை உயிரினும் மேலாகப் பேணிக் காக்க வேண்டும். திருந்துதேவன்குடி, பந்தணை நல்லூர், கழிப்பாலை போன்ற சிவத்தலங்களில் மட்டும் இவ்வகை சுயம்புத் திருமேனிகளைக் காணலாம். சில கோயில்களில் சில சிவாசாரியார்கள் உளியால் செதுக்கப்பட்ட மூர்த்தத்தையே "தான்தோன்றி" என்று சொல்லி வருகிறார்கள். அது தவறு பொதுவாக சுயம்பு என்றால் நாம் அசைத்துப் பார்த்தாலே தெரிந்து கொள்ளலாம். ஆலங்குடிக்கு அருகில் கொட்டையூர் என்ற ஊரில் பதிப்பாசிரியர் ஒரு கோயில் கருவறைக்குள் பாலாலயத்தின் போது சென்று அது சுயம்பு மூர்த்தம் இல்லையென்று அசைத்துக்காட்டி மூர்த்தத்தையே வெளிக்கொணர்ந்து பாலாலயம் செய்வித்தார்.

திருப்பணி நாட்களில் சுயம்பு மூர்த்தத்தை இடம் பெயரச் செய்ய முடியாது. அவரைக் கருவறைக்குள்ளேயே மூலட்டானத்தில் மரப்பெட்டியில் உள்ளிருத்தி பெட்டகத்தில் இருப்பது போலப் பேணிக் காக்க வேண்டும். சிவசாரியார் அப்போதும் கால பூசை செய்ய வேண்டும். சில ஊர்களில் சுயம்பு மாரியம்மன், காளியம்மன் என்றெல்லாம் உருவ மூர்த்திகளைச் சுயம்பு என்று சொல்கிறார்கள். அது தவறு! உருவ மூர்த்தி சுயம்பாகவே இருக்க முடியாது. சிவலிங்கம் ஒன்றுதான் சுயம்பு. சிவலிங்கத்தைப் பின்னர் வந்த மற்ற அறு சமயத்தினர் கண்ணையும், மூக்கையும் வைத்துக் காளி, மாரி என்று மாற்றி விட்டனர்.

மானுடர்கள், தேவர்கள், இருடிகள் ஆகிய யார் கோயில் கட்டினாலும் கோயிலின் அளவிற் கேற்றவாறு மூர்த்தியை தாபனஞ் செய்வார்கள். ஆனால் சுயம்புலிங்கக் கோயிலில் தான்தோன்றி மூர்த்தத்துக்கு ஏற்றவாறு கோயில்கட்ட வேண்டும். மூர்த்திக்கு ஏற்ற கோயில் சுயம்புலிங்கக் கோயில். கோயிலுக்கு ஏற்ற மூர்த்தம் பிறவகைக் கோயில்களில் என்று கொள்ள வேண்டும்.

**2. கணலிங்கம்**

அம்பாள், விநாயகர், முருகன், நந்திதேவர், சண்டர் போன்ற சிவ கணங்கள் பிரதிட்டை செய்த லிங்கங்கள் திருச்செங்காட்டங்குடி, சேய்ஞலூர், திருவாப்பாடி, காஞ்சிபுரம் முதலிய தலங்களில் உள்ள சிவலிங்கங்கள். நமக்கெல்லாம் பூசை முறைகளைச் சொல்லித் தருவதற்காக சிவ பரம்பொருளால் நடத்தப்பட்ட திருவிளையாடல்கள் இவையாகும்.

**3. தைவிகலிங்கம்**

சிவபெருமானால் நம்மையெல்லாம் படைத்து, காத்து, ஒடுக்க பணியமர்த்தப்பட்ட பிரம்மா, திருமால், இந்திரன், வர்ணன், வாயு, குபேரன், எமன், நைருதி போன்ற தேவர்களால் பூலோகத்தில் நிறுவப்பட்ட சிவலிங்கங்கள். "வாழ்த்துவதும், வானவர்கள் தான் வாழ்வான்" என்றபடி தங்கள் கோரிக்கைகள் நிறைவேற பல்வேறு இடங்களில் பல்வேறு காலத்தில் வாழ்ந்த தேவர்கள் தாபித்துப் பூசித்த இலிங்கங்கள். ஆலவாய், அண்ணாமலை, இராமேச்சரம் போன்ற தலங்களில் உள்ள இலிங்கங்கள்.

**4. ஆரிடலிங்கம்**

முனிவர்கள், அசுரர்கள், இராட்சதர்கள் போன்றோரால் பூசிக்கப்பட்ட இலிங்கங்கள், வான்மியூர், தவத்துறை போன்ற தலங்களிலுள்ள சிவலிங்கங்கள்.

**5. மானுடலிங்கம்**

மண்ணுலகில் நம்மவர்களால் தாபிக்கப்பட்டு பூசை செய்யப்படும் இலட்சக்கணக்கான லிங்கங்கள். மானுட லிங்கங்கள் பல வகைப்படும்.

1. ஒரு ஊரில் சிவாலயம் இருக்க வேண்டுமென்று கருதி, மன்னனோ அல்லது நன் மக்கள் ஒன்று சேர்ந்தோ, சிற்ப சாத்திர ஆகம விதிமுறைப்படி சிவலிங்கத்தை உளியால் வடிவமைத்துத் தாபித்தல்.
2. சோதிடர்களின் அறிவுறுத்தலின்படி பரிகாரமாக மன்னர்கள் அமைத்த சிவாலயங்கள் (கொங்கு நாட்டில் கொழுமத்தில் சோழ மன்னன் தன் ஜென்ம நட்சத்திரத்தில் சந்திர கிரகணம் வந்ததால் சோழேச்சரத்தை நிர்மாணித்த வரலாறு).
3. சிவஞானி தான் ஒடுங்கியபின் தனக்கு சமாதிக் கோயில் ஏற்படுத்தச் சொல்லிச் செய்தல் அல்லது அவர் சொல்லாமலே அவர் சீடர்கள் செய்தல். 48 நாட்களாம் ஒரு மண்டலத்திலேயே லிங்கம் தாபிக்க வேண்டுமென்று கங்கை, கோதாவரி, காவிரி போன்ற நதிகளுக்குச் சென்று ஒரு லிங்க வடிவ மூர்த்தத்தைத் தேர்ந்தெடுத்து வந்து (பிடித்து வைத்தால் பிள்ளையார் என்பது போல) உடனடியாகத் தாபித்துப் பின் அதற்கு ஆவுடையாரையும், பீடத்தையும் இணைத்துக் கொள்வார்கள். இந்த லிங்கத் திருமேனி உளிபடாததாக இருக்கும். ஓராண்டிற்குள் சமாதிக் கோயில் செய்யலாம் என்று ஆகம விதிகளுக்கு உட்பட்டு உளியினால் செதுக்கிய சிவலிங்கங்கள் அமைக்கப்பட்ட வரலாறும் உண்டு. பதிப்பாசிரியர் கடந்த ஆண்டு திருவாரூர் மாவட்டம் திருத்துறைப்பூண்டி அருகில் சடாயு பூசித்த கெழுவத்தூர் என்ற சிவாலயத் திருப்பணியின் அகழ்வாய்வின் போது எலும்புக் கூடுகளைக் கண்டது இதற்கு ஆதாரமாகும்.

## சிவலிங்க வடிவமைப்பு

ஏற்கனவே கூறியது போல, சிவலிங்கம், ஆவுடையார், பீடம் என்ற மூன்று உறுப்புக்கள் சேர்ந்தது தான் மூலட்டானமாக அமைகின்றன. இவற்றின் அளவுகள், சுவாமியின் பெயர், ஊரின் பெயர், கர்த்தாக்களின் நட்சத்திரம் என்றும், அவயங்களைக் கொண்டு நிர்மாணிக்கப்படுகின்றன. உதாரணமாக சிவலிங்க பாணம் மொத்தம் **3** அடி உயரமும், அதில் **9** அங்குல விட்டமும் உள்ளதாகக் கணிக்கப்பட்டால், மேலே உள்ள, ஒரு அடி **(1** அடி**)** வட்ட வடிவமான இலிங்க உருத்திர பாகமென்றும், நடுவில் உள்ள ஓரடி. அறுகோண / எண் கோண வடிவமாக ஆவுடையாருக்குள் அமைக்கப்பட்டு, விட்டுணு பாகமென்றும் மீதம் ஓரடி, பீடம் மற்றும் தரைப்பகுதியில் சதுரமாக பிரமபாகம் என்றும் சொல்லப்படும்.

### சிவலிங்கம் ஒரு விளக்கம்




மூன்று பாகங்கள் உடையது லிங்கம்

அ. ருத்ர பாகம்

ஆ. விஷ்ணுபாகம் (எட்டுப்பட்டை / ஆறுபட்டை)

இ. பிரம்ம பாகம் (நான்கு பட்டை பீடத்தில் பூமிக்கடியில்)

ஈ. சக்திபாகம் – ஆவுடையார் முழுவதும்



ஆவுடையார் வட்டமாக இருந்தால் விமானமும் வட்டமாக இருக்கும்

ஆவுடையார் சதுரமாக இருந்தால் விமானமும் சதுரமாக இருக்கும்

பாணம் 3 அடி இருந்தால் நிலவுகால் அகலமும் 3 அடி வைக்கலாம்

கருவறையின் அளவு 9 அடி ஆக வைக்கலாம். கருவறையின் கால்புறவாய் அளவு தான் கோயிலின் அர்த்தமண்டப, மகாமண்டப அளவுகளை நிர்ணயிக்கும்.

கொடிமர உயரமும், இருக்க வேண்டிய இடமும், திருமதிற்சுவரின் நீள அகலங்களும் கருவறை, லிங்க அளவுகளின் மடங்குகளாகவே வரும்.

## 6. க்ஷணிகலிங்கம் (உடனே பிடித்து வைப்பது)

ஆன்மார்த்த பூசைக்காகத் தற்காலிகமாக புற்றுமண், வெண்ணெய், விபூதி, சந்தனம், மாவு, பழம், தண்ணீர் இவற்றால் லிங்கமாக பிடித்துப் பூசிப்பது. ஆன்மார்த்தமாக ஸ்படிக லிங்க பூசை செய்பவர்களும் உண்டு.

## இலிங்கோத்பவர்

கருவறையும், அர்த்தமண்டபமும் சேர்ந்த சிவாலய அமைப்பின் முதல் வெளிச்சுற்றில் தெற்குப் பார்த்து அமைந்துள்ள நர்த்தன விநாயகர், தென்முகக்கடவுள், மேற்குப் பார்த்து அமைந்துள்ள லிங்கோத்பவர், வடக்குப் பார்த்து அமைந்துள்ள பிரம்மா, துர்க்கை என்ற இவ்வைந்தும் கோஷ்ட மூர்த்தங்கள் என்று சொல்லப்படுகின்றன. அடிமுடி தேடிய வரலாற்றை நினைவுபடுத்தவே இலிங்கோத்பவத் திருக்கோலம் சிவாலயத்தில் மேற்குத் திருக்கோட்டத்தில் தாபிக்கப்படுகிறது.

## வடிவமைப்பு (இலிங்கோத்பவர்)

ஒரு சிவலிங்க பாணம் அமைக்க வேண்டும். பாணத்தின் கீழே பன்றி கீழ்நோக்கித் தோண்டிக் கொண்டே செல்வது போல அமைக்க வேண்டும். பாணத்தின் தலைப்பாகத்தில் அன்னப் பறவை மேல்நோக்கித் தேடிக் கொண்டே பறப்பது போல அமைக்க வேண்டும். பெருமானின் உச்சியையும், பாதத்தையும் காட்டக் கூடாது.

சிவராத்திரியின் மூன்றாங்காலம் இலிங்கோத்பவ காலமாகும். இம்மூன்றாம் காலத்தில் சிவபெருமான் நெருப்புத்தூண் நடுவிலிருந்து மான், மழு, அபய, வரத முத்திரைகளுடன் உருவம் தாங்கி அருள் பாலிப்பதாக ஐதீகம்.

## இலிங்கபுராணம்

அடிமுடி தேடிய வரலாற்றை விரிவாக உரைப்பது இலிங்க புராணமாகும். அடிமுடி தேடிய வரலாற்றின் நுட்பங்களைத் தெய்வச் சேக்கிழார்.

> "தொழுவார்க்கே யருளுவது சிவபெருமான் எனத்தொழார்
> வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
> இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
> விழுவார்கள் அஞ்செழுத்துந் துதித்துய்ந்தபடி விரித்தார்" – 1976

என்ற பாடலில் பதிவு செய்கிறார்.

## இலிங்கபுராண மூர்த்தி

மேற்காண் இலிங்கோத்பவ மூர்த்தத்தின் வலப்பகுதியில் பிரமதேவனும், இடப்புறம் திருமாலும் அவரை வழிபடும் பாவனையில் கூப்பிய கரங்களுடன் அமைக்கப்பட வேண்டும். அதுவே இலிங்கபுராண மூர்த்தியாகும்.

இலிங்கோத்பவ மூர்த்தத்துக்கு அபிடேகம் செய்து, போற்றி அருச்சனை செய்து இலிங்கபுராணக் குறுந்தொகையைப் படிக்க வேண்டும்.

## தத்துவ நோக்கில் அடிமுடி தேடிய கதை

சிவபெருமான் நெருப்புத்தூணாக நின்றதும் அவருடைய அடியையும், முடியையும் தேடிப் பிரமனும் திருமாலும் தோற்ற கதை நீண்ட நெடுங்காலத்திற்கு முன்பு நடந்த புராண வரலாறாக இருந்தாலும், மனித வாழ்வின் நடைமுறையை ஒட்டி அந்தக் கதைக்குச் சமயச் சான்றோர்கள் தத்துவ நோக்கில் பல விளக்கங்களை அளித்துள்ளனர். அவற்றில் சிலவற்றைக் காணலாம்.



பிரமன் கல்விக்கு அதிபதி. திருமால் செல்வத்தின் அதிபதி. சிவபெருமானை அறிவினாலும் செல்வத்தினாலும் அளவிட்டு அறிந்து விட முடியாது என்பதே அடிமுடிதேடிய கதையின் தத்துவமாகும். அறிவு எல்லை மீறும் போது அகங்காரமாகி விடுகின்றது. செல்வம் எல்லையை மீறும் போது செருக்கு வந்து விடுகின்றது. பிரமன் அகங்காரத்தாலும், திருமால் செருக்காலும் தாமே பெரியவர் என்று எண்ணிப் போட்டியிட்டதாலேயே சிவபெருமானைக் காண முடியாது போயிற்று. சிவபெருமானை அன்பினாலும் உலக உயிர்களுக்குச் செய்யும் தொண்டினாலுமே எளிதில் அடைய முடியும் என்பதை உணர்த்துவதே சிவராத்திரியின் தத்துவமாகும்.

சிவபெருமானின் சடைமுடி என்பது காடாக உருவகம் செய்யப்படுகின்றது. இலக்கியங்களிலும் அது சடைக்காடு என்று குறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். அதில் காட்டுப் பூவான கொன்றை மலர்களும், மண்டை ஓடுகளும், நச்சுப் பாம்புகளும் உள்ளன. பெருமானின் திருவடிகள் தாமரை மலர்களாகும். இதனால் அது தாமரைச் சேவடி என்றும் அழைக்கப்பட்டது. அன்னம் தாமரையில் வாழ்வது. பன்றி காட்டில் வசிப்பது. இந்தப் புராணக் கதையில் தாமரையை நாட வேண்டிய அன்னம் சடையாகிய காட்டைத் தேடி ஓடுகின்றது. காட்டில் வாழ வேண்டிய பன்றி திருவடியாக தாமரை மலரை நோக்கிச் செல்கின்றது. இப்படி இயற்கைக்கு மாறான வடிவத்துடனும் குணத்துடனும் செயல்பட்டதனாலேயே பிரமனும் திருமாலும் அடிமுடி தேடிச் சோர்ந்தனர். இயற்கையின் நியதிக்கு மாறான காரியங்கள் சோர்வைத் தரும் என்பதே இக்கதையின் பொருளாகும்.

ஒரு பொருளின் தன்மையை ஆன்மா அறிந்து அதன் வசமாகி ஆனந்தத்தைப் பெறுவதே சிவராத்திரி வழிபாட்டின் பொருளாகும்.

இறைவனுடைய அருளின் வடிவமாக விளங்குபவை அவனுடைய திருவடிகள் ஆகும். இதுபோலவே அவனுடைய திருமுடி சிவஞானத்தின் வடிவமாகும். உயிர்கள் சிவபெருமானின் அடி

முடியைக் காண்பது என்பது திருவருளைப் பெற்றுச் சிவஞானமயமாகி வீடுபேறு பெறுவதாகும். அதனை நூலறிவினாலோ செல்வச் செழிப்பினாலோ பெற்றுவிட முடியாது என்பதை உணர்த்துவதே பிரமனும், திருமாலும் அடிமுடிதேடிச் சோர்ந்து வீழ்ந்த கதையாகும். அன்பர்கள் நெறியான வாழ்க்கையால் அவற்றை இருந்த இடத்திலிருந்தே அடைந்து விடுகின்றனர் என்பதைப் புராணங்கள் விளக்குகின்றன.

சிவபெருமானின் திருமுடியும், திருவடியும் முறையே அருளும், ஞானமுமாக விளங்குகின்றன என்பதையும் அதை அடைவதே முக்தி நெறி என்பதையும் திருமூலர் திருமந்திரத்தில் குறித்துள்ளதைக் காணலாம். அது,

"காலுந் தலையும் அறியார் கலதிகள்
காலந்தச் சக்தி அருளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலை உயிர்
காலந்த ஞானத்தைக் காட்ட வீடாமே."

**இதன்பொருள் :** காலாகிய அந்தம், சத்தியாகிய அருளின் வடிவம் என்பர். தலையின் உச்சி சிவஞானமாகும். காலையும், தலையும் அறிதல் என்பது சிவஞானத்தை அடைந்து வீடுபேறு பெறுவதேயாகும். இதுவே உயர்ந்த வழியாகும்.

| | |
|---|---|
| **2005.** புக்க ணைந்து புரிந்தல ரிட்டிலர்<br>நக்க ணைந்து நறுமலர் கொய்திலர்<br>சொக்க ணைந்த சுடரொளி வண்ணனை<br>மிக்குக் காணலுற் றாரங் கிருவரே. **1** | திருமாலும் பிரமனுமாகிய இருவரும் அழகு பொருந்திய ஒளிச்சுடர் நிறம் உடைய பெருமானைப் புகுந்து அணைந்து விரும்பி மலரிட்டு வணங்கிலராய், மகிழ்ந்து பொருந்தி மணமலர்களைக் கொய்து அருச்சித்திலராய் ஆணவமிகுந்து காண முயன்று காண்கிலராயினார். |
| **2006.** அலரு நீருங்கொண் டாட்டித் தெளிந்திலர்<br>திலக மண்டலந் தீட்டித் திரிந்திலர்<br>உலக மூர்த்தி யொளிநிற வண்ணனைச்<br>செலவு காணலுற் றாரங் கிருவரே. **2** | திருமாலும் பிரமனும் ஆகிய இருவரும் உலக மூர்த்தியாகிய ஒளிநிற வண்ணம் உடைய இறைவனைப் பூவும் நீரும் கொண்டு அபிடேகித்துத் தெளிவடைந்திலராய்த் திருச்சாந்து தீட்டித் திரிந்திலராய்ச் சென்று காண முயன்று காண்கிலர் ஆயினார். |
| **2007.** ஆப்பி நீரோ டலகுகைக் கொண்டிலர்<br>பூப்பெய் கூடை புனைந்து சுமந்திலர்<br>காப்புக் கொள்ளி கபாலிதன் வேடத்தை<br>ஒப்பிக் காணலுற் றாரங் கிருவரே. **3**<br><br>ஆப்பி – பசுவின் சாணம்<br>அலகு – குப்பைகளைக் கூட்டி எடுத்தல்; பெருக்குதல் | திருமாலும் பிரமனும் ஆகிய இருவரும் உலகங்களைக் காவல்கொள்ளும் கபாலியாகிய பெருமானின் திருவேடத்தைக் காணலுற்றார்கள். சாணநீரோடு, திருவலகும் கைகளிற் கொண்டு வணங்காதவராய்ப் பூக்கள் பெய்த கூடையைப் புனைந்து சுமந்திலர். முனைப்புடன் காணமுயன்று காண்கிலர் ஆயினார். |

| பாடல் | உரை |
|---|---|
| **2008.** நெய்யும் பாலுங்கொண் டாட்டி நினைந்திலர்<br>பொய்யும் பொக்கமும் போக்கிப் புகழ்ந்திலர்<br>ஐயன் வெய்ய அழல்நிற வண்ணனை<br>மெய்யைக் காணலுற் றாரங் கிருவரே. 4 | திருமாலும், பிரமனும் ஆகிய இருவரும் நெய்யும் பாலும் கொண்டு அபிடேகித்து நினைந்திலராய்ப் பொய்யும் பொக்கமும் போக்கிப் புகழ்ந்திலராய் ஐயனாகிய வெப்பமுடைய அழலின் நிறம் கொண்ட இயல்புடைய பெருமானது மெய்ம்மையைக் காணலுற்றுக் காண்கிலராயினார். |
| **2009.** எருக்கங் கண்ணிகொண் டிண்டை புனைந்திலர்<br>பெருக்கக் கோவணம் பீறி யுடுத்திலர்<br>தருக்கி னாற்சென்று தாழ்சடை யண்ணலை<br>நெருக்கிக் காணலுற் றாரங் கிருவரே. 5 | திருமாலும் பிரமனும் ஆகிய இருவரும், எருக்கம் பூக் கொண்டு இண்டை மாலை புனைந்து வழிபடாதவராய் அழகு பெருக்குதற்பொருட்டுக் கோவணம் கிழித்து உடுத்தாதவராய் ஆணவத்தினாற்சென்று சடைதாழ்கின்ற அண்ணலாராகிய பெருமானைத் தத்தமில் நெருக்கிச்சென்று காண முயன்று காண்கிலர் ஆயினார். |
| **2010.** மரங்க ளேறி மலர்பறித் திட்டிலர்<br>நிரம்ப நீர்சுமந் தாட்டி நினைந்திலர்<br>உரம்பொ ருந்தி யொளிநிற வண்ணனை<br>நிரம்பக் காணலுற் றாரங் கிருவரே. 6 | திருமாலும் பிரமனும் ஆகிய இருவரும் அறிவுடன்கூடி ஒளிநிற வண்ணனாகிய பெருமானை, மரங்களில் ஏறி மலர்பறித் திட்டிலராய், நிரம்ப நீர் சுமந்து அபிடேகித்து நினைந்திலராய் ஆணவம் நிரம்பக் காண முயன்று காண்கிலர் ஆயினர். |
| **2011.** கட்டு வாங்கங் கபாலங்கைக் கொண்டிலர்<br>அட்ட மாங்கங் கிடந்தடி வீழ்ந்திலர்<br>சிட்டன் சேவடி சென்றெய்திக் காணிய<br>பட்ட கட்டமுற் றாரங் கிருவரே. 7<br><br>கட்டுவாங்கம் – கையில் அணியும் ஒரு ஆயுதம். | திருமாலும் பிரமனும் ஆகிய இருவரும் கட்டுவாங்கமும் கபாலமும் கைக்கொள்ளாத வராய், எட்டுறுப்புக்களும் நிலத்துப்படக்கிடந்து அடிதாழாதவராய் இறைவன் சேவடியும் திருமுடியும் காணுதற்குச் சென்றெய்திப் பொருந்திய துயரங்கள் உற்றார் அடிமுடி காண்கிலர். |
| **2012.** வெந்த நீறு விளங்க அணிந்திலர்<br>கந்த மாமல ரிண்டை புனைந்திலர்<br>எந்தை யேறுகந் தேறெரி வண்ணனை<br>அந்தங் காணலுற் றாரங் கிருவரே. 8 | திருமாலும் பிரமனும் ஆகிய இருவரும் வெந்த திருநீறு விளங்க அணியாதவராய், மணமிக்க மலர்களால் இண்டை மாலை புனையாதவராய் எந்தையாகிய ஏறுகந்து ஏறும் எரிவண்ண னாகிய பெருமானின் ஆதியும் அந்தமும் காண இயலாதவர் ஆயினார். |

| | |
|---|---|
| **2013.** இளவெ ழுந்த இருங்குவ ளைம்மலர்<br>பிளவு செய்து பிணைத்தடி யிட்டிலர்<br>களவு செய்தொழிற் காமனைக் காய்ந்தவன்<br>அளவு காணுலுற் றாரங் கிருவரே. **9** | திருமாலும் பிரமனும் ஆகிய இருவரும் இளமையோடுகூடி எழுந்து கரிய குவளை மலர்களைப் பிளந்து இதழ்களால் பிணைத்துத் திருவடியில் இட்டு வணங்காதவராய் களவு செய்யும் தொழிலை உடைய காமனைக் காய்ந்த பெருமானது அளவினைக் காண முயன்று காண்கிலர் ஆயினார். |
| **2014.** கண்டி பூண்டு கபாலங்கைக் கொண்டிலர்<br>விண்ட வான்சங்கம் விம்மவாய் வைத்திலர்<br>அண்ட மூர்த்தி யழல்நிற வண்ணனைக்<br>கெண்டிக் காணலுற் றாரங் கிருவரே. **10** | திருமாலும் பிரமனும் ஆகிய இருவரும் கண்டி அணிந்து கபாலம் கையிற்கொள்ளாதவராய் வெண்மை விரிந்த சங்கம் விம்முமாறு வாயில் **வைத்து ஊதாதவராய்** அண்டமூர்த்தியாகிய தீ நிறவண்ணனை மண்ணில் கிண்டியும், விண்ணில் பறந்தும் காண முயன்று காண்கிலர் ஆயினார். |
| **2015.** செங்க ணானும் பிரமனுந் தம்முளே<br>எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலர்<br>இங்குற் றேனென்றி லிங்கத்தே தோன்றினான்<br>பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே. **11** | செங்கண் உடையவனாந் திருமாலும், பிரமனும் தம்முள்ளே எங்கும் தேடித் திரிந்தும் காண்கின்ற வல்லமை இல்லாதவர்களுக்கு ஆறு பொங்கும் செஞ்சடையை உடைய புண்ணியக் கடவுளாம் இறைவன் **'இங்கு உற்றேன்'** என்று இலிங்க வடிவில் தோன்றினான். |

## 96. பொது

**(மனத்தொகைத் திருக்குறுந்தொகை)**

**ப.தொ.எண் : 209** **பதிக எண் : 96**

| | |
|---|---|
| **2016.** பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புறம்<br>மின்னுள் ளத்திரள் வெண்பிறை யாயிறை<br>நின்னுள் ளத்தருள் கொண்டிருள் நீங்குதல்<br>என்னுள் ளத்துள தெந்தை பிரானிரே. **1**<br><br>மனத்தே அறியாமையாகிய இருள் நீங்கப் பாடுதலால் மனத்தொகைப் பதிகம் எனப்பட்டது | எந்தை பெருமானே! பொன்னும் நினையுமாறு அழகு திகழ்கின்ற புன்சடையின் புறத்தே ஒளியுள்ளதாகிய திரண்ட வெண்பிறை சூடியவனே! நின் உள்ளத்துச் சிறிது அருள் கொண்டு என்னுள்ளத்துள் உளதாகிய இருள் நீங்கிடத் திருவுளம் பற்றியருள்க. |
| **2017.** முக்க ணுமுடை யாய்முனி கள்பலர்<br>தொக்கெ ணுங்கழ லாயொரு தோலினோ<br>டக்க ணம்மரை யாயரு ளேயலா<br>தெக்க ணும்மில னெந்தை பிரானிரே. **2** | எந்தை பெருமானே! முக்கண்ணும் உடையாய்! முனிவர்கள் பலர் கூடி எண்ணித் தியானிக்கும் கழலை உடையாய்! புலித்தோலினோடு அக்குமணிமாலை அணிந்த அழகிய இடையை உடையவனே! நினது அருளேயல்லாது வேறு எவ்விடத்தும் பொருள் இல்லேன். |

| | |
|---|---|
| **2018.** பனியாய் வெங்கதிர் பாய்படர் புன்சடை<br>முனியாய் நீயுல கம்முழு தாளினும்<br>தனியாய் நீசரண் நீசல மேபெரி<br>தினியாய் நீயெனக் கெந்தை பிரானிரே. 3<br><br>சலமே – துன்பம் | எந்தை பெருமானே! பனி போன்று குளிர்ந்த தன்மையனாய், வெம்மையான சூரியக் கதிர்கள் பாயும் படர்புன்சடை முனிவனே! நீ உலகம் முழுதும் ஆண்டாலும் தனியாய்! சரண் நீயே; என்பால் வஞ்சனையே பெரிது; எனக்கு இனியாய் நீயே. |
| **2019.** மறையும் பாடுதிர் மாதவர் மாலினுக்<br>குறையு மாயினை கோளர வோடொரு<br>பிறையுஞ் சூடினை யென்பத லாற்பிறி<br>திறையுஞ் சொல்லிலை யெந்தை பிரானிரே. 4 | எந்தை பெருமானே! வேதங்களையும் பாடுவீர்; பெரிய முனிவர்களது மயக்கத்தினுக்கு உறையும் ஆயினீர்; கொள்ளும் பாம்பினோடு ஒரு பிறையும் சூடினை என்பதல்லால் வேறு சிறிதும் சொல் இல்லை. |
| **2020.** பூத்தார் கொன்றையி னாய்புலி யின்னதள்<br>ஆர்த்தா யாடர வோடன லாடிய<br>கூத்தா நின்குரை யார்கழ லேயல<br>தேத்தா நாவெனக் கெந்தை பிரானிரே. 5 | எந்தை பெருமானே! பூத்துச் செறிந்த கொன்றையினை உடையாய்; புலியின் தோலை ஆர்த்துக் கட்டினாய்; ஆடும் பாம்பினோடும் அனலோடும் ஆடும் கூத்தனே! நின் ஒலிக்கும் கழலே அல்லது எனது நா வேறு ஒன்றையும் ஏத்தாது. |
| **2021.** பைம்மா லும்மர வாபர மாபசு<br>மைம்மால் கண்ணியோ டேறுமைந் தாவெனும்<br>அம்மா லல்லது மற்றடி நாயினேற்<br>கெம்மா லும்மிலே னெந்தை பிரானிரே. 6<br><br>மைம்மால் கண்ணி – பார்வதிதேவி | எந்தை பெருமானே! படத்தொடு ஒலிக்கும் அரவுடையவனே! பரமனே! இடபத்தின்மேல் அஞ்சனம் தீட்டிய கண்ணுடைய உமாதேவியோடு ஏறும் மைந்தனே! என்றும் அம்மயக்கமல்லது மற்று அடி நாயினேனுக்கு வேறு எம் மயக்கமும் இல்லேன். 'நாயினேன்' என்றும் பாடம். |
| **2022.** வெப்பத் தின்மன மாசு விளக்கிய<br>செப்பத் தாற்சிவ னென்பவர் தீவினை<br>ஒப்பத் தீர்த்திடு மொண்கழ லாற்கல்ல<br>தெப்பற் றும்மில னெந்தை பிரானிரே. 7 | எந்தை பெருமானே! வெப்பத்தின் மனமாசு விளக்கும் செப்பம் உடைமையினால் 'சிவன்' என்பவர் தீவினைகளை ஒப்பத் தீர்க்கும் ஒள்ளிய கழலை உடையானாகிய உமக்கல்லது வேறுபற்று இல்லேன். |
| **2023.** திகழுஞ் சூழ்சுடர் வானொடு வைகலும்<br>நிகழு மொண்பொரு ளாயின நீதியென்<br>புகழு மாறு மலானுன பொன்னடி<br>இகழு மாறில னெந்தை பிரானிரே. 8 | எந்தை பெருமானே! விளங்குகின்ற சுடர் சூழ்கின்றவனோடு நாள்தோறும் நிகழும் ஒள்ளிய பொருளாயின நீதிகளை என்னே புகழுமாறு! அல்லது உன் பொன்னடிகளை இகழுமாறு இல்லேன். |

| | |
|---|---|
| 2024. கைப்பற் றித்திரு மால்பிர மன்னுனை<br>எப்பற் றியறி தற்கரி யாயருள்<br>அப்பற் றல்லது மற்றடி நாயினேன்<br>எப்பற் றும்மிலே னெந்தை பிரானிரே. 9 | பிரமன், திருமாலால் அறிதற்கரியவனே! உன் திருவருளாகிய பற்றுக்கோடு ஒன்றைத் தவிர வேறு எப்பற்றும் எனக்கு இல்லை. |
| 2025. எந்தை யெம்பிரா னென்றவர் மேல்மனம்<br>எந்தை யெம்பிரா னென்றிறைஞ் சித்தொழு<br>தெந்தை யெம்பிரா னென்றடி யேத்துவார்<br>எந்தை யெம்பிரா னென்றடி சேர்வரே. 10 | எந்தை எம்பிரான் என்று மனம் வாக்குக் காயங்களால் வழிபடுவார் இறைவன் திருவடி சேர்வர். இறைஞ்சி – தலைகுனிந்து.<br>தொழுவார் – வணங்குவார்.<br>இறைவன் அடியார்களை, இறைவனாகவே கருதி வணங்க வேண்டும். |

## 97. பொது
## சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை

சித்தத்துள்ளே சிவபெருமானைச் சிந்திக்கும் திறங்கூறுவது இப்பதிகம் ஆகும். சிந்திப்பார் மனத்தான் என்று முதல் பாடல் முன்னுரையாகத் தொடங்குவதால் இப்பெயர் பெற்றது. **இப்பதிகம் ஒன்றுதான், தேவாரத் திருமுறைகளில் முப்பது பாடல்களைக் கொண்ட சிறப்புடையது**. இதனுள் அகரம் முதல் ஔகாரம் வரை பன்னிரண்டு உயிர் எழுத்துக்களையும், ககரம் முதல் மெய்யெழுத்துக்களில் பதினான்கு எழுத்துக்களையும், ஆய்த எழுத்தையும் இரண்டாம் பாடல் முதல் இருபத்தெட்டு வரை உள்ள பாட்டுக்களில் முறையே முதலெழுத்தாய் வரும்படி ஆக்கப்பட்ட சிறப்புடையது.

அஃகு என்ற ஆயுதக் குறியீட்டைக் குறிப்பிட பதினான்காவது பாடலில் அக்கு மாமையும் என்று தொடங்குகிறார். வழக்கமாக மொழிக்கு முதலில் வராத ஙகரத்தை, ஙகர வெல்கொடி மூலம் அறிமுகம் செய்வது நமது தமிழுக்குப் பெருமை, புதுமை. 18ஆவது பாடலில் எமனை ஞமனென்று நிலைநாட்டுகிறார். மொழி முதலில் வராத ட, ண, ய, ழ, ள போன்ற எழுத்துக்களுக்கு அகர, இகரங்களை இணைத்து சொல்லாக்கிப் பாடலைத் துவக்கியுள்ளதும் போற்றத்தக்கதாகும்.

ப.தொ.எண் : 210 பதிக எண் : 97

| | |
|---|---|
| 2026. சிந்திப் பார்மனத் தான்சிவன் செஞ்சுடர்<br>அந்தி வான்நிறத் தானணி யார்மதி<br>முந்திச் சூடிய முக்கண்ணி னானடி<br>வந்திப் பாரவர் வானுல காள்வரே. 1 | சிந்திப்பவர் மனத்து உறைபவனாகிய சிவனும், சிவந்த சுடர் உடையவனாய் அந்திவானத்து நிறம் பொருந்தியவனும், அழகு நிறைந்த பிறைமதியினை முந்துறச் சூடிக்கொண்ட முக்கண்ணினனுமாகிய பெருமான் திருவடிகளை வணங்குவார்கள் வானுலகை ஆள்வர். |

| பாடல் | உரை |
|---|---|
| 2027. **அ**ண்ட மாரிரு ளூடு கடந்தும்பர்<br>உண்டு போலுமோ ரொண்சுட ரச்சுடர்<br>கண்டிங் காரறி வாரறி வாரெலாம்<br>வெண்டிங் கட்கண்ணி வேதிய னென்பரே. 2 | அண்டங்களையெல்லாம் உள்ளடக்கிய செறிந்த இருள் நடுவே கடந்து அப்பால் ஓர் ஒள்ளிய சுடர் உண்டுபோலும்; அச்சுடரைக் கண்டு இங்குஆர் அறியவல்லவர்கள்? அறிபவ ரெல்லாம் அதனை வெள்ளிய பிறையினை முடிக்கண்ணியாகக்கொண்ட வேதியன் என்பர். |
| 2028. **ஆ**தி யாயவ னாரு மிலாதவன்<br>போது சேர்புனை நீண்முடிப் புண்ணியன்<br>பாதிப் பெண்ணுரு வாகிப் பரஞ்சுடர்ச்<br>சோதி யுட்சோதி யாய்நின்ற சோதியே. 3 | தன்னுடலிற்பாதி பெண்ணுருவமாகி மேலாய சுடரை உடைய சோதியுட்சோதியாய் நின்ற சோதியாகிய பெருமான். அனைத்துக்கும் ஆதி ஆகியவன்; தனக்குப் பற்றாவார் ஆரும் இல்லாதவன்; மலர்கள் சேர்த்துப் புனைந்த நீண்முடியை உடைய புண்ணியன். |
| 2029. **இ**ட்ட திட்டதோ ரேறுகந் தேறியூர்<br>பட்டி துட்டங்க னாய்ப்பலி தேர்வதோர்<br>கட்ட வாழ்க்கைய னாகிலும் வானவர்<br>அட்ட மூர்த்திய ருளென் றடைவரே. 4 | ஏற்றினை உகந்து ஏறிப் பட்டிதோறும் மக்கள் இட்ட சோற்றினைப் பலிதேர்வதாகிய ஒரு துன்பவாழ்க்கை உடையவனாகிலும் தேவர்கள் 'அட்டமூர்த்தியே! அருள்வாயாக' என்று அடைவர். |
| 2030. **ஈ**றில் கூறைய னாகி யெரிந்தவெண்<br>நீறு பூசி நிலாமதி சூடிலும்<br>வீறி லாதன செய்யினும் விண்ணவர்<br>ஊற லாயரு ளாயென் றுரைப்பரே. 5 | முடிவற்ற திக்குகளையே ஆடையாக உடுப்பவனாகி எரிந்துவெந்த திருநீறு பூசி நிலவினை உடைய பிறையைச் சூடினும், தன் பெருமைக்கு உகவாதவற்றைச் செய்யினும், தேவர்கள் 'இடையூறற்றவனே! அருள்வாயாக' என்று இரந்துரைப்பர். |
| 2031. **உ**ச்சி வெண்மதி சூடிலும் ஊன்அறாப்<br>பச்சை வெண்தலை யேந்திப் பலவில்லம்<br>பிச்சை யேபுகு மாகிலும் வானவர்<br>அச்சந் தீர்த்தரு ளாயென் றடைவரே. 6 | உச்சிக்கண் வெள்ளியமதி சூடினும், தசை நீங்காத பச்சை வெண்தலையோட்டைக் கையில் ஏந்திப் பல இல்லங்களுக்குப் பிச்சை ஏற்கப் புகுந்தாலும் தேவர்கள் 'எம் அச்சம் தீர்த்து அருள்வாயாக' என்று அடைவர். |
| 2032. **ஊ**ரி லாயென்றொன் றாக உரைப்பதோர்<br>பேரி லாய்பிறை சூடிய பிஞ்ஞகா<br>காரு லாங்கண்ட னேயுன் கழலடி<br>சேர்வி லார்கட்குத் தீயவை தீயவே. 7 | தனக்கென்று ஓர் ஊரில்லாதவனே! ஒன்றாக உரைக்கும் பேரில்லாதவனே! பிறைசூடிய பிஞ்ஞகனே! கருமை பொருந்திய திருக்கழுத்தினனே! உன் கழலணிந்த திருவடியைச் சேர்தல் இல்லாதவர்களுக்குத் தீயவையே என்றும் சேரும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| 2033. **எ**ந்தை யேயெம் பிரானே யெனவுள்கிச்<br>சிந்திப் பாரவர் தீவினை தீருமால்<br>வெந்த நீறுமெய் பூசிய வேதியன்<br>அந்த மாவளப் பாரடைந் தார்களே. 8 | எந்தையே! எம்பெருமானே! என உள்ளத்தால் நினைந்து சிந்திப்பார்களின் தீவினை தீரும்; வெந்த திருநீறு பூசிய மெய்யை உடைய வேதியனை அடைந்தவர்கள் அந்தமாக அளக்குந் தன்மை உடையார். |
| 2034. **ஏ**ன வெண்மருப் போடென்பு பூண்டெழில்<br>ஆனை யீருரி போர்த்தன லாடிலும்<br>தான வண்ணத்த னாகிலுந் தன்னையே<br>வான நாடர் வணங்குவர் வைகலே. 9 | பன்றியின் வெள்ளிய கொம்பினோடு எலும்பு அணிந்த அழகுமிக்க ஆனையினை ஈர்ந்து தோல் போர்த்துத் தீயுடன் ஆடினாலும் தான் அவ்வியல்புடையனாயினும் தேவர்கள் நாள் தோறும் தன்னையே வணங்குவர். |
| 2035. **ஐ**யன் அந்தணன் ஆணொடு பெண்ணுமாம்<br>மெய்யன் மேதகு வெண்பொடி பூசிய<br>மைகொள் கண்டத்தன் மான்மறிக் கையினான்<br>பைகொள் பாம்பரை யார்த்த பரமனே. 10 | படம் கொண்ட பாம்பினை இடுப்பில் கட்டிய இறைவன், தலைவன்; அந்தணன்; (அழகும் குளிர்ச்சியும் உடையவன்) ஆண் பெண் வடிவமுடைய திருமேனியினன்; மேன்மை மிகுந்த வெண் திருநீறு பூசிய கருமைகொண்ட திருக்கழுத்தினன்; மான்குட்டி உடைய கையினன். |
| 2036. **ஒ**ருவ னாகிநின் றானிவ் வுலகெலாம்<br>இருவ ராகிநின் றார்கட் கறிகிலான்<br>அருவ ராஅரை ஆர்த்தவ னார்கழல்<br>பரவு வாரவர் பாவம் பறையுமே. 11 | இவ்வுலகமெல்லாம் தான் ஒருவனே ஆகி நின்றவனும், திருமாலும் பிரமனுமாகிய இருவராகி நின்றவர் அறிய இயலாதவனும், அரிய பாம்பினை இடுப்பில் கட்டியவனும் ஆகிய இறைவனது நிறைந்த கழலணிந்த திருவடிகளை வணங்குவாரின் பாவங்கள் கெடும். |
| 2037. **ஓ**த வண்ணனும் ஒண்மலர்ச் செல்வனும்<br>நாத னேயரு ளாயென்று நாடொறும்<br>காதல் செய்து கருதப் படுமவர்<br>பாத மேத்தப் பறையும்நம் பாவமே. 12 | கடல்வண்ணம் உடையவனாகிய திருமாலும், ஒள்ளிய தாமரைமலர் மேலானாகிய பிரமனும், 'தலைவனே! அருள்வாய்' என்று நாள்தோறும் விருப்பம் புரிந்து எண்ணப் படுவாராகிய இறைவன் பாதங்களை ஏத்த நம் பாவங்கள் கெடும். |
| 2038. **ஔ**வ தன்மை யவரவ ராக்கையான்<br>வெவ்வ தன்மைய னென்ப தொழிமினோ<br>மௌவல் நீண்மலர் மேலுறை வானொடு<br>பவ்வ வண்ணனு மாய்ப்பணி வார்களே. 13 | அவரவர் உடம்பினால் அடைவதற்கு வெவ்விய தன்மை உடையவன் என்ற கருத்தை ஒழிப்பீராக; மலர்தல் உடைய நீண்ட மலர்மேல் உறைவானாகிய பிரமனோடு கடல் வண்ணனாகிய திருமாலுமாய்ப் பணிவார்கள். |

| | |
|---|---|
| 2039. **அ**க்கு மாமையும் பூண்டன லேந்தியில்<br>புக்குப் பல்பலி தேரும் புராணனை<br>நக்கு நீர்கள் நரகம் புகேன்மினோ<br>தொக்க வானவ ராற்றொழு வானையே. 14 | அக்கமணிகளும் ஆமையும் அணிந்து தீயை ஏந்தி இல்லங்கள்தோறும் புகுந்து பல பலிதேறும் பழமை உடையவனும், தொகுத்த தேவர்களால் தொழப்படுவானுமாகிய இறைவனை விரும்பி நீங்கள் நரகத்துப்போகாமல் நற்பேறு அடைவீராக. |
| 2040. **க**ங்கை தங்கிய செஞ்சடை மேலிளந்<br>திங்கள் சூடிய தீநிற வண்ணனார்<br>இங்க ணாரெழில் வானம் வணங்கவே<br>அங்க ணாற்கது வாலவன் தன்மையே. 15 | அழகிய கண்ணராகிய கங்கை தங்கிய சிவந்த சடையின்மேல் இளம் பிறையைச் சூடிய தழல்வண்ணா; இமைக்காத கண்ணை உடைய எழில் உடைய வானகத்துள்ளோர் வணங்க உள்ளார்; அதுவே அவர் தன்மை. |
| 2041. **ங**கர வெல்கொடி யானொடு நன்னெஞ்சே<br>நுகர நீயுனைக் கொண்டுயப் போக்குறில்<br>மகர வெல்கொடி மைந்தனைக் காய்ந்தவன்<br>புகரில் சேவடி யேபுக லாகுமே. 16<br><br>ஙகர வெல்கொடியான் – இடபக் கொடியான். படுத்திருக்கும் வடிவில் இடபம் 'ங' போன்று இருத்தலின் ஙகர வெல்கொடியான் என்றார். | நல்ல நெஞ்சே! வெல்லும் கொடி உடையானோடு நுகர்தற்கு நீ உன்னைக் கொண்டு உய்யப்போதலுற்றால், மீனாகிய வெல்லும் கொடி உடைய மன்மதனைச் சினந்தவனாகிய பெருமானின் குற்றமற்ற சேவடியே தஞ்சப்பொருளாகும். |
| 2042. **ச**ரண மாம்படி யார்பிற ரியாவரோ<br>கரணந் தீர்த்துயிர் கையி லிகழ்ந்தபின்<br>மரண மெய்திய பின்னவை நீக்குவான்<br>அரண மூஎயில் எய்தவ னல்லனே. 17 | புகலடையத்தக்கவர் பிறர் யாவர்? செயலற்று உயிர் இறக்கும்போது நம் வினைக் குற்றங்களைத் தீர்த்து அருள்பவன் வேறு யாவன்? அரணமைந்த மூன்று கோட்டை களையும் அழித்தவன் அல்லனோ? |
| 2043. **ஞ**மனென் பான்நர கர்க்கு நமக்கெலாம்<br>சிவனென் பான்செழு மான்மறிக் கையினான்<br>கவனஞ் செய்யுங் கனவிடை யூர்தியான்<br>தமரென் றாலுங் கெடுந்தடு மாற்றமே. 18 | நரகர்க்கெல்லாம் எமனாகியும், நமக்கெல்லாம் சிவன் எனப்படுவானாகியும் உள்ளவனும், மான்குட்டி உடைய கையினனும், விரைந்து செல்லும் பெருமைமிக்க இடப ஊர்தி உடையவனும் ஆகிய பெருமானின் தமர் என்றாலும் தடுமாற்றம் கெடும். |
| 2044. **இ**டப மேறியு மில்பலி யேற்பவர்<br>அடவி காதலித் தாடுவ ரைந்தலைப்<br>படவம் பாம்பரை யார்த்த பரமனைக்<br>கடவி ராய்ச்சென்று கைதொழு தும்மினே. 19 | இடபத்தின்மீது ஏறியும், இல்லங்கள்தோறும் பலி ஏற்பவரும், சுடுகாட்டினை விரும்பி ஆடுபவரும், ஐந்தலை உடைய படர்ந்த பாம்பினை அரைக்கண் ஆர்த்தவரும் ஆகிய பரமனை வணங்கும் கடப்பாடுடையீராய்ச் சென்று கைதொழுது உய்வீராக. |

| | |
|---|---|
| 2045. **இ**ணர்ந்து கொன்றைபொன் தாது சொரிந்திடும்<br>புணர்ந்த வாளர வம்மதி யோடுடன்<br>அணைந்த அஞ்சடை யானவன் பாதமே<br>உணர்ந்த வுள்ளத் தவருணர் வார்களே. 20 | கொத்தாகிய கொன்றை பொன் போன்ற மகரந்தத் தூளினைச் சொரிந்திடும் இயல்பினதும், பொருந்திய வாள்போன்ற பாம்பும் மதியினுடன் அணைந்ததுமாகிய அழகிய சடையுடைய பெருமான் திருவடிகளை உணர்ந்த உள்ளத்தவரே உணர்வர். |
| 2046. **த**ருமந் தான்தவந் தான்தவத் தால்வரும்<br>கருமந் தான்கரு மான்மறிக் கையினான்<br>அருமந் தன்ன அதிர்கழல் சேர்மினோ<br>சிரமஞ் சேரழல் தீவினை யாளரே. 21 | தொல்லைகள் சேர்ந்த அழலும் தீவினை யாளர்களே! தானே தருமமாகவும், தானே தவமாகவும், தானே தவத்தால்வரும் செயலாகவும் உள்ள வலிய மான்குட்டியைக் கையில் உடைய பெருமானது, அரிய மருந்து போன்ற (அமிர்தம்) ஒலிக்கும் கழலணிந்த திருவடிகளைச் சேர்வீராக. |
| 2047. **ந**மச்சி வாயவென் பாருள ரேலவர்<br>தமச்ச நீங்கத் தவநெறி சார்தலால்<br>அமைத்துக் கொண்டதோர் வாழ்க்கைய னாகிலும்<br>இமைத்து நிற்பது சால அரியதே. 22<br>———<br>இமைத்து நிற்பது – வாழ்வது | நமசிவாய என்று சொல்வார் உளராயின் அவர் தம் அச்சங்கள் நீங்கத் தவநெறியைச் சார்தலால் தானே அமைத்துக் கொண்ட ஒப்பற்ற வாழ்க்கையை உடையவனாகிலும் இமைத்து நிற்பது மிகவும் அரியதாகும். |
| 2048. **ப**ற்பல் காலம் பயிற்றிப் பரமனைச்<br>சொற்பல் காலநின் றேத்துமின் தொல்வினை<br>வெற்பில் தோன்றிய வெங்கதிர் கண்டவப்<br>புற்ப னிக்கெடு மாறது போலுமே. 23 | பரமனைப் பலப்பல காலங்கள் பயின்று சொற்களால் பல காலம் நின்று ஏத்துவீராக! உம் பழைய வினைகள் உதயகிரியில் தோன்றிய சூரியனைக்கண்ட அழகிய புல் நுனியில் உள்ள பனித்துளிகள் கெடுமாறு கெடும். |
| 2049. **ம**ணிசெய் கண்டத்து மான்மறிக் கையினான்<br>கணிசெய் வேடத்த ராயவர் காப்பினால்<br>பணிகள் தாஞ்செய வல்லவர் யாவர்தம்<br>பிணிசெ யாக்கையை நீக்குவர் பேயரே. 24 | கரியமணி போலும் கண்டத்தை உடையவரும், மான்குட்டியை உடைய கையினரும், கருதிச் செய்கின்ற வேடம் உடையவராகிய அவர் காத்தருள்வதால் பணிகளைச் செய்ய வல்லவர்களே நல்லோர்; அவ்வாறு புரியாது நோய் செய்யும் உடம்பை வீணே கழிப்பவர் தீயவர் / பயனற்றவர். |
| 2050. **இ**யக்கர் கின்னர ரிந்திரன் தானவர்<br>நயக்க நின்றவன் நான்முகன் ஆழியான்<br>மயக்க மெய்தவன் மாலெரி யாயினான்<br>வியக்குந் தன்மையி னானெம் விகிர்தனே. 25 | வியக்கும் தன்மை உடையவனாகிய எம் மேலோன், இயக்கர், கின்னரர், இந்திரன், தானவர் முதலியோர் விரும்ப நின்றவனும், பிரமனும், திருமாலும் மயக்கம் எய்த வன்மை உடைய பேரெரிவடிவமாயினான். |

| | |
|---|---|
| 2051. **அ**ரவ மார்த்தன லாடிய அண்ணலைப்<br>பரவு வாரவர் பாவம் பறைதற்குக்<br>குரவை கோத்தவ னுங்குளிர் போதின்மேல்<br>கரவில் நான்முக னுங்கரி யல்லரே. **26** | பாம்பினைக்கட்டி அனலோடு ஆடிய அண்ணலை வணங்குவோர் பாவம் கெடுதற்குக் குரவைக் கூத்து ஆடியவனாகிய திருமாலும், குளிர்தாமரையின் மேல் கரத்தலில்லாத பிரமனும் சான்றாவார் அல்லரோ ? |
| 2052. **அ**ழலங் கையினன் அந்தரத் தோங்கிநின்<br>றழலும் மூவெயி லொள்ள ழ லூட்டினான்<br>தழலுந் தாமரை யானொடு தாவினான்<br>கழலுஞ் சென்னியுங் காண்டற் கரியனே. **27** | இறைவன் அழலை அழகிய கையிற் கொண்டவனும், வானில் ஓங்கி நின்று திரியும் மூன்று மதில்களையும் ஒள்ளழல் ஊட்டியவனும், எரியென மலரும் தாமரையிலுள்ள பிரமனோடு திருமாலும் பறந்தும் தாவியும் தன் கழலடிகளையும் சென்னியையும் காண்டற் கரியவனுமாவான். |
| 2053. **இ**ளமை கைவிட் டகறலு மூப்பினார்<br>வளமை போய்ப்பிணி யோடு வருதலால்<br>உளமெ லாமொளி யாய்மதி யாயினான்<br>கிளமை யேகிளை யாக நினைப்பனே. **28** | இளமை கைவிட்டு நீங்குதலும் உடல் வளமையெல்லாம் கெட்டுப் பிணியோடு மூப்பு வருதலால், உள்ளமெல்லாம் ஒளியாகி மதியாகிய பெருமானின் உரிமையையே உறவாக யான் நினைப்பேன். |
| 2054. **த**ன்னிற் றன்னை யறியுந் தலைமகன்<br>தன்னிற் றன்னை யறியில் தலைப்படும்<br>தன்னிற் றன்னை யறிவில னாயிடில்<br>தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே. **29** | தன்னில் தன்னை அறியும் தலைவனாகிய இறைவன், தன்னில் தன்னை அறிய முற்படுகின்ற ஞானமுடையோர்க்கு ஞான வடிவில் விளங்கி அருள்வான். தன்னில், தன்னைத் தேட இயலாத மூடர்க்கு அவன், பரமாகிய தன்னைக் கண்டு, பற்றுவதற்கும் அரியவனாக விளங்குவான். |
| 2055. இலங்கை மன்னனை யீரைந்து பத்துமன்<br>றலங்க லோடுட னேசெல வூன்றிய<br>நலங்கொள் சேவடி **நாடொறும் நாடொறும்**<br>வலங்கொண் டேத்துவார் வானுல காள்வரே. **30**<br>---<br>தினந்தோறும் வழிபட வேண்டியதன் இன்றியமை யாமையைக் குறிப்பிடுகிறார். | இராவணனைப் பத்துத் தலைகளும் அன்று அணிந்திருந்த மாலைகளோடு உடனே கெட ஊன்றிய நலம் உடைய பெருமான் சேவடிகளை நாள்தோறும் வலம்கொண்டு வழிபடுவார் வானுலகினை ஆள்வர். |

## 98. பொது

## உள்ளத் திருக்குறுந்தொகை

"ஒருமையுள் ஒருவன் கற்ற கல்வி
எழுமையும் ஏமாப் புடைத்து" – திருக்குறள்

உயிர் உடலை விட்டுப் பிரியும் காலத்து அந்த உயிருடன் அவன் கற்ற கல்வி மட்டும்தான் செல்லும். மற்ற செல்வங்கள் யாவும் செல்லாது. எனவே சிவபரம்பொருளைப் பற்றிய தெளிவான சிந்தனைகளை உள்ளக் கிழியில் எழுதிக் கொண்டால் அது எழுமைக்கும் பயன்படும் என்பதால்தான் அப்பர் சுவாமிகள் உள்ளத்துக்காக ஒரு பதிகத்தையே ஒதுக்கியுள்ளார். பெருமானைக் காண வேண்டும். கொள்ள வேண்டும். காண்டலே கருத்தாக வாழ்ந்தவர் அப்பர் சுவாமிகள்.

ப.தொ.எண் : 211 | பதிக எண் : 98

2056. நீற லைத்ததோர் மேனி நிமிர்சடை
ஆற லைக்கநின் றாடும் அமுதினைத்
தேற லைத்தெளி யைத்தெளி வாய்த்ததோர்
ஊற லைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 1

கண்டதும், கொண்டதும் என் உள்ளமே என்பது பதிக மகுடம்.

திருநீறு நன்கு பூசப்பெற்ற ஒப்பற்ற மேனியையும், ஓங்கிய சடையில் கங்கையாறு அலைவீச நின்று ஆடும் அமுதமும், தேனும் அதன் தெளிவும் அத்தெளிவு வாய்த்த ஊறல் போல்வானுமாகிய **பெருமானை என் உள்ளம் கண்டுகொண்டது. ஊறல் – ஊறிய தெளிந்த நீர்.**

2057. பொந்தை யைப்புக்கு நீக்கப் புகுந்திடும்
தந்தை யைத்தழல் போல்வதோர் மேனியைச்
சிந்தை யைத்தெளி வைத்தெளி வாய்த்ததோர்
எந்தை யைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 2

பொய்யாகிய உடலிற்புகுந்து அதன் கட்டினை நீக்கப் புகுந்திடும் தந்தையும், தீப் போன்ற மேனியை உடையவனும், என் சிந்தையாக உள்ளவனும், தெளிவாகவும் அத்தெளிவு வாய்த்த எந்தையும் ஆகி நின்ற **பெருமானை என் உள்ளம் கண்டுகொண்டது.**

2058. வெள்ளத் தார்விஞ்சை யார்கள் விரும்பவே
வெள்ளத் தைச்சடை வைத்த விகிர்தனார்
கள்ளத் தைக்கழி யம்மன மொன்றிநின்
றுள்ளத் தில்லொளி யைக்கண்ட துள்ளமே. 3

இன்ப வெள்ளத்தாராகிய விஞ்சையர்கள் விரும்பும்படி கங்கை வெள்ளத்தைச் சடையில்வைத்த மேலோரை, மனம் கள்ளத்தை நீங்க **உள்ளம் ஒன்றியிருந்து உள்ளத்தில் ஒளியாகக் கண்டது.**

2059. அம்மா னையமு தின்னமு தேயென்று
தம்மா னைத்தத்து வத்தடி யார்தொழும்
செம்மா னநிறம் போல்வதோர் சிந்தையுள்
எம்மா னைக்கண்டு கொண்டதெ னுள்ளம். 4

அம்மானை, அமுதே! இன்னமுதே! என்று தத்துவத்தை அறிந்த அடியார் தொழும் நம் தலைவனும், செம்மையாகிய பெருமை மிக்க நிறம் போல்வதாகிச் சிந்தையுள் இருக்கும் எம்மானுமாகிய **பெருமானை என் உள்ளம் கண்டு கொண்டது.**

**2060.** கூறே றும்உமை பாகமோர் பாலராய்
ஆறே றுஞ்சடை மேற்பிறை சூடுவர்
பாறே றுந்தலை யேந்திப் பலவில்(ல்)லம்
ஏறே றுமெந்தை யைக்கண்டதெ னுள்ளமே. **5**

கூறாகப் பொருந்தி உமையொரு பாகராகிக் கங்கை ஏறிய சடைமேற் பிறை சூடியவராய், பருந்துகள் ஏறிப்பறக்கும் வெண்டலை ஏந்திப் பல இல்லங்கள் தோறும் இடபம் ஏறிவரும் **எந்தையை என் உள்ளம் கண்டு கொண்டது.**

**2061.** முன்னெஞ் சம்மின்றி மூர்க்கராய்ச் சாகின்றார்
தந்நெஞ் சந்தமக் குத்தாமி லாதவர்
வன்னெஞ் சம்மது நீங்குதல் வல்லீரே
என்னெஞ் சிலீச னைக்கண்டதெ னுள்ளமே. **6**

தம் நெஞ்சம் தமக்குத்தாம் இல்லாத சிலர், நினைத்தற்குரிய நெஞ்சம் இல்லாமல் மூர்க்கராய் வாழ்ந்து சாகின்றார்; வன்மையுடைய நெஞ்சத்தை நீங்க வல்லமை உடையவர்களே! என் நெஞ்சில் **ஈசனை என்னுள்ளம் கண்டுகொண்டது.**

**2062.** வென்றா னைப்புல னைந்துமென் தீவினை
கொன்றா னைக்குணத் தாலே வணங்கிட
நன்றா நன்மனம் வைத்திடு ஞானமாம்
ஒன்றா னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. **7**

புலன்கள் ஐந்தும் வென்றவனும் என் தீய வினைகளைக் கொன்றவனும், குணத்தால் வணங்கிட நன்றாக நல்ல மனத்தில் வைக்கும் ஞானம் என்னும் ஒப்பற்ற பொருளை உடையானுமாகிய **பெருமானை என் உள்ளம் கண்டுகொண்டது.**

**2063.** மருவி னைமட நெஞ்சம் மனம்புகும்
குருவி னைக்குணத் தாலே வணங்கிடும்
திருவி னைச்சிந்தை யுட்சிவ னாய்நின்ற
உருவி னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. **8**

அறியாத மடநெஞ்சமே! மனம்புகும் குருநாதனும், குணத்தால் வணங்கத்தக்க திருவும் ஆகிய பெருமானைப் பொருந்தினாய்; சிந்தையுள் சிவனாய்நின்ற உருவினை என்னுள்ளம் கண்டுகொண்டது.

**2064.** தேச னைத்திரு மால்பிர மன்செயும்
பூச னைப்புண ரிற்புணர் வாயதோர்
நேச னைநெஞ்சி னுள்நிறை வாய்நின்ற
ஈச னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. **9**

ஒளி உடையவனும், திருமாலும், பிரமனும் செய்யும் பூசனைகள் பொருந்தினால் அங்குப் பொருந்துகின்ற விருப்பம் உடையவனும், நெஞ்சுக்குள் நிறைவாகி நின்ற ஈசனுமாகிய **பெருமானை என் உள்ளம் கண்டுகொண்டது.**

---

"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் விரும்பும் உண்மையாவது பூசனை" – சேக்கிழார்.

**2065.** வெறுத்தா னைம்புல னும்பிர மன்தலை
அறுத்தா னையரக் கன்கயி லாயத்தைக்
கறுத்தா னைக்கா லினில்விர லொன்றினால்
ஒறுத்தா னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. **10**

ஐம்புலன்களை வெறுத்தவனும், பிரமன் தலையினை அறுத்தவனும், இராவணன் திருக்கயிலாயத்தின் மேற்சினந்தபோது காலினில் திருவிரல் ஒன்றினால் ஒறுத்தவனும் ஆகிய **பெருமானை என் உள்ளம் கண்டுகொண்டது.**

## 99. பொது

(பாவநாசத் திருக்குறுந்தொகை)

ப.தொ.எண் : 212 பதிக எண் : 99

**2066. பாவ மும்பழி பற்றற வேண்டுவீர்**
ஆவில் அஞ்சுகந் தாடு மவன்கழல்
மேவ ராய்மிக வும்மகிழ்ந் துள்குமின்
காவ லாளன் கலந்தருள் செய்யுமே. 1

பாவமும் பழியும் ஆகிய பற்றுக்கள் அறுதலை விரும்புபவர்களே! பஞ்சகவ்வியம் உகந்து திருவபிடேகம் கொள்ளும் அப்பெருமான் கழலை மகிழ்ந்து மேவுபவராய் நினைவீராக; காத்து ஆள்வோனாகிய இறைவன் கலந்து அருள் செய்வான்.

2067. கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்
ஒங்கு மாகட லோதநீ ராடிலென்
எங்கு மீச னெனாதவர்க் கில்லையே. 2

கங்கை நீராடிலும், காவிரியில் நீராடிலும், மணமும் குளிர்ச்சியும் உடைய குமரித்துறையில் நீராடிலும், பெருகி ஒலிக்கின்ற கடல் நீர்த்துறை தோறும் நீராடிலும் என்ன பயன்? எங்கும் இறைவன் என்னாதவர்க்கு இவற்றாற் பயன் இல்லை.

ஈசன் என்று ஒருவன் இருக்கின்றான். அவன் எங்கு நீக்கமற நிறைந்திருக்கிறான். அவன் அருள்பெற இத்தீர்த்தமாடுகிறோம் என்று எண்ணாதவர்க்கு அத்தீர்த்த மாடுவதால் விளையும் பயனில்லை.

2068. பட்ட ராகிலென் சாத்திரங் கேட்கிலென்
இட்டு மட்டியு மீதொழில் பூணிலென்
எட்டு மொன்று மிரண்டு மறியிலென்
இட்ட மீச னெனாதவர் கில்லையே. 3

குருக்கள் ஆயினும், சாத்திரங்கள் பல கேட்பினும், இட்டும் சேர்த்தும் கொடுக்கும் தொழில் பூணிலும், எட்டும் ஒன்றும் இரண்டும் அறிந்தாலும் என்ன பயன்? விருப்பம் இறைவனுக்கு என்னாதவர்க்கு இவற்றாற் பயன் இல்லையாம்.

2069. வேத மோதிலென் வேள்விகள் செய்யிலென்
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதி யங்கமோ ராறு முணரிலென்
ஈச னையுள்கு வார்க்கன்றி யில்லையே. 4

உள்குதல் – பரிபூரணமாக நினைத்தல்

வேதம் ஓதினாலும், வேள்விகள் செய்தாலும், நீதிநூல்கள் பலவற்றை நித்தமும் பயிற்றினாலும், ஆறங்கங்களை ஓதி உணர்ந்தாலும் என்ன பயன்? ஈசனை உள்குபவர்க்கு அன்றி மற்றவர்க்கு இவற்றாற் பயன் இல்லையாம்.

2070. காலை சென்று கலந்துநீர் மூழ்கிலென்
வேலை தோறும் விதிவழி நிற்கிலென்
ஆலை வேள்வி யடைந்தது வேட்கிலென்
ஏல ஈசனென் பார்க்கன்றி யில்லையே. 5

காலையில் சென்று கலந்து நீரில் மூழ்கினாலும், வேளைகள் தோறும் விதிவழி நின்றாலும், ஆலை போன்று வேள்வி அடைந்து வேட்பிலும் என்ன பயன்? உள்ளம் பொருந்த இறைவன் என்பார்க்கேயன்றி மற்றவர்க்கு இவற்றாற் பயன் இல்லை.

| | |
|---|---|
| **2071.** கான நாடு கலந்து திரியிலென்<br>ஈன மின்றி யிரும்தவஞ் செய்யிலென்<br>ஊனை யுண்ட லொழிந்துவான் நோக்கிலென்<br>ஞான னென்பவர்க் கன்றிநன் கில்லையே. **6** | காட்டுப் பகுதிகளிற் கலந்து திரிந்தாலும், இழிவின்றிப் பெருந்தவம் செய்தாலும், ஊன் உண்ணுதலையொழிந்து வானத்தை நோக்கினாலும் என்ன பயன்? ஞானமயமாகியவன் என்பவர்க்கேயன்றி மற்றவர்க்கு இவற்றால் நற்பயன் இல்லை. |
| **2072.** கூட வேடத்த ராகிக் குழுவிலென்<br>வாடி யூனை வருத்தித் திரியிலென்<br>ஆடல் வேடத்த னம்பலக் கூத்தனைப்<br>பாட லாளர்க்கல் லாற்பய னில்லையே. **7** | வேடங்கள் கூடியவராகித் திரண்டாலும், உடலை வாடி வருத்தித் திரிந்தாலும் என்ன பயன்? ஆடல்வேடத்தை உடையவனாகிய அம்பலக் கூத்தனைப் பாடுபவர்க்கு அல்லால் மற்றையோர்க்குப் பயன் இல்லை. |
| **2073.** நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்<br>குன்ற மேறி இருந்தவஞ் செய்யிலென்<br>சென்று நீரிற் குளித்துத் திரியிலென்<br>என்று மீசனென் பார்க்கன்றி யில்லையே. **8** | நன்கு தவம் நோற்றாலும், உண்ணாவிரதம் கிடப்பினும், மலையில் ஏறிப் பெருந்தவம் செய்தாலும், சென்று நீரிற் குளித்துத் திரிந்தாலும் என்ன பயன்? என்றும் ஈசன் என்பார்க்கேயன்றி மற்றையோர்க்கு இவற்றாற் பயன் இல்லை. |
| **2074.** கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை<br>ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்<br>ஒடு நீரினை யோட்டைக் குடத்தட்டி<br>மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே. **9** | கோடிதீர்த்தங்கள் தோறும் கலந்து குளித்து அவற்றில் நீராடிக் கிடந்தாலும் அரனிடத்து அன்பு இல்லையாயின், ஒடும் இயல்பினை உடைய நீரை ஓட்டைக் குடத்திலே நிறைத்து மூடிவைத்திட்ட மூர்க்கன் ஒருவனின் செயலோடே அது ஒக்கும். |
| **2075.** மற்று நற்றவஞ் செய்து வருந்திலென்<br>பொற்றை யுற்றெடுத் தானுடல் புக்கிறக்<br>குற்ற நற்குரை யார்கழற் சேவடி<br>பற்றி லாதவர்க் குப்பய னில்லையே. **10**<br>______<br>பொற்றை – மலை | மற்றும் நற்றவங்கள் பல செய்து வருந்தினால் என்ன பயன்? திருக்கயிலாயத்தை உற்று எடுத்த இராவணனது உடல் புகுந்து இற்றுப் போம்படிப் பொருந்திய நல்லொலிக் **கழல்களணிந்த சேவடியினிடத்துப் பற்றுதல் இல்லாதவர்க்குப் பயனே இல்லை.** |

## 100. பொது

### (ஆதிபுராணத் திருக்குறுந்தொகை)

ப.தொ.எண் : 213 பதிக எண் : 100

2076. வேத நாயகன் வேதியர் நாயகன்
மாதின் நாயகன் மாதவர் நாயகன்
ஆதி நாயக னாதிரை நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே. 1

சிவபெருமானின் முதன்மைத் தன்மையாம் வரலாற்றை விரித்து உறைப்பதால் இப்பெயர் பெற்றது.

வேதங்களின் தலைவனும், வேதம் ஓதுபவருக்கு நாயகனும், உமாதேவியின் நாயகனும், பெருந்தவம் உடைய முனிவர்களுக்கு நாயகனும், ஆதிநாயகனும், ஆதிரை என்ற விண்மீனுக்கு நாயகனும், பூதங்களுக்கு நாயகனும் புண்ணியமூர்த்தி சிவபெருமான் ஆவார்.

2077. செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ
அத்த னென்றரி யோடு பிரமனும்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே. 2

மீண்டும் மீண்டும் செத்துச் செத்துப் பிறப்பதே தெய்வமென்று பொய்யாகக் கருதிப் பக்தி செய்யும் மனப்பாறை உடையவர்கட்கு இறைவன் என்று திருமாலோடு பிரமனும் துதி செய்யநின்ற சோதி உள்ளத்திற் பொருந்துமோ? என் சொல் காதில் ஏறுமோ?

2078. நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவன் ஈச னொருவனே. 3

சிவபரத்துவத்தை நிலைநாட்டும் அற்புதத் திருப்பாடல்

நூறுகோடி பிரமர்கள் அழிந்தனர்; ஆறுகோடி திருமால்களும் அங்ஙனமே ஆயினார்கள்; நீர் பொங்கிப் பெருகும் கங்கையாற்று மணலை விட எண்ணிக்கையற்ற இந்திரர் நிலையும் அவ்வண்ணமே; முடிவற்றவனாய்த் திகழ்பவன் ஒப்பற்றவனாகிய சிவபெருமான் மட்டுமே.

2079. வாது செய்து மயங்கும் மனத்தராய்
ஏது சொல்லுவீ ராகிலு மேழைகாள்
யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வன்னலால் தேவர்மற் றில்லையே. 4

"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே மாதொரு பாகனார்தாம் வருவர்" சித்தியார்.

தெளிந்த அறிவில்லாதவர்களே! ஒருவரோ டொருவர் வாதம் செய்து மயங்கும் மனத்தை உடையவர்களாய் ஏது சொல்லுவீராகிலும், யாதோர் தேவர் எனப்படுவார்க்கெல்லாம் தேவன் மகாதேவனாகிய சிவபிரான் மட்டுமன்றி வேறு யாரும் இல்லை.

2080. கூவ லாமை குரைகட லாமையைக்
கூவ லோடொக்கு மோகட லென்றல்போல்
**பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்**
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே. 5

கிணற்றாமை கடலாமையை நோக்கி இக் கிணற்றோடொக்குமோ கடல்? என்று கூறுதலைப் போன்று தேவதேவனாகிய சிவபெருமானின் பெருந்தன்மையைப் பாவிகளாகிய மக்கள் பார்ப்பதற்கு அரிது என்பர்.

2081. பேய்வ னத்தமர் வானைப் பிரார்த்தித்தார்க்
கீவ னையிமை யோர்முடி தன்னடிச்
சாய்வ னைச்சல வார்கள் தமக்குடல்
சீவ னைச்சிவ னைச்சிந்தி யார்களே. 6

ஈவன் – ஈபவன் என்பதன் இடைக்குறை
சலவார்கள் – வஞ்சனை உடையவர்கள்.

பேய்களோடு கூடிச் சுடுகாட்டில் அமர்வானும், வேண்டியிருந்தவர்களுக்கு அருள் வழங்குவானும், தேவர்கள் முடிகள் திருவடிகளில் சாய்க்கப் பெறுவானும், தமக்குடலினுள் சீவனுமாய்ச் சிவனுமாய் இருப்பவனை வஞ்சனை உடையவர்கள் சிந்தியார்கள்.

2082. எரிபெ ருக்குவ ரவ்வெரி யீசன
துருவ ருக்கம தாவ துணர்கிலார்
அரிய யற்கரி யானை யயர்த்துபோய்
நரிவி ருத்தம தாகுவர் நாடரே. 7

நரிவிருத்தம் – நரியின் எண்ணம் போன்று பயனற்றதாதல்.

வேள்விகளில் அக்கினி வளர்ப்பார்கள்; அவ்வக்கினி இறைவன் திருமேனி வகையாவது என்பதை உணரும் ஆற்றல் இல்லாதவர்கள் திருமாலுக்கும் பிரமனுக்கும் அரிய கடவுளைக் காண்டற்கு அயர்த்து நரிவிருத்தம் ஆகுவர்.

நரிவிருத்தம் என்பது நரியினது வரலாறு எனப் பொருள்படும். காட்டில் வேடனொருவன் யானையைக் கொல்ல ஓர் அம்பை எய்து மற்றோர் அம்பை வில்லில் பூட்டி வைத்துக் கொண்டிருந்தான். அவ்வேளையில் பாம்பு ஒன்று அவனைக் கடித்தது. தன்னைக் கடித்த பாம்பை வாளால் வெட்டிக் கொன்று தானும் மூர்ச்சித்து விழுந்து இறந்தான். ஒரே நேரத்தில் யானையும் பாம்பு இறந்தன. வேடனும் இறந்தான். நரி ஒன்று அவ்வழியே வந்து அவற்றைக் கண்டு, அளவற்ற மகிழ்ச்சி கொண்டு, யானை ஆறுமாதத்திற்கு உணவாகும்; வேடனுடல் ஏழு நாட்களுக்கு உணவாகும்; பாம்பை ஒரு நாளுக்கு உணவாக வைத்துக் கொள்வோம். இப்போது நம் பசிக்கு இவ்வேடன் கையில் இருக்கும் வில்லிலுள்ள நரம்பாலாகிய நாணைக் கடித்துச் சுவைத்துப் பசியைப் போக்கிக் கொள்வோம் என்று நினைத்து வில்லில் பூட்டியிருந்த நாணை ஆவலோடு சென்று கடித்தது. உடனே இழுத்துக் கட்டப்பட்டிருந்த நாணறுந்த வில் திடீரென நிமிர்ந்த வேகத்தில் நரியின் வாயைக் கிழித்தது. நரியின் எண்ணக் கோட்டைகள் இடிந்தன. நரியும் இறந்தது. மக்களின் மனக்கோட்டைகள் ஒன்று நினைக்க ஒன்றாய் முடிதலை இக்கதை விளக்குகின்றது. பழங்காலத்திலேயே இக்கதை வழங்கியதாகத் தெரிகிறது. “வழங்குகின் றாய்க்குன் அருளா ரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன் விக்கினேன் வினையேன்என் விதியின்மையால்” – திருவாசகம்.

அமுதத்தை அள்ளித்தர சிவபெருமான் தயாராய் உள்ளார். நரியைப் போல அவசரப்படாமல் அமுதத்தைப் பெற நம்மைத் தயார்படுத்திக் கொள்ளுவோமாக!

| | |
|---|---|
| **2083.** அருக்கன் பாதம் வணங்குவ ரந்தியில்<br>அருக்க னாவா னரனுரு வல்லனோ<br>இருக்கு நான்மறை யீசனை யேதொழும்<br>கருத்தி னைநினை யார்கன் மனவரே. **8** | அந்தியில் சூரியன் பாதங்களை வணங்குவர்; சூரியனாவான் சிவபெருமானின் உருவம் அல்லனோ? இருக்கு முதலிய நான்கு வேதங்கள் இறைவனையே தொழும் கருத்தினைக் கல்மனம் படைத்தவர்களாய்ச் சிலர் நினைக்கமாட்டார்கள். |
| **2084.** தாயி னும்நல்ல சங்கர னுக்கன்பர்<br>ஆய வுள்ளத் தமுதருந் தப்பெறார்<br>பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய<br>மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே. **9** | பேய்ப்பெண்ணினது பேய்முலைப் பாலினை உண்டு அவள் உயிர் போகச்செய்த திருமாலுடைய மாயத்துப் பொருந்திய மனத்தை உடையவர்கள், தாயினும் நல்லவனாகிய சங்கரனுக்கு அன்பர்கள் ஆகிய உள்ளத்து அமுது அருந்தப்பெறா இயல்பினராவர். |
| **2085.** அரக்கன் வல்லரட் டாங்கொழித் தாரருள்<br>பெருக்கச் செய்த பிரான் பெருந் தன்மையே<br>அருத்தி செய்தறி யப்பெறு கின்றிலர்<br>கருத்தி லாக்கய வக்கணத் தோர்களே. **10**<br><br>அருத்தி – அன்பு.<br>கயவக்கணம் – கீழ்மக்கட்கூட்டம் | கருத்தில்லாத கீழ்மைக்குணமுடைய மக்கள், இராவணனது வலிய அரட்டுத்தன்மையினை ஒழித்துப் பின்னும் பேரருள் பெருக்கச் செய்த சிவபெருமானின் பெருந்தன்மையை விருப்பம் புரிந்து அறியப்பெறுகிலர் ஆவர். |



**ஐந்தாம் திருமுறை திருநாவுக்கரசர் தேவாரம்**
**திருவருளால் நிறைவு பெற்றது.**

## ஐந்தாம் திருமுறை

# பாட்டு முதற்குறிப்பகராதி

## ஐந்தாம் திருமுறை
# தல அட்டவணை

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 1. | அண்ணாமலை | 4 | வட்டனைம்மதி |
| 2. | ,, | 5 | பட்டிஏறுகந் |
| 3. | அதிகை வீரட்டானம் | 53 | கோணன்மாமதி |
| 4. | ,, | 54 | எட்டுநாண்மலர் |
| 5. | அரிசிற்கரைப்புத்தூர் | 61 | முத்தூரும்புனல் |
| 6. | அன்பிலாலந்துறை | 80 | வானஞ்சேர்மதி |
| 7. | அன்னியூர் | 8 | பாறலைத்த |
| 8. | ஆமாத்தூர் | 44 | மாமாத்தாகிய |
| 9. | ஆரூர் | 6 | எப்போதும் |
| 10. | ,, | 7 | கொக்கரை |
| 11. | ஆவடுதுறை | 29 | நிறைக்கவாலி |
| 12. | ஆனைக்கா | 31 | கோனைக்காவி |
| 13. | இடைமருதூர் | 14 | பாசமொன்றி |
| 14. | ,, | 15 | பறையினோசை |
| 15. | இன்னம்பர் | 21 | என்னிலாரும் |
| 16. | எறும்பியூர் | 74 | விரும்பியூறு |
| 17. | ஐயாறு | 27 | சிந்தைவாய்த |
| 18. | ,, | 28 | சிந்தைவண்ண |
| 19. | ஒற்றியூர் | 24 | ஒற்றியூரும் |
| 20. | கச்சிஏகம்பம் | 47 | பண்டுசெய்த |
| 21. | ,, | 48 | பூமேலானும் |
| 22. | கடம்பந்துறை | 18 | முற்றிலாமுலை |
| 23. | கடம்பூர் | 19 | தளருங்கோளர |
| 24. | ,, | 20 | ஒருவராயிரு |
| 25. | கடவூர்மயானம் | 37 | குழைகொள் |
| 26. | கடவூர் வீரட்டம் | 38 | மலைக்கொ |
| 27. | கடுவாய்க்கரைப்புத்தூர் | 62 | ஒருத்தனை |
| 28. | கருவிலிக்கொட்டிட்டை | 69 | மட்டிட்டகுழல் |
| 29. | கழிப்பாலை | 40 | வண்ணமும் |
| 30. | காட்டுப்பள்ளி | 84 | மாட்டுப்பள்ளி |
| 31. | கானூர் | 76 | திருவின்நாதனும் |
| 32. | குடமூக்கு | 22 | பூவணத்தவன் |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 33. | குரக்குக்கா | 75 | மரக்கொக்கா |
| 34. | கொண்டீச்சுரம் | 70 | கண்டபேச்சி |
| 35. | கோடிகா | 78 | சங்குலாமுன்கை |
| 36. | கோயில் | 1 | அன்னம்பாலி |
| 37. | ,, | 2 | பனைக்கைமும் |
| 38. | கோழம்பம் | 64 | வேழம்பத்தைவர் |
| 39. | கோளிலி | 56 | மைக்கொள் |
| 40. | ,, | 57 | முன்னமேநினை |
| 41. | சிராப்பள்ளி | 85 | மட்டுவார்குழல் |
| 42. | செம்பொன்பள்ளி | 36 | கானறாத |
| 43. | சேறை | 77 | பூரியாவரும் |
| 44. | சோற்றுத்துறை | 33 | கொல்லை |
| 45. | தென்குரங்காடுதுறை | 63 | இரங்காவன் |
| 46. | தோணிபுரம் (சீகாழி) | 45 | மாதியன்று |
| 47. | நல்லம் | 43 | கொல்லத்தான் |
| 48. | நள்ளாறு | 68 | உள்ளாறாத |
| 49. | நாகேச்சுரம் | 52 | நல்லர்நல்ல |
| 50. | நாகைக்காரோணம் | 83 | பாணத்தால் |
| 51. | நாரையூர் | 55 | வீறுதானுடை |
| 52. | நின்றியூர் | 23 | கொடுங்கண் |
| 53. | நீலக்குடி | 72 | வைத்தமாடும் |
| 54. | நெய்த்தானம் | 34 | கொல்லியான் |
| 55. | நெல்வாயில் | 3 | கடவுளை |
| 56. | பராய்த்துறை | 30 | கரப்பர்காலம் |
| 57. | பழனம் | 35 | அருவனாய் |
| 58. | பழையாறைவடதளி | 58 | தலையெலாம் |
| 59. | பாசூர் | 25 | முந்திமூவெயில் |
| 60. | பாண்டிக்கொடுமுடி | 81 | சிட்டனை |
| 61. | பாலைத்துறை | 51 | நீலமாமணி |
| 62. | புகலூர் | 46 | துன்னக்கோவ |
| 63. | புள்ளிருக்குவேளூர் | 79 | வெள்ளெரு |
| 64. | பூந்துருத்தி | 32 | கொடிகொள் |
| 65. | பூவனூர் | 65 | பூவனூர்ப்புனி |
| 66. | பேரெயில் | 16 | மறையும் |
| 67. | பைஞ்ஞீலி | 41 | உடையர் |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 68. | மங்கலக்குடி | 73 | தங்கலப்பிய |
| 69. | மணஞ்சேரி | 87 | பட்டநெற்றியர் |
| 70. | மயிலாடுதுறை | 39 | கொள்ளுங்காத |
| 71. | மருகல் | 88 | பெருகலாம் |
| 72. | மறைக்காடு | 9 | ஓதமால்கடல் |
| 73. | ,, | 10 | பண்ணின்நேர் |
| 74. | மாற்பேறு | 59 | பொருமாற்றின் |
| 75. | ,, | 60 | ஏதும் ஒன்றும் |
| 76. | மீயச்சூர் | 11 | தோற்றும் கோ |
| 77. | வலஞ்சுழி | 66 | ஓதமார்கடலின் |
| 78. | வன்னியூர் | 26 | காடுகொண்ட |
| 79. | வாஞ்சியம் | 67 | படையும் பூத |
| 80. | வாட்போக்கி | 86 | காலபாசம் |
| 81. | வாய்மூர் | 50 | எங்கேயென்னை |
| 82. | வான்மியூர் | 82 | விண்டமாமலர் |
| 83. | விசயமங்கை | 71 | குசையுமங்கை |
| 84. | வீழிமிழலை | 12 | கரைந்துகை |
| 85. | ,, | 13 | என்பொனே |
| 86. | வெண்காடு | 49 | பண்காட்டி |
| 87. | வெண்ணியூர் | 17 | முத்தினை |
| 88. | வேட்களம் | 42 | நன்றுநாடொ |
| 89. | பொது | 89 | ஒன்றுவெண் |
| 90. | ,, | 90 | மாசில்வீணை |
| 91. | ,, | 91 | ஏயிலானை |
| 92. | ,, | 92 | கண்டுகொள் |
| 93. | ,, | 93 | காசனைக்கன |
| 94. | ,, | 94 | அண்டத்தா |
| 95. | ,, | 95 | புக்கணைந்து |
| 96. | ,, | 96 | பொன்னுள்ள |
| 97. | ,, | 97 | சிந்திப்பார் |
| 98. | ,, | 98 | நீறலைத்த |
| 99. | ,, | 99 | பாவமும்பழி |
| 100. | ,, | 100 | வேதநாயகன் |